காசில் கொற்றத்துக் கவிச்சக்கரவர்த்தி:

# கம்பன்

(காரைக்குடி கம்பன் தமிழ்ஆய்வுமையம் நடத்திய கம்பராமாயண உலகத்தமிழ் ஆய்வுக் கருத்தரங்கக் கட்டுரைகளின் தொகுப்பு நூல்)


<u>பதிப்பாசிரியர்கள்</u>

'கம்பன் அடிசூடி' **பழ.பழனியப்பன்**

முனைவர் **சொ.சேதுபதி**

முனைவர் **மு.பழனியப்பன்**

முனைவர் **இரா.குறிஞ்சிவேந்தன்**

பேராசிரியர் **சொ.அருணன்**

*கம்பன் தமிழ்ஆய்வுமையம்,*
*கம்பன் மணிமண்டபம்*
*காரைக்குடி -630001*





வெளியீடு

**கபிலன் பதிப்பகம்**

321, மூன்றாம் முதன்மைச்சாலை,
மகாவீர் நகர்
புதுச்சேரி-605 008
arunankapilan@gmail.com

**KAASIL KOTRATHUK KAVICHAKRAVARTHI: KAMBAN**

*(Research papers presented at the World Tamil Kambaramayana research Conference.)*

**Kamban Tamil Research Centre©**
Karaikudi.

First Edition - March 2013

**Editors:**
'Kamban Adisoodi' **Pazha. Pazhaniappan**
Dr. **C. Sethupathi**
Dr. **M. Palaniappan**
Dr. **R.Kurinjivendan**
Prof. **C.Arunan**

**Pages:** 456

**Rate:** ₹300/-

**Published By:**
**KAPILAN PATHIPPAGAM**
321. 3rd Main Road,
Mahavir Nagar, Karuvadikkuppam,
Puducherry - 605 008.

**Printed at:**
**SURYA PRINT SOLUTIONS (P) LTD.,**
534-A, Kamarajar Road,
Sivakasi. Cell: 98421 24415

ISBN: 978-81-922092-5-8

காரைக்குடி கம்பன் திருநாள் பவளவிழாவை ஒட்டி நடத்தப் பெற்ற கம்பராமாயண உலகத் தமிழ்ஆய்வுக் கருத்தரங்கில் தமிழ்நாடு மேனாள் தகவல் ஆணையர் பேராசிரியர் சாரதா நம்பி ஆரூரன் அவர்களால் வெளியிடப்பெற்றது.



நின்னை வணங்கி, நீவகுத்த நெறியில் நிற்கும் அதுஅல்லால்,
என்னை, அடியோம் செயற்பால? - **கம்பன்**

(நாட்டரசன்கோட்டை, கம்பன் அருட்கோயிலில் பங்குனி அத்தத்திருநாள் வழிபாட்டில், உடன் உதவுவோர் மெ.நா.சிதம்பரம், பின்னாளில் கம்பன் அறநிலையத் தலைவரான மு.மெ.முத்துராமன், இந்நாள் கம்பன் கழகச் செயலர் கம்பன் அடிசூடி)

# கம்பன் அருட்கவி ஐந்து

## 1. நாட்டை ராகம்

உலகம் யாவையும் தாம்உள வாக்கலும்
நிலைபெறுத்தலும் நீக்கலும் நீங்கலா
அலகுஇலா விளையாட்டு உடையார் - அவர்
தலைவர் அன்னவர்க்கே சரண் நாங்களே. 1

## 2. ஆரபி ராகம்

வாணாள் அளித்தி, முடியாமல் நீதி வழுவாமல் நிற்றி- மறையோய்!
பேணாய், உனக்கோர் பொருள்வேண்டும் என்றுபெறுவான் அருத்தி பிழையாய்
ஊணாய், உயிர்க்கும் உயிராகி நிற்றி உணர்வாய பெண்ணின் உருவாய்,
ஆணாகி, மற்றும் அலிஆதி!-ஆர், இவ்அதிரேக மாயை அறிவார்? 8255

## 3. கௌளை ராகம்

வேதங்கள் அறைகின்ற உலகு எங்கும் விரிந்தன உன்
பாதங்கள் இவை என்னின், படிவங்கள் எப்படியோ?
ஓதம் கொள் கடல் அன்றி, ஒன்றினோடு ஒன்று ஒவ்வாப்
பூதங்கள்தொறும் உறைந்தால், அவைஉன்னைப் பொறுக்குமோ? 2563

'நீஆதி பரம்பரமும்: நின்னவே உலகங்கள்
ஆயாத சமயமும் நின் அடியவே அயல் இல்லை
தீயாரின் ஒளித்தியால் வெளி நின்றால் தீங்கு உண்டோ?
வீயாத பெரு மாய விளையாட்டும் வேண்டுமோ? 2569

## 4. வராளி ராகம்

வங்கியம் பல தேன் விளம்பின வாணி முந்தின பாணியின்
பங்கி அம்பரம் எங்கும் விம்மின பம்பை பம்பின பல் வகைப்
பொங்கு இயம் பலவும் கறங்கின நூபுரங்கள் புலம்ப, வெண்
சங்கு இயம்பின கொம்பு அலம்பின, சாம கீதம் நிரந்தவே. 1554

## 5. ஸ்ரீ ராகம்

'உன்னை உள்ளபடி அறியோம் உலகை உள்ளதிறம் உள்ளோம்
பின்னை அறியோம் முன்அறியோம் இடையும் அறியோம், பிறழாமல்
நின்னை வணங்கி, நீவகுத்த நெறியில் நிற்கும் அதுஅல்லால்,
என்னை, அடியோம் செயற்பால?-இன்பதுன்பம் இல்லோனே! 8662

# கம்பன் புகழ்பாடி, கன்னித்தமிழ்வளர்க்கும் கம்பன் கழகமும் கம்பன் தமிழாய்வு மையமும்

தென்பாண்டிநாட்டின் செம்மைசால் நகரமாக விளங்கும் காரைக்குடியின் பெருமைமிகு இலக்கியப் பேரமைப்புகளுள் மிகவும் குறிப்பிடத்தக்கது காரைக்குடி கம்பன் கழகமாகும்.

அண்ணல் காந்தியடிகளின் அருமைச்சீடராய் விளங்கிய தேசத்தொண்டர், சா.கணேசன் அவர்கள், கம்பனின் இராமாவதாரக் காப்பியத்தால் பெரிதும் ஈர்க்கப்பெற்று காரைக்குடியில் 1939 ஏப்ரல் 2, 3 ஆகிய நாட்களில் ரசிகமணி டி.கே.சி தலைமையில் கம்பன் புகழ் பாடிக் கன்னித் தமிழ் வளர்க்கும் தம் வாழ்நாள் வேள்வியைத் தொடங்கினார். காரைக்குடி யிலிருந்து 30 கல் தொலைவில் உள்ள நாட்டரசன் கோட்டையில் உள்ள கம்பன் சமாதிக்கோயில் வளாகத்தில் கம்பன் கவியரங்கேற்றிய பங்குனி அத்தத் திருநாளிலும், அதற்கு முந்திய மூன்று நாட்களான பங்குனி மகம், பூரம், உத்திரம் ஆகிய நாட்களில் காரைக்குடியிலும் கம்பன் திருநாளைக் கொண்டாடினார்.

கம்பன் திருநாளின் முதல்நாளான திருநாள் மங்கலப் பேரவையை, கம்பன் மலர் வணக்கத்துடன் தொடங்குவார். அதற்கெனவே, 108 போற்றித் தொடர்கள் அடங்கிய அற்புதமான கவிமலரை யாத்தார். இசைக்கலைஞர் ஒருவர் பாட, குழந்தைகள் இருவர் கம்பன் படத்திற்குத் தாமரைமலர் இட்டு வணங்குவர். நாட்டரசன்கோட்டை கம்பன் அருட்கோயிலில் அத்தநாள் வழிபாடு நிகழ்த்துவதற்கென என்று கம்ப ராமாயணப்பாடல்கள் ஐந்தினை, 'கம்பன் அருட்கவி ஐந்து' எனத்தேர்ந்தெடுத்து அவற்றுக்கு, திருவையாறு தியாகராஜர் சமாதியில் பாடும் பஞ்சரத்னக் கீர்த்தனைக்குரிய அதே ஐந்து கனராகங்களில் ஸ்வரம் அமைத்துப் பாடவும் ஏற்பாடு செய்தார். இன்றும் இந்த நடைமுறைகள் பின்பற்றப்பெறுகின்றன.

தம் இயற்பெயரைவிடவும் 'கம்பன் அடிப்பொடி' என்னும் சிறப்புப் பெயரே அவருக்கு நிரந்தரமாகும் வண்ணம் கம்பன் பெயர் விளங்க நிறுத்தி அவர் ஆற்றிய அரும்பணிகள் மிகப்பலவாகும். கம்பன் பிறந்த நாளை நாம் அறியச் சான்று ஏதும் கிடைக்காததால், அவன் தன் இராமாவதாரக் காப்பியத்தை அரங்கேற்றியதாகத் தனிப்பாடல் ஒன்றின் துணையால் அறிய நேர்ந்த நாளையே (கி.பி

886, பெப்ருவரி 23உ புதன்கிழமை) கம்பன் கவிச்சக்கரவர்த்தியாக இப்பூவுலகில் அவதரித்த நாளாகக்கொண்டு கொண்டாடி வந்தார் அவர் விடுதலை வேள்வியில் ஈடுபட்டு அலிபூர் சிறையில் இருந்த போதும் விழா நிகழ்ச்சிகளைச் சிறையிலிருந்தபடியே அமைத்துத் தன் நண்பர் மெ.நா.சித.சிதம்பரம் அவர்களைக் கொண்டு நடத்தினார். ஆண்டு தவறாது 44 ஆண்டுகள் தொடர்ந்து தம் வாழ்நாள் வரை (1982) கம்பனுக்கு விழாக் கொண்டாடினார். 1983முதல் அவர் விரும்பியவண்ணமே அவர்தம் தலை மாணாக்கரான கம்பன் அடிசூடியை செயலாளராகக் கொண்டு அதேமுறையில் தொடர்ந்து 30 ஆண்டுகளாக விழா நடத்தப் பெற்று வருகிறது.

கம்பன் கழகம், தன் பொன்விழாவை ஒட்டி, 1989ல் முதன் முதலில், தமிழகத்திற்குச் சாகித்திய அகாதெமியினரை அழைத்து வந்து, அகில இந்திய இராமாயண மாநாட்டை இரு நாட்கள் நடத்திப் பெருமைகொண்டது. அந்தவரிசையில், கம்பன் அடிப்பொடியின் உளப்பாங்கின்வண்ணம் ஒருவார விழாவாக இக்கழகத்தின் பவளவிழா, இந்த ஆண்டு(2013) இனிதே நிகழ்கிறது.

உலகில் வேறு எங்கும், எம்மொழிக்கும் இல்லாததான மொழிக்கான திருக்கோயிலை, தமிழக அரசின் ஆதரவோடு கம்பன் மணிமண்டப வளாகத்தில் நிறுவியவர் கம்பன்அடிப்பொடியார். தமிழ்த்தாய், அகத்தியர், தொல்காப்பியர், கம்பன், திருவள்ளுவர், இளங்கோவடிகள், ஒலித்தாய், வரித்தாய் ஆகியோரின் சிலா வடிவங்களோடு அறுகோண அமைப்பிலான கல் திருப்பணித் திருக்கோயிலாக விளங்குகிறது அத்திருக்கோயில். தமிழ்த்தாய், ஒலித்தாய், வரித்தாய் சிலைகள், கம்பன் அடிப்பொடியாரின் வளர்ப்பு மைந்தரான 'சிற்பகுரு', வாஸ்து விஞ்ஞானி வை. கணபதி ஸ்தபதி அவர்களால் வடிவமைக்கப்பெற்றமை குறிப்பிடத்தக்கது.

மேலும், 1968ல் நிகழ்ந்த இரண்டாம் உலகத் தமிழ் மாநாட்டில் கலைக்கண்காட்சிக் குழுவிற்குத் தமிழகமுதல்வர், பேரறிஞர் அண்ணாவின் வேண்டுதலால் தலைமையேற்ற கம்பன் அடிப் பொடியார், கண்டோர் வியக்கும்வண்ணம் கலைக்காட்சியை நடத்திய தோடு, 'கையேடு' என்ற கருத்துக் கருவூலத்தையும் பதிப்பித்தார். பிள்ளையார்பட்டித் தல வரலாறு, இராஜராஜன், தமிழ்த்திருமணம், *Some Iconographic Concepts*, கட்டுரைக் களஞ்சியம் உள்ளிட்ட பல்வேறு நூல்களைத் தமிழுலகிற்கு நல்கிய அவர் பல்துறை ஆற்றல் மிக்க படைப்பாளி கருதியது முடிக்கும் கர்மயோகி.

நெடுங்காலமாய், கம்பராமாயணத்திற்கு, மூலபாடம் இல்லாதிருந்த குறையைப் போக்கப் பெருமுயற்சி மேற்கொண்டார். சில தமிழ் அறிஞர்களின் துணையோடு, எண்ணற்ற ஏட்டுச்சுவடிகள், பழம்பெரும் பதிப்புகளை ஆராய்ந்து முடிந்த அளவிற்குப் பாட பேதமற்ற, கல்லாதாரும் எளிதில் புரிந்து படிக்கும்படியாகச் சந்தி பிரித்து பொருள் மாலையுடன் கூடின ஒரு பதிப்பினை, தம் நண்பர் மர்ரே எஸ் ராஜம் உதவியுடன் சிறப்புறப் பதிப்பித்தார். ஆறு காண்டங்களையும் தனித்தனியாகக் கொண்ட அற்புதக்களஞ்சியம் அது. கூடவே, பன்னருங் கலைதெரி 'பட்டிமண்டபத்தோடு', மேல்முறையீட்டுப் பட்டிமண்டபம், நற்றமிழ் முற்றம், கவியரங்கம், மகளிர் மண்டலம், ஆடகஅரங்கு உள்ளிட்ட மேடைஇலக்கிய வடிவங்களையும் தண்ணார் தமிழகத்திற்கு முன்வந்து அறிமுகப்படுத்திய பெருமை அன்னாருக்கே உண்டு.

காரியதரிசி, செயலர் என்றிருந்ததைச் செயலாளன் என்றதும், பிரசங்கம் என்றிருந்ததைச் சொற்பொழிவு என்றாக்கியதும், அவரே. பழந்தமிழ்ப்பண்பாட்டை நினைவுபடுத்தும்விதமாக அரங்கை அமைக்கும் நேர்த்தியும், நிகழ்வுகளை அறிமுகப்படுத்தும் பாங்கும், பார்வையாளர்களில் தகுதிப்பாடுடையவர்களை நோக்கர்களாகத் தேர்ந்தெடுத்துப் பட்டிமண்டபத்தில் தக்க அணி, வெற்றிபெறக் குடவோலையில் வாக்களிக்கச் செய்வதுமாய்ப் பல்வேறு மரபார்ந்த புதுமைகளைச் செய்ததும் குறிப்பிட்டறிய வேண்டியது. வென்ற அணியினர் போக, எஞ்சிய அணியினர் மேல்முறையீடு செய்து உண்மை வென்றிட உழைக்கும் பட்டிமண்டப நிகழ்வில் இதுவரை வந்த தலைப்பு மறுமுறை வந்ததே இல்லை என்பது வரலாற்று உண்மை. அதுபோல், உரியபொழுதில் வரத்தாமதிக்கும் எவருக்காகவும் காத்திருந்த வரலாறும் இல்லை.

முன்னரே எழுத்தில் இசைவுபெற்று முறையாக நிகழ்வுக்கு முன்னும் பின்னும் பங்கேற்பாளர்களோடு தொடர்புகொண்டு விருந்தோம்பி விழா நடத்தும் கம்பனடிப்பொடியாரின் 'சென்சாருக்கு'த் தப்பாமல் எந்தக் கவிஞரும் அரங்கேறி முழங்க முடியாது. கி.வா.ஜ. முதல் கண்ணதாசன் வரை எல்லாருக்கும் இதுதான் நியதி. நெறியின் புறஞ்செல்லா நேரிய பாங்கில் செறிவாய்க் கம்பனையும் தமிழையும் இலக்கிய, வாழ்வியல் நேர்த்திகளையும் மக்களுக்கு உணர்த்தும் மாமண்டபமாக விளங்கும் நேர்த்தியை நேரில் கண்டால்தான் உணரமுடியும். என்றாலும் தொடர்ந்து அனைத்து

வானொலிநிலையங்களும் அந்நிகழ்வுகளை நேரடியாக ஒலிபரப்பிப் பெருமைபெற்றன. பின்னர் தொலைக்காட்சியமைப்புகளும் அப்பணியைத் தொடர்ந்தன. பத்திரிகை முதலான ஊடகங்களின் பங்கும் குறிப்பிடத்தக்கதாக அமைந்திருக்கக் காணலாம்.

விழாத்தொடங்குமுன், 'கம்பன் வாழ்க, கம்பன் புகழ் வாழ்க, கன்னித்தமிழ்வாழ்க' என்னும் முழக்கத்தை, வெண்கலக் குரலில் கம்பன்அடிப்பொடியார் முன் எழுப்ப, அரங்கிலுள்ளோர் அனைவரும், 'வாழ்க வாழ்க' என்று இணைந்து வாழ்த்தொலிக்க, குறித்த நேரத்தில் நடக்கும் ஒரேவிழாவாக, சாதி, மத, பதவி, அரசியல் சார்பு பேதமற்று, உலகப்பேரறிஞர்களோடு, இந்திய மற்றும், தமிழகத்தின் தலைசிறந்த அறிஞர்கள் எல்லோரும் பங்கேற்கும் தமிழ் இலக்கியவிழாவாகக் கம்பன் விழாவை வடிவமைத்த பெருமைக்கும் அன்னவரே முன்னவர் அவரே, தமிழகம் மற்றும் பிறநாடுகளில் கம்பன் கழகங்கள் தோன்றவும் காரணமாயினார்.

இன்றளவும் புதிதாகத் தொடங்கப் பெறும் சேய்க்கழகங்களுக்கு முதன்முதலில் சீராட்டு நல்கி நல்வாழ்த்தளிக்கும் தாய்க்கழகமாகக் காரைக்குடி கம்பன் கழகம் திகழ்ந்து வருவது யாவரும் அறிந்ததே.

படைப்பாளிகள், பத்திரிகையாளர்கள், கவிஞர்கள், கலைஞர்கள், கல்வியாளர்கள், அரசியலாளர்கள், தமிழகம் மற்றும் புதுவை மேனாள் முதல்வர்கள், அதிகாரிகள், ஆட்சியாளர்கள், நிர்வாகிகள், ஆன்மிகப் பெரியார்கள், மொழியியல் வல்லுநர்கள், மொழிபெயர்ப்பாளர்கள், பல்கலைக் கழகத் துணைவேந்தர்கள், பேராசிரியர்கள், நீதியரசர்கள், வழக்கறிஞர்கள் எனப் பல்துறை வித்தகர்களும் வந்து பங்கேற்றுச் சிறப்பித்திருக்கின்றனர்.

உள்ளூர் தொடங்கி உலக நாடுகள் வரை பல்துறையாளர்கள் வந்து பார்வையாளர்களாக, சுவைஞர்களாகப் பங்கேற்ற பெருமை இந்தக் கழகத்திற்கே உண்டு.

ரசிகமணி டி.கே.சி. தொடங்கி, சொ.முருகப்பா, ராய.சொ., ப.ரா., எம்.எஸ்.பூரணலிங்கம்பிள்ளை, ஏ.சி.பால்நாடார், கு.அருணாசலக் கவுண்டர், பண்டிதமணி மு.கதிரேசச்செட்டியார், அ.மு.சரவணமுதலியார், ந.மு.வேங்கடசாமிநாட்டார், பொ.திரிகூடசுந்தரன், பி.ஸ்ரீ. ஆச்சார்யா, வெள்ளக்கால் சுப்பிரமணியமுதலியார், எஸ்.வையாபுரிப்பிள்ளை, அ.சீ.ரா, வ.ரா., மு.அருணாசலம், ஞா.தேவநேயப்பாவாணர்,

ஜி.சுப்பிரமணிய பிள்ளை, நா.கிரிதாரி பிரசாத், பு.ரா.புருஷோத்தமநாயடு, ச.து.சு.யோகியார், ரா.பி.சேதுப்பிள்ளை, மு.இராகவையங்கார், கோவைக்கிழார் சி.எம். இராமச்சந்திரச் செட்டியார், இராஜாஜி, கல்கி, வெ..சாமிநாதசர்மா, தெ.பொ.மீ., தொ.மு.பாஸ்கரத் தொண்டைமான், ஜீவா (ப.ஜீவானந்தன்), எஸ்.ஆர்.கே (எஸ்.இராமகிருஷ்ணன்), அ.ச.ஞா(னசம்பந்தன்),தவத்திரு குன்றக்குடி அடிகளார், ம.பொ.சி (ம.பொ. சிவஞானம்), கி.வா.ஜ(ஜகந்நாதன்), திருலோகசீதாராம், தொ.மு.சிரகுநாதன், கலைஞர்.மு.கருணாநிதி, ஹா.கி.வாலம், க.கு.கோதண்டராமன், எஸ்.கே. இராமராசன், ஏ.என்.சிவராமன், அநடேசமுதலியார், பி.ஜி.கருத்திருமன், திருமுருக. கிருபானந்த வாரியார், ஏவி.மெய்யப்பன், சேவியர் எஸ்.தனிநாயக அடிகள், செக்நாட்டுத்தமிழறிஞர்கமில்சுவலபில், மு.வ(வரதராசன்), கா.நயினார்முகம்மது, சாரணபாஸ்கரன், ஆல்பெர்ட் ஃபிராங்க்ளின், மறைத்திரு பிரான்சிஸ் முராயிஸ் அடிகள்.சே.ச., மறைத்திரு. சா.லாரன்ஸ் அடிகள், எஸ்.கே.நாயர், சுந்தரசுவாமிகள், பேரூர் சாந்தலிங்க இராமசாமி அடிகள், வை.வேங்கடசுப்பாரெட்டியார், கொத்தமங்கலம் சுப்பு, கண்ணதாசன், ந.சஞ்சீவி, அ.முத்துசிவம், வ.சுப. மா(மாணிக்கம்), நீதிபதியரசர்கள் எஸ்.மகாராஜன், மு.மு.இஸ்மாயீல், செங்கோட்டுவேலர், ஏ. ஆர்.லெட்சுமணன், எம்.கற்பகவிநாயகம், எம்.சொக்கலிங்கம், வி.இராமசுப்பிரமணியன் ஆகியோர், என்.வி.நாயுடு, இரா.இராதாகிருஷ்ணன், புலவர் கீரன், வை.சிட்டிபாபு, நாபாலுசாமி, அரங்க.சீனிவாசன், பூ.அமிர்தலிங்கனார், முடியரசன், சொக்கு.சுப்பிரமணியம், வ.அய்.சுப்பிரமணியம், சு.குழந்தைநாதன், எஸ்.கே.இராமராசன், அப்துல்ரகுமான், ஜெயகாந்தன், சிற்பி பாலசுப்பிரமணியம், மு.மேத்தா, தமிழண்ணல், பா.நமசிவாயம், தா.பாண்டியன், குமரிஅனந்தன், கா.காளிமுத்து, ஔவைநடராசன், அரங்க.சீனிவாசன், அன்புவேதாசலம், எஸ்.எம்.டயஸ், எம்.ஓ.எச். பாரூக் மரைக்காயர், அ.அருணகிரி, மரியதாஸ், தெ.ஞானசுந்தரம், சோ. சத்தியசீலன், அ.அறிவொளி, அ.வ.ராசகோபாலன், தி.இராசகோபாலன், கி.பக்ஷிராஜன், சுகி.சிவம், நெல்லைக் கண்ணன், சாலமன் பாப்பையா, அப்துல்காதர், கு.ஞானசம்பந்தம், பழ.கருப்பையா, பழ.முத்தப்பன், பழ.முத்துவீரப்பன், பழ.பழனியப்பன், சொ,சேதுபதி, மு.பழனியப்பன், த.இராமலிங்கம், சொ.சொ.மீ.சுந்தரம், தினமணி ஆசிரியர் கே.வைத்தியநாதன், நா.நஞ்சுண்டன், நாஞ்சில்நாடன், தமிழருவி மணியன் எனப் பல்வேறு துறைசார் அறிஞர்கள் யாவரும் வந்து வந்து உரைநல்கிய பெருமைஉடையது இந்தக் கழகம்.

பெண்களில் ஆ.ரா.இந்திரா, சிவகாமசுந்தரி, சிவானந்த விஜலட்சுமி, இராஜேஸ்வரிநடராஜன், ந.சரோஜினிதேவி, சிகுழந்தையம்மாள், சக்திப்பெருமாள், இரா.மீனாட்சி, சரசுவதிஇராமநாதன், செல்லப்பாப்பா கீரன், ஆர்.திலகவதி, இளம்பிறைமணிமாறன், இரா.ருக்மிணி, இரா. காந்திமதி, அரசு மணிமேகலை, உமையாள் முத்து, சாரதாநம்பி ஆரூரன், சுதாசேஷய்யன் எனப் பலரும் வந்து உரையாற்றியிருக்கிறார்கள். (இந்தப்பட்டியல்கள் முழுமை பெற்றவையல்ல. விரிக்கிற் பெருகும்)

இவர்களை அடுத்து வந்த தலைமுறைப் பேச்சாளர்களும், அவர்களை அடுத்து வந்த இளம்பேச்சாளர்களும் என, இந்தக் கழகத்தில் ஏறிப் பெருமைபெற்றவர்கள் ஏராளமானவர்கள்.

அத்தோடு, இளந்தலைமுறையினரை இனங்கண்டு நாளைய அறிஞர்களாக உருவாக்கும் வண்ணம், தமிழகம் முழுதுமுள்ள கல்லூரி மாணாக்கர்களுக்கான கம்பராமாயணம், திருக்குறளில் பேச்சு, கட்டுரைப் போட்டிகள் ஆண்டுதோறும் நடத்தி வருகிறது இக்கழகம். இதன்வழி, அடுத்த தலைமுறைப் பேச்சாளர்கள், ஆய்வாளர்கள் சிறப்பாக உருவாகி வருகிறார்கள்.

ஆண்டுதோறும் நடத்தப்பெறும் கம்பன் திருநாட்கள் மட்டுமன்றி, மாதந்தோறும் முதற் சனிக்கிழமைகளில் தக்க அறிஞர் ஒருவரோடு, மாணாக்கர் / இளந்தலைமுறையினர் ஒருவரைக் கொண்டும் புதிய கோணங்களில் கம்பன் காவியம் பற்றிய சொற்பொழிவுகள் நிகழ்த்தப்பெறுகின்றன அவை அச்சில் கொணரும் நோக்கில் தொகுக்கப் பெறுகின்றன.

அந்தவகையில், ஆண்டுதோறும், கம்பராமாயணத்தில் புதிய கூறு ஒன்றைப் பற்றி அறக்கட்டளை ஆய்வுப் பொழிவுகள் இரண்டு இங்கு நிகழ்த்தப்பெறுகின்றன ஒன்று மூத்த அறிஞர்களைக் கொண்டும், மற்றொன்று இளந்தலைமுறைப்பேராசிரியர்களைக் கொண்டும் நடத்தப் பெற்றுவருகின்றன. இப்பொழிவுகள், இதுவரை, 'தாய் தன்னை அறியாத....', 'கம்பனின் மனவளம்', 'கம்பனில் எண்ணமும் வண்ணமும்', 'கம்பனில் நான்மறை', கம்பர் காட்டும் உறவும் நட்பும்', 'கம்பர் போற்றிய கவிஞர்', 'கம்பனின் அம்பறாத்தூணி', 'கம்பன் காக்கும் உலகு', 'கம்ப வானியல்' என நூல்களாக்கப் பெற்றுள்ளன. அவை, அந்தந்த ஆண்டுகளில் வெளியிடப்பெற்றுள்ளன. இவைபோகக் கம்பன் கழகத்தில் கம்பன் மணிமலர் என்னும் பெயரில் மலர்களும் வெளியிடப் பெற்றுள்ளன.

அரங்க நிகழ்வுகளிலும் ஆய்வுத்துறைகளிலும் தொடர்ந்து தடம்பதித்து வரும் காரைக்குடிக் கம்பன் கழகத்தின் பவளவிழாப் போதில், இனிய பிறப்பெடுக்கிறது, கம்பன் தமிழ்ஆய்வு மையம்.

சங்ககாலத்துக் கபிலர் தொடங்கி, சமகாலத்துக் கண்ணதாசன் வரை நீளும் இலக்கிய வளங்களையும், தொல்காப்பியர் முதலாய்த் தண்டமிழ்ச் சான்றோர் வகுத்துக் கொடுத்த இலக்கணச் செழுமைகளையும் கவிச்சக்கரவர்த்தி கம்பனை முன்னிறுத்தி, உலகளாவிய நிலையில் அடுத்துவரும் தலைமுறையினர்க்கு எடுத்துச் செல்லும் நோக்கில் ஒல்லும்வாயெல்லாம் உடனுக்குடன் தன் பணியாற்றிடத் துடிப்புடன் முனைகிறது. இம்முயற்சியின் ஒரு கூறாக, உலக அளவிலான கருத்தரங்கம், காலந்தோறும் கம்பன் (Kamban at all times) என்ற பொருண்மையில், திட்டமிட்டபடி, 2013 மார்ச் 23 ,24 ஆகிய இருநாட்கள் இனிது நடைபெறுகின்றது.

இக்கருத்தரங்கில், தமிழகம் மற்றும் இந்தியாவின் பிற மாநிலங்களில் இருந்தும், உலகின் பல்வேறு நாடுகளில் இருந்தும் பேராளர்களும், ஆய்வாளர்களும் பங்கேற்றுச் சிறப்பிக்கிறார்கள். அறிவிப்புக் கண்ட நாளில் இருந்து தொடர்ந்து நல்லாதரவும் பங்களிப்பும் செய்துவரும் அத்துணைபேருக்கும் மனமார்ந்த நன்றிகளைத் தெரிவித்து மகிழ்கிறோம்.

கம்பன் தொடர்பான ஆய்வுகள் வளரவும், நூல்கள் எழுதுவோர் மற்றும் வெளியிடுவோரை ஊக்குவிக்கும் முகமாகவும், 2011, 2012 ஆண்டுகளில் தமிழ் மற்றும் ஆங்கில மொழிகளில் வெளிவந்த கம்பராமாயண ஆய்வு நூல்களுக்கும், அவற்றை வெளியிட்ட பதிப்பகங்களுக்கும் பரிசுகள் வழங்கி மகிழ்கிறது கம்பன் தமிழாய்வு மையம்.

இதனைத் தொடர்ந்து ஈராண்டுகளுக்கு ஒருமுறை இத்தகு கருத்தரங்கமும், இடையிட்ட ஆண்டில் இலக்கியப் பயிலரங்கமும் நடத்தவும் திட்டமிட்டுள்ளோம். தொடர்ந்து, கம்பன் உள்ளிட்ட தமிழ், இலக்கிய இலக்கண வளங்களைக் கற்கவும், கற்பிக்கவும் ஓர் ஆய்வு மேற்கோள் நூலகம் ஏற்படுத்தி, ஆய்வு நிகழ்த்துவோருக்கான பணியிட வசதி செய்து, நெறிப்படுத்தி, செம்மொழித் தமிழ் ஆய்வுகளை ஊக்கப்படுத்தவும் முயற்சிகள் தொடங்கி நடைபெற்று வருகின்றன. அவற்றுக்கும் தமிழ்கூறு நல்லுலகம் ஆக்கமும் ஊக்கமும் அளிக்கும் என்று நம்புகிறோம். நன்றி

**– கம்பன் அடிசூடி பழ.பழனியப்பன்**

# THE KAMBAN DREAM

SUGANTHY KRISHNAMACHARI

This year marks the 75th anniversary of the Karaikudi Kamban Kazhagam, the seeds of which were sown by Saw. Ganesan.

A neat turn of phrase, an apt simile, a brilliant metaphor, the euphony of a word -- can all delight, for the felicitous use of language does give one a frisson of thrill. But even so, will anyone deify a language, not figuratively, but literally? One man did. Kamban Adippodi Saw. Ganesan.

Ganesan's love for Tamil began when he was in school. Those who encouraged him to study Kamba Ramayanam included P. Sri, the author of Ananda Vikatan's'Chithira Ramayanam', who lived in Karaikudi for some years, Va. Ve. Su. Iyer, T.K. Chidambaranatha Mudaliar (TKC) and even a scholarly grocery store owner in Burma! It was in 1939 that Ganesan set out to organise Kamban Vizha in Karaikudi, under the stewardship of TKC.

From 1935, Ganesan was actively involved in the Freedom Movement. His participation in the Quit India Movement resulted in his house being raided by the police. Several lakhs worth of property was confiscated. Unperturbed, Ganesan went about in disguise, giving rousing speeches to mobilise the youth against British rule. The police then arrested his friends, and to save them trouble, Ganesan surrendered, and was promptly despatched to the Alipore jail. But even while in prison, he ensured that the Karaikudi Kamban Vizha continued.

**The venue**

The Kamban Vizha is held in Karaikudi in the Tamil month of Panguni, and concludes in Nattarasankottai, in the star Hastham. Ganesan had a reason for choosing Hastham. There is a verse that says that Kamban inaugurated his work on Panguni Hastham. There is yet another verse that says Kamban died in Nattarasankottai. Ganesan visited Nattarasankottai, and found that the villagers there worshipped at a certain place, which they called Kamban Samadhi. Ganesan saw them taking mud from a pit near a rough

hewn stone, beneath which Kamban was believed to have been buried, and applying this mud on the tongues of their school going children, in the belief that Kamban would bless their academic endeavours. Ganesan came to the conclusion that this must be Kamban's burial place and so he decided to organise the last day of the celebrations at Nattarasankottai.

In 1940, Ganesan asked Vaidyanatha stapathi to make a panchaloha idol of Tamizh Thai, Tamizh represented as a Goddess. Tamizh Thai is seen seated on a globe to indicate the geographical spread of Tamizh. She holds in her hands palm leaf manuscripts, a japa mala, the torch of knowledge and a Sengottu yazh, described in Tamil literature and a sculptural representation of which is seen in the Tirumeyyam temple.

Ganesan's friends presented him with a purse for Rs. one lakh on his 60 birthday, and he used the money for a Kamban Mani Mandapam, the construction of which was completed in 1972. Praising Ganesan's dedication to Kamban, Justice Maharajan gave him the title 'Kamban Adippodi.' Ganesan conceived of a temple for Tamizh Thai, but passed away before the project was completed. Upon his death, the mantle fell on Kamban Adisoodi Pala Palaniappan, who, as a school student, came under the tutelage of Ganesan, and helped draw up programmes for the Karaikudi Kamban Vizha. Later, Palaniappan became the secretary of the Chennai Kamban Kazhagam.

**Worthy pupil**

After his retirement, Palaniappan returned to Karaikudi. How did he get interested in Kamban? "I used to be an orator in school, and apart from my Tamil teachers, one of my earliest inspirations was Ganapathi stapathi, who was my mathematics teacher! Later, Ganesan took me under his wing and taught me Kamba Ramayanam. He presented me with a copy of the Murray's edition of Kamba Ramayanam, which he had helped edit. Although Karaikudi was the place where Kamban celebrations began, it spread to other places."

The Tamizh Thai temple was declared open in 1993, by Mu. Karunanidhi. The main shrine is for Tamizh Thai, and on either side, we find Agastyar and Tholkappiyar. Outside the main shrine

are icons of Oli Thai (The Goddess of Sound) and Vari Thai (the Goddess of Letters), with separate enclosures for Kamban, Ilango and Valluvar. The temple construction and sculpturing work were by Ganapathy stapathi.

I am curious about why Kamban is always depicted with a walrus moustache. "The moustache was inspired by TKC's luxuriant moustache," laughs Palaniappan.

Almost all Tamil scholars have participated in the Karaikudi Kamban Vizha – A.C. Paul Nadar, Professor A.S. Gnanasambandam, Ra.Pi. Sethupillai, Dr. Francis Jayanandan, who was secretary of the Christian Literature Society, Xavier Tani Nayaka Adigal, Mu.Raghava Iyengar, Kamil Zvelebil and Justice Ismail, to name a few.

On the other hand, people who called themselves atheists would wangle a slot in the proceedings, and then make veiled attacks on Kamban. When it was suggested to Ganesan that he prevent such people from speaking, he would say that no one could be immune to the charms of Kamba Ramayanam for long, and even those who aimed barbs at the work, would soon come round. And sure enough, the same people who had mocked Kamban, would in later years, speak admiringly of the bard.

This year marks the 75th anniversary of the Karaikudi Kamban Kazhagam, and an international conference will be held in Karaikudi. The speakers include medical doctors and professors of engineering, based in London and Paris, all of whom have one thing in common -- love for Kamba Ramayanam. It is not often that one's dreams result in fruition, and even when they do, few dreams survive beyond one's lifetime. But the Karaikdui Kamban Kazhagam continues to thrive, and is a tribute to Saw. Ganesan, whose zeal and grit shaped it.

*courtesy: The Hindu 08/03/2013*

## தோரணவாயில்

"இல்லாத உலகத்து எங்கும், இங்கு இவன் இசைகள் கூரக்
கல்லாத கலையும், வேதக்கடலுமே' என்னும் காட்சி
சொல்லாலே தோன்றிற்று அன்றே! யார்கொல் இச்சொல்லின் செல்வன்?
வில்ஆர் தோள்இளைய வீர!- விரிஞ்சனோ? விடையவனோ?" (3768)

என்று அனுமனை வியந்து, இலக்குவனிடம் இராமன் கூறுவதாகக் கம்பன் கூறுவது கம்பனுக்கே பொருந்துவதைக் கம்பனைக் கற்றோர் ஐயத்திற்கிடமின்றி அப்படியே ஏற்பர். அதுமட்டுமா?

"தன்னுளே உலகங்கள் எவையும் தந்து, அவை-
தன்னுளே நின்று, தான் அவற்றுள் தங்குவான்,
பின் இலன், முன் இலன், ஒருவன்; பேர்கிலன்;
தொல்நிலை ஒருவரால் துணியற் பாலதோ?" (6247)

என்று பிரகலாதனாக நின்றுபேசும் கம்பனுக்கும் இக்கவிதை பொருந்தும்தானே!

"நாடி நான் தருவேன் என்ற நல்அறிவாளன்" (6316)

"மேதாவிகட்கு எல்லாம் மேலான மேன்மையான்" (6364)

"கோமன்னன் ஆகி மூவுலகும் கைக்கொண்டான்" (6363)

"ஈறுஇலாப் புகழோன்" (10,101)

"வையம் ஆளுடை நாதன்" (10,106)

"அன்பு உருக்கொண்டது ஆம் எனலாகுவான்" (10,155)

"அறிவினுக்கு அறிவுபோல்வான்" (10,225)

"எளிவரும் உயிர்கட்கெலாம் ஈன்ற தாய்" (10,271)

என்றெல்லாம் காப்பியப்போக்கிற்கேற்பக் கதாபாத்திரங்களுக்கு அடைமொழி நல்கும் ஐயன் கம்பனின் அத்தனை தொடர்களையும் அவனுக்கே பொருத்திப் பார்த்தால் சிறக்கும் அழகு குறித்துத் தனியே ஒரு தொகுப்பாய்வு கொணரலாம். அப்படி அவனருளாலே அவன் தாள் வணங்கல் போல், அவன் தொடராலே அவனைப் போற்றும் பான்மையில் அமையும் இத்தொகுப்பு நூலின் மகுடம், "காசில் கொற்றத்துக் கவிச்சக்கரவர்த்தி கம்பன்" என அமைகிறது.

ஒன்பது உட்பிரிவுகளை உள்ளடக்கிய இத்தொகுப்பில் மொத்தம் 80 கட்டுரைகள் இடம்பெறுகின்றன.

புவிச்சக்கரவர்த்திகளெல்லாம் போய் மறைந்த இடம் அறியாத உலகில், தம் கவியாளுமையால் திரிபுவனச் சக்கரவர்த்தியாய் உலகமொழிகள் ஒருங்குகூடிய அத்தாணிமண்டபத்தில் திருவோலக்கம் கொண்டிலங்கும் கம்பனைக் கண்டு மகிழ, ஒரு பிறவி போதாது என்பது உலகறிந்த உண்மை. தத்தம் மொழிகளில் கம்பனைத் தாங்கிப் பிடித்தாலும் தாய்மொழி வாயிலாகக் கம்பனைக் கற்கும்போது பெறும் அனுபவங்கள், ஆய்வு உண்மைகள் தனிச்சிறப்புக்குரியவைதாம்.

கம்பனின் தொடர்களையே உள் தலைப்புகளாக்கிக் கொண்ட இப்பகுப்பினுள், முதலில் இடம்பெறுவது, கம்பனின் தமிழ் தொடர்பானது. அடுத்தது, மொழியியல் சார்ந்தது.

தமிழுக்கென்று தனித்தமைந்த, அக, புற இலக்கணமரபுகளை முன்வைத்துக் கம்பனை ஆய்ந்த ஆய்வாளர்களின் 13 கட்டுரைகள், இருபிரிவுகளில் இடம்பெறுகின்றன.

கம்பனில் இடம்பெறும் உவமைகள் உத்திகளை ஆராயும் 9 கட்டுரைகளும், கம்பனில் இடம்பெறும் கலைகள் குறித்த 9 கட்டுரைகளும், பண்பாடு தொடர்பான 5 கட்டுரைகளும், அறத்தை முன்வைத்து 14 கட்டுரைகளும், வாழ்வியல் நோக்கிலான 9 கட்டுரைகளும் அடுத்தடுத்த பிரிவுகளில் இடம்பெற்றுள்ளன. இத்தொகுப்பில் இடம் பெறும் 'கம்பன் கண்ட தொழில்கள்' கட்டுரை, கம்பனின் தனிப்பாடல்கள் குறித்தது. இதற்கும், கவிச்சக்கரவர்த்தி கம்பனுக்கும் எந்தத் தொடர்பும் இல்லை என்பதைச் சொல்லுதற்காகவே இக்கட்டுரை இத்தொகுப்பில் இடம்பெறுகிறது.

கம்பனின் இயற்கைநலம் பேணும் பாங்கை விளக்கும் 8 கட்டுரைகளோடு இத்தொகுப்பு நிறைவு பெறுகிறது.

பொருண்மை கருதி, சில பல பாடல்கள் ஆய்வாளர்களின் கட்டுரைகளில் திரும்பத் திரும்ப இடம்பெறுவது தவிர்க்க இயலாததே! எனினும், அவை சில புதிய புரிதல்களை உண்டாக்கவே செய்கின்றன. பள்ளி, கல்லூரி, பல்கலைக்கழகம் உள்ளிட்ட ஆய்வுத்துறை சார்ந்த பேராளர்களுக்கு இடையில், அமைப்பு சார்பாகவும், ஆர்வம் காரணமாகவும் சுவைஞர்களும் இத்தொகுப்பிற்குப் பங்களித்திருக்கிறார்கள்.

சிங்கப்பூர், இலங்கை உள்ளிட்ட பிறநாட்டறிஞர்கள் மற்றும் தமிழகம், ஆந்திரா, புதுச்சேரி உள்ளிட்ட இந்திய மாநிலங்களைச் சார்ந்த பேராளர்களின் பங்களிப்பில் முகிழ்த்த இத்தொகுப்பு உருவாகத் துணைநின்ற அத்தனைபேருக்கும் நன்றி சொல்லி மகிழ்கிறோம்.

"வையகம் முழுவதும் வறிஞன் ஓம்பும் ஓர்
செய்எனக் காத்து இனிது அரசு செய்கின்ற" (1791)

காசில் கொற்றத்துக் கவிச்சக்கரவர்த்தி, கம்பனை,

"யார் எனவிளம்புகேன் நான்?" (3775)

என்ற நிலைதான் இத்தொகுப்பைப் படிக்கும் நமக்கும் இருக்கும்.

'எல்லையொன்றின்மை எனும் பொருள் அதனை' ஒப்பற்ற ஒற்றைக் காப்பியத்தில் உள்ளடக்கித் தந்த காசில் கொற்றத்துக் கவிச்சக்கரவர்த்தியின் கனபரிமாணங்களை இன்னும் ஆராய இடம் வைத்து, இப்போதைக்கு விடைபெறுகிறோம். என்றுமுள தென்றமிழை இயம்பி இசைகொண்ட கம்பன் புகழ் பாடிக் கன்னித்தமிழ் வளர்க்கக் கைகூப்பி வரவேற்கிறோம். வணக்கமும் நன்றியும்.

**- கம்பன் தமிழாய்வு மையத்தார்**

ஓசை பெற்று உயர் பாற்கடல் உற்று, ஒரு
பூசை முற்றவும் நக்குபு புக்கென,
ஆசை பற்றி அறையலுற்றேன் – மற்று, இக்
காசு இல் கொற்றத்து இராமன் கதைஅரோ!

**- கம்பன்**



"......இப்படி எந்தத் துறையை எடுத்துக் கொண்டாலும் பெற்ற புலமை பளிச்சிடும் பேராற்றற் பேரறிவுக் களஞ் சியமாகத் திகழ்வதாலேயே அறிவுலகம் கவிச் சக்கர வர்த்தியை, 'கல்வியில் பெரியன்' என்று போற்றிப் புகழ்கிறது.

கம்பனெனும் கார்முகில்பெய்
கவிமழைநீர் திரண்டோடி
ஐம்புலனாம் நிலம்திருத்தி
அன்பறமாம் பயிர்வளர்த்துத்
தம்பொருவில் 'இராமாவ
தாரம்' எனும் தனியாறாய்ப்
பம்புதமிழ் எனும் கடலில்
பரந்து நலம் சுரந்திடுமால்.

**– கம்பன் அடிப்பொடி**

(கம்பன் அடிப்பொடி கலைக்களஞ்சியத்திலிருந்து)

## அ. என்றுமுள தென்றமிழை இயம்பி இசைகொண்டான்



## ஆ. யார் கொலோ இச்சொல்லின் செல்வன்?



## இ. அகப்பொருள் புறப்பொருள் அறிவார்; கவிகள் ஆகுவார்

### 1. அகமரபுணர்த்திய ஆர்வலன்

## 2. புறநெறி புதுக்கிய புரவலன்



## ௩ தன் ஒப்பு ஒன்றிலாதான்



## ௪. கலைகளின் பெருங்கடல் கடந்த கல்வியாளன்

## ஊ. விழுமிய குணத்து வீரன்



## எ. நல் அறத்துக்கு நாதன்

# "என்றுமுள தென்தமிழ் - கம்பத்தமிழ்"

தமிழாகரர் தெ.முருகசாமி
(முன்னாள் முதல்வர், இராமசாமி தமிழ்க்கல்லூரி, காரைக்குடி)
புதுச்சேரி.

தமிழிலக்கியப் பரப்பில் கம்பனின் தமிழ்த்தொண்டு அளப்பரியது. அதற்கு அடையாளமாகவே அவனை நுகர்ந்த தமிழ்கூறு நல்லுலகம், அவனைப்பற்றியளித்த மதிப்புரைகளைக் காரணமாகக் கூறலாம். 'கம்பன் வீட்டுக்கட்டுத்தறியும் கவிபாடும்', 'கல்வியில் பெரியவர் கம்பர்', 'கம்பநாடன் கவிதையைப்போல் கற்றோர்க்கு இதயம் களியாதே' என்றெல்லாம் கம்பர் ஒருவரே புகழ் உரைகளைப் பெற்றவராவார். அந்தஅளவிற்கு அவரது கவிதை, கி.மு., கி.பி. என ஆங்கில ஆண்டை வரையறுத்துரைப்பதுபோலக் கம்பரை, "கம்பருக்கு முன் கம்பருக்குப்பின் கவிதை வளம்" என்ற பரிமாணத்துடன் வரையறுப்பது கம்பருக்கும் தமிழுக்கும் ஏற்றம் தரத்தக்கதான ஒன்று எனலாம்.

சங்க இலக்கியங்களாயினும் சங்கம் மருவிய காப்பிய இலக்கியங்களாயினும் பெரும்பாலான செய்யுள்களின் நடை ஆசிரியப்பாவை ஒட்டியே வளர்ந்தது. இருப்பினும் காப்பிய வரிசையில் ஆசிரியப்பாவின் கட்டுவிட்ட பாவினத்துள் ஒன்றான விருத்தம் என்ற யாப்புவடிவப் பிதாமகராகத் திருத்தக்கதேவர் சிந்தாமணியை எழுதியதால் அவர் அனைவரது கவனத்தை ஈர்ப்பவராக உள்ளார்.

சமய வளர்ச்சிக்காலத்தில் பாவினங்களான தாழிசை, துறை, விருத்தங்கள் பல்கிப்பெருகினாலும் கி.பி. 6-ஆம் நூற்றாண்டினரான அப்பரடிகளின் ஆறாந் திருமுறைப்பாடல்கள் யாவும் விருத்தப்பாவாலேயே அமைந்ததால் அக்கவிதையின் போக்கு, கவி கற்போரை வழிவழியாக ஈர்த்ததற்குச் சான்றாக விருத்தப்பாவின் விருட்சமாகக் கம்பர் விளங்குகிறார். அதனால்தான் அவர், "விருத்தமெனும் ஒண்பாவிற்கு உயர் கம்பன்" என்ற புகழாரம் பெற்றார்.

செய்திகளை விரித்து விரித்துப்பாட இடம் கொடுக்கும் பா என்பதால் பொதுவாகப் பாக்களின் ஓர் இனம் விருத்தம் எனப்பட்டது போலும்! அந்தப்பாவே, தம் கவிப்பசிக்கு இரையாகும் என்பதால் கம்பர் அதைக் கையாண்டதால் அவர் காலத்திற்குப் பிறகும் விருத்தப்பாப் பாடும் பழக்கமே மிகுந்தது எனலாம். இந்திரசித்து செய்த நிகும்பலை

யாகத்தால் அனைவரையும் கட்டிப்போட்டதுபோலக் கவிஞர்களைக் கட்டிப்போடும் விருத்தப்பா என்ற ஒன்றால் பைந்தமிழ் இலக்கணத்திற்கு மகுடம் சூட்டிய பெருமை கம்பரையே சாரும்.

அவரவர் தாய்மொழிக்கு அவரவராலான தொண்டைச் செய்யவேண்டும் என்ற விதிக்குக் கட்டுப்பட்டார் போலக் கம்பர் அவர் காலத்திய வடசொற்களைத் தமிழ்வழிப்படுத்தித் தொல்காப்பிய இலக்கணத்தை நடைமுறைப்படுத்தினார். தாம் எழுத எடுத்துக்கொண்டது வடநாட்டுக் காவியமாதலால் அதனைத் தாய்த்தமிழில் கொணருங்கால் முன்னோர் மொழிந்த இலக்கண வரையறையை மீறாமல் பாதுகாத்தார்.

வடமொழிச் சொற்கள் தமிழில் கலக்குங்கால் தமிழியமாகக் கலக்க வேண்டும். மொழிக்கு முதலில் வாராது எனத் தமிழில் விலக்கப்பட்ட ரகர லகரங்கள் வடமொழியில் வந்தாலும் அவை தமிழ்ப்படுத்தும்போது அகர இகரங்களுடன் வரும். ராமன், ராகவன், ராவணன், லங்கை என்ற சொற்களை இராமன், இராகவன், இராவணன், இலங்கை என்றே காவியம் முழுவதிலும் கையாளுகின்றார் கம்பர். இதை வடமொழியாக்கம் என்பர் இலக்கணிகள்.

சில வடமொழிச்சொற்கள் தமிழியமாகுங்கால் வடஎழுத்துகளின் ஒலிகளுக்கு இணையான தமிழ் எழுத்துக்களை யிட்டு உரைப்பதற்குத் தமிழில் வடசொல் என்று பெயர். இது பற்றித் தொல்காப்பியம்,

"வடசொற் கிளவி வடவெழுத் தொரீஇ
எழுத்தொடு புணர்ந்த சொல்லா கும்மே" (தொல். சொல்.எச்)

எனக்கூறுகிறது. லஷ்மணன் என்ற பெயர் இலக்குவன் என்றும் விபீஷணன் என்பது வீடணன் என்றும் கிஷ்கிந்தை என்பது கிட்கிந்தை என்றும் ஹனுமன் என்பது அனுமன் என்றும் தமிழ் வடிவப்படுத்தியதால் இலக்கண வகையில் பழந்தமிழ் பேணிய சிறப்பைக் கம்பர் பெற்றார்.

மேலும் யாகம், ஆரியன் போன்ற வடமொழிச் சொற்களைக் கம்பர் வேள்வி, சிறந்தவன் என்பதாகக் கூவினாலும் அவை தமிழில் மொழிக்கு முதலாக வரும் எழுத்தாக இருந்ததால் தமிழுக்கும் வடமொழிக்குமான பொதுநிலையில் அச்சொற்களை அவ்வாறே கையாண்டார் எனலாம். அவ்வாறே தாமரை என்ற சொல் கமலம் என்றே பல இடங்களில் கையாளப்பட்டுள்ளது.

கம்பர், தம் நூலுக்கு "இராம காதை" எனப்பெயர் சூட்டியுள்ளார். இராமனைப்பற்றிய முழுவரலாற்றையும் கதைப்பதால் (சொல்லுதலால்) அப்பெயரைத்தந்தார். இராமாயணம், இராமாவதாரம் எனப்பவர் கூறும் போக்கிற்கான கருத்துக்கு, எதிர்க்குரல் சொல்லாட்சியாகத் தலைப்பைத் தந்ததிலிருந்தே கம்பரின் ஆழமான தமிழ்ப்பற்றை உணரலாம் என்க!

அளப்பரிய தம் கவியாற்றலால் கம்பர் புதியன புகுத்தலாக ஒன்றைப் படைக்காமல் வடமொழிக்காவியத்தைத் தழுவி இராமாயணத்தை இயற்றுவானேன்? எனில், தமிழின் இலக்கண மூலத்தைத் தொட்டுத்துலக்குவதற்காகச் செய்த அரிய தமிழ் முயற்சி எனலாம்.

ஒருமொழியில் தோன்றும் முதல் நூலைப்பின்பற்றி வழிநூல் தோன்றலாம். அவ்வழிநூல் முதல் நூல் தோன்றிய மொழியிலேயே அமைவது மட்டுமின்றிப் பிற மொழித்தழுவலாகவும் அமையலாம் என்பது தொல்காப்பியத்தமிழ்விதியாக உள்ளதால் அந்த விதிப்படிக் கம்பர் இராமகாதையை வடித்தது தமிழுக்கு ஆக்கமான தொண்டாம் என்க. வழி நூல் பற்றி,

'வழியின் நெறியே நால்வகைத்தாகும்' எனக்கூறிய தொல்காப்பியர்.

"தொகுத்தல், விரித்தல், தொகைவிரி மொழிபெயர்த்து
அதர்ப்பட யாத்தலோடு அனைமர பினவே" (மரபியல்)

என அந்நான்கை விளக்கினார். ஒருமொழியின் முதல் நூலைத்தொகுத்துச் சுருக்கிப்படைத்தாலும் அதனை விரித்துப்படைத்தாலும் அதனைத் தொகுத்தும் விரித்துமாய் இருதிறத்தால் படைத்தாலும் அதனை மொழிபெயர்ப்பாகப் படைத்தாலும் வழி நூல்கள் நான்குவகைப்படும்.

இவற்றுள் மொழிபெயர்ப்பு என்பது ஒருமொழியிலிருந்து மற்றொரு மொழிக்குப் பெயர்ப்பதாக அமையுங்கால் தொல்காப்பியத் தமிழின்படித் தமிழில் உள்ளதைப் பிறமொழியில் பெயர்ப்பதையே கொள்ளவேண்டும் எனலாம். இவ்வுண்மை ஒருவரிருக்க இன்னொரு மொழியின் கருத்தை ஏற்புழிக்கோடலாகத்தாய்மொழியில் கொள்வதைத் தாய்மொழிக்கான ஆக்கம் என்பதாகக் கருதி மொழிபெயர்க்கப்படுவதையும் வழிநூலாகக் கருதலாம் என்பதை இளம்பூரணர் என்ற உரையாசிரியர் கூறியுள்ளதன் வழிக்கம்பர் வடமொழி இராமாயணத்தைத் தமிழ் இராமகாதையாகத் தந்ததைத் தமிழாக்கமாகக் கருதலாம் என்பதில் தவறில்லையன்றோ!

'மொழிபெயர்த்து அதர்ப்பட யாத்தல்' என்பதற்கு இளம்பூரணர் என்பார் "வடமொழிப் பனுவலை மொழிபெயர்த்துத் தமிழ்மொழியாற்

செய்தல்" என்கிறார். இதனையே தொல்காப்பியஉரைவளத்தில் பேராசிரியர் மயிலம் ஆ.சிவலிங்கனாரும் திருப்பனந்தாள் பேராசிரியர் முனைவர் கு.சுந்தரமூர்த்தி அவர்களும் வழிமொழிந்துள்ளனர். இதனால் தொல்காப்பிய இலக்கணத்தை வழிமொழிந்து காப்பதில் கம்பருள்ள பங்களிப்பு மிகுதி எனத் தெரிகிறது.

மேலும் எழுத்து, சொல், பொருள் இலக்கண மரபுகளையும் பேணிக்காக்கும் ஆவணமாகத் தம் நூலைப்படைத்துள்ளார் கம்பர் எனலாம். "ரகார ழகாரம் குற்றொற்றாகா" (மொழிமரபு) என்ற விதிப்படித் தமிழில் ர். ழ். எழுத்துக்கள் தனிக்குறிலுக்குப் பின் வாரா. அர்ச்சனை, கர்வம் என்பன தமிழ்ச்சொற்கள் அல்ல. இந்த விதியைக் கம்பர் மீறாமல் காப்பியம் முழுமையிலும் இத்தகு சொற்கள் வராமல் காத்துள்ளார்.

"கடிதல் இல்லைக் காலத்துப்படினே" என்ற சொல்லிலக்கணப்படி, கற்பின் கனலி, செஞ்சொற்கவியின்பம், சிறியன சிந்தியாதான் போன்ற புதுச்சொல்லாக்கங்களைத் தமிழுக்கு வரவாக்கியுள்ளார் கம்பர். இவ்வாறே அகப்பொருள் இலக்கணப்பதிவாக இராமன் சீதை இருவரும்,

"கண்ணொடு கண்இணை கவ்வி ஒன்றை ஒன்று
உண்ணவும் நிலைபெறாது உணர்வும் ஒன்றிட"

நோக்கிக்கொண்டதாகக் கம்பர் கூறுவதைத் தொல்காப்பிய அகத்திணையின் களவியல் மரபாகக் கருதத் தோன்றுகிறது.

"நாட்டம் இரண்டும் அறிவுடம் படுத்தற்குக்

கூட்டி உரைக்கும் குறிப்புரை யாகும்" (பொருள். கள)

என்ற நூற்பாவின் கருத்துப்பொருத்தந்தான் 'அண்ணலும் நோக்கினான் அவளும் நோக்கினாள்' என்ற தொடர்ப்பொருள் உண்மையாகும்.

கம்பனின் உவமையும் கற்பனையும் காலவெள்ளத்தால் அழியாதவையாகும். கூறும் உவமையில் தடுமாற்றமாகக் கூறுவதை உவமையின் ஒரு கூறாகக் கருதுகிறார் தொல்காப்பியர். "தடுமாறு உவமம் கடிவரை இன்றே" என்றபடி அதுவோ இதுவோ என ஐயப் படுமாறு அடுக்கும் உவமையைத் தள்ளாமல் ஏற்கலாம் என்கிறார். இதனை ஒட்டியே,

"மையோ மரகதமோ மறிகடலோ மழை முகிலோ,
ஐயோ இவன் அழகென்பதோர் அழியா அழகுடையான்"

என இராமனின் கருநிற வண்ணத்தை ஐய உவமையால் வியக்க வைக்கிறார் கம்பர்.

தொல்காப்பியர் கூறும் புறப்பொருள் இலக்கண மாண்புகள் யாவும் கம்பர் காட்டும் இலங்கை, கிட்கிந்தா போர்களில் நிரல்படப்பதிவாகியுள்ளன. மேலும் உளவியல் அடிப்படையில் தொல்காப்பியர் கூறும் மெய்ப்பாட்டியல் கருத்துக்கள் கம்பரில் மிகுதியும் பதிவாகியுள்ளன எனில் அதில் மிகையில்லை எனலாம். ஒரு பானை சோற்றுக்கு ஒரு சோறு பதமாக ஒன்றை உணரலாம்.

அடைக்கலமாக வந்த வீடணனை ஏற்பதா இல்லையா என்ற விவாதத்தில் சுக்கிரீவன், அண்ணனுக்குத் துரோகம் செய்துவிட்டு வருபவனைச் சேர்க்கக்கூடாதென முதலில் மறுப்புரையைக் கூறப் பிறரும் பெரும்பாலும் எதிர்மறையையே கூறினர். இறுதியாக அனுமன் கூவிய சொற்பொருள் உண்மையில் அடைக்கலம் தருவதென உறுதிப்படுத்தப்பட்ட நிலையில் இராமபிரான் உடன்பட்டுக் கூறிய அனுமனை ஏவி வீடணனை அழைத்துவரச் செய்யாமல் முதன்முதலில் மறுத்த சுக்கிரீவனைப் பார்த்து "கோதிலா தவனை நீயே சென்று கொணர்தி" என்றான். நீ கொணர்தி என்னாமல் நீயே என்ற தேற்றேகார இடைச்சொல் மாண்பை உளவியல் பாங்காகப் பதிவு செய்கிறார் கம்பர்.

வாலியை விட்டு விலகி இராமனிடம் அடைக்கலம் அடைந்த சுக்கிரீவன் தான் வந்த வழியை மறந்து பேசியது தவறு எனச்சுட்டி உணர்த்தும் முகத்தான் 'நீயே' என்றார் இராமர். நீ என்றாலும் சுக்கிரீவனைச் சுட்டுமாயினும் அவன் சென்று வீடணனை அழைக்காமல் அவன் பிறர்மூலம் வீடணனை அழைத்து வந்து இராமனிடம் அடைக்கலப்படுத்தவும்கூடும் என்பதால் "தன்னைப் போலவே வீடணன் அடைக்கலம் தேடிவந்தவன்" எனச் சுக்கிரீவனை மனமார உணரச் செய்யும் முயற்சிக்காக நீயே கொணர்தி எனப்பட்டது.

'நீ கொணர்தி' என்பதை ஏவுதற் கருத்தாவாகக் கூற வாய்ப்புண்டு. 'நீயே கொணர்தி' என்பது இயற்றுதற்கருத்தாவுக்கான கட்டளை வாக்கியமாய் சுக்கிரீவனே செய்யவேண்டும் என்பது சொல்லாமல் சொல்லப்பட்டது என்பதாம். இதனால் தான் வந்த வழியை ஒவ்வொருவரும் மறந்துவிடக்கூடாது என்ற உளவியல் பாங்கான நீதியை உணர்த்துவதற்குரிய வாய்ப்பாக இந்த உரையாடலில் இலக்கணச் செறிவைக் காட்டியதால்தான் கம்பன் நாடன் கவிதையைப் போல்

என்ற உவமையின் உச்சம் கம்பருக்குக்கிட்டியதைத் தனக்குவமை இல்லாதான் எனக்கடவுளுக்கு உவமை கூறமுடியாதென்ற அய்யன் திருவள்ளுவரின் வாக்கு, கம்பருக்கும் மெய்யாகப்பொருந்தும் எனலாம்.

இங்ஙனமெல்லாம் கூட்டிமொழிந்தால் கம்பரைப்பற்றி ஒன்றை உயிர்ப்பாக உணரலாம். அதுதான் "வார்த்தை தமிழுக்கு உதவிய கம்பன்" எனக்கவியரசு கண்ணதாசன் கூறிய உரைசால் உரைக்கு ஈடாகப் பழந்தமிழ்ப்பேணியும் புதுத்தமிழ்ப்புதுக்கியும் இராமயணத்தை இராமகாதையாகத் தந்த "என்றுமுள தென்தமிழ்தான் - கம்பத் தமிழ்" ஆம் என்க!

# கம்பனின் தமிழ்

கவிச்சித்தர் கண. கபிலனார்
பிரான்சு.

ஒரு மொழியானது நிலைத்து நிற்கவேண்டுமானால், அது தன்னைத் தானே பக்குவப்படுத்திக்கொள்ள வேண்டும். வழிவழி தொடரும் மக்களுடைய வாழ்வும், சிந்தனையும் செயற்பாடும் மாறுகிறது. அதற்கு ஏற்ப, மொழியும் மாற்றம் கொள்கிறது.

தொல்காப்பியரின் இலக்கணத் தமிழ் அகமும் புறமும் பேசிச் சங்கப்புலவர்களின் தமி, சிலப்பதிகாரக் கர்த்தாவான இளங்கோவின் தமிழ், வள்ளுவரின் குறுகத் தரித்த குறளின் தமிழ்,பிற்காலத்து நாயன்மார்களின், ஆழ்வார்களின் தமிழ் என்று புதிய புதிய வடிவம் காட்சி கொடுப்பது கண்கூடு. யாவற்றையும் தம்மகத்தே ஆட்கொண்டு கம்பனின் தமிழ் இராமகாதையாக மலர்கிறது.

தனது கருத்துக்களை எடுத்து வைக்கும் களமாக, வால்மீகியின் படைப்பை எடுத்துக் கொண்டான் கம்பன். ஆனால், பாத்திரப்படைப்புகளை அவனுக்கே உரிய சிறப்பில் வகுத்தான். நிகழ்வுகளுக்கும் புதிய தோற்றத்தைக் கொடுத்தான். களம் ஒன்றாயிருப்பினும் காட்சி மாறுகிறது. இராமனை மனிதனாகவே கருதும் கட்டாயத்தில் இருக்கிறான் வால்மீகி. கம்பனுக்கு ஒரு தர்மசங்கடம். தமிழ் மக்களின் உள்ளத்தில் இராமன் தெய்வமாகக் கோயில் கொண்டுவிட்டான்.

இராமனின் இறைத்தன்மையைக் கைவிட முடியாது. எனவே, அவதாரப்படலத்தை வைக்கிறான். மனிதனாக இருந்தால், மட்டுமே இராமனை வெல்ல முடியும். மானுடத்தின் மகாசக்தியையும் வெளிப்படுத்த வேண்டும்.

இந்த இக்கட்டான நிலையில் தான் காவியம் தொடங்குகிறது. உலகம் யாவையும் தாமுளவாக்கி என்று உரத்தக்குரலில், பேசி காண்டம் காண்டாக கம்பனின் தமிழ் விரிவடைகிறது.

கம்பன் ஒரு கனவு உலகத்தைப் படைக்கிறான். கோசலம், தமிழ் நிலமாகிறது. ஐவகை நிலத்தின் தலைமையான மருதம் அழகு கொடுக்கிறது.

மருதநில வனப்பில் தமிழ்தான் கொலுவீற்றிருக்கிறது. அது கம்பனின் தமிழ் முழுக்க முழுக்க. தண்டலை மயில்கள் ஆடும். தாமரை விளக்கம் தாங்கும். கொண்டல்கள் முழவின் ஏங்கும். குவளை

கண்விழித்து நோக்கும். தெண்டிரை எழினி காட்டும். தேம்பிழி மகரயாழின் வண்டுகள் இனிதுபாட மருதம் தமிழாகிய அமுதப்பரப்பாக மிளிரும். காவியம் முழுதுமே தமிழின் தனித்தன்மை அழகும் இன்பமும் பழகக் காண்கிறோம்.

எதைத் தொடுவது? எதைவிடுவது?

இராமகாதை காதல் காவியமா? வீரக் காவியமா? கருணைக் காவியமா? இவையாவுமே ஒன்றுடன் ஒன்று கலந்ததே.

காதல் கனிந்த தமிழ், வீரம் மிகுந்த தமிழ், கருணை கவிந்த தமிழ், இறைமை போற்றும் தமிழ், இதனின் சங்கமம்தான் கம்பனின் மகாகாவியத்தமிழ். இவ்வண்ணம் நிகழ்ந்த வண்ணம், இனி இந்த உலகுக்கு எல்லாம் உய்வண்ணம் தமிழன்றி வேறும் உண்டோ?

காப்பியக்கதை முழுக்கக் கம்பனின் தமிழ் இசையாய் ஒலிக்கிறது. போர்ப்பறையாய் முழங்குகிறது. கம்பனின் கைவண்ணம், அவனது மனச்செழிப்பு, அவனது கவித்திறன் தமிழின் அழகுக்கு அழகு செய்து கொண்டு போகிறது.

சீதையின் மெய்யழகையும், நடையழகையும் வண்ணம் தீட்டுகிற தமிழ், அரக்கியான சூர்ப்பணகையின் தேவதை வடிவையும் நடையையும் எடுத்து வைக்கிறது.

"பஞ்சி ஒளிர், விஞ்சு குளிர் பல்லவம் அனுங்க,
செஞ் செவிய கஞ்சம் நிகர், சீறடியள் ஆகி,
அம் சொல் இள மஞ்ஞை என, அன்னம் என, மின்னும்
வஞ்சி என, நஞ்சம் என, வஞ்ச மகள் வந்தாள்" (2762)

என்று செதுக்குகிறது கம்பச் சித்திரத்தமிழ்.

சிறியன சிந்தியாதான் வாலி. சுக்ரீவனுடைய நட்புக்காக இராபாணம் வாலியின் மார்பில் பாய்கிறது. யாருடையது என்று வாலி பார்க்கிறான்.

"மும்மைசால் உலகுக்கெல்லாம் மூலமந் திரத்தை முற்றும்
தம்மையே தமர்க்கு நல்கும் தனிப்பெரும் பதத்தைத் தானே
இம்மையே எழுமை நோய்க்கும் மருந்தினை இராமன் என்னும்
செம்மைசேர் நாமம் தெரியக்கண்டான்"

மரணத்துடிப்பில் இருக்கும் அந்த நேரத்திலும் வாலியின் சொற்கள் அற்புதமானது. அவற்றை அள்ளி அள்ளி வழங்கியது கம்பனின் அற்புதத்தமிழ்.

அது மட்டுமா? யுத்தகாண்டம், காதற்களிப்பையும், சோகப் பொலிவையும் சொரிந்த தமிழ், கடவுளை நோக்கிக் கரம் தூக்கித் தொழுகிறது. ஒன்றே என்னில் ஒன்றேயாம் என்ற பாடலில் அழகு தமிழ் அருள் சொரியும் தமிழாக மாறுகிறது.

இராமன் ஆட்சியில் மட்டும் மாட்சியில் மட்டும் தமிழ் மிளிரவில்லை. இராவணனது மாட்சியிலும் வீழ்ச்சியிலும்கூட தமிழ் ஒளிர்கிறது. இராமனைப்போற்றிய தமிழ், தோல்வியைத் தழுவிய இராவணனின் பின்னே தொடர்கிறது. போர்க்களத்தில், வீடணனின் அழைப்பையேற்க மறுத்த கும்பகருணனின் பெருமையையும் பேசுகிறது.

கற்காலத்தில் தோன்றி ஒரு பொற்காலத்தைப் படைத்து, பிற்காலத்தில் சற்று அடங்கி, அமர்ந்து ஒளிர்ந்து, தற்காலத்தில் கம்பர் பெருமானால் தூண்டிவிடப்பட்டு எட்டுத்திசையும் விட்டு ஒளிர்வது கம்பன் தமிழ் என்பது உறுதி.

# கம்பனின் தமிழ்த்திறன்

திருமிகு. தி.அருணாச்சலனார்
மதுரை.

கம்பனின் தமிழ், அது கட்டிக்கரும்பு, கனிச்சாறு பிழியல், கவின்மிகு ஓவியம். கவிகளை செவிநுகர் கனிகளாய்ச் சிந்திக்க வைத்தது கம்பனின் தமிழ் மட்டுமே.

செந்தமிழ்க் கவியில் செப்பிடு வித்தைகள் பலவும் செய்திட்ட செந்நாப்புலவருள் சிறப்பின் சிகரத்தில் இருப்பவன் கம்பன். கம்பன் என்னும் கதைசொல்லி தமிழைக் கையாண்ட தரத்தினை, தங்கத்திலே பதித்த வைரமாய் ஒளிர்கிறது என்பேன்.

மூவாயிரம் ஆண்டுகள் முந்தித் தவம் கிடந்து அன்னைத் தமிழ் பெற்றெடுத்த கம்பனின் தமிழ் நம்மையெல்லாம் மகுடியின் முன் ஆடிடும் நாகமாய் மயக்குதல் உண்மையே.

கம்பனின் தமிழ் சொற்சிலம்பம் பற்பல இடங்களில் அண்ணாமலை தீபமாய் ஒளிர்கிறது. குன்றிலிட்ட விளக்காகக் குவலயத்தாருக்கு தமிழின் பெருமை காட்டப் பிறந்தவன் கம்பன்.

மொழி ஆளுமையில் விஞ்சி நிற்பவன் கம்பன். தனிமனிதனுக்கும், குடும்பத்திற்கும், சமூகத்திற்கும், ஆன்மீகத்திற்கும், அரசியலுக்கும், நிர்வாகத்திற்கும், நூல்செய்யும் மேலோருக்கும் அறிவுரைகளை அள்ளித் தெளித்திருப்பது கம்பனின் தமிழ்த்திறன்.

"கம்பனுக்கு மேலோர் கவிஞன் பிறப்பதில்லை
கம்பனது கவியின்றி கன்னித்தமிழ் வாழ்வதில்லை"

என்ற கவிஞன் கண்ணதாசனின் வரிகள் நமது சிந்தனையை செதுக்கட்டும். சில காட்டுகள் பின்வருமாறு.

**கம்பக் கயிறு**

கம்பனின் தமிழ் கூறும் கயிறு பற்றிய சொல்லாடலை, அனுமனைக் கட்டிட அரக்கர்கள் பயன்படுத்திய பல்வேறு கயிறுகளை கூறும் இடத்தில் கண்டு இன்புறலாம். (சுந்தரகாண்டம் - பிணி வீட்டு படலம்- 6006)

"நாட்டின், நகரின், நடு உள்ள கயிறு நவிலும் தகைமையவே
வீட்டின் ஊசல் நெடும் பாசம் அற்று, தேரும் விசி துறந்து

மாட்டும் புரவி ஆயம் எலாம், மருவி வாங்கும் தொடை அழித்து
பூட்டும் வல்லி மூட்டோடும் புரசை இழந்த போர் யானை"

இந்தப்பாட்டில் ஒவ்வொரு வேலைக்கும் பயன்படும் கயிற்றுக்கும் தனித்தனிப் பெயர்கள் தமிழில் உண்டு என நமக்கு அறிமுகம் செய்யப்படுகிறது.

| | | |
|---|---|---|
| ஊசல் | : | வீடுகளில் ஊஞ்சல் கட்டப் பயன்படும் கயிறு |
| விசி | : | தேர்களில் பயன்படுத்தப்படும் கயிறு |
| தொடை | : | குதிரைகளைக் கட்டப் பயன்படும் கயிறு |
| வல்லி | : | யானைகளின் கால்களில் கட்டப்படும் கயிறு |

கம்பனின் தமிழ், கயிறு பற்றிய குறிப்பின் உச்சத்தை தொட்ட வரிகள்.

" ..........................................தமக்கு இயைத்த
பெண்ணிற்கு இசையும் மங்கலத்தில் பிணித்த கயிறே இடை பிழைத்த
கண்ணில் கண்ட வன் பாசம் எல்லாம் இட்டுக்கட்டினர்"

(சுந்தரகாண்டம் - பிணி வீட்டு படலம்- 6007)

தாலிக்கயிறு தவிர மற்ற கயிறுகள் அனைத்தும் அனுமனைக் கட்டப் பயன்பட்டன எனக் கூறுவது கம்பன் தமிழின் சிறப்பாகும்.

**கம்பனின் கவியும் நதியும்**

ஓடிவரும் நதிக்கும் பாடிவரும் கவிக்கும் இசைந்த பொருத்தத்தை எடுத்து இயம்பும் கம்பனின் தமிழ் வரிகள். (ஆரண்ய காண்டம்-சூர்ப்பணகை படலம்-2834)

"புவியினுக்கு அணிஆய் ஆன்ற பொருள் தந்து புலத்திற்று ஆகி
அவிஅகத்துறைகள் தாங்கி ஐந்திணை நெறி அளாவி
சவி உறத்தெளிந்து தண்ணென் ஒழுக்கமும் தழுவிச் சான்றோர்
கவி எனக் கிடந்த கோதா வரியினை வீரர் கண்டனர்."

ஆன்ற பெருமை பெற்ற கோதாவரி ஆறு சான்றோர் கவிபோல் விளங்கிற்று என்கிறது கம்பனின் தமிழ். இங்கே கம்பனின் தமிழ் ஒரு கவிதை எப்படி இருக்கவேண்டும் என்ற விளக்கத்தைத் தருகிறது. (த.இராமலிங்கம் -21ம் நூற்றாண்டில் கம்பன்- பக்கம்72)

1. உலகத்தில் உயர்ந்தோர் பலராலும் கொண்டாடப்படக்கூடிய எழிலைப் பெற்றிருக்க வேண்டும்.

2. அறம், பொருள், இன்பம், வீடு என்பவற்றை உள்ளடக்கிப் பொருள் தரவேண்டும்.

3. கற்போருக்கு நுண்ணறிவை வளர்ப்பதாக இருக்கவேண்டும்.

4. அகப்பொருள் என்று தமிழினம் குறித்த களவு, கற்பு, ஒழுக்கங்களின் தன்மையைக் கூறவேண்டும்.

5. குறிஞ்சி, முல்லை, மருதம், நெய்தல், பாலை என்னும் ஐவகை நிலங்களின் ஒழுக்கமான புணர்தல், இருத்தல், பிரிதல், இரங்கல், மற்றும் ஊடல் நெறிமுறைகள் கூறவேண்டும்.

6. சற்றும் பொருள் மயக்கம் இன்றி அமைய வேண்டும்.

7. தீய ஒழுக்கங்களை ஒதுக்க வேண்டும்.

கோதாவரி ஆற்றினை வருணிக்கும் கம்பனின் தமிழ் இன்றைய கவிஞர்களுக்கு நடைமேடை அமைத்துத்தருகிறது.

**கம்பனின் நீண்ட தமிழ்**

திருமாலின் பெருமை கூற, காப்பியம் படைத்தான் கம்பன். அந்தத் திருமாலுக்கு இணையாக தமிழ்முனி அகத்தியரை இணைத்துக்காட்டி தமிழுக்கு மணிமுடி சூட்டியது கம்பனின் தமிழ்.

தமிழுக்குப் பின்சென்ற தாமோதரன் வரலாற்றை திருமழிசை ஆழ்வார் சரித்திரத்தில் பயின்ற கம்பன், அந்தத் தமிழைச் சிறப்பிக்க குறுமுனியைக் கையில் எடுத்தான்.

கம்பனின் தமிழ், நமது தாய்த்தமிழைச் சீராட்டி, பாராட்டி, சிறப்பின் உச்சத்தில் வைக்கும் வரிகள். (ஆரண்ய காண்டம் - அகத்தியர் படலம்- 2768)

"ஆண்தகையர் அவ்வயின் அடைந்தமை அறிந்தான்
ஈண்டு உவகை வேலை துணை ஏழ் உலகம் எய்த
மாண்ட வரதன் சரண் வணங்க, எதிர் வந்தான்
நீண்ட தமிழால் உலகை நேமியின் அளந்தான்"

'நீண்ட தமிழ்' என்று கம்பன் பெருமைப்படுத்திய தமிழை மனோன்மணீயார்,

"சதுர்மறை ஆரியம் வருமுன் சகம்முழுவதும் நினதானால்
முதுமொழி நீ அனாதி என மொழிவதும் வியப்பாமோ?"
என்று விவரிக்கிறார்.

கம்பனின் தமிழ், தமிழுக்கு இலக்கணம் செய்த அகத்தியரை உலகளந்த பெருமாளுக்கு உவமை சொன்னதற்கு மேலாக தமிழைச் சிறப்பிக்க வேறு சொற்கள் இல்லை.

இந்தப் பாடலின் கருத்தை ரா.பி.சேதுப்பிள்ளை தனது கம்பர் கவியின்பம் என்ற நூலில் (இராசபாளையம் கம்பன் கழக வெளியீடு) முதல் தொகுதி ப. 486) கீழ்க்கண்டவாறு குறிப்பிடுகிறார்.

"வாமன வடிவத்தில் அடங்கி நின்ற திருமால் பின்னர் நெடுமாலாய் நிமிர்ந்து நீண்ட மலரடியால் இருநிலம் முழுவதும் அளந்தாற்போன்று, சிறிய வடிவத்தில் அமைந்த பெரிய முனிவர் மூன்று கவடாய் முளைத்தெழுந்த முத்தமிழின் பெருமையை இம்மூவுலகிற்குப் பரப்பினார். சொல்லின்செல்வரின் இந்தக் கருத்துக்கு மறுப்பு உண்டோ?

"தென்தமிழ் நாட்டு அகன் பொதியில் திரு முனிவன்
தமிழ்ச் சங்கம் சேர்கிற்பிரேல்
என்றும் அவன் உறைவிடம் ஆம்" (கிட்- நாடுவிட்ட படலம்-4584)

என்ற வரிகளில் கம்பனின் தமிழ், தமிழ்நாட்டின் பெருமையைக் கூறுவது காணலாம்.

கம்பனின் தமிழ், காப்பிய நாயகனின் பேராண்மை, போராண்மை, ஊராண்மை ஆகியவற்றை உரக்கச் சொல்லிச் செல்கிறது.

முத்தலையனுடன் நடந்த போரில் இராமனின் பகளிகள் அனிஅணியாய் சென்று, வென்றதைக் கூறும் இடத்தில் கம்பனின் தமிழ் ஒரு புதிய சிந்தனையைப் புகுத்துகிறது. (ஆரண்ய காண்டம்- கரன் வதைப்படலம்-3099)

"கைக்களிறு அன்னவன் பகளி கண்டகல்
மெய்க்குலம் வேரோடு துணிந்து வீழ்த்தின
மைக்கரு மனத்து ஒரு வஞ்சன், மாண்பு இலன்
பொய்கரி கூவிய கொடுஞ் சொல் போலவே"

பொய்யை மெய்யாகவும், மெய்யை பொய்யாகவும் நிறுவிட பொய்ச் சான்று பகர்வோர் குலத்தோடு அழிவர் என்பது அறநூல்களில் சொல்லப்பட்டதைப் போல, புகார் நகரில் பொய்கரியாளரை புடைத்துத் தின்னும் சதுக்கபூதம் இருந்ததைச் சிலம்பு செப்பும் (ம.பொ.சி.- தமிழ் இலக்கியத்தில் இன உணர்வு)

களத்திலும் கம்பனின் தமிழ் அறத்தைச் சொல்வதை அறிந்து மகிழலாம்.

## இருப்பதை இல்லையெனும் கம்பத்தமிழ்

கம்பனின் தமிழ், உவமை சொல்வதில் கால்கொண்டு நடைபயிலும் இடம் இதோ.

"வெய்யோன் ஒளி தன் மேனியின் விரிசோதியின் மறைய
பொய்யோ எனும் இடையாளோடும் இளையானோடும் போனான்
மையோ, மரகதமோ, மறிகடலோ, மழை முகிலோ
ஐயோ, இவன் வடிவு என்பது ஓர் அழியா அழகு உடையான்

(அயோத்தியா காண்டம் - கங்கைப் படலம்- 2022)

"பொய்யோ, மையோ, ஐயோ என சொற்கள் அணிவகுத்து வரும் இப்பாடலில், கம்பனின் தமிழ் "பிடி இடையாள்" எனப் பெண்களை வருணிப்போர் நடுவில் " பொய்யோ எனும் இடையாள்" எனக் கூறுவது புதிய உத்தியைக் காட்டுகிறது.

இருப்பதை இல்லையென்று சொல்லும் உவமை கம்பனின் தமிழுக்கு மட்டுமே உரியது.

**'பாலில் படுநெய்போல்'**

கௌசிக முனிவன் இயற்றிய வேள்வியை இராம இலக்குவர்கள் காத்து நின்ற பெருமையைக் கூறிடும் கம்பனின் தமிழ், கண்ணையும் இமையயும் இணைத்துச்சொல்வது கவியின்பத்தின் தலைநிலை ஆகும்.

"எண்ணுதற்கு ஆக்க அரிது இரண்டு மூன்றுநாள்
விண்ணவர்க்கு ஆக்கிய முனிவன் வேள்வியை
மண்ணினை காக்கின்ற மன்னர் மைந்தர்கள்
கண்ணினைக் காக்கும் இமையின் காத்தனர்.

(பாலகாண்டம் - வேள்விப்படலம்- 461)

இந்தப் பாடலில் கம்பனின் தமிழ் புதைத்து வைத்திருக்கும் புத்தமுதான கருத்தினை நாம் கொண்டாடி மகிழலாம்.

பெரியவன் இராமன் மேலிமை போல் அசைந்தும் சிறியவன் இலக்குவன் கீழிமைபோல் அசையாது நின்றும் காவல் காத்தனர் என்ற கருத்து பாலில் உறை படு நெய்யாகத் தெரிகிறது.

இன்றையதினம் இராணுவ வீரர்களின் காவல் முறையும் இப்படித்தான் அமைகிறது.

கம்பன் தமிழின் கற்பனை இன்றும் நடைமுறையில் உள்ளது.

கம்பன் தமிழின் சொல்லாட்சிக்குச் சிறந்த மேற்கோள் ஒன்றினை, மாயத் துறவி மைதிலி அவளுக்கு இராவணனின் பெருமையை எடுத்துக் கூறுமிடத்தில் காணலாம். (ஆரண்ய காண்டம்- இராவணன் சூழ்ச்சிப்படலம்-3461)

**குறிப்பால் உணர்த்தும் கம்பத்தமிழ்**

"இந்திரற்கு இந்திரன் எழுத ஆகாச்
சுந்தரன், நான்முகன் மரபில் தோன்றினான்
அந்தரத்தோடும் எவ்வுலகும் ஆள்கிறான்
மந்திரத்து அரு மறை நல்கும் நாவினான்."

இந்திரர்க்கு இந்திரன் என்ற சொல்லால் கம்பனின் தமிழ் ஓர் உண்மையை உவமையாய் படைக்கிறது.

கள்ளவேடம் புணர்ந்துதானே அகலிகையை இந்திரன் அனுபவித்தான். அந்த துன்மதி படைத்தவன் இராவணன் என்பதை குறிப்பால் உணர்த்தும் இடம் இது.

என்றும் இருக்கும் இளமைத் தமிழோடு நன்றாய் இருக்கும் கம்பன், நின்ற பரத்து மாத்திரம் அன்றியே நில்லா இகத்தும் நிற்பான் அவன்.

# கம்பனின் கருத்தாக்கத்தமிழ்

திருமிகு. கா.கணநாதன்
தமிழ்த்துறை உதவிப் பேராசிரியர், அழகப்பா பல்கலைக்கழகம்,
காரைக்குடி.

## முன்னுரை

கம்பர் ஒரு மகாகவி. கம்பர் தமக்கு முன் இராமகாதையைப் பாடிய வான்மீகி, வசிட்டர், போதாயனர் மூவரும் தமக்கு முன்னோடிகளாக இருந்தார்கள் எனக்கூறுவார். ஒரு பெரும்புலவர் பிறமொழி இலக்கியத்தைத் தம் தாய்மொழியான தமிழில் இயற்றியுள்ளார் என்றால் அதற்கு முக்கியமான காரண காரியங்கள் உள்ளன. வாய்மொழியாகவும், எழுத்துவடிவிலும் இராமகாதை கம்பர் காலத்தில் தமிழகத்தில் வழக்கில் இருந்து வந்தமை குறிப்பிடத்தக்கது. பல்லாயிரக்கணக்கான ஆண்டுகளாக தமிழரின் கருத்துக்கும், கண்ணுக்கும் இனிமைகூட்டி வந்த அம்மகாகாவியக் கருத்துப் பொருண்மையைத் தமது சமஸ்கிருத அறிவைப் பயன்படுத்தி வான்மீகியார் வடமொழியில் இயற்றிய இராமாயணக் கதையைத் தமிழில் தழுவலாகப் படைப்பாக்கம் செய்துள்ளார் கம்பர். அப்படைப்பிலக்கியத்தில் "தமிழ்" மொழித்திறம் குறித்த கம்பரது சிந்தனைக்கூறுகளை ஆய்ந்து அறிவதாக இக்கட்டுரை அமைகிறது.

## கம்பரின் தமிழ்ப் பற்று

கம்பர் தமிழ்மொழியின் பெருமைக்குப் பெருமை சேர்க்கும் வகையில் பன்னிரண்டாயிரம் தமிழ்ச் செய்யுட்களால் இராமகாதையைப் படைத்தளித்துள்ளார். அப்படைப்பாக்கத்தில் ஆங்காங்கே வாய்ப்புக்குரிய இடங்களிலெல்லாம் தமிழ் மொழியின் சிறப்புக்களை மிளிரச் செய்துள்ளார். கம்பர் செய்தது வழிநூலேயாகும். வழிநூல் வகைகளைத் தொல்காப்பியர்,

> "தொகுத்தல், விரித்தல், தொகை விரி மொழிபெயர்த்து.
> அதர்ப்படயாத்தலோடு அனை மரபினவே" (தொல்1597)

எனக் கூறுகிறார். கம்பர் தாம் வகுத்துக் கொண்ட வழிநூல் தொல்காப்பியர் காட்டியவழிநூல் அணுகுமுறைகளுடன் பொருந்தி வருவனவாக அமைந்துள்ளன. கம்பர் தமிழகத்தில் அனைவரும் அறிந்திருந்த இராமர் கதையை வால்மீகியின் வடமொழி இராமயணக் கதையின் தழுவலாகத் தமிழ் மரபினுக்கேற்பப் படைப்பாக்கம்

செய்துள்ளார் என்ற கருத்துண்மை அறியத்தக்க ஒன்று. (உ.வே.சா நூல் நிலையத்தார் ஸ்ரீ கம்பராமாயணம், பாலகாண்டம் ப.16) கண்ணதாசன் கம்பராமாயணத்தின் பெருமையாக,

"வான்மீகி சொன்னவடமொழிநூல் ஒன்றினைத்தான்
தேன்பூசித் தருகின்றேன் செந்தமிழில் என்றுசொன்னான்
சீதைக்குத் தமிழ் நாட்டுச்சேலையினைக் கட்டிவைத்தான்
ஸ்ரீராமன் ஒழுக்கத்தில் தொன்னாட்டுப் பண்பு வைத்தான்"
(கண்ணதாசன் "என்னோடு இணைந்த கம்பன்" கம்பன் விழாமலர் (73), ப.2)

என்று பாடுகிறார்.

கம்பர் வடமொழி வழக்கில் இருந்த இயற்பெயர்களுக்குத் தமிழ் ஆக்கம் தந்த ஆக்கத்திலும் வேலைகளிலும் பிறமொழியின் இயல்புகள் பெரிதும் கலவாதவாறு அவர் செய்துள்ள நெறிப்பாடுகள் அவரது தமிழ்ப்பற்றை எடுத்து விளக்குவனவாக உள்ளமை அறியத்தக்கது. சான்றாக "சர்வேஸ்வரன்" என்பதை "முழுமுதல்வன்" என்றும் "ரக்தாட்சன்" என்பதைக் குருதிக்கண்ணன்" எனவும் வடமொழிப் பெயர்படக் கம்பர் தமிழாக்கம் செய்துள்ளமை குறிப்பிடத்தக்கது. (தெ. ஞானசுந்தரம், காப்பிய விருந்து, பக்.205-207)

**கம்பரின் தமிழ் நயம்**

தமிழ்மொழியின் வண்மையினை எடுத்துரைக்கக் கருதிய கம்பர் பாயிரப் பாடற்பகுதியில்,

"முத்தமிழ்த் துறையின் முறைபோகிய
உத்தமக் கவிஞர்க்கொன் றுணர்த்துவென்
பித்தர் சொன்னவும் பேதையர் சொன்னவும்
பத்தர் சொன்னவும் பன்னப் பெறுபவோ" (பால, பாயிரம் பா.8)

என்று குறிப்பிடுகின்றார். அதாவது, முத்தமிழ் என்பது இயல், இசை, நாடகம் என்னும் மூன்று தமிழின் பல துறைகளிலும் முறையாகக் கற்றுத் தேர்ந்த மேலான கவிஞர்களுக்கு ஒரு விண்ணப்பம் செய்து கொள்வேன். அது யாதெனில் பைத்தியக்காரர் சொன்னவார்த்தைகளும் அறிவிலிகள் சொல்லிய சொற்களும் பக்திமான்கள் பரவசத்தால் சொல்லும் சொற்களும் ஆராயப்படுவனவோ? துணிவு கொண்ட தமது எளிமையைக் கருதாமல் நூலை ஏற்றுக் கொள்ளுமாறு வேண்டிக் கொள்கின்றார். இதிலிருந்து "முத்தமிழிலும் வல்லவரே அறிஞர்கள் என்ற கருத்துண்மை உடையவராகக் கம்பர் திகழ்ந்தார் என்பது

அறியத்தக்க ஒன்று. தமிழ் மொழியின் பரந்துபட்ட தொன்மையினையும் தன்மையினையும் உணர்த்த வேண்டி "அளப்பெருஞ்சலதி" எனக் குறிப்பிடுகின்றார். பழமையும் செழுமையும் உடைய தமிழ்மொழி-யினைச் சிவபொருமான் அகத்திய முனிவருக்கு எடுத்துரைத்து, அவர் மூலமாக உலகமுழுவதும் பரவச் செய்தார் என்ற கருத்தாக்கத்தை "தனிழெனு மளப்பருஞ்சலதி தந்தவன்."(பால. தாடகை.பா.34)எனும் அடியால் நயம்பட விளக்குகிறார்.

தென் தமிழ்நாட்டு அகன் பொதிகைமலை அகத்தியமுனிவரின் உறைவிடம் ஆம். ஆதலின் பொதிகைமலை வழிபாட்டிற்குரியது என்பதை,

"அம்முனிவரின் தமிழ்ச்சங்கம் சேர்கிற்சிரேல்
அம்மலையை இறைஞ்சி ஏகி". (கிட்கிந்தா. பா.27)

என்ற பாடலின் வழியே அறிவுறுத்திகின்றார். பாண்டிய நாட்டைக் குறிக்கும் போது அழகிய தனிழும் உள்ள நாடு எனக் குறிப்பிடுகின்றார். அங்கு முதற்காலத்து விளங்கிய 'சங்கம்' என்ற அமைப்பு குறிக்கப்பெற்றுள்ளது. அதனைக் கடைச் சங்கம் என்பர். இராமபிரான் அகத்தியரைக் கண்டதாகக் கம்பர் கூறுவர். அகத்திய முனிவனைத் தமிழ்த் தலைவனாகவும், அம்முனிவர் இருப்பிடம் தென் பொதிகைமலை என்பதும் அதனால் அதனை வணங்கிச் செல்லுமாறு தன் கீழுள்ள வானரப் படைக்கு சுக்ரீவன் கட்டளை இடுகிறான்.

அயோத்தியா காண்டத்தில் சித்திரகூடப் படலத்தில்,

"குழுவு நுண்டொளை லேயினுங்குறிநரம் பெறிவுற்
றெழுவுதண்டமிழ் யாழினுனினிய சொற் கிழியே
முழுவதும் மலர் விரிந்த நாண் முருக்கிடை னிடைந்த
பழுவம் வெங்கனல் கதுவிய தொப்பன பாராய்" (பா.30)

என்னும் பாடலில், கூட்டமாகிய நுண்ணிய தொளைகளையுடைய புல்லாங்குழலிசை, குறித்த நரம்புகளை விரல்களால் தெறித்து எழுப்புகின்ற தகைய சொற்களைவிட குழிர்ச்சி பொருந்திய இனிமை தனிழே என நயம்படத் தமிழின் இனிமையைக் கம்பர் பெருமான் விளக்குகிறார்.

பொன்னின் தன்மையை ஒத்து விளங்கும் வாசனையோடு கூடிய அகவிதழ்களைத் தன்னுட் கொண்டு விளங்கிய பொன்னிறமான மகரந்தப் பொடிகளைத் தன்மீது தழுவப் பெற்றுள்ள குழல் போல் ஒலிக்கின்ற வண்டுகள் சூழ்ந்து பறந்து இனிய தமிழ்ப் பாடல்களைப்

பாடப் பெற்ற தாமரைப் பூவே எனப் பொன் வண்டுகளையும், இனிய தமிழிலிசை நயம் பாட வைத்த பெருமைக்குரியவர் கம்பர் என்பதை,

"பொன்பால் பொருவும் விரையல்லி
புல்லிப் பொலிந்த பொலந்தாது.
தன்பாற் றழுவுங் குழல்வண்டு
தமிழ்ப் பாட்டிசைக்குந் தாமரையே" (கிட்கிந்தா. பம்பை. பா.28)

என்ற பாடல் வரிகள் மூலம் அறியலாம்.

பிலம்புக்கு நீங்கு படலத்தில் தேனின் சுவையைக் குறிப்பிடும்போது,

"அமிழ்துறழயினியையடுத்த வுண்டியும்
தமிழ் நிகர் நறவமும் தனிதண்தேறலும்
இமிழ்கனி பிறக்கமும் பிறவு னின்னன
கமழ்வுறத் தோன்றிய கணக்கில் கொட்பது" (பா.37)

என்ற பாடலில் தேவாமுதத்தை நிகர்த்த சோறு முதலான உணவுப் பொருள்களும் தமிழ் மொழி போன்ற இனியதேனும், அம்மொழியே போன்ற குழிர்ந்த மதுவும், இனிய பழங்களின் திரட்சியும் இவை போன்ற பிற உணவுப் பொருள்களும் நறுமணம் னிசுமாறு நிறைந்துள்ள எல்லை அற்ற பெருமை வாய்ந்தது என எடுத்துரைப்பதின் மூலம் தேனுக்கும், குழிர்ந்த மதுவுக்கும் உவமையாக நயம்படக் கம்பர் உரைகின்ற பாங்கு நுகர்தற்குரிய ஒன்று. மேலும்,

"வண் தமிழ் உடை தென்திசை சென்றுளார்
திறன் எடுத்து உரை செய்வோம்" (மேலது பா.2)

எனும் பாடல் அடியில் வளம் வாய்ந்த தமிழ் மொழி பயின்று வரும் தெற்குத்திக்கிற் சென்றவர்களாகிய வானர வீரர்களின் தன்மையை எடுத்துச் சொல்லுவோம் என்று கூறும் முகத்தான் செம்மொழியான தமிழ் மொழிக்கு மேலும் நயம்பட கம்பர் வளம் சேர்க்கின்ற பாங்கு போற்றுதற்குரியது.

**முடிவுரை**

கம்பரிடத்தில் இருந்த தமிழ் உணர்வுகள் கம்பரின் பாடல்களில் இழையோடி வருவதைக் காணமுடிகிறது. மேலும் உயர்திணைப் பகுப்பினர்க்கு மட்டும் இன்றிவண்டு, வானரம் போன்ற அஃறிணைப் பகுப்பினர் இடத்தும் தமிழ் உணர்வை வெளிப்படுத்தி இருப்பது அவர்தம் கவிநயத்தை மெருகூட்ட தமிழ்மொழி நயங்களை

எடுத்துரைக்கும் பாங்கு அறிந்து இன்புறத்தக்கது. இராமனே தமிழ்த்தலைவன் அகத்திய முனிவரைக் கண்டதாகவும் கம்பர் கூறுவது அவர் தமிழ் மீது வைத்துள்ள மேலான பற்றைக் வெளிப்படுத்தும் படைப்பாக்க உத்தியாக அமைந்துள்ளது எனலாம்.

# கம்பனின் தமிழ்வளம்

முனைவர் சு. பாஸ்கர்
தமிழ்த்துறை, உதவிப் பேராசிரியர், ஸ்ரீமத் ஆண்டவன் கலை அறிவியல் கல்லூரி, திருச்சி.

தமிழ்மொழி வளமிக்கது. அதிலும் கவிதை சுவைமிக்கது. கவிஞர்கள் தங்கள் பாடல்களில் கருத்துக்களை விதைக்கிறார்கள். கம்பனிடம் சொல்வளம், பொருள்வளம், சந்தவளம், வருணனை வளம், உவமை வளம், உருவக வளம், சுவை வளம், அணிவளம் போன்ற தமிழ்வளங்கள் நிறைந்துகிடக்கின்றன. கம்பராமாயணத்தில் இருக்கும் இவ்வளங்களை எடுத்துக்காட்டி, தமிழின் சிறப்பைப் பலப்படுத்துவதே இக்கட்டுரையின் நோக்கமாகும்.

**சொல்வளம்**

வில்லாற்றலில் சிறந்திருக்கும் வீரன்போல் சொல்லாற்றலில் விஞ்சி நிற்பவர் கம்பர். தமிழ்மீது தணியாத தாகமும் நல்லறிவும் கொண்டதனால் வளம்மிக்க சொற்கள் அவன் நாவில் நடனமாடி, கவிதையால் விளையாடி சொற்களால் விரைந்தோடி வந்து விழுந்திருக்கின்றன சொல்வளத்திற்குச் சான்றாக,

"இவ்வண்ணம் நிகழ்ந்தவண்ணம் இனி இந்த உலகுக்கு எல்லாம்
உய்வண்ணம் அன்றி மற்று ஓர் துயர்வண்ணம் உறுவது உண்டோ?
மைவண்ணத்து அரக்கிப்போரில் மழைவண்ணத்து அண்ணலே! உன்
கைவண்ணம் அங்கு கண்டேன் கால்வண்ணம் இங்கு கண்டேன்"
(பாலபா.475)

என்ற பாடலில், வண்ணம் என்ற சொல்லைப் பல்வேறு பொருள்களில் அடுக்கிக் காட்டுகிறார் கம்பர். இது சொல்வளத்திற்குச் சிறந்த சான்றாகிறது.

| | |
|---|---|
| இவ்வண்ணம் | : இச்செய்தி என்ற பொருளிலும் |
| நிகழ்ந்தவண்ணம் | : நிகழ்ந்த முறை என்ற பொருளிலும் |
| உய்வண்ணம் | : கடைத்தேறும் வகை என்ற பொருளிலும் |
| துயர்வண்ணம் | : துன்பத்தின் வழி என்ற பொருளிலும் |
| மைவண்ணம் | : மை போன்ற கருமைநிறம் கொண்டவள் தாடகை என்ற பொருளிலும் |
| மழைவண்ணம் | : கருணை உள்ளம் கொண்டவன் இராமன் என்ற பொருளிலும் |

கைவண்ணம் : காலின் பெருமை (திருவடியின் திறம்) என்ற பொருளிலும்

வருகின்றன. இராமன் தன் வில்லாற்றலால் தாடகையைக் கொன்றபோது கை வலிமையையும் இராமன் கால் பாதம் பட்டுக் கல்லாக இருந்த அகலிகை பெண்ணாக மரியதில் அவனின் காலின் பெருமையையும் காணலாம். கம்பரின் சொல் வண்ணத்தை இதன்மூலம் அறியலாம்.

### பொருள் வளம்

சொல்வளம்போலவே கம்பரின் பாடல்களில் பொருள்வளமும் நிறைந்து காணப்படுகின்றன. சீதையைக் கண்டுவந்த அனுமன் இராமனிடம் செய்தியைச் சொல்லவேண்டும் எவ்வாறு சொல்வது என கம்பர் சிந்தித்து அனுமன் வாயிலாக,

"கண்டனென் கற்பினுக்கு அணியை கண்களால்
தெண்திரை அலைகடல் இலங்கைத் தென்நகர்
அண்டர் நாயக: இனி, துறத்தி, ஐயமும்
பண்டுள துயரமும் என்று அனுமன் பன்னுவான்" (சுந்தர.பா.6031)

என்று படைக்கிறார். சுந்தரகாண்டம், திருவடி தொழுத படலத்தில் இப்பாடல் அமைகிறது. முதலில் 'சீதையைப் பார்த்தேன்' என்றும், பிறகு, 'கற்புடைய பெண்ணாகக் பார்த்தேன்' என்றும் பிறகு 'கண்களால் கண்டேன்' என்றும், 'இலங்கையில் பார்த்தேன்' என்றும் இராமனின் எதிர்பார்ப்பிற்கு ஏற்றவாறு பொருளை · வரிசைப்படுத்தி கம்பர் உணர்த்துகிறார். இது கம்பரின் பொருள்வளத்தைச் சிறப்பாக எடுத்துக்காட்டுகிறது.

### சந்தவளம்

கம்பராமாயணத்தில் சந்தநயமிக்கப் பாடல்கள் மிக அதிகமாகக் காணப்படுகின்றன. இதில் யுத்தகாண்டம், கும்பகர்ண வதைப்படலத்தில் இராமனின் பணியாளர்களில் ஒருவனான கிங்கரர் கூற்றாக,

"உறங்குகின்ற கும்பகன்ன! உங்கள் மாய வாழ்வு எலாம்
இறங்குகின்றது இன்றுகாண் எழுந்திராய! எழுந்திராய்
கறங்கு போல வில்பிடித்த காலதூதர் கையிலே,
உறங்குவாய், உறங்குவாய் இனிக் கிடந்து உறங்குவாய்"

(யுத்த .பா.7316)

என்று இப்பாடல் அமைகிறது. இராவணனின் கட்டளையால் கிங்கரர், கும்பகர்ணனை எழுப்புகிறார். அப்போது பொய்யான வாழ்வு இறங்கத்

தொடங்கிவிட்டது. காலனின் தூதர் கையிலே இனி உறங்கலாம் என்று இராமன் தோல்வியடைந்ததை மனதில் வைத்துக் கூறுகின்றார். கும்பகர்ணன் வலிமை உடையவன் என்பதால் வல்லெழுத்தான றகரத்தைப் பயன்படுத்திப் பாடல் அமைத்து, சந்தவளத்துடன் இப்பாடலைக் காட்டுகிறார். கம்பரின் தமிழ்வளம், கவிவளம் சந்த வளத்தின் மூலம் அறியமுடிகிறது.

**வருணனை வளம்**

கவிஞர்கள் தங்கள் காப்பியத்தில் கதை ஓட்டத்தைக் கூறும்போது வருணனை கலந்து சுவையுடன் எழுதுவது இயல்பு படிப்பவர்களுக்கு இன்பம் கிடைக்கும் பாலகாண்டம், நாட்டுப்படலத்தில் சிறந்த வருணனை வளமிக்க,

"தண்டலை மயில்களாட தாமரை விளக்கம் தாங்கக்
கொண்டல்கள் முழவின் ஏங்க குவளைகண்விழித்துநோக்கத்
தெண்திரை எழினி காட்ட, தேம்பிழி மகர யாழின்
வண்டுகள் இனிது பாட மருதம் வீற்றிருக்கும் மாதோ

(பால.பா.35)

என்ற பாடல் அமைகிறது. மருத நிலத்தை (மருதநாயகி) ஒரு நாடக மேடை ஆக்கிவிடுகிறார் கம்பர். குளிர்ந்த சோலையில் மயில்கள் ஆடவும், தாமரைமலர்கள் விளக்குகளாக நிற்கவும், மேகங்கள் மத்தளங்கள்போல முழங்கவும், குவளைமலர்கள் கண்விழித்துப் பார்க்கவும் நீர்நிலைகளில் அலைகள் திரைச்சீலை போலக் காட்டவும் மகரயாழ் இசைபோல வண்டுகள் இனிமையாக பாடுகிறது. இயற்கை வருணனை அமைப்பதில் கம்பர் அனைவரையும் விஞ்சிவிடுகிறார்.

**உவமை வளம்**

கவிஞர்கள், ஒரு பொருளை விளக்க இன்னொரு பொருளோடு ஒப்பிட்டுக் கூறுவார்கள். இதில் உவம உருபு வெளிப்பட்டு வரும்.

"வினை பயன் மெய் உரு என்ற நான்கே
வகைபெற வந்த உவமத் தோற்றம்" (தொல்.உவமை..1222)

வினை, பயன், மெய், உரு என உவமையில் நான்கு வகை உண்டு. (தமிழண்ணல், தொல்காப்பியம் மூலமும் கருத்துரையும். ப.423) தொல்காப்பியர் கூறுகிறார். சூர்ப்பணகையின் அழகையும் அவளின் வஞ்சகத்தன்மையும் ஒன்றாகச் சொல்ல வரும் கம்பர்,

"பஞ்சி ஒளிர் விஞ்சுகுளிர் பல்லவம் அனுங்க
செஞ்செவிய கஞ்சநிகர் சீறடிய ளாகி

அஞ்சொல் இளமஞ்ஞைஎன அன்னம் என மின்னும்
வஞ்சி என நஞ்சமென வஞ்சமகள் வந்தாள்" (ஆரணிய.பா.2762)

என்று கூறுகின்றார். சூர்ப்பணகை பெண் வஞ்சகக்காரி என்பதை உணர்ந்து பெண்மைக்கு மென்மையான மெல்லொழுக்கான ஞகரத்தைப் பயன்படுத்தி சொற்களைக் கையாண்டுள்ளார் கம்பர் பஞ்சுகள் வருந்தும்படி தாமரைக்கு ஒப்பான சிறிய பாதங்கள் உடையவள். இளமையான மயில் போன்றவள். அன்னம் போன்றவள். வஞ்சிக்கொடி போன்றவள். கொடிய விடம் போலவும் வஞ்சனை புரியும் சூர்ப்பணகை அங்கு இராமன் முன் வந்தாள் என பல உவமைகளைக் கம்பர் கையாண்டுள்ளார். இதில் மெய்யுவமமும் பயனுவமமும் வந்துள்ளன. சூர்ப்பணகை அசைவுக்கேற்பத் தமிழும் அசைகிறது. படிப்பவர்களும் அசைகிறார்கள். சந்தநயத்துடன் உவமை வளம் அமைந்திருக்கிறது.

**உருவக வளம்**

உவமைக்கும் பொருளுக்கும் இடையே உள்ள வேற்றுமையை ஒழித்து உவமையின் தன்மையை உவமேயத்தின்மேல் ஏற்றி இரண்டும் ஒன்றெனக்கூறுவது உருவகம் என்று கூறுகின்றோம். (ச.திருஞானசம்பந்தம். தண்டியலங்காரம் தெளிவுரை. ப.68) கோசல நாட்டின் மன்னனான தயரதச் சக்கரவர்த்தியின் ஆட்சிச் சிறப்பைக் கூறும் பகுதியான பாலகாண்டம். அரசியல் படலத்தில்,

"ஈந்தே கடந்தான். இரப்போர் கடல். எண்ணில் நுண்நூல்
ஆய்ந்தே கடந்தான் அறிவு என்னும் அளக்கர் வாளால்
காய்ந்தே கடந்தான். பகை வேலை. கருத்து முற்றத்
தோய்ந்தே கடந்தான் திருவின் தொடர்போக பௌவம் (பால.172)

என்று உருவகமாக அமைந்த பாடலைக் காணலாம். தயரதன் தன்னை நாடிவரும் யாசகர்களைக் கோபம் கொள்ளாது. கொடுத்து அனுப்பும் இயல்புடையவன். உயர்ந்த நூல்களைக் கற்றுத் தெளிந்த அறிவுடையவன் பகைவர்களை வாள்கொண்டு கோபம் காட்டி வெல்லும் ஆற்றலுடையவன். உலக இன்பங்களை மனம்நிறைவு பெறும்படி துய்த்து வாழ்ந்தவன். இதில் இரப்போர் கடல். அறிவென்னும் அளக்கர். பகைவேலை. போகபௌவம் என்பன உருவகச் சொற்களாக அமைகின்றன. உருவக வளத்திலும் கம்பர் உயர்ந்து நிற்கிறார்.

**சுவை வளம்**

தொல்காப்பியர் குறிப்பிடும் எட்டுவகை மெய்ப்பாடுகளின் சுவைகள் கம்பராமயணத்தில் மிகுதியாக இருக்கின்றன. அதில்,

மூப்பே பிணியே வருத்தம் பெண்மையோடு
யாப்புற வந்த இளிவிவரல் நான்கே (தொல்.மெய்.நூ.1200)

என்ற இளிவரல் சுவை உள்ள பாடலைக் காணலாம். இளிவரல் என்பது அவமானப்படுத்துதல், தாழ்வுப்படுத்துதல் எனப்பொருள் (தமிழண்ணல், தொல்காப்பியம் மூலமும் கருத்துரையும். ப.409)

யுத்தகாண்டத்தில் அங்கதன் தூதுப்படலத்தில்,

"வாய் தரத்தக்க சொல்லி என்னை உன் வசஞ்செய்வாயேல்,
ஆய்தரத் தக்கது அன்றோ, தூது வந்து அரசது ஆள்கை?
நீதரக் கொள்வேன் யானே? இதற்கு இனி நிகர் வேறு எண்ணின்,
நாய்தரக் கொள்ளும் சீயம், நல்அரசு! என்று நக்கான்" (யுத்த.பா.7002)

என்ற பாடல் இளிவரல் சுவைமிக்க பாடலாக அமைகிறது. வாலியின் மகனான அங்கதன் இராவணனிடம் இழிவாக பேசும்போது, சொற்களால் என்னை வயப்படுத்த முடியாது. தூதுவனுக்கு ஆட்சி உரிமை தருவது ஆராய்வதற்குரியது. நாய் கொடுக்க ஒரு நல்ல அரசை, சிங்கம் ஏற்றுக்கொள்வதற்கு நிகரானது என்கிறான். சுக்ரீவனிடம் வாங்கி உனக்கு ஆட்சியைத் தருகிறேன் என்ற இராவணனிடம் தன்னை சிங்கம் என்றும், இராவணனை நாய் என்றும் அங்கதன் இழிவாகக் கூறுகிறான். இதில் பயனற்ற முயற்சியான வருத்தத்தின் காரணமாக வந்த இளிவரல் சுவையாக அமைகிறது. சுவைவளத்திலும் விஞ்சியவர் கம்பர்.

**அணிவளம்**

கம்பராமயணத்தில் கம்பரின் கைவண்ணத்தில் அணிவளம் கொட்டிக் கிடக்கின்றன. அதில் வெட்டி எடுத்தது தற்குறிப்பேற்ற அணி என்ற ஒரு அணி மட்டுமே ஆகும். இயல்பாக நிகழும் நிகழ்ச்சி ஒன்றின் மேல் கவிஞன் தான் கூறக் கருதிய பொருளை ஏற்றிச் சுவைபட உரைப்பது தற்குறிப்பேற்ற அணியாகும் ஒன்றை வேறொன்றாக சிந்தித்துச் சொல்வதே இவ்வணியாகும். இதற்கு நோக்கணி என்ற பெயரும் உண்டு (ச.திருஞானசம்பந்தம், தண்டியலங்காரம் தெளிவுரை, ப.133). பெயர், பொருள், அல்பொருள் என தற்குறிப்பேற்றணியில் இருவகைகள் உள்ளன. சுந்தர காண்டம் திருவடிதொழுத படலத்தில் சீதையின் செயல்களை அனுமன்,

"வாங்கிய ஆழிதன்னை, "வஞ்சர் ஊர் வந்ததாம்" என்று
ஆங்கு உயர்மழைக் கண்ணீரால் ஆயிரம் கலசம் ஆட்டி,
ஏங்கினன் இருந்தது அல்லால், இயம்பலள், எய்த்தமேனி
வீங்கினள், வியந்தது அல்லால் இமைத்திலள், உயிர்ப்புவிண்டாள்"

என்று இராமனிடம் கூறுகிறார்.

அனுமன் தந்த கணையாழியை வாங்கிய சீதை, இது இராமன் அனுப்பிய அடையாளப் பொருள் என்பதால் உள்ளம் உருகிக் கண்ணீர் சிந்தினாள். அக்கண்ணீர் கணையாழியின்மீது பட்டு வழிந்தது. இது இயல்பாக நடைபெற்ற நிகழ்ச்சி, ஆனால் பரிசுத்தமான கணையாழி வஞ்சகன் இராவணனின் ஊருக்கு வந்ததால் தூய்மை கெட்டது எனக் கருதிய சீதை, ஆயிரம் குடம் கொண்டு திருமஞ்சனம் செய்வதுபோல தன் கண்ணீரால் கணையாழியைக் கழுவினான் என்று கம்பர் தம் கற்பனையை ஏற்றிக் கூறியுள்ளார். கம்பர் இப்பாடலில் தற்குறிப்பேற்ற அணியைச் சிறப்பாகக் கையாண்டுள்ளார் என அறியமுடிகிறது. அணி வளத்திலும் அணியாக அமைத்தவர் கம்பர் என எடுத்துக்காட்டுகிறது.

**நிறைவு**

ஆயிரம் ஆண்டுகளுக்கு முன் தோன்றிய ஒரு கவிஞர் இருபதாம் நூற்றாண்டிலும் அதற்குப் பிறகும் இலக்கியவாதிகளின் மனதில் முதலிடம் பெற்றுள்ளமையை எண்ணிப் பெருமையடைய வேண்டும். இராமாயணத்தின் சிறப்பால் இன்றும் நம் மனதில் கம்பர் வாழ்ந்து கொண்டிருக்கிறார். ஹோமர், வெர்ஜில், மில்டன், வியாசர், வால்மீகி போன்றோர் காப்பியங்களையும் வென்று பெருங்காப்பிய இலக்கணங்களோடு கம்பராமாயணம் திகழ்கிறது' என்ற வ.வே.சு. ஐயரின் கூற்று உண்மையே. கம்பரின் தமிழ்வளமும் சொல்வளமும் கவிவளமும் சுவைவளமாக மணக்கிறது. 'கம்பர் தமிழ் வளத்தால் கொம்பர்' என்றே கூறலாம்.

# கம்பரின் மொழித்திறன்

திருமிகு. வே.சண்முகராஜ்
மொழியியல் துறை, ஆய்வுத்திட்ட உதவியாளர்,
மதுரை காமராசர் பல்கலைக்கழகம், மதுரை.

## முன்னுரை

'அம் புவியில் மக்கள் அமுதம் அருந்த வைத்த கம்பர் கவியே கவி' என்று கவிமணி தேசிய விஞாயகம் பிள்ளை போற்றியுள்ளார். தமிழ் மொழிக்குத் தவச் சிறப்புத் தந்தது என்ற பொருளில் நாமக்கல் கவிஞர் 'தமிழ்மொழி தனக்கு ஒரு தவச்சிறப்பைத் தந்தது கம்பரின் கவிச் சிறப்பே என்று புகழ்ந்துள்ளார் 'கல்வியிற் பெரியன் கம்பன்' எனவும் வரும் பழம் தொடர்கள் கம்பருடைய சிறப்பை வெளிக் கொணர்கின்றனர். இக்கட்டுரையில் கம்பருடைய மொழித்திறனைப் பற்றி இக்கட்டுரையானது அமையவுள்ளது.

## கம்பர் பற்றிய குறிப்பு

கம்பர் தஞ்சை மாவட்டத்துத் திருவழுந்தூர் என்னும் ஊரில் பிறந்தவர் என்று தனிப்பாடல் திரட்டு விவரிக்கின்றது. கம்பர் உவச்சர் குலத்தில் (பூசாரிக் குலத்தில்) பிறந்தமையால் பெற்ற பெயர் என்று கூறுவர். காஞ்சிபுரத்தில் உள்ள இறைவனாகிய ஏகம்பன் தேவாரப் பதிகங்களில் 'கம்பன்' என்றே பெயர் இவருக்கு இடப்பட்டது என்று கூறுகின்றனர். ஆனால் கம்பருடைய காலம் பற்றி மூன்று விதமான கருத்துக்கள் நிலவுகின்றனர் என்று கூறலாம்.

இராமாயணத்தின் தொடக்கத்தில் 'கம்பர் தனியன்கள் என்ற தலைப்பில் 17 பாடல்கள் உள்ளதாகவும் இவற்றுள் உள்ள ஒருபாடலில் 'எண்ணிய சகாப்தம் எண்ணூற்று ஏழின் மேல்' என்ற தொடர் அமைந்துள்ளது. இத்தொடர் இராமாயணம் எழுதப்பட்ட காலத்தை உணர்த்துவதாக உள்ளது. இப்பாடலை ஆதாராமாகக் கொண்டு கம்பர் இராமாயணத்தை அரங்கேற்றிய காலம் கி.பி 885 என்றும் அறிஞர்கள் கூறுகின்றனனர்.

ஆனால், கம்பர் காலத்திற்கு பின்னால் 16ம் நூற்றாண்டில் எவரேனும் சிலர் இவற்றை எழுதி இடைச் செருகலாக சேர்த்திருக்க வேண்டும் என்று வையாபுரிப்பிள்ளை அவர்கள் கருதுகிறார். இதனைப்போன்று ஆவின் கொடைச் சகரர் என்ற பாடலை ஆதாரமாகக் கொண்டு கம்பர் காலம் கி.பி 978 என்று சிலர் விளக்கி

உள்ளனர். இது முதலாம் இராசராச சோலனுக்கு முன்பு இருந்த உத்தம சோழன் காலம் ஆகும். இந்தக் காலத்தையும் சிலர் சான்றுகளாகக் கொண்டு அறிஞர்கள் இவற்றை மறுத்து உள்ளனர்.

மேலும் கம்பருடைய காலம் மூன்றாம் குலோத்துங்கன் வாழ்ந்த காலம் என்று பலரும் கூறியுள்ளனர். மூன்றாம் குலோத்துங்கன் வாழ்ந்த காலம் கி.பி.12 ஆம் நூற்றாண்டு ஆகும். கி.பி 1376இல் பெரிக்கப்பட்ட ஒரு கன்னடக் கல்வெட்டை இந்த இடத்தில் குறிப்பிட வெண்டும். அந்தக் கல்வெட்டு தோன்றிதற்கு முன்னர் கம்பராமாயணம் கன்னட நாட்டில் வழங்கி வந்ததை தெரிவிக்கிறது. எனவே கி.பி.1325க்கு முன்பே கம்பர் காவியமானது தோன்றியிருக்க வேண்டும் என்று இராசமாணிக்கனார் கருதுகிறார்.

வால்மீகி முனிவர் யாத்த வால்மீகி இராமயணத்தைத் தழுவி கம்பர் எழுதிய நூல் கம்பராமயணம். கம்பராமாயணத்தைக் கம்பர் தழுவல் நூலாக அப்படியே எழுதவில்லை. அதில் தமிழ் மரபுரீதியான செய்திகளை இணைத்தே எழுதியுள்ளார்.

### மொழித்திறன்

ஒரு மொழியானது சிறந்து விளங்க வேண்டுமென்றால் அம்மொழியினுடைய நல்ல இலக்கிய இலக்கணநூல்கள் இருந்தால் மட்டுமே சிறந்து விளங்கமுடியும். நல்ல இலக்கிய இலக்கணநூல்கள் கொண்டு இன்று வரை தமிழ் மொழியானது சிறந்து விளங்கிக் கொண்டிருக்கின்றன என்று கூறலாம். தொல்காப்பியம் போன்ற இலக்கணநூல் தமழ் மொழியில் இருப்பதனால்தான் இன்றளவும் பெரிதும் பேசப்பட்டுக் கொண்டிருக்கின்றன என்று கூறறலாம்.

நல்ல சுவை, இலக்கிய உணர்வுகள், உவமைநலன்கள், போன்றவை ஒரு மொழியல் காணப்பட வேண்டும். இவை அனைத்தும் ஒரு மொழியில் காணப்படுவதனால் மட்டுமே சிறந்து விளங்கமுடியும்.

### கம்பரின் மொழித்திறன்

'அந்தமா மதில்புறத்து, அகத்து எழுந்து அலர்ந்த எழுந்து
கந்தாறு பங்கயத்த கானம்மான மாதரார்
முந்துவாள் முகங்களுக்கு உடைந்துபோன மொய்ம்பு எலாம்
வந்துபோர் மலைக்க மாமதில் வளைந்தது ஒக்குமே'

கோட்டையை சுற்றிலும் பரந்து கிடக்கும் அகழிக்குள் பூத்திருக்கும் நறுமணம் கமழும் தாமரைக் கூட்டங்களைப் பார்த்தால், கோசலநாட்டில்

உள்ள பெண்களின் முக எழிலுக்கு ஈடாக மாட்டாமல் தோற்றுப்போய் ஓடிய தாமரைகள் எல்லாம் ஒன்றாகக் கூடி, தங்களுடைய சக்தியை எல்லாம் திரட்டிக் கொண்டு, உங்கள் அழகுக்கு நாங்கள் ஈடாக மாட்டோமோ இல்லையா என்பதைப் பார்த்துவிடுவோம். என்ற கருத்தோடு படையெடுத்து வந்து அந்த மதிற்புறம் முற்றிலும் சூழ்ந்து நிற்கின்றனவோ என்றுதோன்றச் செய்கின்றது.

நாட்டிற்கு வெளிப்புறத்தில் அகழி இருப்பதால் எல்லைக்கு வெளியே மலர்ந்த தாமரைகளை மகளிருடைய அழகுக்கு ஆற்றாமல் தோற்றாடிப் போனவை என்று வர்ணித்தார். அவை பெருங்கூட்ட மாகமதிலுக்கு வெளியே மலர்ந்திருப்பதால் இவையெல்லாம் இந்த நாட்டை முற்றுகை இடத்தான் இப்படித்திரண்டிருக்கின்றன என்று கற்பித்தார். அப்படிப் போர்த்தொடுக்க ஒரு காரணம் வேண்டுமல்லவா என்று பொருந்தக் கூறினார்.

இவ்வாறு போர்புரிதழுக்கு காரணமாக எழில் கொஞ்சும் அழகையும் கம்பர் தன்னுடைய நகரத்துப் படலத்தில் எடுத்து கூறுகின்றார். கம்பர் தன்னுடைய பாடல்வரியினுள் உவமையும் எழில் நயத்தையும் தன்னுடைய வரிகளின் மூலம் கம்பர் எடுத்து இயம்புகின்றார்.

"ஆளும் அன்னம் வெண்குடைக் குலங்களா அருங்கராக்
கோள்எலாம் உலாவுகின்ற குன்றம் அன்னயானையோ
தாள்உலாவு பங்கயத் தரங்கமும் துரங்கமா
வாளும், வேலும், மீனும்ஆக, மன்னர் சேனைமானுமே"

அந்த அகழியில் நீந்தும் அன்னங்களே அரசனுடைய வெண் கொற்றக் குடைகளாகவும், முதலைகளே கிரகங்களைல்லாம் சுற்றி வருமபடியான பெரிய மலைகளை ஒத்த யானைப் படைகளாகவும் வீசும் அலைகளில் அலைவுறும் தாள்களைக் தண்டுகளைக் கொண்ட தாமரைகளே குதிரைப்படைகளாகவும். அங்கு நீத்தித் திரிகின்றன மீன்களே வளாகவும், வேலாகவும் தோற்றமளித்து, அந்த அகழியே மன்னனுடைய தேர், யானை, குதிரை, காலாள், என்ற நால்வகைப் படையாகத் திகழ்ந்தது.

கண்களுக்கு மீனையும், வேலையும், வாளையும், உவமைச் சொல்லும் வழக்கத்தைச் சற்றே மாற்றி மீன்களை வேலுக்கும் வாளுக்கும் உவமையாகப் பயன்படுத்தியிருக்கிறார் கம்பர்.

"ஆதி, அந்தம், அரி என யாவையும்
ஓதினார், அலகு இல்லன, உள்ளன,
வேதம் என்பன மெய்ந் நெறி நன்மையன்
பாதம் அல்லது பற்றிலர்பற்று இலார்"

அளவில்லாதவையும் என்றும் நிலைத்து நிற்பவையுமான வேதங்களை ஓதத் தொடங்கும்போது ஓதி முடிக்கும் போது ஹரி ஓம் என்று உச்சரிப்பவர்களான மேலவர்கள் மெய்ந்நெறியின் முடிவாக விளங்கும் அவனுடைய பாதத்தை பற்றி நிற்கும் ஒரு பற்றைத் தவிர வேறு எல்லாப் பற்றுகளிலிருந்து நீக்கியவர்கள் கம்பர் தன்னுடைய மொழியினுள் ஏற்ற இறக்கச் சொற்களை பயில்வோர் மனதில் புரியும் வண்ணம் படைத்திருக்கின்றார்.

"நொய்தின் நொய்ய சொல் நூற்கலுற்றேன் எனை!
வைத வைவி மராமரம் ஏழ் துளை
எய்த எய்தற்கு எய்திய மாக்கத்தை
செய்த செய் தவன் சொல் நின்ற தேயத்தே"

மிகப்பெரியவர்கள் சினந்து சொன்ன சொல் எவ்வளவு எளிதாகச் சுடுமோ அவ்வளவு எளிதாக ஏழு மராமரங்களைத் துளைத்துச் செல்லுமாறு அம்பு எய்தவனின் பெருங்கதையைச் செம்மையான தவம் உடைய கவியான வால்மீகி செய்தி முடித்துவிட்டார். அவருடைய சொல்லோ இந்த தேசத்தில் நின்று நிலவிக் கொண்டிருக்கிறது. இப்படிப்பட்ட நிலையில் எந்தவிதமான அழகும் பொலிவும் இல்லாத எளிய சொற்களைக் கொண்டு நானும் ராமனுடைய காதையைச் சொல்லத் தொடங்கியிருக்கிறேன் என்று கம்பர் பெருமான் தன்னுடைய பாடல்வரிகளின் மூலம் இவ்வுலகிற்கு எடுத்துக்காட்டும் விதமாக அமைத்துள்ளார்.

**முடிவுரை**

தன்னுடைய எண்ணக்கருத்தை உரைக்காமல் மனதில் மூலநூலில் சொல்லப்பட்ட கருத்துக்கு ஏற்றவாறு கம்பர் பெருமான் தன்னுடைய செய்யுள் நடையினுள் நன்கு எடுத்து இயம்பு வண்ணம் படைத்துள்ளார். ஒவ்வொரு செய்யுள் வடிவிலும் எதுகை, மோனை, உவமை, சந்த மயக்கம் போன்றவற்றைப் பயன்படுத்தி கூறியுள்ளவிதம் நன்கு புலமையுடையதாகவே உள்ளன என்று கூறுலாம்.

# கம்பனில் மொழியியல்

திருமிகு. நீ.இரவிச்சந்திரன்
தமிழாசிரியர்,ஸ்ரீ மீனாட்சி சுந்தரேசர் வித்தியாசாலா மேல்நிலைப் பள்ளி,
காரைக்குடி.

## கம்பன் காலத்தில் தமிழின் நிலை

கம்பன் வாழ்ந்த ஒன்பதாம் நூற்றாண்டு சோழப்பேரரசின் எழுச்சிக் காலம். கல்வெட்டுக்களிலும் செப்பேடுகளிலும் தமிழும் வடமொழியும் கலந்து எழுதப்பட்ட காலம். சோழமன்னர்கள் தமிழுக்குத் தொண்டு செய்தவர்கள் என்பதை நாம் ஒப்புக்கொண்டால் அதைவிட மூன்று மடங்கு சமற்கிருதத்திற்குத் தொண்டு செய்தவர்கள் என்பதையும் நாம் ஒப்புக்கொள்ள வேண்டும். சோழர் ஆட்சிமுறையின் சிறப்பாக நாம் கருதுவது குடவோலை முறையில் உள்ளாட்சி உறுப்பினர்களைத் தேர்வு செய்வதாகும். தேர்ந்தெடுக்கப்படும் உறுப்பினர்களுக்கான இன்றியமையாத தகுதி சமற்கிருத மொழியிலும் வேதங்களிலும் போதுமான அறிவு பெற்றிருக்க வேண்டும்.

சோழர் காலத்தில் தமிழ் இலக்கியங்களையோ இலக்கணங்களையோ கற்றுத்தரும் பாடசாலைகள் எதுவும் இருந்ததாகத் தெரியவில்லை என்றும், அதேநேரத்தில் சமற்கிருதத்தையும் வேதத்தையும் கற்றுத்தரும் பாடசாலைகள் ஏராளமாக இருந்தன என்றும், அவற்றில் பயின்ற மாணவர்களும் கற்பித்த ஆசிரியர்களும் அந்தணர்களே என்றும் சோழர் வரலாற்று ஆசிரியர் கே.கே. பிள்ளை அவர்கள் குறிப்பிடுகிறார்கள். அக்காலத்தில் வடமொழி எந்த அளவுக்கு வல்லாண்மை பெற்றிருந்தது என்பதற்குப் பன்னிரண்டாம் நூற்றாண்டில் தமிழகத்தில் வாழ்ந்த பவணந்தி முனிவரின் இலக்கண நூலான நன்னூலைப் பார்த்தாலே தெரியும். அதில் பதவியலில் வடமொழியாக்கம் என்றும் மெய்யீற்றுப் புணரியலில் வடமொழிப் புணர்ச்சி என்றும் விரித்துக் கூறவேண்டிய அளவுக்கு அக்காலத்தில் சமற்கிருதத்தின் ஆதிக்கம் மேலோங்கி இருந்தது.

இந்தச் சூழ்நிலையில்தான் வடமொழியில் புகழ்பெற்று விளங்கிய வால்மீகி ராமாயணத்தை மூலநூலாகக் கொண்டு கம்பன் தமிழில் காப்பியத்தைப் படைக்கத் தொடங்குகிறான். கம்பனின் மொழிப்பற்றையும் மொழிக்கொள்கையையும் அறிந்து கொள்வதற்குமுன் இந்தப் பின்புலத்தைப் புரிந்துகொண்டால்தான் கம்பனின் மேன்மை நமக்கு விளங்கும்.

**கம்பனின் தாய்மொழிப்பற்று**

"திருவாழும் மலர்கொண்டு தேன்மாலை கட்டி அதைத் தெருக்கல்லில் சாத்த மாட்டேன்" என்ற கவியரசு கண்ணதாசனின் வரிகளுக்கு இணங்க, கம்பன் தன்காலத்து மற்ற புலவர்களைப்போல அரசர்களின் பரிசுக்கும் பாராட்டுக்குமாக அவர்களைப் போற்றிப்பாடித் தன் தமிழைத் தாழ்த்திக் கொள்ளவில்லை. அதற்குமாறாகத் தன் உள்ளத்தில் குடியிருந்த கலைமகளைப் பாடினான். வேதம் தமிழ் செய்த சடகோபனைப் பாடினான். உலகுக்கு உணவிடும் ஏர் முனையைப் பாடினான். இப்படிப்பட்ட கம்பன் தன் படைப்பின் மணிமகுடமாக இராமகாதையைப் படைத்தான். தமிழை அவன் நேசித்தது போல வேறு எந்தக் காப்பியக்கவிஞனும் நேசிக்கவில்லை.

அகத்தியரைப் பாடும்போதெல்லாம் தமிழின் தெய்வத்தன்மை பற்றியும், நிலைப்புத்தன்மை பற்றியும், அளக்கலாகா அருமை பற்றியும் இணைத்தே பாடுகிறான்.

"தழற்புரை சுடர்க்கடவுள் தந்த தமிழ் தந்தான்"

(கம்ப., ஆரணிய, பா. 2671)

"என்றுமுள தென்தமிழை இயம்பி இசை கொண்டான்"

(கம்ப, ஆரணிய, பா.2677)

"தமிழெனும் அளப்பெரும் சலதி தந்தவன்"

(கம்ப, பால , மிகைப்பாடல்.85.)

வண்டுகள் பாடும் பாடலில் தமிழின் இனிமையையும், பூவிலிருக்கும் தேனில் தமிழின் சுவையையும், வீசும் தென்றலில் தமிழின் குளிர்மையையும் கண்டு கண்டு இன்புறுகிறான்.

"வண்டு தமிழ்ப்பாட்டு இசைக்கும் தாமரையே"

(கம்ப, கிட்கிந்தா, பா. 3734)

"தமிழ்நிகர் நறவம்" (மேலது. பா. 4557)

"தண்தமிழ்ப் பசுந்தென்றல்" (கம்ப, சுந்தர, பா.5044)

வடமொழியில் உள்ள காப்பியத்தைப் பாடினாலும் தன் தாய்மொழியைப் போற்றிப்பாடக் கம்பன் மறக்கவில்லை.

**மொழிமரபைப் போற்றிய கம்பன்**

தொல்காப்பியர் காலத்திலேயே வடசொற்கள் தமிழில் கலந்து விட்டன. இதைத் தடுக்க நினைத்த தொல்காப்பியர், தமிழ்மொழிக்கும் வடமொழிக்கும் பொதுவான எழுத்துக்களைக் கொண்டு வரும்

வடசொற்களையும், வடமொழிக்கே உரிய சிறப்பு எழுத்துக்களைக் கொண்டு வரும் வடசொற்களையும் தமிழில் எழுதும்போது தமிழ் ஒலிமரபுக்கு ஏற்ப எழுதவேண்டும். அப்படி எழுதும்போது சொற்கள் சிதைந்து வந்தாலும் ஏற்றுக்கொள்ளலாம் என்று விதிகள் வகுத்தார்.

"வடசொற் கிளவி வடவெழுத்து ஒரீஇ
எழுத்தொடு புணர்ந்த சொல்லா கும்மே" (தொல். சொல். 401)

"சிதைந்தன வரினும் இயைந்தன வரையார்" (மேலது. 402)

தொல்காப்பியரின் காலம் கி.மு.மூன்றாம் நூற்றாண்டு. நன்னூல் இயற்றிய பவணந்தி முனிவரின் காலம் கி.பி. பன்னிரண்டாம் நூற்றாண்டு. இடைப்பட்ட பதினைந்து நூற்றாண்டுகளில் சொல்லிக் கொள்ளும்படியான இலக்கண நூல் எதுவும் தோன்றாதது தமிழுக்கு ஏற்பட்ட பெருங்குறையாகும். இக்காலக்கட்டத்தில் தமிழ் இலக்கண மரபைப் போற்றி வளர்த்தவர்கள் கவிஞர்களே. இந்த மரபை ஒன்பதாம் நூற்றாண்டில் கட்டிக்காத்தவன் கம்பன். பன்னிரண்டாம் நூற்றாண்டு நன்னூல் கூறும் விதிகளை எல்லாம் தனது ஒன்பதாம் நூற்றாண்டுக் காப்பியத்தில் கடைபிடிக்கிறான்.

**அ] ஷ, ஸ, ஜ, ஹ ஆகிய கிரந்த எழுத்துக்களை நீக்கி எழுதுதல்:**

ஷ - என்னும் எழுத்து ச, ட என மாறும்.

காஷ்யபன் - காசிபன், அம்பரீஷன் - அம்பரீடன், தேவபாஷை - தேவபாடை புருஷமேதம் - புருடமேதம், தூஷணன் - தூடணன், விபீஷணன் - வீடணன் வருஷம் - வருடம், புஷ்பக விமானம் - புட்பக விமானம்.

ஸ - என்னும் எழுத்து ச, ய, த என மாறும்.

தசரதன் - தயரதன் காமாஸ்ரமம் - காமாச்சிரமம், அகஸ்தியர் - அகத்தியர், ஸீதா - சீதை, அஸ்திரம் - அத்திரம் விஸ்வாமித்ரர் - விசுவாமித்திரர்.

ஜ - என்னும் எழுத்து ச, ய என மாறும்

பங்கஜம் - பங்கயம் தேஜஸ் - தேசு ஜோதி - சோதி, ஜடாயு - சடாயு விஜயம் - விசயம், ஜாம்பவான் - சாம்பன்,

ஹ - என்னும் எழுத்து தன்னை இழக்கும்

ஹிரண்ய - இரணியன், ஹனுமான் - அனுமன், ஹரன் - அரன், ஹரி - அரி.

**ஆ] ஈ, ஆ – என முடியும் வடசொற்கள் இ, ஐ என மாறும்**

திலோத்தமா - திலோத்தமை ரம்பா - அரம்பை, மந்த்ரா - மந்தரை, மாயா - மாயை.

**இ] மொழிமுதல், இடை, இறுதி எழுத்துக்களை எழுதுவதில் மொழிமரபைப் பேணுதல்**

மொழிமுதல் எழுத்துக்கள்:

ர, ல ஆகிய எழுத்துக்கள் மொழிக்கு முதலில் வந்தால் அ, இ, உ ஆகிய உயிர்களை முன்இட்டு எழுத வேண்டும்.

ரம்பா - அரம்பை ராமன் - இராமன் ருத்ரன் - உருத்திரன்

ருமா - உருமை லோபம் - உலோபம் லங்கா - இலங்கை

மொழிமுதலில் மெய்யெழுத்து வந்தால் உயிர்மெய் ஆகும்.

ப்ரஹ்மா - பிரம்மன், ப்ரஹ்லாதா - பிரகலாதன்,

மொழிஇடை எழுத்துக்கள்:

உடனிலை மெய்ம்மயக்கம்: க், ச், த், ப் ஆகிய மெய்கள் தம்முன் தாம் மட்டுமே மயங்கும்.

சுக்ரன் - சுக்கிரன் அக்னி - அக்கினி, சுமத்ரா - சுமத்திரை

பாக்யம் - பாக்கியம், சத்ருக்கன் - சத்துருக்கன், விஸ்வாமித்ரா - விசுவாமித்திரன்

வேற்றுநிலை மெய்ம்மயக்கம்: ர, ழ தம்முன் பிற எழுத்துக்கள் (க ச த ந ப ம வ ய ஞ) மட்டுமே மயங்கும். வேறு எழுத்துக்கள் வந்தால் தாம் உயிர்மெய் ஆகும் அல்லது ஓரினமாகும்.

கும்பகர்ணன் - கும்பகருணன், பர்ணசாலா - பன்னசாலை

மொழி இறுதி எழுத்துக்கள்:

வல்லின மெய்கள் மொழிக்கு இறுதியில் வாரா. அப்படி வந்தால் அவற்றை உயிர்மெய்யாக்கி எழுதவேண்டும்.

இந்திரஜித் - இந்திரசித்து, இந்திரசித்தன், கம்பனின் மொழிபெயர்ப்பு:

தமிழில் இல்லாத ஒலிகளைக்கொண்ட வேற்றுமொழிச் சொற்களைத்

தமிழ் மரபுக்கு ஏற்ப ஒலிபெயர்த்தோ மொழிபெயர்த்தோ இன்று நாம் பயன்படுத்துகிறோம். இதை ஒன்பதாம் நூற்றாண்டிலேயே கம்பன் தன் காப்பியத்தில் செய்து வழிகாட்டியிருக்கிறான்.

பங்கஜம் - அள்ளல் பூ, க்ருஷ்ணன் - கண்ணன், புருஷோத்தமன் - ஆண் நாயகன், ரக்ஷாபந்தன் - காப்பு நாண், கௌஸ்துபமணி - திருமாலின் மார்பணி, ஸ்ரீநிவாஸன் - திருவாழும்மார்பன், சூர்ய வம்சம் - வெயில் முறைக்குலம், ராஜஹம்ஸம் - அரச அன்னம், ஜம்புத்வீபம் - நாவலந்தீவு, அர்த்தநாரி - மங்கை பாகன், ருஷ்ய ஷ்ருங்க முனி - கலைக்கோட்டு முனிவர் சத்யாக்ரகம் - பொய்யிலா அற்பு.

**கம்பன் என்னும் சொற்கடல்**

"வார்த்தை தமிழுக்கு வழங்கும் கவிவேந்தன் கம்பன்" என்று கவியரசு கண்ணதாசன் போற்றியதற்கு இணங்கக் கம்பன் ஒரு சொற்கடலையே நமக்குப் படைத்து அளித்திருக்கிறான்.

ஒருபொருள் பன்மொழி:

"ஆறுபாய் அரவம் மள்ளர் ஆலைபாய் அமலை ஆலைச்
சாறுபாய் ஓதை வேலைச் சங்கின்வாய்ப் பொங்கும் ஓசை
ஏறுபாய் தமரம் நீரில் எருமைபாய் துழனி இன்ன
மாறுமாறு ஆகித் தம்மில் மயங்கும்மா மருத வேலி"

(கம்ப. பால. பா.34)

அரவம், அமலை, ஓதை, ஓசை, தமரம், துழனி - ஒருபொருட் சொற்கள்.

ஒருசொல் பல்பொருள்:

"அஞ்சிலே ஒன்று பெற்றான் அஞ்சிலே ஒன்றைத் தாவி
அஞ்சிலே ஒன்று ஆறாக ஆருயிர் காக்க ஏகி
அஞ்சிலே ஒன்று பெற்ற அணங்கைக்கண்டு அயலார் ஊரில்
அஞ்சிலே ஒன்று வைத்தான் அவன்எம்மை அளித்துக் காப்பான்"

(மேலது, மிகைப்பாடல்.12)

அஞ்சிலே ஒன்று - காற்று, நீர், ஆகாயம், நிலம், நீர்

ஓரெழுத்து ஒருமொழிகள்:

தமிழ்மொழிக்கே உரிய சிறப்பான ஓரெழுத்து ஒருமொழிகளைக் கம்பர் தமது காப்பியத்தில் ஏறக்குறைய இருபத்து மூன்று இடங்களில் பயன்படுத்தி உள்ளார்.

ஆ - பசு, ஏ - அம்பு, ஐ - வியப்பு, உ - அப்பால், கா- சோலை, கூ - பூமி, கை - உடல் உறுப்பு, கோ - அரசன், சே - எருது, தா - குற்றம், தீ - நெருப்பு, தூ - தூய்மை, தே - தெய்வம், நா - நாக்கு, நை - வருந்து, நொ - வருந்து, பூ - அழகு, பை - பசுமை ம ா - விலங்கு, மீ - மேலே, மை - கருமை, வீ - மலர், வை - கூர்மை.

### தெருவெங்கும் கம்பன் முழக்கம்

இன்று நாம் பேசும் தமிழில் 40 விழுக்காடு தமிழ், 25 விழுக்காடு வடமொழி, 35 விழுக்காடு ஆங்கிலம் கலந்து பேசுகிறோம். குமரித் தமிழ், மதுரைத் தமிழ், கோவைத் தமிழ், சென்னைத் தமிழ் என்று வட்டாரக் கிளைமொழிகளாகத் தமிழ் பிரிந்து கொண்டே போகிறது. இளைய தலைமுறை தமிழைப் படிப்பதிலும் பேசுவதிலும் ஆர்வம் காட்டுவதில்லை. இந்த மூன்று காரணங்களும் அடுத்த நூற்றாண்டில் தமிழின் அழிவுக்குக் காரணமாகிவிடுமோ என்ற அச்சம் இன்று அறிஞர்களிடையே எழுந்துள்ளது. இந்த அச்சத்தைப் போக்குவதற்கு நாம் கம்பனிடம் அடைக்கலமாவதைத் தவிர வேறு வழியில்லை. கம்பனின் சொற்கடலில் மூழ்குவதன் மூலமும், கம்பனின் இலக்கியத் தமிழை வீதிகள் தோறும் முழக்கம் செய்வதன் மூலமும், இளைய தலைமுறையினர் விரும்பும் வண்ணம் அவர்களிடத்தில் கம்பன் தமிழைக் கொண்டுபோய்ச் சேர்த்து தமிழின் அமுதத் தன்மையை அவர்களுக்கு அறிமுகம் செய்வதன் மூலமும் இதை நாம் எய்த முடியும். புவிமீதில் தமிழும் புகழ்பெற்று விளங்கும்.

# கம்பராமாயணத்தில் பெயரடைகள்

முனைவர். சி.சத்தியசீலன்
இணைப்பேராசிரியர், காஞ்சிமாமுனிவர் பட்டமேற்படிப்பு மையம்,
புதுச்சேரி.

மொழி என்பது இலக்கணத்தை உட்படுத்தியது. இலக்கியம் என்பது இலக்கணம், பண்பாடு, சமூகத்தின் சிந்தனைகள் யாவற்றையும் உள்ளடக்கியது ஆகும். படைப்பாளிதான் கூற எண்ணிய கருத்துகளை அல்லது சிந்தனையை எவ்வெவ் வழிகளில் கூறினால் கேட்பவர் அல்லது படிப்பவர் உள்ளத்தில் ஆழப் பதியும் என்று சிந்தித்துப் பல உத்திகளை அதற்குப் பயன்படுத்துகிறான். இதற்கு விதிவிலக்காக இருப்பவர் படைப்பாளியாக இருக்க முடிவதில்லை. தமிழக மக்களைத் தன் படைப்பு ஒன்றாலே கவர்ந்துள்ள கம்பர், தனது காப்பியத்தில் கூறவந்த கருத்துகளை அல்லது பாத்திரப் பண்புகளைப் பல்வகை உத்திகளைப் பயன்படுத்தி விளக்கியுள்ளார். மேலோட்டமாகக் காணும்பொழுது அவர் கூறுவது பாத்திரத்தின் சிறப்பைக் கூறுவது போல இருந்தாலும் கதையின் முன்பின் தொடர்பையும் பாத்திரத்தின் சிறப்புகளையும் எடுத்தியம்புகிறார். இலக்கணக்காரர்கள் பெயரின் இயல்பைக் கூறும் எச்சத்தைப் பெயரெச்சம் என்று கூறுகின்றனர். மொழியியலார் பெயரின் தன்மையைக் கூறுவதாகக் கொண்டு அதனைப் பெயரடை என்று சுட்டுகின்றனர். எந்தவொரு படைப்பும் பெயரடையைப் பயன்படுத்தாமல் அமைக்கப்படுவதில்லை. பாத்திரத்தின் பண்பை, சிறப்பைக் கூறுவதாகப் பெயரடைகளை விளங்கினாலும் கம்பர் தன் படைப்பின் போக்கைச் சுட்டிக்காட்டுவதற்கும், புராணச் செய்திகளின் வாயிலாகப் பாத்திரங்களின் வல்லமைகளை எடுத்துக் கூறுவதற்கும் உத்தியாகப் பெயரடைகளைப் பயன்படுத்துகிறார் என்பதை நிறுவுதலே இக்கட்டுரையின் நோக்கமாக அமைகிறது. இதற்குக் கம்பராமாயணக் கிட்கிந்தா காண்டத்தின் முதல் இரு படலங்கள் மட்டும் சான்றாகக் கொள்ளப்படுகின்றன.

## பெயரடை

தமிழ் இலக்கணநூலார், இதனை இருவேறு பெயர்களில் சுட்டுகின்றனர். தொல்காப்பியர் 'பெயரெஞ்சுக் கிளவி' என்றும், நன்னூலார் 'பெயரெச்சம்' என்றும் கூறுகின்றனர். நன்னூலாருக்குப் பின்வந்தவர்கள் இதனைச் சுட்ட 'பெயரெச்சம்'

என்ற கலைச்சொல்லையே பெரும்பாலும் பயன்படுத்துகின்றனர். பெயரெச்சத்தைக் 'குறிப்புப் பெயரெச்சம்', 'தெரிநிலைப் பெயரெச்சம்' என்று இருவகையாக இலக்கணக்காரர்கள் வகைப்படுத்துகின்றனர். குறிப்புப் பெயரெச்சங்கள் கால இடைநிலைகளைப் பெறுவதில்லை. பல்வேறுவகையான தொடரியல் உறவுநிலைகளை ஏற்பதுமில்லை. மேலும், அவை பெரும்பாலும் முடிவு சொல்லான பெயரின் பண்பைக் குறிப்பதாகவே அமைந்துள்ளன என்றும் தெரிநிலைப் பெயரெச்சங்கள் வினை, எழுவாய், செயப்படுபொருள், நிலன், காலம், கருவி ஆகியவற்றை முடிப்புச் சொல்லாகப் பெற்று வருகின்றன என்றும் பொற்கோ விளக்கம் அளிக்கிறார்.

மொழியியலார் இதனைப் பெயரடை என்ற கலைச்சொல்லால் சுட்டுகின்றனர். இது 'அ' அல்லது உருவிலா மாற்றுருடைப் பெற்றுவரும் என்றும் விளக்குகின்றனர். மேலும், பெயரெச்சங்கள் தொடர்ந்து வராது என்றும் பெயரெச்சத்திற்கு வினையெச்சங்கள் அல்லது வினையடைகள் அடையாகவரும் என்றும் கூறுகின்றனர். பெயரெச்சத்திற்கு, 'செய்த', 'செய்கின்ற', 'செய்யும்' என்ற மூன்று வாய்பாட்டு வடிவங்களை நன்னூலார் குறிப்பிடுகிறார். தமிழில் பெயரடைகளின் வருகையை மொழியியலார்.

பெயரடைகள் (சுட்டுப் பெயரடை) + (எண்ணுப் பெயரடை) + (விளக்கப் பெயரடை) என்று விதிமுறைபடுத்தியுள்ளனர். இந்த விதிமுறைகளுக்கு உட்பட்டே தமிழில் பெயரடைகள் பயன்படுத்தப்படுகின்றன. கம்பரும் இதற்கு விதிவிலக்கன்று. இருப்பினும் அவர் காப்பியத்தின் நோக்கத்தை நினைவூட்டும் வகையிலும் புராணங்களைக் கோடிட்டுக் காட்டிப் பாத்திரத்தின் பண்பு நலன்களைக் கூறும் வகையிலும் பெயரடைகளைப் பயன்படுத்தியுள்ளார்.

### தெளிவுப்படுத்துதல்

காப்பியநாயகன் இராமன் திருமாலின் அவதாரம். இதனைக் கம்பர் பலஇடங்களில் சுட்டிக்காட்டுகிறார். திரும்பத் திரும்பக் கூறுகிறார். காரணம் மூலமுதல்வனே இராமனாகப் பிறப்பெடுத்து இவ்வுலகைக் காக்கவந்துள்ளான் என்பதை வாசகர்களுக்கு உணர்துவதே ஆகும். அப்படிக் கூறமுனையும் கம்பர் இராமனை அறிமுகப்படுத்தும் முகமாக அவன் திருமாலின் பிறப்பு என்பதை அனுமனுக்குக் கூறுகிறார். அதுபொழுது திருமாலின் பெருமைகளைக் கூறி அத்தகையவனே இராமனாகப் பிறப்பெடுத்துள்ளான் என்பதைக் குறிப்பிடுகிறார்.

இராமனுக்கு வந்துள்ள துன்பம் கதிரவன் தோன்றும் பொழுது முடிவற்ற இரவு எப்படி நீங்கிப் போயிற்றோ அதுபோல நீங்கியது என்று கம்பர் கூறுகிறார். இங்கு 'முடிவுஇல்' (முடிவு இல்லாத) என்ற பெயரடை, தனக்கு முன்பாக வினைத் தொடரைக் கொண்டுள்ளது. கம்பர் நேரடியாக இராமனின் துன்பம் நீங்கியது என்று கூறி-யிருக்கலாம். அவ்வாறு கூறினால் காப்பியம் சுவையற்றதாக இலக்கிய நயமற்றதாக ஆகிவிடும். இங்கு 'முடிவுஇல்' என்ற பெயரடைதான் அவர் கூறவந்த கருத்தைத் தெளிவுபடக் கூற வழிவகுத்துள்ளது.

"பொங்கி முற்றிய உணர்வு புணர்தலும் புகையினொடு
பங்கம் உற்றனைய வினை பரிவுறும்படி முடிவுஇல்
கங்குல் இற்றது............... (கம்ப.கிட்கி.பா.41:1-3)

**விளக்குதல்**

சுக்கிரீவனும் வானரங்களும் இராமன், இலக்குவன் ஆகியோரைப் பார்த்து அச்சம் கொண்டு மனம் குழம்பி இருந்தபொழுது, பாற்கடலைக் கடைந்தபொழுது வெளிப்பட்ட நஞ்சைச் சிவபெருமான் உண்டு தேவர்களின் அச்சத்தைப் போக்கியதுபோல அனுமன் வானவர்களின் அச்சத்தைப் போக்கும்வகையில் பேசுவதாகக் கம்பர் காட்டுகிறார். அதுபொழுது 'அருளுதாழ் சடைக்கடவுள்' என்ற தொடரில் 'அருளு' (அருளும்) என்ற பெயரடையைக் கொண்டு, தான் கூற நினைத்த கருத்தைப் புலப்படுத்துகிறார். இதனைக் கருத்துப் புலப்பாட்டு உத்திகளில் ஒன்றாகக் கொள்ளுதல் வேண்டும்.

"........................அஞ்சிநெஞ்சி அழி அமைதி
வெவ் விடத்தினை மறுகு தேவர் தானவர் வெருவல்
தவ்விட தனி அருளு தாழ் சடைக்கடவுள்" (கம்ப.கிட்கி.பா.45:1-3)

இந்தப்பெயரடை சிவபெருமானின் சிறப்பைக் கூறவந்த ஒன்றாக இருப்பினும், அதற்குமுன் நிற்கும் வினைத்தொடரே புலவன் கூறவந்த கருத்தைக் கூறுவதாக உள்ளது. இந்த வினைத் தொடருக்கு உரிய பெயரை ஏற்றுநிற்பது இந்தப் பெயரடையாக இருப்பதால் படைப்பாளி சொல்ல நினைத்த கருத்தைக் கூற உதவும் கூறாக அது விளங்குகிறது.

**தோன்றாப்பெயர்**

கம்பர் இராமனின் அவதாரத்தோற்றத்தைப் பலவாறு புகழ்கிறார். இங்கு உடல் தோற்றப் பொலிவைமட்டும் கூறி, வாசகர்களுக்கு அத்தோற்றத்திற்கு உரியவன் இராமன் என்பதை உணர்த்துகிறார்.

இந்த உடல் தோற்றங்களை விளக்கப் பெயரடைகள் இயல்பாகப் பயன்படுத்தப்படுகின்றன. இவை இலக்கணங்கள் கூறும் பொருளுக் கேற்பச் செயல்பட்டாலும் புதிய உத்தியின்மூலம் படைப்பாளி, சொல்லாமல் சொல்ல நினைத்ததைப் புரிய வைக்கின்றன. அப்பாடல் வரிகள்,

"மஞ்சு எனத் திரண்ட கோலமேனிய மகளிர்க்கு எல்லாம்
நஞ்சு எனத் தகைய ஆகி நளிர் இரும் பனிக்குத் தேம்பாக்
கஞ்சம் ஒத்து ....." (கம்ப.கிட்கி.பா.57:1-3)

**இணைப்பு**

காப்பியப்புலவன் காப்பிய நாயகனின் சிறப்புளைக் கூறும் பொழுதும் அவன் எத்தகைய பராக்கிரமங்களை உடையவன் என்று கூறும்பொழுதும் சிறப்புகளை உரியவனுடன் இணைக்கும் பணியைப் பெயரடைகளே செய்கின்றன. அனுமன், "இராமா நீ எங்களைக் காப்பது எளிது. ஏனெனில் தேவர்களையும், அசையும் அசையாப் பொருட்களும் நிரம்பிய மூவகைப்பட்ட ஏழ் உலகையும் காப்பவன் நீ" என்று புகழ்கிறான். இந்தப் புகழ்ச்சியை இராமனுடன் இணைக்கும் சொல் 'காக்கும்' என்ற 'செய்யும்' வாய்பாட்டுப் பெயரெச்சச் சொல்லே ஆகும். இந்த இணைப்புச்சொல் இல்லை என்றால் யாரைக் கூறுகின்றார் என்று விளங்காமல் போய்விடும்.

"........... இமைப்பு இலாதோர்
தம்மையே முதலிட்டு ஆன்ற சராசரம் சமைந்த ஆற்றல்
மும்மை ஏழ் உலகும் காக்கும் முதல்வர்....." (கம்ப.கிட்கி.பா.66:1-3)

எனவே, இங்குப் பெயரடைச்சொல், பெயரைச் செய்தியோடு தொடர்புபடுத்தி, இணைப்புச் சொல்லாகவும் செயல்படுகிறது. இது மட்டுமல்லாமல் 'காக்கும்' என்ற பெயரடை இராமனாக அவதாரம் எடுத்திருக்கும் திருமால் 'காக்கும் கடவுள்' என்பதையும் நினைவுபடுத்துகிறது.

**சிறப்புகளைக் கூறுதல்**

இலக்குவன் தாங்கள் யார் என்பதை அனுமனுக்குக் கூறும் பொழுதுதன் தந்தையின் சிறப்புகளைக்கூற முனைகிறான். அதுபொழுது பெயரடைகளை அடுக்குகிறான். 'ஆண்ட', 'உண்ட',- இந்தப் பெயரடைகள் தசரதன் சூரியகுலத்தில் தோன்றிய ஆரியன் என்பதையும், தேவர்கள் பொருட்டு, 'சம்பரன்' முதலிய அசுரர்களைப் போரில் அழித்தவன் என்பதையும், வேள்விகள் பல செய்தவன்

என்பதையும் சுட்டுகின்றன. தசரதனின் சிறப்புகளைக் கூறும் பெயரடைத் தொடர்கள் வரலாற்றையும் கூறுகின்றன என்பது இங்குக் குறிப்பிடத்தக்கது.

"சூரியன் மரபில் தோன்றிசுடர் நெடுநேமி ஆண்ட
ஆரியன் அமரர்க்காக அசுரரை ஆவி உண்ட
வீரியன் வேள்வி செய்து விண் உலகோடும் ஆண்ட
காரியன் கருணை அன்னகண் அகன் கவிகை மன்னன்"

(கம்ப.கிட்கி.பா.68)

சில பாடல்களில் பெயரடைகளை நீக்கிவிட்டால் பொருளும் தொடரும் பிழையாக முடியும். தொடர்ச்சியையும், பொருள் தெளிவையும் தருவன பெயரடைகளகவே உள்ளன. பெயரடைத் தொடர்கள் அடுக்கி நின்றே சில பாடல்களை முழுமைப் பெறச் செய்கின்றன என்று கூறுவது மிகையாகாது.

"புயல்தரு மதத்தின் கோட்டுபுகர் மலைக்கு இறையை ஊர்ந்து
மயல்தரு அவுணர் யாரும் மடிதர வரிவில் கொண்ட
இயல்தரும் புலமைச் செங்கோல் மனுமுதல் யாரும் ஒவ்வாத்
தயரதன் கனகமாடத் தடமதில் அயோத்தி வேந்தன்"

(கம்ப.கிட்கி.பா.69)

இதில் 'தரும்', 'கொண்ட', 'ஒவ்வா' என்ற பெயரடைகள் தங்களுக்கு முன்வரும் தொடர்களைத் தாங்கிப் பொருள் தெளிவைத் தருகின்றன. புலவனும் எவற்றை மடைமாற்றம் செய்ய முனைந்தானோ அவற்றைப் பெயரடைகள் வாசகர்களுக்குப் மடைமாற்றம் செய்கின்றன.

புலவன், இராமனாக அவதாரம் எடுத்திருக்கும் திருமாலின் சிறப்புகளையும் பெருமைகளையும் வாசகர்களுக்கு நினைவூட்ட விரும்புகிறான். காரணம் திருமாலின் பராக்கிரமங்களை உடையவன் இந்த இராமன் என்று சொல்ல முனைகிறான். எனவே, அவற்றைப் பாடலில் கொண்டுவர முயல்கிறான். இதற்குப் பெயரடைத் தொடர்களே உதவுகின்றன. அதுமட்டுமன்று பிற தேவர்களிடம் காணமுடியாத கண்ணழகைத் திருமாலிடம் காணமுடியும் என்பதையும் சுட்டுகிறார்.

"உலகம் மூன்றும் காலினால் கடந்துகொண்ட
புண்டரீகக்கண்........." (கம்ப.கிட்கி.பா.74:1-2)

என்ற தொடரில் 'கொண்ட' என்ற பெயரடையே முன்கூறும் செய்திகளைத் தாங்கிநிற்கும் வடிவாக உள்ளது. புலவன் கூற

நினைக்கும் செய்திகளைக் கோர்வைப்படுத்தி, இணைப்பை உண்டாக்கி தெளிவுபடுத்துகிற பணியைப் பெயரடைகளே செய்கின்றன.

## முடிவுரை

புலவர்கள் சொல்ல நினைக்கும் கருத்துகளைத் தெளிவுபடுத்த, புலப்படுத்த பெயரடைகள் ஓர் உத்தியாகப் பயன்படுத்தப்படுகின்றன. இலக்கணகாரர்கள், பெயரெச்சங்கள் எவ்வெவ் பொருள்களில் வருகின்றன என்பதைக் கூறுகின்றனர். கம்பர் இந்தப் பொருள்களில் பயன்படுத்தினாலும் கூடுதலாகத்தான் கூற நினைத்த அல்லது வலியுறுத்த நினைத்த கருத்துகளையும் கூறுகிறார். கம்பர் சொல்லாமல் சொல்ல நினைக்கும் கருத்துகளையும் பெயரடைகள் புலப்படுத்துகின்றன. பெயரடைகள் தெளிவு, விளக்கம், இணைப்பு என்று புதிய பரிமாணங்களையும் கொண்டு விளங்குகின்றன. சுருக்கமாகக் கூறின் பெயரடைகள் புலவன் கூற நினைக்கும் கூடுதல் செய்திகளை வெளிப்படுத்த உதவும் காரணியாக விளங்குகின்றன.

# கம்பனில் 'ஒருநிலைச் சொற்கள்' - பாயிரத்தை முன்வைத்து

முனைவர். ப.வேல்முருகன்
தமிழ்த்துறை, தியாகராசர் கல்லூரி
மதுரை.

**முன்னுரையாக-**

'கவிச்சக்கரவர்த்தி' என்ற சிறப்புக்குரியோர் தமிழ் இலக்கிய வரலாற்றில் பலரிருப்பினும், தமிழ்ப்பண்பாட்டைப் பின்பற்றும் பிற்காலத் தலைமுறையினரும் உச்சரிக்கும் பெயருக்குரியோர் ஒருவரே. அவர்தான், 'கம்பர்'. இவரை, கவிஞர் சிற்பி 'உலக இலக்கிய வரைபடத்தில் நம்மையும் இருப்பதாக்கிய ஞானக்கடல்' எனப் புகழாரம் சூட்டுகிறார், (கம்பனில் மானுடம், ப.11). இத்தகு புகழ்மொழிக்குரிய கம்பன் படைத்த கம்பராமாயணத்தில் உள்ள பாயிரச் செய்யுட்களை முதன்மை ஆதாரமாகக்கொண்டு, அவற்றினூடே இருக்கும் ஒருநிலைச்சொற்களுள் 'போல' என்ற ஒப்புருபையும், 'அரோ' என்ற அசைநிலைச்சொல்லையும், இனங்கண்டு, அவை தரும் பொருண்மைக்கும் காப்பியப் படைப்பாளனின் ஆழ்மன உணர்வுக்கும் இடையே ஊடாடும் பொருண்மைத் தொடர்பை விளக்கி ஆராய்வதாக இக்கட்டுரை அமைகிறது.

**ஒருநிலைச் சொற்கள்**

தொல்காப்பியம், சொற்களைப் பெயர், வினை, இடை, உரி என நான்காகப் பகுத்துக் கூறுகிறது (சொல். 158,159). இவற்றுள், இடைச்சொல் என்பது பெயரையும் வினையையும் சார்ந்து தமக்கானப் பொருண்மை உணர்த்தும் தன்மையது அத்துடன் பெயரையும் (வேற்றுமையுருபேற்கும் இயல்பு), வினையையும் (காலங்காட்டும் இயல்பு) வேறுபடுத்துவது. இத்தகு இயல்பு கொண்ட இடைச்சொல்லின் வகைகளாகத் தொல்காப்பியர் ஏழனைக் குறிப்பிட (சொல்.250), நன்னூலார் எண்வகைகளைக் குறிப்பிடுகிறார் (சொல்.420). தொல்காப்பியரும், நன்னூலாரும் இடைச்சொல்லின் வகைகளாகப் பட்டியலிட்டுக் காட்டியவற்றை, மொழியியலார் ஒட்டுக்கள், ஒருநிலைச்சொற்கள் என இருவகைப் பகுப்புக்குள் அடக்குவர். இவற்றுள், 'ஒருநிலைச்சொற்கள்' என்ற பகுப்புக்குள், தொல்காப்பியர் குறிப்பிடும், 'ஒப்புருபு', 'இசைநிறை', 'அசைநிலை', 'தத்தம் குறிப்பு' ஆகிய இடைச்சொல் வகைகள் அடங்கும்.

**கம்பராமாயணப் பாயிரத்தில் 'ஒருநிலைச் சொற்கள்'**

கம்பராமாயணம், பாலகாண்டத்தில் உள்ள பாயிரம் பகுதியில் இருக்கும் பாக்களில் (கடவுள் வணக்கம், அவையடக்கம், நூல்வரலாறு, காவியம் பிறந்த களம் ஆகியவை) ஒருநிலைச் சொற்கள் இடம்பெற்றுள்ளன. அவற்றுள், 'போல', 'என' என்ற ஒப்புருபுகளும், 'அரோ' என்ற அசைநிலைச் சொல்லும், உணர்த்துப் பொருண்மைக்கும் - காப்பியப் படைப்பாளனின் ஆழ்மன உணர்வுக்கும் இடையே ஊடாடும் பொருண்மைத் தொடர்பைக் கண்டறிவதே சாலப்பொருத்தமுடையதாக அமையும்.

**ஒருநிலைச் சொல் – ஒப்புருபாகிய 'போல' , 'என'**

எளிய பூனை, ஆழ்ந்த - பரந்த பாற்கடல் முழுவதையும் நக்கிக் குடித்துத் தீர்த்துவிட முடியாது என்பது தெளிவு. ஆயினும், அந்த முயற்சி குறித்து ஒரு பூனை பாற்கடலை அடைந்திருக்கிறது இம்முயற்சிக்கு ஆற்றலைவிட, பேராசையே காரணமாக இருக்க முடியும். அதுபோல, நடையில் நின்றுயர் நாயகனின் (இராமனின்) புகழ்க்கடலை அளந்துரைக்க முடியாது என்பது தெளிவு. இருப்பினும் ஆற்றல் கருதாத பேராசை - ஐயம் காரணமாக மட்டுமே இச்செயலில் துணிந்து இறங்கியிருப்பதாகக் கவிச்சக்கரவர்த்தி 'கம்பர்' கூறுகிறார். அவர், தம் கவிமொழியில் '..உயர் பாற்கடல் உற்று, ஒரு பூசை, முற்றவும் நக்குபு புக்கென, ஆசை பற்றி அறையலுற்றேன்....' (பா.4) எனப் பாடுகின்றார். பூசை பாற்கடலை முழுக்கப் பருக முயற்சிப்பது ஒரு செயல் காசில் கொற்றத்து இராமன் கதையில் ஆசை கொண்டமையால் சொல்லத் தொடங்குவது மற்றொரு செயல் இவ்விரு செயல்பாடாகிய வினைகளுக்கிடையே 'என' என்ற (புக்கென- புக்கு+என) ஒப்புருபைக் கையாள்கிறார், கம்பர். இவ் ஒப்புருபால் காவிய நாயகன் இராமனின் ஆற்றல் முதன்மைபடுத்தபடுவதுடன், கம்பனின் கவியாற்றல் முதன்மைப்படுத்தப்படுவது மறைமுகமாகவும் - ஐயப்பாடாகவும் உவமையினுடாகக் கம்பர் வெளிப்படுத்துகிறார்.

இதே போன்று பிறிதோரிடத்திலும் (பா.7) உவமையினூடாகக் கம்பர், தம் கவிபுனைவு செயல்பாட்டினை 'யாழ்நறை அடுத்த அசுண நன் மாச் செவிப் பறை அடுத்தது போலும் கவிக்கு உறை அடுத்த செவிகளுக்கு என்பா ஓதில்...' எனப் பாடுகிறார். 'இசையில் மகிழ்ந்து திளைக்கும் 'அசுணம்' என்ற பறவை, பறையின் வல்லோசை கேட்டால், உயிர் விட்டு விடும்' என்பது ஒரு செயல் 'நற்கவிதைகள் கேட்டுத் திளைத்த செவிகளில் என் புல்லிய பாவின் ஓசை வீழ்ந்தால், கேட்டார் துன்புறுவர்' என்பது மற்றொரு செயல். இவ்விரு நேர்

கோட்டிலான செயல்களுக்கிடையே 'போலும்' என்ற ஒப்புருபை, இணைப்புச் சொல்லாடலாகப் பயன்படுத்தும் கம்பர், அவ் ஒப்புருபைத் தம் கவிபுனைவுஆற்றலை அவையடக்கத்துடன் மறைமுகமாக முதன்மைப்படுத்தும் - ஐயப்படுத்தும் நோக்கிலேயே கையாண்டுள்ளார்.

**ஒருநிலைச் சொல் – 'அரோ' என்ற அசைநிலைச் சொல்**

தொல்காப்பியரும் நன்னூலாரும் அசைநிலைச் சொற்களாகக் குறிப்பிடுவன பலவுள. மரபிலக்கண உரையாசிரியர்கள் அசைச்சொல்லுக்குப் பொருழில்லை என்றே விளக்கமளித்துள்ளனர். ஆனால், மொழியியலறிஞர் மோ. இசரயேல், அசைச்சொற்கள் தரும் பொருட்களைக் குறிப்பிட்டுள்ளார். 'அரோ' என்னும் அசைச்சொல், 'உணர்ச்சியை வெளிப்படுத்துவது' என்ற பொருளில் வருமென்கிறார். இவ் அசைச்சொல், பாயிரச் செய்யுட்களில் இடம் பெற்றுள்ளது.

கம்பர், கடவுள் வாழ்த்தில் (பா.2), 'பரம்பொருளை (இராமன்) உணர்த்துதல் அரிது என்கிறார். இருப்பினும் சான்றோர்களால் எண்ணப்படும் முக்குணங்களில் (சத்துவம், இராஜசம், தாமசம்) முதலில் சொல்லப்படும் சத்துவகுணம் கொண்டவரே மேலோராவர் அச் சத்துவகுணம் மிக்கோர்களான பிரகலாதன், அனுமன், வீடணன் போன்றோர்களின் நற்குணக்கடலில் மூழ்கி, ஆடித்திளைத்தல் நன்று' - என்பதை, 'அவர், நற்குணக்கடல் ஆடுதல் நன்று' என்று செய்யுள் செய்யாமல், பரம்பொருளின்மீது கொண்ட உணர்ச்சிப் பெருக்காகிய வெள்ளத்துள் ஆடித்திளைத்தலை 'அரோ' என்ற அசைச்சொல்லால் கவிமொழிக்குள் அடக்கிக்காட்டிடக் காரணம், கம்பருக்குத் தன் உள்ளுணர்வில் விளைந்ததன் உணர்ச்சிப்பெருக்கே ஆகும்.

'அவையடக்கம்' என்ற பகுதியில்(பா.4), 'நடையில் நின்றுயர் நாயகனான இராமனின் புகழ்கடலைத் தன்னால் அளந்துரைக்க முடியாது என்பது கம்பருக்குத் தெளிவாகத் தெரியும். இருப்பினும் தன் ஆற்றல் கருதாமல் பேராசை காரணமாக, இக்காப்பியம் பாடத் துணிந்தார்'. எங்ஙனமெனில், 'பூசை தன் ஆற்றல் கருதாமல் பேராசையின் பொருட்டாகப் பாற்கடலை அடைந்து, அப்பாற்கடல் முழுவதையும் நக்கப் புகுந்தாற் போலத் தானும்(கம்பனும்) காசுஇல் கொற்றத்து இராமன் கதையை ஆசை பற்றி அறையலுற்றேன்' என்கிறார், கம்பர். இவ்விடத்து, 'ஆசை பற்றி அறையலுற்றேன் - மற்று, இக்காசுஇல் கொற்றத்து இராமன் கதை' என்று செய்யுள் யாத்தால் 'ஆசை' ஒன்றே காவியம் பாடக் காரணமாயிற்று எனப் பொருள்படும்.

ஆனால் கம்பருக்கோ, பேராசையும் முயற்சியும் ஒருங்கமைந்த உணர்ச்சி வெளிப்படுத்தலே காவியம் பாடக் காரணமாயின. இவ் உணர்ச்சி உந்துதலைக் கூறும் முகத்தான் கம்பர், 'அரோ' என்ற அசைநிலைச் சொல்லை ஈற்றசையாக இட்டு, 'இக்காசுஇல் கொற்றத்து இராமன் கதை அரோ' என்று வெளிப்படுத்தியிருக்கிறார்.

மேலும், மற்றொரு பாடலில்(7) தன் கவிபுனையும் ஆற்றலை அடக்கத்துடன் மட்டுமன்றி, அவையடக்கத்தான் கூறுமிடத்து, 'கவிக்கு, என்பா, ஓதில் - அசுண நன் மாச் செவிப் பறை அடுத்தது போலும்' என்கிறார், கம்பர். அதாவது, 'அசுணம்' என்ற பறவை இசையில் மகிழ்ந்து திளைக்கும் இயல்புடையது. இப்பறவை, பறையின் வல்லோசை செவியில் கேட்பின் உயிர் விட்டு விடும் அதுபோலும் நற்கவி கேட்டுத் திளைத்த செவிகளுக்கு, என் பாவின் ஓசை விழுந்தால், கேட்டோர் துன்புறுவர்' என்கிறார், கம்பர். இவ்விடத்து, கம்பர் இவ்வுமையோடு நில்லாமல் தன் கவிதா விலாசமாகிய கம்பராமாயணக் காவியத்தை அரங்கேற்றம் நிகழ்த்தவும் - தமிழ்ச் சமூகம் படித்துத் தெரிந்து கொள்ளவும் சோழனின் அவைக்களக் கவிச்சான்றோரின் ஆழ்மன உணர்வு, தன்னைக் கவிபுனைவு ஆற்றல் மிக்கோன் என்று ஒத்துக்கொண்டாலும், தன் கவித்திறனைப் புறவுலகாகிய மக்கள் சமூகத்தில் செல்வாக்குப்பெற்றுவிடாமல் மறுப்புத் தெரிவிக்குமென நினைத்து, கம்பன் தன் கவியாற்றலைப் பட்டவர்த்தமாக வெளிபடுத்தாமல், 'நற்கவி கேட்டுத் திளைத்த செவிகளுக்கு, என்பா, யாழ் நறை அடுத்த அசுண நன்மாச் செவிப்பறை அடுத்தது போலும்' என்று, அவையடக்கத்துடன் தன்னுடைய கவிபுனைவுத்திறன் உணர்ச்சியை வெளிப்படுத்துகிறார்.

அதாவது தன் கவிபுனைவுயாற்றலைப் பிறர்முன் தாழ்த்தும் நோக்கில் கம்பர் கூறவில்லை. மாறாக, முன்னோர் வழியில் இலக்கியத் தடம் பார்த்து, புதிய நடை பயில்வதாகத்தான் கூறுகிறார். முன்னோரின் கவியாற்றலையும், தன் கவிபுனைவுத் திறனையும் இணைக்கும் உணர்ச்சியின் உச்சநிலை வெளிப்பாட்டை, ஒப்புருபோடு மட்டுனின்றி, 'அரோ' ஈற்றசை சொல்லால் புலப்படுத்திக் காட்டுகிறார். ('யாழ், நறை அடுத்த அசுண மாச் செவிப், பறை அடுத்தது போலும் - என்பா அரோ': பா.7)

பிறிதொரு பாடலில் (10) நூல் வரலாறு கூறுமிடத்து, "தேவபாடையில் இராம கதை செய்தவர் மூவர் (வான்மீகி, வசிட்டர், போதாயனார்) ஆவர். இம் மூவருள்ளும் முதன்மையராகியவரும், வாக்கிற்

சிறந்தவருமாகிய வான்மீகி உரையின்படி, நான்(கம்பன்) தமிழ்ப் பாவினால் இராமாவதாரத்தை இயற்றினேன்' என்று கம்பர் குறிப்பிடுகிறார். 'வான்மீகி உரையின் படி' எனக் கம்பர் கூறினாலும், தமிழ்ப் பண்பாட்டு மரபைக் கருதிக் காப்பியத்தினூடே சிற்சிலவிடங்களில் மாற்றங்கள் செய்துள்ளார் என்பதை நாம் நினைவில் கொள்ள வேண்டும்.

கம்பர், வான்மீகி படைத்தளித்த இராம கதையை, 'நான் தமிழ்ப் பாவினால் இது உணர்த்திய பண்பு' என்று எதேச்சையான செய்தியாகப் புலப்படுத்த விரும்பினாரில்லை. மாறாக, உணர்ச்சி உந்துதலின் விழைவினால் செய்யப்பட்ட படைப்பாக்கம் என்பதை, அவர் அசைச்சொல்லாகிய 'அரோ' என்ற ஈற்றசை சொல்லை இட்டு, 'நான் தமிழ்ப் பாவினால் இது உணர்த்திய பண்பு அரோ' என்று பாடுகிறார். இவ்விடத்து, கவிதை வாசித்துச் செல்பவனைக் கட்டி நிறுத்திச் சிந்திக்க வைப்பது 'அரோ' என்ற அசைச்சொல்லின் பொருண்மையாகப் புலப்பட்டாலும், கம்பனின் உணர்ச்சி வெளிபாட்டுத்திறனால் விளைந்த விருப்பமாகத்தான் உள்ளது.

முடிவாக - கம்பராமாயணம் பாயிரம் பகுதியிலுள்ள செய்யுட்களில் ஒருநிலைச் சொற்களான ஒப்புருபு, இசைநிறை, அசைநிலை, தத்தம் குறிப்புச்சொற்கள் இடம்பெற்றுள்ளன. இவற்றுள் ஒப்புருபுகளாகப் 'போல', 'என' என்பன பயின்று வந்துள்ளன. இவற்றைக் கம்பர், தன் கருத்தை எளிமைப்படுத்திப் பிறருக்குப் புலப்படுத்துவதற்காகக் கையாள்கிறார் என்பது மரபிலக்கிய உத்தியாக இருக்கலாம். அதையும் தாண்டி, 'பூசையானது பாற்கடலை முழுவதும் பருக நினைத்தால் சாத்தியமாகுமா! அதுபோல, நடையில் நின்றுயர் நாயகனின் (இராமனின்) சிறப்புக்கள் முழுவதையும் இயம்புதற்கு எமக்குள்ளிருக்கும் கவியாற்றலால் முடியுமா!' என்றவிடத்தும் (பா.4), 'யாழிசை கேட்டு வாழும் இயல்புடைய 'அசுணம்' என்ற பறவையின் செவியில், பறையின் வல்லோசை கேட்டால் உயிர்வாழுமோ! அதுபோலும், நற்கவி புனைதிறன் மிக்க கவிச்சான்றோரின் கவிதையை வாசித்து இன்புற்றோர், எம்முடைய புல்லிய கவிபுனைவு ஆற்றலைக் கேட்பின் துன்புறுவர்' என்றவிடத்தும் (பா.7) கம்பனால் கையாளப்பட்ட ஒப்புருபுகள் (போல, என), கம்பனின் கவிபுனைவு ஆற்றலின் ஐயப்பாட்டை வெளிப்படுத்துவதனூடாகத் தன் கவியாற்றலின் மேன்மையை நிறுவுவதாக உள்ளன.

கவிச்சான்றோரிடத்துத் தன் கவியாற்றலைப் புலப்படுத்தும் பொருட்டாகவும் - புற உலக மக்களிடத்துத் தன் காப்பியப் படைப்பை நிலைநிறுத்தும் பொருட்டாகவும் - காப்பியப் பரம்பொருளின் சத்துவகுணத்தை உணர்த்துதல் அரிதென நினைத்து, எடுத்துரைக்க விழைந்ததன் முயற்சியின் பொருட்டாகவும்- கம்பர் தன் உள்ளுணர்ச்சியின் வெளிப்பாட்டுக் கவிச்சொல்லாடலாகவே 'அரோ' எனும் அசைச்சொல்லைக் கையாண்டுள்ளார். (பா.2,4,7,10)

# சுந்தரகாண்டத்தில் சொல்நிலை உத்திகள்

திருமிகு. சிவஞானவதி சிவமூர்த்தி
மொழியியல் ஆங்கிலத்துறை, யாழ்ப்பாணப் பல்கலைக்கழகம்.
இலங்கை.

கம்பராமாயணத்தைப் பல கோணங்களில் நின்று பார்க்க முடியும். மொழியியல் நோக்கில் கம்பனின் சுந்தரகாண்டத்தினைப் பார்க்கும்போது அங்கு பல உத்திகள் மொழிநடையின் ஊடாக வெளிப்படுத்தப்பட்டுள்ளன. மொழிநடை உத்திகளினை ஒலி-நிலை உத்திகள், சொல்நிலை உத்திகள், பொருள்நிலை உத்திகள், தொடர் நிலை உத்திகள் எனப் பகுத்து நோக்கப்படுகின்றது. ஆய்வுக் கட்டுரையின் சுருக்கத்தை கருத்தில்கொண்டு கவிதைச் சிற்பியாகிய கம்பனின் உயர் சொல் ஓவியமான கம்பராமாயணத்தின் சுந்தரகாண்டத்தினுள் உள்ள சொல்நிலை உத்திகளை வெளிக் கொணர்வதே இவ்ஆய்வுக்கட்டுரையின் நோக்கமாகும். கம்பராமாயணம் சுந்தரகாண்டம் மூலமும் தெளிவுரையும் பாகம் 1, பாகம் 2, நாராயண வேலுப்பிள்ளை, இராமசுப்பிரமணியம், எம். இராசாராம் வ.த. துரை என்ற நூலை மூலமாகக் கொண்டு பாடல் அடிகள் எடுத்துக் காட்டப்பட்டுள்ளன.

கம்பனின் உத்திகளை வெளிக்கொணர்வதற்கு முன்"நடை" (Style) என்ற பதத்தை ஆராய வேண்டிய தேவை இங்கு ஏற்படுகின்றது."நடை" (Style) என்பது ஒரு ஆசிரியரின் தனித்தன்மையை வெளிப்படுத்த வல்லது. அவரை இனங்கண்டு கொள்ளும் வகையில் அவருக்கே உரியதாக இருக்கும் வெளிப்பாட்டு மொழிப்பாங்கே என வரையறை செய்யலாம். மேலை நாட்டு இலக்கியத்திறனாய்வாளர்கள் "நடை" என்பது ஆசிரியரின் தன்மையை வெளிப்படுத்தும் மொழி, உள்ளத்தின் திட்பம் நடையின் திட்பமாகும். உள்ளத்தின் தெளிவு நடையின் தெளிவாகும். நடை ஆசிரியருடைய உள்ளத்தின் சொல்லோவியம் (Style is the mentel picture of the man who writes) என்றும், குணத்தை அறியுங்கலை (Physiognomy of the mind) என்பதும் அவர்களது கருத்தாக அமைகின்றது. "எளிமையே மொழிநடைக்கு இனிய அணி" என்பது ஆங்கிலப் பழமொழி. நடை ஒன்றின் நல்லியல்புகளான சுருங்கச்சொல்லல், விளங்கவைத்தல், படிப்பவருக்கு இனிமை, நல்ல சொற் கையாட்சி, புணர்த்தல், ஓசையுடைமை, ஆழமுடைத்தாதல், முறையின் வைத்தல், சிறந்த பொருள் பயத்தல், கூறியதைத் திரும்பக்

கூறாமை, உயிரோட்டமானகற்பனை, வசனஅமைப்புக்கள் எல்லாம் கம்பனுடைய சுந்தரகாண்டத்திலும் இழையோடி உள்ளதைக் காண முடிகின்றது. இலக்கியம் கண்டதற்கு இலக்கணம் இயம்புதல் இயல்பு ஆதலின் நடைச் சித்திரம் கண்ட கம்பனின் சுந்தர காண்டத்தினை அடிப்படையாகக் கொண்டே சொல்நிலை உத்திகளை, உத்தி வகைகளைத் தொகுத்தும் பகுத்தும் வகைப்படுத்தியும் ஆய்வது ஏற்புடையதாகின்றது.

சொல்நிலை உத்திகளின் கீழ்ச் செல்வோமாயின், இவை கவிதையின் திறனுடைச் சொல்நடைக்கு வாய்ப்பாக அமைகின்றன. ஓர் படைப்பாளி சொல்லாற்றலும், மிக்க சொல்லறிவும் உடையவனாக இருந்தால், அவன் படைப்பு சொற்களஞ்சியமாக அமைந்து சிறக்க முடிகின்றது. சொல் உத்திகளில் புதுமைச்சொல் பெய்து பொருள் சிறக்கச் செய்வதில் கவிஞனின் தனித்தன்மை சுந்தரகாண்டத்தில் விரவிக் காணப்படுகின்றது. இக்காண்டத்தின் முதற்படலமாகிய கடல்தாவு படலத்தில் அநுமனை உபசரிக்குமாறு மைந்நாகமலை கடலினின்று வெளிவந்த தோற்றத்தைக் கூறும் கம்பர்.

"மீ யோங்கு செம்பொன் முடியாயிரம் மின்னி மைப்ப...." (பாகம் 1, பக். 72, 40) என்ற பாடல் வரியில் "மீ" என்பது "மேல்" என்ற பொருளில் வழங்கி வருவதைச் சுட்டிக் காட்டுகின்றார். "மீ" என்ற புதுமைச் சொல்லின் பயன்பாடு இக் காண்டத்தில் பல இடங்களில் பயின்று சிறப்பிக்கின்றது. மேலும் பெருக்கு, நொய்து - விரைவு என்ற பொருளிலும் வல்லியம் - புலி என்ற பொருளிலும் பயின்று வருவதை நோக்கலாம்.

புதுமைச்சொற்களின் ஒரு பகுதியாக காப்பியத்தில் அமையும் அடைச்சொற்களும் (Epithets) தனியுத்திநிலை அணுகுமுறையுடன் ஆயத்தக்கன. "செந்தாமரை" செம்மை என்பது இங்கு அடையாகப் பயின்று வருகின்றது. இவ்அடைச்சொல்லின் பயன்பாடு சுந்தரகாண்டத்தில் மிகையாகக் காணப்படுகின்றது. சுந்தரகாண்டத்தின் காட்சிப் படலத்தில் இராவணனால் சிறைவைக்கப்பட்டிருந்த சீதாப்பிராட்டி அரக்கர்களின் நடுவில் மெலிந்து, வருந்தியிருத்தலும் அப்போது செந்தாமரை மலர் போன்ற முகத்தை உடையவர் இராமபிரான் என்று கூறும் சந்தர்ப்பத்தை.

"மெய்த் திருப்பதம் மேவு என்ற போதினும்
இத்தி ருத்துறந்து ஏகு என்ற போதினும்

சித்திரத்தின் அலர்ந்த செந்தாமரை
ஒத்திருக்கும் முகத்தினை உன்னுவாள்" (பாகம் 1, பக். 304, 348)

என்ற பாடல் மூலம் உணரலாம். நேரடியாகப் பண்பைப் புலப்படுத்தாது எதிர்மறையாக அதனைக் கூறி உணர்த்தும் சொல்லாக்க நிலையும் இக்கவிஞனுக்கு உரியதாக அமைகிறது.

"வாராது ஒழியான் எனும் வண்மையினால்
ஓராயிரம் கோடி இடர்க்கு உடையேன்
நாராயணனே! தனிநாயகனே!" (பாகம் 1, உருக்காட்டுப்படலம் பக். 412, 493)

சீதாப்பிராட்டி இராமபிரான் ஒருபோதும் தன்னை மீட்பதற்கு வாராமல் இருக்கமாட்டான். (வாராது) என வருந்திக் கூறும் சந்தர்ப்பத்தில் எதிர்மறையின் பயன்பாட்டை நோக்கலாம்.

சொல்லுத்திகளின் பிறிதொரு கோணத்தில் எண்ணுப் பெயர்களின் ஆட்சியும் கருதத்தக்கது. கவிஞன் எண்களைப் பலவாறு கையாளுகின்றான். ஓசை நயமும் சொல் அழகு தரும் நிலையிலும், பல எண்களின் தொடர்ச்சியில் இன்பம் விளைவிக்கும் பாங்கிலும் அமைத்துச் செல்கின்றான்.

"தடக்கை நால் ஐந்து பத்துத் தலைகளும் உடையான் தானே"
(பாகம் 1, கடல்தாவு படலம் , பக். 64, 28)

இங்கு பெரிய இருபது கைகளையும் பத்துத் தலைகளையும் உடைய இராவணனது சிறப்பு எண்ணுப்பெயர்களின் ஊடாக விவரிக்கப்படுகின்றது. மேலும் ஒருசில பாடல் அடிகள் எடுத்துக் காட்டாகத் தரப்படுகின்றது. எனினும் எண்ணுப் பெயர்களின் ஆட்சி ஒவ்வொரு படலத்திலும் மிகையாகக் கொண்டு செல்வதை கம்பனின் மொழி நடையில் காண முடிகின்றது என்பது கண்கூடு.

"ஈர்ஐஞ் நூறு தலையுள் என்னினும்..."
(பாகம் 2, பிணிவீட்டுப்படலம், பக். 317, 1147)

"... ஓராயிரம் கோடி இடர்க்கு உடையேன்..."
(பாகம் 1,உருக்காட்டுப் படலம், பக் 412,493)

இராமபிரான் தன்னை மீட்பதற்கு வராமல் இருக்க மாட்டான் என்று நம்பி ஓராயிரம் கோடி துன்பங்கள் நேர்ந்த போதும் உயிர்விடாமல் இருக்கின்றேன் என்று சீதாப்பிராட்டி கூறும் சந்தர்ப்பத்தில் துன்பத்தின் மிகையினை ஓராயிரம் கோடி என்ற எண்ணுப் பெயர் சுட்டி நிற்கின்றது. சில எண்கள் , எண்ணிக்கைகள்

மீண்டும் மீண்டும் பயிலல் கம்பனிடம் காணப்படுகின்ற சிறப்பான உத்தி எனலாம். உருக்காட்டுப்படலத்தில் வானரங்களின் பேரெண்நிலையை வெள்ளம் என்ற சொல்லால் புலப்படுத்துவது வருணனை மிகுந்த பெருக்க மிகுதி உணர்வை ஏற்படுத்துகிறது. எண் வரையறைக்கு அப்பாற்பட்ட நிலையை படைப்பாளி தருகின்றார் எனலாம்.

"எழுபது வெள்ளம் கொண்ட எண்ணன: உலகம் - எல்லாம்
........ஒத்த வா நரம் வானின் நீண்ட" (பாகம் 1, பக் 431, 519)

சொல்நிலை உத்திகளில் இங்கு குறிப்பிடத்தக்க மற்றொரு அம்சம் முற்று, எச்சம், வினா, உம்மை போன்ற சொல்நிலைகளை அடுக்கி வந்து ஒரு பாடலை ஆக்கும் போது அது தனித்த இயல்பு கொள்கின்றது. விரைவு, ஐயம், உணர்வு மிகுதி, கருத்துச் செறிவு என்பவற்றைப் படிப்போன் மனதில் உயிரோட்டமாகச் செலுத்தும் கவியின் நடை உத்தி போற்றுதற்குரியது.

எச்சங்களை அடுக்கும்போது திரும்பத்திரும்ப ஒரே சொற்களை அடுக்கி மேலும் அழகு ஊட்டும் பண்பு சிறப்பிடம் பெறுகின்றது. சுந்தரகாண்டம் பிணி வீட்டுப்படலத்தின் ஒரு பகுதியில் அநுமன் இராவணன் கூறியவற்றை நன்கு ஆராய்ந்து பிறர்மனை நயத்தலால் வரும் பயனை இராவணனை நோக்கி பதில்கூறும் சந்தர்ப்பத்தினை விளக்கும் கம்பர்,

"திறம் திறம்பிய காமச் செருக்கினால்
........இறந்து இறந்து இழிந்து ஏறுவதே அலால்"

(பாகம் 2, பக் 314 இ1141)

இறந்து இறந்து இழிந்து என்ற எச்சங்களைக் கையாளும் முறை நோக்குதற்குரியது. இதனை விட,

"ஓடிக் கொன்றனன், சிலவரை உடல் உடல் தோறும்
கூடிக் கொன்றனன், சிலவரை கொடி நெடு மரத்தால்
சாடிக் கொன்றனன், சிலவரை பிணந்தொறும் தடவிக்
தேடிக் கொன்றனன்...." (பாகம் 2, கிங்கரர்வதைபடலம், பக் 73, 789)

இங்கு ஓடி, கூடி, சாடி, தேடி என்பன எச்சங்களாகும். வினைமுற்றுக்களை அடுக்கும் மொழிநடை உத்தியையும் இங்கு கண்டு கொள்ளலாம்.

"ஆர்த்தார், அண்டத்து அப்புறத்தும்........
ஈர்த்தார் முரசம் எற்றினார் இடித்தார் தெழித்தார் எம் மருங்கும்

பார்த்தார் ஓடிச் சானகிக்கும் பகர்ந்தார் அவளும் உயிர் பதைத்தாள்."

(பாகம் 2, பக் 335, 1171)

என்ற பிணி வீட்டுப்படலப்பாடலில் அநுமன் வாலிற்குத் தீ வைத்த செய்தியை சீதைக்கு அறிவிக்க அவள் வருத்தமுறும் சந்தர்ப்பத்தை காட்சிப்படுத்தும் படைப்பாளி ஆர்த்தார், ஈர்த்தார், இடித்தார், பார்த்தார், பகர்ந்தார் என்ற வினைமுற்றுக்களை அடுக்கி நடையைச் சிறப்பித்துள்ளமையைக் கண்கூடாகக் காணலாம். பெரும்பாலும் போர் வருணனையிலேயே கவிஞன் இம் முற்று அடுக்குதலை மிகுதியாகப் பயன்படுத்தியது போல் தெரிகின்றது. சம்புமாலி வதைப்படலம் பல அரக்க வீரர் அநுமனின் கடும் போரால் பல் வகையாகத் துன்புற்றுத் துவண்ட பாங்கினை இவ்வாறு அளிக்கின்றது.

"வெருண்டனர், வியந்தனர், விழுந்தனர், எழுந்தார்
மருண்டனர், மயங்கினர், மறிந்தனர், இறந்தார்
உருண்டனர், உலைந்தனர், உழைத்தனர்இபிழைத்தார்
சுருண்டனர், புரண்டனர், தொலைந்தனர், மலைந்தார்"

(பாகம் 2, பக். 109, 843)

இவ்வாறு முற்றுக்களை அடுக்குவது போன்றே வினாக்களை அடுக்கும் முறையும் கண்கொள்ளத்தக்கது.

உருக்காட்டுப்படலத்தில் உவமைகளை இட்டு வினவி அடுக்கும் பாங்கை அநுமன் இராமபிரானது பற்களின் சிறப்பைக் கூறும் சந்தர்ப்பத்தினூடாக அவதானிக்க முடிகின்றது.

"முத்தம் கொல்லோ? முழுநிலவின் முறியின் திறனோ? முறை அமுதச்
சொத்தின் துள்ளி வெளளியினம்தொடுத்த கொல்லொ? துறையறத்தின்
வித்து முளைத்த அங்குரம் கொல்? வேறே சிலகொல்? மெய்ம் முகிழ்த்த
தொத்தின் தொகைகொல்? யாது என்று பல்லுக்கு உவமை சொல்லுகேன்?"

(பாகம் 1, பக். 448, 540)

என்ற பாடலில் இராமபிரானின் திருப்பற்களுக்கு உவமை முத்துக்களோ? பூரணச்சந்திரனது துண்டங்களின் வரிசையோ? வரிசையாக வைக்கப்பட்ட வெண்ணிறமுள்ள அமிழ்தத் துளிகளின் கூட்டமோ! பல வழிகளாலும் செய்யப்படுகின்ற தருமம் என்னும் வித்தினின்று விளைந்த முளைகளோ? என மேலே காட்டியவாறு பல உவமைகளை அடுக்கியும் வினாச்சொற்களை நிர்ணயித்தும்க் காட்டும் பாங்கை அவதானிக்கலாம். சுந்தர காண்டத்தைப் பொறுத்தவரை கம்பன் அதிக அளவான வினாச் சொற்களைத் தொகுத்து அடுக்கிய

பாங்கை தெட்டத் தெளிவாகக் காணமுடிகின்றது. இலங்கையில் காணப்படும் சேனையின் மிகுதி பற்றி அநுமன் கூறும் கூற்றினை விபரிக்கும் ஆசிரியர் வினாச்சொற்களினை அடுக்குகிறார்.

"விற்படை பெரிது என்கேனோ? வேற்படை பெரிது என்கேனோ?
மற்படை உடைத்து என்கேனோ? வாட்படை வலிது என்கேனோ?
(பாகம் 1. பக். 448. 540)

"உம்" இடைச்சொல்லை பன்முறை அடுக்குதலும் கவிஞனிடம் காணக்கிடக்கின்றது. பட்டியல்களின் ஒரு முன் நிலையாக இவ் அடுக்குதலைக் கருதலாம். பொழிலிறுத்த படலப்பாடலான,

"குழையும், கொம்பும், கொடியும் குயிற்குலம்
விழையும் தண்தளிர்ச் சூழலும், மென்மலர்ப்
புழையும், வாசப் பொதும்பும்,...." (பாகம் 2. பக்.27. 721)

என்பதில் "உம்" இடைச் சொல்லின் ஆட்சி குறிப்பிடத்தக்கது.இன்னும் விளி, வியப்பு, போன்ற சொற்களின் பல்நிலை அடுக்குதலையும் சுந்தரகாண்டத்தின் சொல் உத்தியாக அணுகத்தக்கன.அநுமன் இலங்கையை நோக்கி வியக்கும் காட்சியில் பொன்மயமான அமராவதி நகரம் இந்த இலங்கையை ஒத்திருக்கும் என்று கூறுதல் அறிவீனமாகம் அம்மா! என எடுத்தியம்பும் நிலையை

"நன்னகர் அதனை நோக்கி நளினக்கை மறித்து, நாகர்
பொன்னகர் இதனை யொக்கும் என்பது புல்லிது:, அம்மா!..
(பாகம் 1. கடல்தாவுபடலம் . பக்106. 92)

என்ற கவிப்பெருக்கின் ஊடே அம்மா! என்ற வியப்பு உத்தியைப் பயின்றுள்ளதை நோக்கலாம். இவற்றைவிட உரிச்சொற்களின் பயன்பாடும் இங்கு சுட்டத்தக்கது.இவை போன்று தொகைச் சொல், எதுகை மோனைகளை அடுக்கிவர வாய்ப்பு அமைதலைக் கம்பனின் நடையில் அவதானிக்கலாம். தொகைச் சொற்களைப் பொறுத்தவரை வினைத்தொகை, பண்புத்தொகைஇஉவமைத்தொகைகளின் போக்கு அதிகமே. சுந்தரகாண்டத்தின் முதல் படலமாகிய கடல்தாவு படலத்தில் அநுமன் கடலைக் கடக்க மேல் எழும்பொழுது மரம் முதலியனவும் உடன் எழுந்தன என வர்ணிக்க வந்த ஆசிரியர் அங்கு வினைத் தொகையினைக் கையாண்டுள்ளார்.

"ஆயவன் எழுதலோடும் அரும்பனை மரங்கள் தாமும்
வேய் உயர் குன்றும்,......" (பாகம் 1. பக். 54. 17)

"உயர் குன்று" என்பது வினைத்தொகை. பண்புத்தொகைக்கு உதாரணமாக அநுமன் சீதாப்பிராட்டியின் அருகில் சென்று தன் வரலாறு கூறும் சிறப்பை கையாண்ட ஆசிரியர்

"அடைந்தனென் அடியனேன் இராமன் ஆணையால்
மடந்தை! நின்சேவடி வந்து நோக்கினேன்"

(பாகம் 1, உருக். பக். 424, 540)

இங்கு சேவடி என்பது செம்மை + அடி பண்புத்தொகையாகப் பயின்று வருகின்றது. ஓசையினிமைக்கு எல்லா பாடல்களிலும் முக்கிய கூறாக அமைவது எதுகையாகும். எதுகை இல்லாத பாடலே கம்பனில் இல்லை என்றே கூறும் அளவிற்கு ஒவ்வோரடியும் எதுகை-யினைக் கொண்டமைந்துள்ளன. சுந்தரகாண்டம் காட்சிப்படலத்தில் எதுகையின் சிறப்பை அதிகம் காணலாம்.

."ஆழி காட்டி, என் ஆருயிர் காட்டினாய்க்கு
ஊழி காட்டுவென்' என்று உரைத்தேன் அது
வாழி காட்டும் என்று உண்டு உன் வரைப்புயம்
பாழி காட்டி, அரும்பழி காட்டினாய்" (பாகம் 2, பக. 271, 1079)

இங்கு ஆழி, உழி, வாழி, பாழி, என்பன எதுகைச் சிறப்புடையன. எதுகை மட்டுமன்றி மோனைகளின் கையாட்சியும் ஒரு சொல்லை பல தடவை கையாளும் நிலையும் கவிஞனிடம் காணப்படுகிறது. இவ்வாறான பல சொல்நிலை உத்திகளை கம்பனின் சுந்தரகாண்டத்தில் ஆட்சி செய்வதைக் காணலாம். மொழிநடை உத்தியோடு காப்பிய உத்திகளும், கவிதை உத்திகளும் இணைகின்றன. பல்வகையான கூறுமுறை உத்திகளும் காட்சி உத்திகளும் கலக்கின்றன. வெவ்வேறு விதமான அணிஉத்திகளும், யாப்புத்திகளும் மிடைகின்றன. பல்வேறு பொருள்நிலை உத்திகளும் வெளியீட்டடிப்படை உத்திகளும் இடம் பெறுகின்றன. கவியாற்றலோடு உத்தியாக்கம் இணைந்து செல்வதால் முழுப்பார்வையிலும் பகுத்து நோக்குதலிலும் தனிக் கவிக் காட்சியிலும் உத்திச்சிறப்பு மிளிர்கின்றது. உத்தியில்லாப்பகுதியோ, பாடலோ இல்லை என்று கூறுமளவிற்கு இதன் போக்கு எங்கும் நிறைந்து பரக்கின்றது. படைப்பில் சொற்களைத் திறனறிந்து கையாள வேண்டும். சொற்களை ஒன்றோடு ஒன்று மோதவிட்டு எவை வெற்றி பெறுகிறதோ அவற்றை நடையில் பயில வேண்டும். இத்தகைய மொழிநடை கவிஞனின் காப்பியப் படைப்பில் மரபும், புதுமையும் விரவிய நடை காணப்படுகின்றது. ஒலி, சொல், தொடர் ஆகிய

முந்நிலைகளிலும் வெவ்வேறுபட்ட உத்திநிலைகளைக் கவிஞன் வகுத்தும் ஆக்கியும் தருகின்றான். கம்பன் பெருங்கவிச்சக்கரவர்த்தி ஆனமையால் அவன் படைத்த இராமயாணத்தில் ஒவ்வொரு பகுதிகளும் ஒவ்வொரு கவிதையும் மேற்கண்ட பல உத்திவகை நிலைகளில் ஒன்றேனும் பெற்றுச் சிறக்கின்றன. மரபுத்திகள் பலவற்றை இக்கவிஞன் பின்பற்றிப் பயன்கொண்டான். என்றாலும் அத்துடன் நின்றுவிடாது அவற்றுள் பலவற்றைப் புகுத்திக் கையாண்டு புதுமை செய்தும் பல நவமான உத்திகளைப் படைத்து ஆட்கொண்டும் தனக்கென ஒரு தனிநிலை வகுக்கின்றான். பின்வந்த புலவர் பலருக்கும் கம்பன் படைப்பு ஒரு கருவூலமாகி அள்ளாக் குறையாக உத்திச் செல்வம் வழங்கிச் செல்வாக்குப் பெறுகின்றது எனின் அது மிகையன்று.

# கம்பனில் அக மரபுகள்

திருமிகு. வ.உமாமகேஸ்வரி
வேலூர்.

## முன்னுரை

இராமாயணம் காலத்தால் மகாபாரதத்தைவிட முந்தியது என்பர். இந்தியமொழி இலக்கியங்களில் இராமாயணமே தொன்மைஇலக்கியமாக அமைந்துள்ளது. இராமாயணம் என்னும்இக்கதைத்தொகுதிதொன்மம், புராணம், வாய்மொழிஇலக்கியம் எனப்பல்வேறு வடிவங்களில் இந்தியாமுழுவதும் வரலாற்றுக்குமுற்பட்ட காலத்திலிருந்தே வழங்கி வந்துள்ளது. கம்பர்தம் இராமாயணத்தை மொழிபெயர்ப்புபோல் அமையாமலும் தழுவல் வகையில் அடக்காமலும் பெருங்காப்பியத்தின் இலக்கணம் பொருந்தப்பெற்று யாத்துள்ளார். கம்பர்தாம் இயற்றிய இராமாயணத்தில் அகத்திணை மரபுகளைக் கையாண்ட உத்திகளை இவண் காண்குவம்.

## ஆதி இராமாயணத்தை ஏற்று மலர்ந்த இந்திய இராமாயணங்களும் பிறமொழி இராமாயணங்களும்

தசரத ஜாதகம், அனாமகம் ஜாதகம், வால்மீகி இராமாயணம், பாரதம், தசரத கதானம், இரகு வம்சம், பௌமசரியு, வாசுதேவ ஹிண்டி, நரசிம்ம புராணம், இராவண வஹ அல்லது சேது பந்த பாகவத புராணம், பட்டி காவியம் அல்லது இராவண வதம், ஜானகி ஹரண், உத்தர புராணம், துன்ஹூவாங், கம்பராமாயணம் இராமசரிதம், இராமாயண ககவின் (இந்தோனேசிய இராமாயணம்) சம்போ எகோடோபா (ஜப்பானிய இராமாயணம்) சம்பு இராமாயணம், இராமாயணம் மஞ்சரி, புசுண்டி இராமாயணம், பத்ம இராமாயணம், உதாரராகவம், ஹொபுத்சுஷூ (ஜப்பானிய இராமாயணம்), திபெத்திய உரை இராமாயணம், அரங்கநாத இராமாயணம், பாஸ்கர இராமாயணம், அசாமி இராமாயணம், கண்ணச இராமாயணம், அத்யாத்ம இராமாயணம், கிருத்திவாச இராமாயணம், மொல்ல இராமாயணம், ஆனந்த இராமாயணம், தொரவெ இராமாயணம், எழுத்தச்சன் அத்யாத்ம இராமாயணம், பாவார்த்த இராமாயணம், இராமசரித மானசம், ஜகன்மோகன் இராமாயணம், பாரசீக இராமாயணம், தக்கை இராமாயணம், ஹிகாயத் செரி இராம இராம வத்து (பர்மிய இராமாயணம்), மகாரடிய லாவனா (பிலிப்பைன்ஸ்;

இராமாயணம்), இராம கியேன் (இராம கீர்த்தி, தாய் இராமாயணம்) குவாய் துவாரபி, பிரா லக் பிரா லாம், பிரகாஷ் இராமாயணம்.

**தமிழக இராமாயண வாய்மொழிப்பாடல்**

அயோத்தி என்றொரு இராஜ்ஜியமாம்!
அதனை தசரதன் ஆண்டானாம்!
கோசலை கைகேயி சுமத்திரை
குணமுள்ள மூவரும் மனைவியராம்!
புண்ணியம் பலப்பல செய்தனராம்!
புதல்வர் நால்வரைப் பெற்றனராம்!
இராமரோடு இலஷ்மணரும் பரதன்
சத்ருகர் அவர் பெயராம்!
நால்வரும் ஒன்றாய் வாழ்ந்தனராம்!
நல்ல பெயரும் பூண்டனராம்!
விசுவா மித்திர மாமுனிவர்
வேள்வியைக் காக்கச் சென்றாராம்!
தாடகை என்ற இராட்சசியைத்
தரையில் கொன்று வீழ்த்தினராம்!
ஜனகன் வில்லை வளைத்தாராம்!
ஜானகி திருமணம் முடித்தாராம்!
கூனி கைகேயி சூழ்ச்சியினால்
காட்டுக்குப் போகத் துணிந்தாராம்!
காய்க்கனி அருந்திய காட்டினிலே
கண்டாள் இராட்சசி சூர்ப்பணகை
அன்பே அணைய வாவென்றாள்
கோபம் கொண்ட இலஷ்மணரும்
கூந்தல் மூக்கை அறுத்தாராம்!

இலங்கை மன்னன் இராவணனும்
தங்கையின் கோலத்தைக் கண்டானாம்!
மாயமானை ஏவிய பின்
வந்தான் சந்நியாசி ரூபத்துடன்
அம்மா பிச்சை போடென்று
அண்டி வந்தான் இராவணனும்
இட்டபிச்சை சீதைதனை
எடுத்துச் சென்றான் தேரின்மேல்

பாவி பாவி என்றகுரல்
பட்சி ஜடாயு தானுமறிந்து
இராவணனோடு போர் புரிந்து
இறக்கை முறிந்து வீழ்ந்தானாம்!
வாலி சுக்ரீவன் சண்டையிலே
வாலியை வீழ்த்திய இராமரவர்
அனுமார் என்ற வீரரினால்
அறிந்த சீதை மறைத்த இடம்
குரங்குகள் எல்லாம் கூடிக்கொண்டு
குண்டு மலையைக் கொண்டுவந்து
வரிசையாக வைத்திற்றாம்! வராவதியைக் கட்டிட்டாம்!
அணைமேல் இராமர் சென்றாராம்!
அசுரர் யாவரையும் கொன்றாராம்!
சீதையை மீட்ட இராமரவர்!
அயோத்தி போய்ச் சேர்ந்தாராம்.

என்று இராமாயணத்தின் கருத்துச் செறிவை சுருங்கக் கூறி விளங்க வைக்கிறது இப்பாடல்.

**காதல் மணம்**

"கய மூழ்கு மகளிர் கண்ணின் மானும்" -எனவும் - (குறுந்தொகை-9)

"செம்புலப் பெயனீர் போல
அன்புடை நெஞ்சம் தான்கலந்தனவே"- (குறுந்தொகை-40)

"யானாகியர் நின் நெஞ்சுநேர் பவளே" (குறுந்தொகை-49)

எனச் சுட்டப்பெற்ற சங்க இலக்கிய காட்சிகள் அகத்திணை மாண்புகளாக கம்பராமாயணத்திலும் காணப்படுகிறது.

சங்க இலக்கியங்களில் பதிவுசெய்யப்பெற்ற மனிதனின் வாழ்வுணர் வுகளில் கற்பென்பது பேரிடம் பெறுகிறது. காதலர்தம் மனஒற்றுமையே அகவாழ்வின் உயிர்ப்பண்பு என அகத்திணைக் கொள்கைகள் (ப.49) குறிப்பிடுகிறது. தலைவனுக்கும் தலைவிக்கும் இயற்கைச்சூழலில் கண்டதும்காதல் ஏற்படுவதே தமிழ் இலக்கியங்கள் இயற்கைப்புணர்ச்சி எனச்சுட்டுகின்றன. காதல்மணமே பழந்தமிழர்ப் பண்பு காதலற்ற திருமணம் தமிழரிடையே நடைபெற்றதில்லை பழங்காலத்தில் மணம்புரிந்து கொள்ளும் பொறுப்பை மணமக்களே மேற்கொண்டு இருந்தனர். ஆண்களும் பெண்களும்தாமே தன்விருப்பப்படிதாம் காதலித்தவர்களை மணம்புரிந்து கொண்டனர்.

இராமன் மிதிலையின் வீதியிலே வேடிக்கை பார்த்துக்கொண்டு வருகிறான். அவனுடன் இலக்குவன், விசுவாமித்திரன் ஆகிய இருவரும் வருகின்றனர். அப்போது சீதாபிராட்டி அழகே உருவெடுத்தாற்போல் உப்பரிகையின் மேல் நிற்கின்றாள்.

கீழே நடந்துசென்ற இராமன் தற்செயலாக மேலே நோக்கினான். மேலே நின்ற சீதா தேவியும் தற்செயலாக கீழே நோக்கினாள். இருவர் கண்களும் சந்தித்தன. இருவர் உள்ளமும் ஒன்றுபட்டன.

"என்னரு நலத்தினால் இனைய நின்றுழி
கண்ணோடு கண்இணை கவ்வி ஒன்றை ஒன்று
உண்ணவும் நிலைப் பெறாது உணர்வும் ஒன்றிட
அண்ணலும் நோக்கினான், அவளும் நோக்கினாள்"

சீதையின்கண்கள் இராமனுடைய தோள்களிலே பாய்ந்தன. இராமனுடையகண்கள் சீதையின் மார்பிலே பாய்ந்தன. இதன்பலன் இராமன் நெஞ்சத்திலே சீதை குடிபுகுந்தாள். சீதையின்உள்ளத்திலே இராமன்குடிபுகுந்தான். இவ்வளவும் சிலநொடிகளில் நடந்து விட்டன. இருவர் உணர்ச்சிகளும் ஒன்றுபட்டன. ஒருவர் உள்ளத்தை மற்றொருவர் உள்ளம் இழுத்தது. இராமன் உள்ளத்தில் சீதையும், சீதையின்சிந்தையிலே இராமனும் குடி புகுந்துநிலைத்து விட்டனர்.

**உவகை**

"செல்வம் புலனே புணர்வு விளையாட்டௌன
அல்லல் நீத்த உவகை நான்கே" (தொல்-பொருள்-மெய்ப்-11)

செல்வநுகர்ச்சியானும், கண்டுகேட்டு, உண்டுஉயிர்த்து, உற்றறியும் ஐம்புலன்களான் நுகர்தலானும், மகளிரொடு புணர்தலானும், சோலையும், ஆறும் புகுந்து விளையாடும் விளையாட்டினாலும் உவகைப் பிறக்கும் என விரிந்துரைக்கின்றார் இளம்பூரணர்.

"ஓதிமம் ஒதுங்கக் கண்ட
உத்தமன், உழையளாகும்
சீதை தன் நடையை நோக்கிச்
சிறியதோர் முறுவல் செய்வான்;
மாதவன் தானும் ஆண்டு
வந்து நீர் உண்டு மீளும்

போதகம் நடப்ப நோக்கிப்
புதியதோர் முறுவல் பூத்தாள்" (ஆரண்யா காண்டம்-190)

புன்னகையைப்பற்றி பலஇடங்களில் கம்பர் குறிப்பிட்டுள்ளார். அவை இன்று மேல்நாட்டு அறிவியல் கூறுகிற உடலசைவு மொழிகளை உள்ளடக்கியனவாக இருக்கின்றன. உடலசைவுமொழி நம் உண்மையான உள்ளக்கிடக்கையை வெளிப்படுத்தி விடுகிறது. ரேபேர்ட்விசல் என்பவர் மனிதமுகம் 2,50,000 முகபாவங்களை வெளிப்படுத்தும் ஆற்றல்பெற்றது என அறிந்தார்.

கோதாவரி ஆற்றின் அருகே அன்னம் நடந்து செல்லப் பார்த்த இராமன் அருகில் உள்ள சீதையினது நடையைப் பார்த்து ஒரு புன்சிரிப்பைச் செய்தான். அவ்விடத்தில் வந்து நீரைப்பருகி மீளுகிற ஆண்யானை விலகி நடக்க அதனைப் பார்த்த சீதையும் அருகில் உள்ள இராமனது நடையைப் பார்த்து ஒருபுன்சிரிப்பை தோன்றப் பெற்றாள். கண்களின் பரிமாற்றத்தின் மூலம் இதயத்தில் இருப்பவற்றை உணர்த்திவிட முடியம் என்ற அகமரபை கையாண்டார் கம்பர்.

**கைக்கிளை – ஒருதலைக்காமம்**

காமஞ்சாலா இளமை யோள் வயின்
ஏமஞ்சாலா இடும்பை யெய்தி (தொல் -பொருள்-53)

இராவணனின் காமம் ஒருதலைக் காமமாகிய கைக்கிளைத் திணையுடன் பொருந்துமாறு வடித்தார் கம்பன்.

"கரனையும் மறந்தான் தங்கை மூக்கினைக் கடிந்து நின்றான்
உரனையும் மறந்தான் உற்றபழியையும் மறந்தான் வெற்றி
அரனையும் கொண்ட காமன் அன்பினால் முன்னைப் பெற்ற
வரனையும் மறந்தான் கேட்ட மங்கையை மறந்திலாதான்"
(கம்பன் : 3149)

சீதையைத் தவிரவேறு எந்தசிந்தனையும் இல்லாமல் இருந்தான் இராவணன். தன் இதயச் சிறையில் இரந்த சீதையின் நினைவு இராவணனை வாட்டியது. எங்கெங்குநோக்கிலும் சீதையின்உருவமே தோன்றியது. சீதையின்உருவம் தன்எதிரே வந்து நிற்பது போல உணர்ந்தான். பெருங்காப்பிய இலக்கணங்களையம் அகத்திணை ஒழுகலாறுகளையம் ஒருங்கே தம் காப்பியத்தில் உயர்த்திப் பிழத்த கம்பரை, திருவள்ளுவரோடு நிகர்ப்படுத்தி தமிழுக்கு இவ்விருவரையும் "கதி" என உரைத்த செல்வகேசவராய முதலியார் கூற்று மிகையானது அன்று.

# கம்பன் காட்டிய அகமரபு

திருமிகு. மு.உமா
முனைவர் பட்ட ஆய்வாளர், தமிழ்த்துறை, திருவேங்கடவன் பல்கலைக்கழகம், திருப்பதி.

## முன்னுரை

தமிழ் இலக்கிய வரலாற்றில் மிகப்பெரும் காவியங்களுள் ஒன்று கம்பர் இயற்றிய கம்பராமாயணம் ஆகும். இக்காவியத்தில் சமூக அறக் கருத்துக்கள் பல சொல்லியிருப்பினும் வாழ்வியல் நெறிக்கூறுகளான காதல் என்பதை பற்றி கம்பன் தன் படைப்பான இராமாயணத்தில் வரும் இராமன், சீதை பாத்திரப் படைப்புகளின் வழி நின்று காதல், கற்பு, வெட்கம், நாணம், மேன்மை, உண்மை, உணர்வு ஆகிய நிலைகளை கம்பன் தெளிவுபடுத்தியதை இங்கு தொகுத்து வழங்குவதே "கம்பன் காட்டிய (காதல்) அகமரபு" என்னும் தலைப்பிலமைந்த இவ்வாய்வுக் கட்டுரையாகும்.

## கம்பன் காட்டிய அகமரபு

இராமனும் சீதையும் இலட்சியக் காதலரே என்பதை ஆரணிய காண்டத்தில் சூர்ப்பணகைப் படலத்திலே வருகின்ற பாடல்களில் அறியமுடிகின்றது. இயற்கையில் காணும் காட்சிகள் இராமனின் அங்கங்களையே நினைவுக்குக் கொணர்ந்தன. இக்காட்சிகள் இயல்பிலே அவரவர் அங்கங்களை நினைத்திருக்கலாம். ஆனால் இவ்விருவரும் தம்மைக் குறித்துச் சிறிதும் நினைக்காமல் மற்றவர் குறித்தே நினைத்து எண்ணிவிடுவதால்தான் அவர்கள் இலட்சியக் காதலர்களாக கம்பர் காட்டுவதைத் தெளியமுடிகின்றது.

அதாவது, அன்னப்பறவை தன் இயல்பின்படியே மானிடரைக் கண்டவுடன் ஒதுக்கி நடந்தது. அந்த அன்னப்பறவையைக் கண்டதும் இராமபிரானுக்குச் சீதையின் நடை நினைவுக்கு வர உடனே அவள் நடையை இராமபிரான் உற்றுப்பார்த்து அது அன்ன நடையினுங் சிறந்திருந்ததைப் பார்த்து இப்படிப்பட்ட நடையழகில் தான் ஒப்பாக மாட்டாமையை நினைத்தே அன்னம் இவள் முன் நிற்காமல் நாணி விலகிச் சென்றது எனக் கருதி, இவ்வன்ன நடையின் எளிமை பற்றி இகழ்ந்து சீதை நடையின் சிறப்பு பற்றிய மகிழ்ச்சியினாலும் அவளின் மீது கொண்ட அன்பினால் விளைந்த காதலாலும், தன் உள்ளக்கிடக்கையில் சிரித்து விட்டதை கம்பன் மிகவும் பெண்மையின்

நாணத்தை வெளிக்கொணர்வதாக அமைத்துப் பாடியிருப்பதை அறியமுடிகின்றது.

அதேபோல, நீர்பருகிய யானை இயல்பாக நடந்துச் செல்லும் நடையைக் கண்டு, அதனால் இராமனது நடை சீதைக்கு நினைவு வரப்பெற்று உடனே அவன் நடையை உற்று நினைத்து அது யானை நடையினுந் சிறந்திருத்தலை உணர்ந்து, இப்படிப்பட்ட நடையழகில் தான் ஒப்பாக மாட்டாமையை நினைத்து யானை இவன் முன் நிற்கலாற்றது நாணி அப்பாற் செல்கின்றது எனக் கருதி அவ்யானை நடையின் எளிமைபற்றி இகழ்ந்து இராமனது நடையின் சிறப்புப் பற்றிய மகிழ்ச்சியினாலும்; தான் இராமனின் மேல் கொண்ட காதலால் தன்னகத்தே வயப்பட்டுச் சிரித்ததை,

"ஓதமம் ஒதுங்கக் கண்ட உத்தமன் உழையள் ஆகும்
சீதை தன் நடையை நோக்கிச் சிறியதோர் முறுவல் செய்தான்
மாது அவள் தானும் ஆண்டு வந்து, நீர் உண்டு மீளும்
போதகம் நடப்பதை நோக்கிப் புதியதோர் முறுவல் பூத்தாள்"

(ஆரண்ய, பா-228)

எனவரும் கம்பரின் காதல்வரிகள், இராமனைப் பற்றி முறுவல் செய்தான் என்று கூறிய கவி, சீதையைப் பற்றி முறுவல் பூத்தாள் என்று சொற்களை அமைத்து பாடிய காதல் அகமரபு இங்கு அறியத் தக்கதாகும். பெண்களின் முறுவல் வெளித்தோன்றாமல், மனதிற்குள் தேங்கி நிற்கும் என்ற பெண்களின் அகமரபுப் பண்புகளான வெட்கம், நாணம் போன்ற உயரிய பெண்ணடக்க குணநலப்பண்புகளை இங்கு கம்பர் வெளிப்படுத்துவதை அறியமுடிகின்றது.

மேலும், சீதையானவள் இராமன் ஒருவனையே மனம் முழுவதும் ஆட்கொண்டு, அவன் நினைவாகவே காதலில் இருக்கும் தருணத்தில், இராவணன் தன் மீது கொண்ட பொருந்தாக் காமத்தால், தான் வாளால் வெட்டுண்டு மாள்பவள் போல் மனங் கலங்கி "இறையோனே இளையோனே" என்று சீதையானவள் கூறி புலம்பிக் கதறி அழுததை,

"இறைவா விளையோ யெனவேங் கினளால்
பொறைதா னுருவா னதொர்பொற் புடையாள்" (மேலது.-23)

எனவரும் கம்பரின் காதல் வரிகள் விளக்கப்படுவதை இங்கு அறிய முடிகின்றது. மேலும், மானைத் தேடித் சென்ற இராமன் ஓடிய மானைப் பிடிக்காமல் திரும்பி விரைவாக வந்து பர்ணசாலையைப் பார்த்தபோது

அங்கு சீதை இல்லை. சீதையைக் காணாமல் பதறினான் இராமன் ஓர் உடலை விட்டு வெளியே போயிருந்த உயிர் மீண்டு வந்து தன்னுடலைக் காணாமல் திகைப்பது போலத் திகைத்தான் என்பதை,

"கூடு தன்னுடையது பிரிந்து ஆர் உயிர் குறியா
நேடி வந்து அது கண்டிலது ஆம் என நின்றான்" (மேலது-43)

எனவரும் கம்பரின் கவித்தொடரில், இராமன் உயிராகவும், சீதையை உடலாகவும் குறிப்பிடுகின்றார். உயிர், உடம்பை இன்றி அமையாதது போல, இராமன் சீதையை இன்றி இருக்கமாட்டான் என்று இங்கு கம்பர், இராமனையும், சீதையையும் உடலாகவும், உயிராகவும் உவமித்து, காதல் என்பது உயிரும் உடலும் சேர்ந்த ஒரு ஜீவனாக ஓர்உயிர்க் கூடாக அதன் மேன்மையை, உணர்வுகளையும், உண்மைகளையும் வலியுறுத்திச் சொல்லும் கம்பரின் திறத்தை இங்கு அறியமுடிகின்றது.

மேலும், கம்பரின் அறவொழுக்கம் சமூகத்திற்கும், பெண்மைக்கும் தேவையான அகமரபுகளாகிய காதல், கற்பின் வெளிப்பாட்டை குறிப்பிடுகின்ற பொழுது இராவணன் சீதையை நோக்கி, "அன்னப் பறவை போன்ற நங்கையே! நீ நடுங்காதே! இதற்கு முன் யாரையும் வணங்காத நான் உன்னை வணங்கிக் கேட்டுக் கொள்கிறேன். நீ எனக்கு இணங்கினால், என் பத்துத் தலைகளிலும் உன்னைத் தாங்கி மகிழ்விப்பேன், தேவமகளிர்கள் அனைவரும் உனக்குப் பணிவிடை செய்வார்கள். பதினான்கு உலகிலும் உள்ள செல்வச் சிறப்பில் நீ திளைக்கலாம்" என்றான். அதைக் கேட்ட சீதை, "தன் தளிர் போன்ற காதுகளை கைகளால் வலிய அழுத்திக் கொண்டு, இராமனுக்குரிய கற்பின் செல்வி நான்! வேள்வித் தீயில் கடவுளுக்காக இடும் அவிர் உணவை, ஒரு நாய் விரும்பியதைப் போல, நீ என்னை விரும்பி இத்தகைய இழி மொழிகளைக் கூறிவிட்டாய். என் இராமனின் அன்பு உன் உயிரைக் குடிப்பதற்குள் இங்கிருந்து ஓடிப் போ!" (முனைவர் சாந்தி, இலக்கியச்சுவை, பக்.139) என்று சீதை சினம் கொண்டு கூறும் கூற்றானது, பெண்மைக்கு இயைந்த செயல் அல்ல என்றும், கற்பின் அறநிலையையும் என் காதல் இராமனிடம் கொண்ட வலிமையால் உன் உயிர் அறுந்துபோகும் என்ற காதலின் வலிமையை இங்கு கம்பர் குறிப்பிடுவதை அறியமுடிகின்றது.

# கம்பனின் அக மரபுகள்

திருமிகு. சௌ.சீனிவாசன்
முனைவர் பட்ட ஆய்வாளர், இலக்கியத் துறை, தமிழ்ப் பல்கலைக்கழகம்,
தஞ்சாவூர்.

இராமாயணக் காப்பியம் எங்ஙனும் கம்பரின் அகத்திணைப் புலமை வெள்ளம் பலவாராகப் பாய்ந்தோடி வருகிறது. அகத்திணை நெறிகளையும், அகவிலக்கியப் பாடல்களையும் பிற பொருள்களுக்கு உவமை கூறுமுகமாக அவற்றின் சிறப்பியல்புகளைச் சொல்லி விளக்குவது, காப்பியத் தொடக்கத்திலேயே ஐந்திணை முதல் கருப்பொருள்களைப் புனைவது, அகவிலக்கணக் கொள்கைகளைத் தக்க இடங்களில் தந்து மொழிவது, நேருமிடங்களிலெல்லாம் அகச்செய்திகளை அழகுற இணைத்துப் பேசுவது, அவல நிலையிலும் புனைந்துரை போற்றலிலும் அகத்திணையை இடைப்புகுத்தி அமைப்பது, உயர்திணை மக்களிடமேயன்றி அஃறிணைப் பறவைகள், விலங்குகள் ஆகிய உயிர்களிடத்தும் அக ஒழுக்கங்களைப் புனைவது, உள்ளுரை உவமத்திலும் ஏனைய உமங்களிலும் அகச் செய்திகளை அழகுற அமைப்பது, கடற்கரையாகிய ஓரிடத்திலேயே ஐந்திணை ஒழுக்கங்களைப் பாடுவது போன்ற வகைகளால் கம்பர் தம் அகத்திணைப் புலமையை ஆங்காங்கு வெளிப்படுத்துகிறார்.

அகத்திணையை இரு பிரிவாகப் பிரிக்கலாம் அவை

- தனிநிலை அகத்திணை
- தொடர்நிலை அகத்திணை

இங்கு தனிநிலை அகத்திணைகளைக் கம்பனில் காண்போம்.

**கம்பராமாயணத்தில் தனிநிலை அகத்திணை**

கம்பராமாயணத்தில் காப்பியக் கதைக்கு தொடர்பின்றித் தனித்த நிலையில் நிகழ்கின்ற காதற்செய்திகளே இங்கு தனிநிலை அகத்திணையெனக் குறிக்கப்படுகிறது.

பாலகாண்டத்தில் இராமன் சீதை இருவரின் திருமணத்திற்காக அயோத்தியிலிருந்து மிதிலைக்குப் புறப்பட்ட தசரதன் சுற்றம் வழிச் செலவு போனது, சந்திரசயில மலையில் தங்கி மலைவளம் கண்டது, சோணையாற்றங்கரைச் சோலையில் பூக்கொய்து நீர்விளையாடி உண்டாடியது ஆகிய நிகழ்ச்சிகளின் இடையிலான

பகுதிகளும்,ஆரணிய காண்டத்தில் சீதையையெண்ணி காதலில் கலங்கிய இராவணனின் ஆணையினால் இரவிடைப் பகல் தோன்றிய அளவில் படுக்கையிலிருந்த இலங்கை நகரத்து அரக்க அரக்கியரின் காதல் நிலைகளும், கிட்கிந்தா காண்டத்துக் கார்காலப் படலத்தில் கம்பரால் புனையப்பெறும் சில காதற் புனைவுகளும் சுந்தர காண்டத்தில் இலங்கை நகரில் வீடுவீடாகச் சீதையைத் தேடித்திரிந்த அனுமன் அங்கு இன்னின்னாரை இன்னின்ன நிலைகளில் கண்டானென்று கூறும்போது அவன் காட்சியில் அமைத்துப் பாடப்பெறும் அரக்க அரக்கியரின் காதல் செய்திகளும், யுத்த காண்டத்தில் தென்கடற்கரையில் தங்கி-யிருந்த இராமன் இலங்கைகுச் செல்லும் எண்ணத்தோடும் சீதையின் நினைவோடும் அங்கே விடியற்காலத்தில் உலவிக்கண்ட பிறர்தம் காதற் காட்சிகளும் இன்னும் காப்பியப் போக்கில் இடையிடையே மனிதப் பண்போடு பறவைகளிடத்தும், விலங்குகளிடத்தும் நிகழும் காதல் நிகழ்ச்சிகளும் தனிநிலை அகத்திணையாகக் கொள்ளப்படும்.

இவையெல்லாம் சுட்டியொருவர் பெயர்கொளப்பெறாத தூய அகத்திணைப் பகுதிகள். இப்பகுதிகள் காப்பியத்தில் தமிழ் மரபாம். அகத்திணைக் காதலைப் பாடவேண்டுமென்ற எண்ணத்தில் வால்மீகியின் முதனூலுக்கு அப்பாற்பட்டு கம்பரால் புதியனவாகப் புகுத்தி அமைக்கப்பெற்றவை.

**கைக்கிளை**

அகத்திணையில் வகுக்கும் தொல்காப்பியர் கைக்கிளை முதல் பெருந்திணை முடிய அவை எழுதிணை எனத் தொகுத்துச் சுட்டுகிறார்.

**கம்பராமாயணத்தில் கைக்கிளைக் காதல்**

இருவகைக் கைக்கிளையுள் கம்பராமாயணத்தில் தனிநிலையில் ஆட்சிப்படுவது தொல்காப்பியரால் குறிக்கப்பெற்ற காமஞ்சாலா இளமையோள்வயின் கைக்கிளையே. அது நான்கு பாடல்களில் (848-851) அமைகிறது.

**மலராக் காதல்**

யானைமேல் போகும் இளைஞன் ஒருவன் தான்போகும் வழி-யிலேயே போய்க் கொண்டிருக்கும் இளம் பெண் ஒருத்தியைக் காதலுடன் ஏறிட்டு நோக்குகின்றான். அவன் நோக்கிற்கு எதிர் நோக்கிய அவள் விழிகளில் நல்ல கூர்மையிருந்தது. எனினும் குறிப்பில்லை அதனால் அவன் தன் காதல் உள்ளத்தை மறைத்துக்

கொண்டு, வேல் முனையுடன் அவள் விழிமுனைகளை ஒப்பிட்டுப் பார்ப்பதுபோல் போக்குக் காட்டி அந்த வேலினும் அவள் விழிகள் கூர்மையுடையன எனக் கூறித் தன் வேலைப்பார்க்கிறான்.

"சுழியும் குஞ்சி மிசைச் சுரும்பு ஆர்த்திடப்
பொழியும் மாமத யானையில் போகின்றான்
களிய கூரிய என்றொரு காரிகை
விழியை நோக்கித் தன் வேலையும் நோக்கினான்"- (கம்ப - 849)

கண்ணைப் பார்த்து அவளைக் காதலிக்க முனைந்த இளைஞன் அக்கண்ணில் காமக் குறிப்பில்லை என்று அறிந்தவுடன் அவற்றை உணர்வில்லா தன் வேல்முனையுடன் ஒப்பிட்டுத் தன் காதலுக்குத் தடை காண்கின்றான்.

**குறிஞ்சி [இரவுக்குறி இடையீடு] நிலவு வெளிப்பாடு**

நங்கையொருத்தி புணர்ச்சி வேட்கையில் தலைவனிடத்து போக எழுகிறாள். ஓசைபடாமல் ஒருவருக்கும் தெரியாமல் போக வேண்டும் என்று கருதி கிண்கிணி, மேகலை முதலான அணிகலன்களை கழற்றி எறிந்துவிட்டுப் புறப்பட்டவள் பட்டப்பகலைப் போல் நிலவை வீசித் தன் செயலை வெட்ட வெளிச்சமாக்கும் திங்களைத் தீய்த்து விடுபவளைப் போல் சினந்து நோக்குகின்றாள்.

"பயிருறு கிண்கிணி பரந்த மேகலை
வயிரவான் பூணவை வாங்கி நீக்கினாள்
உயிருறு தலைவன்பால் போக உன்னினாள்
செயிருறு திங்களைத் தீய நோக்கினாள் - (கம்ப-1086)

**பாலை [ஏக்கத்திற்கிடையில் ஓர் இனிமை]**

தலைவனைப் பிரிந்த ஆசைக்கடலுள் மூழ்கியிருக்கும் நிலையில் தலைவியொருத்தி அவன் பெயர்களையெல்லாம் விடாமல் சொல்லும் கிளிப்பிள்ளையை உவந்து தழுவுகிறாள்.

"விரைசெய்பூஞ் சேக்கையின் அடுத்த மீமிசைக்
கரைசெயா அசையங்கடலுளாள் ஒரு
பிரைசமென் குதலையாள் கொழுநன் பேரெலாம்
உரைசெயும் கிள்ளையை உவந்து புல்லினாள்" (கம்ப-1073)

தலைவனைக் கூடப்பெறாத ஏக்கத்திற்கிடையில் பெயரைக் கேட்கும் இனிமையைச் செய்ததால் அந்த கிளியை அவள் உவகையோடு தழுவிக் கொள்கிறாள். தன் உள்ளக் குறிப்பறிந்து அவன் பெயரை உரைப்பதனாலும் அவள் கிளியிடத்து உவகையுற்றாள்.

"நகைஇயார் நல்கார் எனினும் அவர்மாட்டு
இசையும் இனிய செவிக்கு (திருக்-1199)

என்ற குறட்பாவில் தலைவனின் பேரும் புகழும் தலைவியின் செவிக்கு இனிமை செய்யக் காணலாம்.

**முல்லை [பொருள்வயிற் பிரிவு]**

பொருள்வயிற் பிரியும் தலைவரும் கார்காலத் தொடக்கத்திலயே மீண்டு வருவதாய்த் தலைவியிடம் சொல்லிப் பிரிவது மரபு. அந்நிலையில் அத்தலைவரையே உயிராகக் கொண்ட தலைவியர் அவர்களின் பிரிவினால் உயிரைப் பிரிந்த உடல்போல் செயலற்றுச் சோரவும் அவர்களுடைய பொய்யுடலைப் பிரிவுத் துயராகியப் பாம்பு பற்றிக் கொள்ளும். கார்காலத் தொடக்கத்தில் பெய்யுமழை அத்தலைவியரின் உயிராகிய தலைவரை தேரிலே கொண்டு வந்து உய்த்து, உடலுக்கு உயிரூட்டுவதுடன் அவ்வுடலைப் பற்றியிருந்த பாம்பையும் கொன்றொழிப்பதனால் அது கருடனை பொருவுகின்றதாம்.

"பொருடரப் போயினர்ப் பிரிந்த பொய்யுடற்கு
உருடரு தேர்மிசை யுயிர்கொண்டு உய்த்தலாள்
மருடரு பிரிவினோய் மாசு ணங்கெடக்
கருடனைப் பொருவின கால மாரியே" (கம்ப-4274)

**நெய்தல் [இரங்கல்]**

பிரிந்துபோன கணவர் மீண்டு வருவதற்குரிய காலத்தில் ஆற்றாமை நிறைந்த மனைவியர் அடிக்கடி வாயிலிற் சென்று அக்கணவரின் வரவுக்காக ஏங்கி நின்று எதிர்பார்ப்பதும் அந்த எதிர்பார்ப்புக்கு மாறாகக் கணவர் திரும்பிவராத நிலையில் ஏமாற்றமடைந்து இல்லத்திற்குச் செல்லும் மனைவியரை அங்கும் இருக்கவொட்டாமல் ஆசை கிளர்ந்து அலைக்களிக்க அவர்கள் மீண்டும் வாயிலில் சென்று வழிமேல் விழிவைப்பதும் இயல்பு. இவ்வாறு உள்ளுக்கும் வெழிக்குமாய் ஊசலாடும் தலைவி ஒருத்தியின் நிலையைப் பின்வரும் பாடலில் காணலாம்.

"மறப்பிலள் கொழுநனை வரவு நோக்குவாள்
பிறப்பினொடு இறப்பெனப் பெயரும் சிந்தையாள்
துறப்பரு முகிலிடைத் தோன்றும் துன்னெனப்
புறப்படும் புகுமொரு பூத்தகொம்பனள்" (கம்ப-1098)

**மருதம் [ஊடல்]**

தலைவியின் ஊடல் தீர்த்துக் கூடல் கருதிய தலைவன் ஆராக் காதலுடன் அவள் பூவிழிகளில் தாழ்ந்து பணிகிறான். அவனது புத்தொழுக்கத்தில் காழ்ப்புக்கொண்டிருந்த அவள் பணிந்து வீழ்ந்தவனைச் செம்பஞ்சுக் குழம்பூட்டிய தன் காலடியால் பதைத்து உதைக்கிறாள் உதைபட்ட வேகத்தில் தன் உடல் எங்கும் புளகம் பொங்க மயிர்க் கூச்செறிகிறான் அவன்.

"விதைத்தமென் காதலின் வித்து மெய்ந்நிறை
இதைப்புனல் நனைத்திட முளைத்த வேயெனப்
பதைத்தனள் ஒருத்தன் மேல் ஒருத்தி பஞ்சடி
உதைத்தலும் பொடித்தன உரோம ராசியே"
தெரித்தவுரை யாமோ தெளி" (கம்ப-1084)

**பெருந்திணை**

கம்பராமாயணத்தில் தனிநிலை பெருந்திணை ஆட்சிப்பட்டு அமையும் பாடல்கள் மூன்றே (998, 1072, 1089) இம் மூன்று பாடல்களில் ஒன்று (998) உணர்ப்புவயின் வாரா ஊடலின் முதிர்ந்த விளைவு மற்றை இரண்டும் (1072, 1089) களிப்பினால் நேர்ந்த காமக் காழ்ப்பு நிலை இவை மூன்றிலும் தலைவியர் தாமே தலைவரை நாடிப் போகின்றனர்.

**முடிவுரை**

அகத்தையே பாடுபொருளாகக் கொண்டு பாடப்பட்ட சங்க அகப்பாடல்கள், அகப்பொருளைச் சிறப்பாகத் தனிநிலையிலேயே பாடி ஓரளவு தொடர்நிலைக்கு கால்கோள் செய்தன. அவற்றிற்குப் பிந்தைய காப்பியங்களோ தனிநிலை தொடர்நிலை இரண்டிலுமே சிறப்பாக அகத்திணையாட்சிகளை நடத்துகின்றன.

காப்பியப் புலவர் கம்பரின் அகத்திணைப்புலமை வெள்ளம் அகலமும் ஆழமும் கொண்ட ஆறாப் பல வழிகளிலும் கிளைத்துப் பாய்ந்தோடி வருகிறது. அகத்திணை விளக்கங்கள், உவமைகள், அகப்பொருள் அமைதிகள், அகவிலக்கண ஆட்சிகள், அகவிலக்கியச் செய்திகள், அகப் புனைவுகள் ஆகிய முறைகளில் காப்பிய முழுமையும் கம்பரின் அகத்திணைப் புலமையைக் காணலாம்.

# கம்பராமாயணத்தில் அகப்பொருட்கூறுகள்

திருமிகு. சு.கலைவாணன்,
முனைவர் பட்ட ஆய்வாளர், தமிழ்ப் பல்கலைக்கழகம்,
தஞ்சாவூர்.

## முன்னுரை

அகத்தையே பாடுபொருளாகக் கொண்டு பாடப்பட்ட சங்க அகப்பாடல்கள், அப்பொருளைச் சிறப்பாகத் தனிநிலையிலேயே பாடி, ஓரளவு தொடர்நிலைக்குக் கால்கோள் செய்தன. அவற்றிற்குப் பிந்தைய காப்பியங்களோ தனிநிலை தொடர்நிலை இரண்டிலுமே சிறப்பாக அகத்திணையாட்சிகளை நடத்துகின்றன. காப்பியப் புலவர் கம்பரின் அகத்திணைப் புலமை வெள்ளம் அகலமும் ஆழமும் கொண்ட ஆறாகப் பலவழிகளிலும் கிளைத்துப் பாய்ந்தோடி வருகிறது. அகத்திணை விளக்கங்கள், அகப்பொருள் அமைதிகள், அகவிலக்கண ஆட்சிகள், அக இலக்கியச் செய்திகள் அகப்புனைவுகள் ஆகிய முறைகளில் காப்பிய முழுமையும் கம்பரின் அகத்திணைப் புலமையைக் காணலாம்.

## அகத்திணையியல்

"கைக்கிளை முதலா பெருந்திணை இறுவாய்
முற்படக் கிளந்த எழுதிணை என்ப" (தொல். அகத்- 1)

என்பது அகத்திணையியலின் முதல் நூற்பா. கைக்கிளை, குறிஞ்சி, முல்லை, மருதம், நெய்தல், பாலை, பெருந்திணை என்ற முறையில் எழுதிணைகளைக் குறிப்பிடும் தொல்காப்பிய நூற்பாவில் குறிப்பிட்டிருப்பதுபோல கைக்கிளையை முதலில் விளக்காமல், அன்பின் ஐந்திணையை விளக்குகின்றார்.

## ஐந்திணை

ஐந்திணைப் பாடல்களிலும் ஆன்ற பயிற்சியுடையவர் கம்பர் என்பது, கோதாவரியாற்றையும் பம்பைப் பொய்கையையும் புனைந்து பாடி வர்ணிக்கையில் அவற்றிற்கு உவமையாக்கி அப்பாடல்களையும் அழகுற விளக்குவதினின்று வெளிப்படுகின்றது.

"புவியினுக் கணியாய், ஆன்றபொருள் தந்து, புலத்திற்றாகி,
அறியகத் துறைகள் தாங்கி, ஐந்தினை நெறிய ளாவி,
சவியுறத் தெளிந்து, தண்ணென் றொழுக்கமுந் தழுவி சான்றோர்
கவியெனக் கிடந்த கோதா வரியினை வீரர் கண்டார்" (28 29)

என்பதை முதலிற் காணலாம். கவியின் போக்கிற்கு ஆற்றின் ஒழுக்கினை உவமை கூறல் வழக்கம். ஆனால், இங்கு ஆற்றின் போக்கிற்குக் கவியின் ஓட்டத்தை ஒப்புக்காட்டுகிறார் கம்பர். இதுவே அக்கவிகளில் அவருக்கிருந்த பயிற்சியினையும் பற்றினையும் பகரவல்லதாம். இங்கும் புறப்பொருளையும் உள்ளீட்டுப்பொதுப்படக் கவியென்றிலர். அகப்பொருட்கவிகளையே பிரித்தெடுத்து விதந்துரைப்பர்.

ஐந்திணை அகப்பாக்கள் ஆன்ற பொருள் வளந்தருபவை, ஆய்தோறும் அறிஞர்க்கு அரும்பெரும் விருந்தளிப்பவை என்பதனைக் கம்பர், பம்பைப் பொய்கையைப் பாடும்போதும் நினைவுறுத்துவார். சங்கச் சான்றோர்தம் அகத்துறைப்பாக்களில் அமைந்து கிடக்கும் சொற்களுக்குள் நோக்குகின்ற அறிவுக்கேற்ப உள்ளுறை முதலாம் நுண்பொருள்கள் பொதிந்து கிடப்பவைபோல், பம்பைப் பொய்கையின் தெளிந்த நீருக்கடியில் பொன்னும், மணியும், முத்தும் சங்கும் கிடக்கின்றனவாம்.

"எற்படர் நாகர்தம் இருக்கை ஈதெனக்
கிற்பதோர் காட்சியது எனினும் கீழுறக்
கற்பகம் அனையவக் கவிஞர் நாட்டிய
சொற்பொரு ளாமெனத் தோன்றல் சான்றது" (3815)

முன்பாடலில், 'ஆன்ற பொருள் தந்து' என்றதும் இப்பாடலில் 'கற்பகம் அனைய அக்கவிஞர் நாட்டிய சொற்பொருள்' என்றதும் நோக்கத்தகும். இவற்றால் ஐந்திணை நெறிப்பட்ட அகத்துறைப்பாக்கள் பயில்தோறும் நயமிக்க பொருட்பயன் விளைக்கும் நுட்பத்தை உணர்த்துகிறார் கம்பர். அகத்துறைகளைத் தாங்கி நடக்கும் சான்றோர் கவிகளையெல்லாம் திறம்பட ஆய்ந்து, அவற்றின் இயல்புகளைத் தெளிவுறக் கண்டு, அகத்திணையில் தோய்ந்த புலமை பெற்றிருந்தமையினாலேயே இத்தகைய நுட்பங்களை அவரால் எளிதில் உணர்த்த முடிகிறது.

### முதல் கரு அமைதி

ஐந்திணைகளை முதல், கரு, உரிப்பொருள் என விரித்துரைக் கின்றார். தொல்காப்பியர் கூறும் இவ்விதி முறைகளைக் கம்பர் தன் காப்பியத்தில் பின்பற்றியுள்ளார்.

பால காண்டத்தில் மருதம், பாலை ஆகிய நிலங்களின் தன்மைகளை எடுத்துக் கூறும் கம்பர் நாட்டுப் படலத்தில் நால்வகை நிலங்கள் தம்முள் மயங்கிக் கிடப்பதைக் கூறுகின்றார்.

"கொன்றை வேய் குழல் கோவலர் முன்றிலில்
கன்று உறங்கும் குரவை கடைசியர்
புன்தலைப் புனம் காப்புடைப் போதரில்
சென்று இசைக்கும் நுளைச்சியர் செல்வழி"

என்ற பாடலில் மருதம், முல்லை, நெய்தல், குறிஞ்சி ஆகிய திணைகளின் கருப்பொருள்கள் ஒன்றுடன் ஒன்று மயங்கி வந்துள்ளமையை அறிய முடிகின்றது. இவ்வாறு கம்பர் படைத்துக் காட்டும் திணை மயக்கம்,

"திணைமயக் குறுதலும் கடிநிலை யிலவே
நிலனொருங்கு மயங்குதல் இல்லென மொழிப
புலன்நன் குணர்ந்த புலமை யோரே" (தொல். அகத்-14)

என்ற தொல்காப்பியரின் கருத்துக்கேற்ப அமைந்துள்ளது.

**கைக்கிளை**

கைக்கிளை என்பது ஒருதலைக்காமம். கம்பர் 'கைக்கிளைப் படலம்' என்ற தனிப்படலத்தையே அமைத்துக் காட்டுகின்றார். இராமன், சீதை ஆகியோரின் காதல் ஒத்த காமமாக இருந்தாலும் இப்பெயரில் கம்பர் தனிப்படலம் அமைத்தற்குக் காரணம் உண்டு.

மாடத்தில் நின்ற சீதையை இராமன் காண்கின்றான். வீதியில் நடந்துவரும் இராமனைச் சீதை நோக்குகிறாள். இருவரும் நோக்கித் தம்முள் மாறிப்புக்கு இதயம் எய்துகின்றனர். இத்துடன் கம்பர் இப்படலத்தை முடித்துவிடவில்லை. மாறாக இருவருமே கண்ட காட்சியை நினைத்துக் காதல் வேட்கையால் புலம்புவதைக் காட்டுகின்றார். சீதை தனக்கு இராமன் கணவனாக அமைவானா என்ற ஏக்கத்திலும், இராமன் தனக்குச் சீதை மனைவியாக அமைய மாட்டாளா என்ற ஆசையாலும் பலவாறு புலம்புவதைக் கம்பர் காட்டுகிறார். ஒருவர் மற்றொருவரை விரும்பும் செய்தி இன்னும் உறுதி செய்யப்படாத நிலையில் இது போன்ற நிகழ்ச்சியினைக் கம்பர் அமைத்துக் காட்டுவது தொல்காப்பியர் கைக்கிளைக்குக் கூறும்,

"காமஞ் சாலா இளமை யோள்வயின்
ஏமஞ் சாலா இடும்பை எய்தி
நன்மையுந் தீமையும் என்றிரு திறத்தான்
தன்னொடும் அவளொடுந் தருக்கிய புணர்த்துச்
சொல்லெதிர் பெறாஅன் சொல்லி யின்புறல்
புல்லித் தோன்றும் கைக்கிளைக் குறிப்பே" (தொல்.அகத்-52)

என்ற விளக்கத்திற்கு ஏற்ப அமைந்துள்ளதோடு கைக்கிளைப் படலம் என்ற பெயரும் பொருத்தமுடன் அமைந்துள்ளது.

**பெருந்திணை**

பெருந்திணை என்பது பொருந்தாக் காமம் பெருந்திணையை விளக்கும் தொல்காப்பியர்,

"ஏறிய மடற்றிறம் இளமை தீர்திறம்
தேறுதல் ஒழிந்த காமத்து மிகுதிறம்
மிக்க காமத்து மிடலொடு தொகைஇச்
செப்பிய நான்கும் பெருந்திணைக் குறிப்பே" (தொல்.அகத்-53)

என்ற நூற்பாலில் பெருந்திணைக்குரிய நான்கு குறிப்புகளைக் குறிப்பிடுகிறார். இந்நான்கு குறிப்புகளில் கம்பர், 'தேறுதல் ஒழிந்த காமத்து மிகுதிறம்' மிக்க காமத்து மிடல் என்ற இரண்டு குறிப்புகளுக்கு ஏற்பக் கதை மாந்தர்களைப் படைத்துக் காட்டுகிறார்.

தேறுதல் ஒழிந்த காமத்து மிகுதிறம் என்பது தெளிவு ஒழிந்த காமத்தின் கண் வருவது. இது பெரும்பாலும் பெண்களுக்கே உரித்தாகிவரும். இவ்வகையில் சூர்ப்பணகையைச் சான்றாகச் சுட்டலாம். மிக்க காமத்து மிடல் என்பதற்குக் காவியத்தின் எதிர்நிலைத் தலைவனைச் சான்றாகச் சுட்டலாம்.

**களவியல்**

வான்மீகி இராமாயணத்தில் இராமன் வில்லொடித்த பின்னரே, சீதையைக் காணுகின்றான். கம்பர் தொல்காப்பிய மரபினை பின்பற்றிக் களவினை அமைத்துள்ளார். காந்தருவம் என்பது ஒத்த இருவர்தாமே கூடும் கூட்டம் ஆகும். இதனை தொல்காப்பியர்,

"ஒன்றே வேறே என்று இரு பால்வயின்
ஒன்றி உயர்ந்த பாலது ஆணையின்
ஒத்த கிழவனும் கிழத்தியும் காண்ப
மிக்கோன் ஆயினும் கடிவரை இன்றே" (தொல். களவு-92)

எனக் குறிப்பிடுகிறார். இதனை கம்பர், தொல்காப்பியரின் கருத்திற்கேற்ப அமைத்துக் காட்டுகிறார்.

களவுக்கு அடிப்படையாக தொல்காப்பியர் கூறும் காட்சி, ஐயம், தெளிவு என்பதையும் காப்பியத்தில் ஏற்புறப் படைத்துக் காட்டியுள்ளார். மிதிலைக் காட்சிப்படலத்தில் இராமனும் சீதையும் ஒருவரை ஒருவர் கண்டு காதல் கொள்கின்றனர். இதனை,

'அண்ணலும் நோக்கினான் அவளும் நோக்கினாள்' என்றும் ' இருவரும் மரிப்புக்கு இதயம் எய்தினர்' என்னும் வரிகள் மூலம் உணர்த்துகின்றார்.

**களவுக்குரிய இலக்கணம்**

தொல்காப்பியர் களவுக்குரிய அவத்தைகளாக ஒன்பது (தொல். களவு-100) அவத்தைகளைக் குறிப்பிடுகின்றார். அந்த அவத்தைகள் அனைத்தையும் கம்பர் எடுத்தாளவில்லை என்றாலும் ஒரு சில அவத்தைகளைப் பயன்படுத்தியுள்ளார்.

சீதை இராமனைக் கண்டு அளவற்ற காதல் கொண்டு இராமனையே நினைத்துப் பல நிலைகளில் வருந்துகிறாள்.

"கால் உறு கண் வழிப புகுந்து காதல் நோய்
பால் உறு விரை என பரந்தது எங்குமே"

என்று கம்பர் சீதைக்கு ஏற்பட்ட காதல் நோயைக் குறிப்பிடுகின்றார். இராமனை அடைய வேண்டும் என்ற வேட்கையால் இடைவிடாது அவனை நினைத்து வருந்துவதைச் சிறப்பாகப் படைத்துக் காட்டும் கம்பர் தொல்காப்பியர் கூறும் 'உள்ளுதல்' என்ற அவத்தைக்கு ஏற்பவும் அமைத்துக் காட்டுகின்றார்.

**கற்பியல்**

"கற்பெனப் படுவது கரணமொடு புணரக்
கொளற்குரிய மரபின் கிழவன் கிழத்தியை
கொடைக்குரி மரபினோன் கொடுப்பக் கொள்வதுவே"

(தொல்.கற்பு-142)

என்ற தொல்காப்பியரின் கூற்றுப்படி இராமன் சீதை இருவரின் திருமணத்தை விளக்க வந்த கம்பர் இந்நூற்பாவின் கருத்திற்கேற்ப கற்பிலக்கணத்தைக் கடைபிடித்திருக்கிறார். இதனைக் கடிமணப் படலத்தில்,

"பூ மகளும் பொருளும் என நீ என்
மாமகள் தன்னொடும் மன்னுதி என்னா
தாமரை அன்ன தடக்கையான் ஈந்தான்"

சீதையைப் பெறுவதற்குரிய- இராமனுக்குக் கொடுத்தற்குரிய மரபினை உடைய சீதையின் தந்தையான சனகன் தாரை வார்த்துக் கொடுப்பதாக கூறுவது தொல்காப்பியர் கூறும் கற்பிலக்கணத்திற்கு ஏற்ப அமைந்துள்ளது.

**முடிவுரை**

தொல்காப்பியர் கூறும் அகப்பொருளைக் கம்பர் தன் காப்பிய அமைப்பிறகு ஏற்ற வகையில் எவ்வாறு அமைத்துக் காட்டியுள்ளார் என்பதை அகத்திணையியல், களவியல், கற்பியல், வாயிலாக அறிந்து கொள்ள முடிவதோடு, முன்னோர் கருத்துக்களை ஏற்று மதித்துப் போற்றும் கம்பரின் திறமையும் உணர்ந்து கொள்ள இயல்கிறது.

# கம்பராமாயணத்தில் திணைக்கோட்பாடு

முனைவர். ப.சு. மூவேந்தன்
தமிழியல்துறை உதவிப்பேராசிரியர், அண்ணாமலைப்பல்கலைக்கழகம்,
சிதம்பரம்.

**முன்னுரை**

கம்பர், சங்க அகப்பொருள் மரபினைத் தழுவியே தனது காவியத்தைப் படைத்துள்ளார் என்பதனைப் பல்வேறு சான்றுகளின் மூலம் அறியலாம். அவ்வகையில் கம்பராமாயண யுத்தகாண்டத்துக் 'கடல்காண் படலத்தில் உணர்த்தப்படும் சங்கத் திணைக்கோட்பாடுகள் குறித்து இக்கட்டுரையில் எடுத்துரைக்கப்படுகின்றது.

சங்க இலக்கியங்கள் திணைக்கோட்பாட்டின் அடிப்படையில் அமைந்தது ஆகும். 'அகப்பாடலாயினும், புறப்பாடலாயினும் திணைமரபுகளுக்கு உட்பட்டே படைக்கப்பெற வேண்டும் என்பது சங்க இலக்கியக்கொள்கைகளில் ஒன்றாகும்.

**திணை**

திணை என்பதற்கு 'நிலம், இடம், வீடு, குலம், ஒழுக்கம்' எனப் பல்வேறு பொருள்களைப் பேரகராதி கூறுகின்றது. (ப.1874) மரபுவழிப்பட்ட ஒழுக்கவிதிகள் திணை எனப்படுகின்றன. மேலும் திணை என்பதற்கு ஒழுக்கம் எனப் பொருள் கொள்வதே பெரும்பான்மை உரையாசிரியர்களின் வழக்காறாக உள்ளது. இந்த ஒழுக்கத்தை அகவொழுக்கம், புறவொழுக்கம் எனப்பகுத்து அகத்திணை, புறத்திணை என வழங்கினர் பண்டை இலக்கண நூலோர்.

திணை இலக்கணப்பகுப்பு தமிழ்மொழிக்கு மட்டுமே உரியது என்பது கருத்தில் கொள்ளத்தக்கதாகும். அகத்திணைகளை ஏழாகவும், புறத்திணைகளை ஏழாகவும் வகுத்துரைப்பது தொல்காப்பிய மரபு. இவற்றுள் அகத்திணை என்பது காதல் வாழ்வினையும், புறத்திணை என்பது சமூகவாழ்வினையும் குறித்து வருவது எனலாம்.

அகத்திணை குறிஞ்சி, முல்லை, மருதம், நெய்தல், பாலை என ஐவகைப்படும். இந்த ஐந்தும் உள்ளம் ஒன்றிணைந்த காதலர்களின் வாழ்க்கை நிகழ்வுகளை அடியொற்றியமைந்ததாகும். இத்திணைகள் ஒவ்வொன்றும் முதல், கரு, உரி என முத்திறப் பொருள்களைப் பெற்றுவரும்.

"முதல்கரு உரிப்பொருள் என்ற மூன்றே
நுவலுங் காலை முறைசிறந் தனவே
பாடலுட் பயின்றவை நாடுங்காலை." (தொல்.பொருள்.நூ. 3)

என்னும் நூற்பா இதனை உணர்த்துகின்றது.

இவற்றுள் முதற்பொருள் என்பது நிலமும் பொழுதுமாகும். கருப்பொருள் என்பது நிலத்திற்குரிய தெய்வம், விளைபொருள், விலங்கு, பறவை, பறை, செய்தொழில், யாழ் போல்வனவாகும். உரிப்பொருள் என்பது புணர்தல், இருத்தல், ஊடல், இரங்கல், பிரிதல் என்பனவாகும். இவற்றைப் பின்னணியாகவும் களமாகவும் கொண்டு அகப்பாடல்கள் படைக்கப்படும்;

இனி, கம்பர் தனது காவியத்துள் எவ்வாறு இத்திணைக் கோட்பாட்டினைப் பின்பற்றி, காவியத்தைச் சிறப்புறச் செய்துள்ளார் என்பதனைக் காணலாம்.

கடல்காண் படலம்

சீதையை மீட்பதற்காக இலங்கை நோக்கிச் செல்லும் இராமன், தென்திசைக் கடலைக் கண்டு, அதன் கரையில் எழுபது வெள்ளம் வானரப்படைகளோடு தங்கிய நிகழ்வு இப்படலத்துள் பேசப்படுகின்றது.

வானரப் படைகள் தென்கடற்பகுதியில் சென்று தங்குகிறது. இராமன் தென் கடலைக் காண்கிறான். தென்கடலிலிருந்து மேலெழுந்து வரும் கடற்காற்று தென்றலாகவந்து இராமனின் உள்ளத்தில் பலவித சிந்தனைகளைத் தோற்றுவிக்கிறது.

**நெய்தல் திணை**

தொல்காப்பியர், கடலும் கடல் சார்ந்த இடத்தினையும் நெய்தல் எனக் குறிப்பிடுவார். கடல் இணைபிரிந்தவர்க்கு மேலும் துன்பத்தை மிகுவிக்கும் களமாக உள்ளது. கடலின் ஓயாத அலைகள், கடற்காற்று இவ்வெண்ணத்தை மேலும் கிளர்ச்சியுறச் செய்கிறது.

காதலில் பிரிந்தவர்க்குத் துன்பம் இயல்பாகவே மிகுதியாக எழும். அப்பிரிவுத்துயரின் இரக்கவுணர்வினைப் புலப்படுத்துவதற்கு ஏற்ற களமாகக் கடலும் கடல் சார்ந்த இடமும் அமைகின்றது.

**முதற்பொருள்: நிலமும் பொழுதும்..**

'கடல்காண் படலத்திலேயே கடலும் கடல் சார்ந்த பகுதியும் உண்டு. காட்சிப்பின்னணியாக இப்படலத்தில் கடற்பகுதி அமைகின்றது. தலைவனைப் பிரிந்த தலைவிக்குக் கடலும் கானலும் காணுந்தொறும்

இரக்கம் மிகுதலால், கடலையும் கடலைச் சார்ந்த இடத்தையும் நெய்தல் என்றார். அன்றியும் கடற்கரைக் களிகளில் நெய்தல் மலர் சிறந்து விளங்குவதால் நெய்தல் எனப் பெயர் வந்ததாகக் கொள்ளலாம். இக்கடற்கரையில் இரக்கம் மிகுந்து தோன்றும் நேரம் சுடர்படும் பகலின் இறுதிக்காலமாகும். இரைதேடிய பின் பல்வேறு வகைப்பட்ட பறவை-யினங்கள் தத்தம் கூடுநோக்கித் திரும்பி வருதலும், புன்னை, தாழை முதலிய பூக்களின் மணம் பரவுதலும் இரங்கற்பொருள் தோன்றுதற்குக் காரணமாகின்ற பொழுது சுடர்படு வீழ்பொழுது அல்லது ஞாயிறு வீழ்பொழுது ஆகும். இதனையே இலக்கண ஆசிரியர்கள் எல்-சூரியன்: படு-படுதல் எனக் குறித்தனர். இது நெய்தல் திணைக்குரிய சிறுபொழுதாகும்.

".................. எற்பாடு
நெய்தலாதல் மெய்பெறத் தோன்றும்" (தொல்.அகம். நூ. 8)

என்னும் நூற்பா வேனில் காலத்தையும், ஞாயிறுவீழ் பொழுதையும் நெய்தலுக்குரியதாகக் குறிப்பிடுகின்றது.

சீதை பிரிவால் எழுந்த காமநோயால் இராமன் இரவுப்பொழுது முழுவதும் உறங்காது விழித்திருந்தான். இதனை இப்படலத்துள்,

"கங்குல் பொழுதும் துயிலாத
கண்ணன் கடலைக் கண்ணுற்றான்" (பா. 6188:7-8)

என்று உரைக்கின்றார் கம்பர். அதாவது, நெய்தலின் கடற்பரப்பில் இரக்கம் மிகுதியாக எழும் நேரம் இரவுப்பொழுதாகும். அத்தகு இரவுப்பொழுதில் உறங்காது தவித்ததாக இராமனைக் காட்டுகின்றார். இதில் ஞாயிறு வீழ்பொழுது (நள்ளிரவு) பின்னணியாக அமைந்துள்ளதனை அறியலாம்.

**கருப்பொருள்**

ஒவ்வொரு நிலத்திற்கே உரிய விளைபொருள்கள் கருப்பொருள்களாகும். இதனைக் கருத்தில் கொண்ட கம்பர், இராமன் சீதையை நினைத்த காட்சியில்,

"சங்கின் பொலிந்த கையாளை" (பா. 6188:3)

என்று சீதை பற்றிய குறிப்பினை உணர்த்துவதற்குச் சங்கினைக் காட்சிப்படுத்துகின்றார். கடல்விளை பொருளான சங்கணிந்த வளையலை உடையவள் சீதை, எனக் கூறியுள்ள திறம் உணரத்தக்கதாகும்.

இதேபோன்று இப்படலத்தில்,

"...............நுரைத் தொகையும்
முத்தும் சிந்திப் புடைசுருட்டி" (பா. 6189:6)

"முரல் முறுவல் குறிகாட்டி,
முத்தே! உயிரை முடிப்பாயோ?" (பா. 6193:8)

என்னும் இடங்களில் கடலின் விளைபொருளான முத்து எனக் குறித்துள்ளதனைக் காணலாம்.

**உரிப்பொருள்**

நெய்தல் திணைக்குரிய உரிப்பொருள் இரங்கலும் இரங்கல் நினித்தமும் ஆகும். 'காலைப்பொழுதில் இரைதேடச் சென்ற விலங்குகளும், பறவைகளும் தத்தம் துணைநாடித் திரும்பி வருதலையும், மாலைவேளையில் தோன்றும் நிலவின் எழிலையும் கண்ட தலைவி, தன்னைப் பிரிந்து சென்ற தலைவனை நினைந்து வருந்துவாள். இரவில் ஊரெல்லாம் துஞ்சும் நிலையில் இருக்க, தான் மட்டும் தூங்காது இருப்பவும், அந்நிலையில் கடல் அலையின் ஓசையும், அன்றிற் பறவையின் குரலும் அவள் துயரத்தை மேலும் மிகுதியாக்குதலும் இயற்கையான நிகழ்வாகும்' என்று கூறுவர். இங்கு தலைவியின் மீதுற்ற காதலால் தலைவன் துயிலாது விழித்திருப்பது அறியத்தக்கதாகும்.

சீதையை மீட்பதற்காகச் செல்லும் இராமனின் உள்ளத்தில் அவள் பற்றிய நினைவே மேலோங்கி உள்ளது. இமைப்பொழுதும் மறவாத உள்ளத்தனான இராமன், கடலைக் காண்கிறான் அவன் உள்ளத்தில் சீதை பற்றிய எண்ணவோட்டம் மேலும் அதிகரிக்கின்றது. அக்காட்சியை கொல்லன் உலையில் கொழுந்துவிட்டு எரியும் நெருப்பினை ஒத்ததாய் அவனது மனநிலை இருந்தது என்கிறார். இராமனது துயரநிலையினை இரங்கற்பொருளில்,

"வழிக்கும் கண்ணீர் அழுவத்து வஞ்சி அழுங்க வந்து அடர்ந்த
பழிக்கும் காமன் பூங்கணைக்கும் பற்றா நின்றான் பொன்தோளைச்
சுழிக்கும் கொல்லன் ஒல்உலையில் துள்ளும் பொறியின் சுடும் அன்னோ?
கொழிக்கும் கடலின் நெடுந்திரைவாய்த் தென்றல்தூற்றும் குறுந்திவலை"
(பா. 6190)

என்று குறிப்பிடுகின்றார் கம்பர்.

**கடலின் இரக்கவுணர்வு**

இராமன் தன்னிடத்தை விட்டு நீங்கினான் என்பதனை உணர்ந்த பாற்கடல் அவனது துயரநிலைக்கு இரக்கம் கொண்டது. இராமனின்

துயர்படிந்த முகத்தைக் கண்ட கடலும் அவனது நிலைக்கு மனம் இரங்கியது. அவனது வருத்தம் விரைவில் தீர்ந்திட வேண்டும்;;. சீதையின் துயரை விரைவில் நீ துடைத்திட வேண்டும்; என்னும் பொருளில்,

> "இந்து அன்ன நுதல் பேதை இருந்தாள் நீங்கா இடர்க்கொடியேன்
> தந்த பாவை தவப்பாவை தனிமை தகவோ? எனத் தளர்ந்து
> கண்ணீர் ததும்பத் திரைத்து எழுந்து வந்து வள்ளல் மலர்த் தாளில்
> வீழ்வது ஏய்க்கும், மறிகடலே." (பா. 6194)

என்னும் பாடலைப் படைத்துள்ளார். கடலானது, பிறைபோலும் நெற்றியினையுடைய சீதை துன்பத்தில் அகப்பட்டாள்; கொடியேன் பெற்ற கண்மணிப்பாவை போல்பவளும், தவப்பயனால் உதித்தவளுமாகிய அவள் தனியே இருந்து தவித்தல் தகுமோ? அவளது துயரை நீ களைய மாட்டாயா? என வினவும் நோக்கில், தன் கண்ணீரான முத்துக்களை அலைகளாகப் பரப்பி இராமனின் பாதங்களில் விழுந்து முறையிடுவது போலிருந்தது அக்காட்சி என்று குறிப்பிடுகின்றார் கம்பர்.

தன்னைச் சரணடைந்தவர் துயரைப் போக்குபவன் இராமன். மற்றவர்களிடம் அன்பையே பொழிபவன். எனினும், சூழல் (விதி) அவனுக்கும் துயரைத் தந்துள்ளது. அவனது துயரத்தைக் கண்ட கடல் தன் இரக்க உணர்வினை இவ்வாறு வெளிப்படுத்தியது என்றும் கொள்ளலாம்.

அஃறிணைப் பொருள்கள் சிந்திக்கும் திறனற்றவை. எனினும் படைப்பாளர்கள் பார்வையில் அவையும் பாடுபொருளில் இடம்பெறும்போது அவற்றின் செயல்பாடுகள் அறிவுறுத்துவனவாக, செய்வனவாக அல்லது பேசுவனவாக அமையும். இக்குறிப்பை மெய்ப்படுத்தும் வகையில் கடல் தன் கோரிக்கையை இராமனின் பாதங்களில் சென்று தழுவிச்சொல்லியது என்றும், சீதையின் பிரிவுத்துயரால் வருந்திநிற்கும் இராமனின் உடல்வெப்பம் தணியுமாறு கடல் தனது திரையாகிய கையால் நுரைப்பூவாகக் கலவைச் சாந்தினை அள்ளிப்பூசுவது போல் அச்செயல் இருந்தது என்றும் பாடற்புனைந்துள்ள திறம், கற்பனை நயம் செறிந்தவையாகும்.

'திணைப்பாடல்களில் முதற்பொருளும் உரிப்பொருளும் கூட இல்லாமற் போகலாம்: ஆனால், உரிப்பொருளின்றிப் பாடல்கள் அமைதல் இல்லை' என்பதனை விளக்கும் விதத்தில் கம்பர் உரிப்பொருளினைச் சிறப்புறக் கையாண்டு தன் காவியத்தைச் சிறப்பித்துள்ளார்.

**புறத்திணைக் கூறுகள்: தும்பைத்திணை**

நெய்தல் திணைக்குப் புறமாக அமைந்த திணை தும்பை ஆகும். இதனைத் தொல்காப்பியர்,

"தும்பை தானே நெய்தலது புறனே" (தொல்.பொருள். நூ. 1015)

"மைந்து பொருளாக வந்த வேந்தனைச்
சென்றுதலை யழிக்கும் சிறப்பிற்றென்ப" (தொல்.பொருள். நூ. 1016)

என்னும் நூற்பாக்களில் குறிப்பிடுகின்றார்.

நெய்தல், தும்பைத் திணைக்குப் புறமாக அமைவது எவ்வாறு எனின், 'கடலும் கடல்சார்ந்த மணல்வெளியும் நெய்தல் நிலமாகும். மணற்பாங்கான இடத்தினின்று போர் நிகழும். நெய்தலுக்குரிய காலைப்பொழுது போர் தொடங்கும் காலம் ஆகும். தலைவன் பிரிவால் தலைவி இரங்குதல்போல, இறந்தவர்களின் சுற்றத்தார் இரங்குவதும், வீரக்குறிப்பின் அருள்பற்றி வீரர்கள் இரங்குதலும், ஒருவருமொழியாத் தொகை நிலைக்கண் கண்டோர் இரங்குதலும் ஆகிய முதல், கரு, உரி என்னும் மூன்றும் ஒத்தலான் நெய்தலுக்குத் தும்பை புறனாக அமைந்தது" என்பர். இத்தகு புறத்திணையின் கூறுகளை இப்பாடற்பகுதியில் காணலாம்.

இராமன் போருக்குத் தயாராகிவிட்ட நிலையையும், இராவணனோடு பொருதத் துணிந்த நிகழ்வும் தும்பைத் திணையின் பாற்பட்டதாகக் கொள்ளலாம்.

புறப்பாடல்களில் போரின்பொருட்டுப் பிரிந்துசென்ற தலைவன், பாசறைக்கண் தலைவியை நினைத்து மருகுவது 'பாசறைப்புலம்பல்'; என்னும் திணையாக்கிக் கூறுவர் இலக்கணநூலோர்.

பாசறையில் பாடிவீடமைத்துத் தங்கியிருக்கும் தலைவன், தலைவியை நினைத்துப் பார்ப்பதாக முல்லைப்பாட்டில் குறிப்பிடுவார் நப்பூதனார். அக்காட்சியை ஒப்பதாய் இந்நிகழ்வும் அமைந்திருப்பதனை உற்றுநோக்கலாம்.

# கம்பனின் விழைவும் மருதமும்

திருமிகு. ப. சபிதா
முனைவர் பட்ட ஆய்வாளர், அ.வீ.வா.நி. திரு புட்பம் கல்லூரி
பூண்டி.

## முன்னுரை

இனிமையும் தொன்மையும் வாய்ந்த எழிலார்ந்த தமிழ்மொழியின் கதி எனப் போற்றப்படும் கம்பர், தாம் படைத்த காப்பியமான கம்பராமாயணத்தை வெறுங்கற்பனையோடு கூறாமல் தன்னுடைய எண்ண விழைவை மிக அழகாக வெளிப்படுத்தியுள்ளார்.

கம்பராமாயாணத்தின் முதல் காண்டமான பாலகாண்டம் முகப்பாகச் செயல்படும் பகுதியாகும். இக்காண்டத்தில் முதலில் வகுத்துள்ள படலம் ஆற்றுப்படலமாகும். நீர் என்பது அத்தியாவசியத் தேவையாகும். மழையின்றி நீரில்லை; நீரின்றி இவ்வுலகம் இல்லை. கடல்நீர் மிகுதியாக இருந்தாலும் பாசனத்திற்குப் பயன்படாது. ஆனால், ஆற்றுநீர் பாசனத்திற்குப் பயன்பட்டு மக்களுக்கு நல்வாழ்வைத் தரும்.

முற்காலத்தில் மழைநீர் உயிர்நீர் என்பதை உணர்ந்த அறிவாற்றலுடைய மன்னர்களாலும் மக்களாலும் உருவாக்கப்பட்டு பராமரிக்கப்பட்ட ஏரிகள், குளங்கள்அனைவரின் வாழ்வையும் வளமடையச் செய்தது. அதை உணர்ந்திருந்த கம்பரும் இதனை மனதில் கொண்டு ஆற்றின் சிறப்பையும் ஆற்றின்வழி அமைந்த மருத நில மக்களின் சிறப்பையும் விரித்துரைக்கிறார்.

## நிகரிலா மருதம்

நாம்காணும் ஒவ்வொரு பொருளையும் ஒப்பிட்டு உரைப்பது சிறு குழந்தையிலிருந்து வளர்ந்த நம்முடைய உளப்பண்பாகும். இப்பண்பு சாதாரண மனிதரிடத்தும் இருக்குமென்றால் கவிச்சக்கரவர்த்தி எனப் போற்றப்படும் கம்பரிடம் மிகுந்திருப்பதை அவருடைய பாடல்களில் காணலாம்.

மலையிலிருந்து வரும் வெள்ள நீரானது பெருக்கெடுத்து எல்லா நிலங்களையும் வேற்றுமையில்லாது செய்தது என்பதை,

> "முல்லையைக் குறிஞ்சி யாக்கி மருதத்தை முல்லையாக்கிப்
> புல்லிய நெய்தல் தன்னைப் பொருவறு மருதமாக்கி" (பால. ஆற் - 29)

முல்லை நிலமானது குறிஞ்சியாக மாறுகிறது. மருதமானது முல்லை நிலமாகிறது. நெய்தல் நிலமானது மருதமாகிறது என்று வெள்ளநீர்

பெருக்கால் நிலப் பாகுபாடு இன்றி மலையும், காடும், வயலும், கடலும் சரிநிகர் சமமானது என்கிறார்.

இப்பாடலில் நெய்தல் திணையானது மருதமாகியது என்பதைக் கூறும்பொழுது 'பொருவறு மருதம்' எனக் குறிப்பிடுகிறார். தனக்கு நிகரான ஒரு நிலமும் இல்லாத தன்னிகர் இல்லா மருதம் என மருதமானது சிறப்பிக்கப்படுகிறது.

தன்னிகர் இல்லாத நிலத்தில் பிறந்த தலைவனும் தன்னிகர் இல்லாத தலைவனாக வாழ்கிறான். ஔவையார் நாடானது சிறப்பல்ல நாட்டிலுள்ள மக்களால்நாட்டிற்குச் சிறப்பு ஏற்படுகிறது என்பதை,

"எவ்வழி நல்லவ ராடவர்
அவ்வழி நல்லை வாழிய நிலனே" (புறநானூறு - 187)

ஒரு நிலத்தில் வாழ்கின்ற மக்களின் தன்மையால் நிலம் ஏற்றமடைகிறது என்கிறார். கம்பர் நிலமும் மக்களும் ஒன்றுசேர்ந்த ஏற்றமுடைய நாடாக மருத நிலம் விளங்குகிறது என்கிறார்.

**பாசமும் பயிரும்**

பயிர்கள் செழித்து வளர்வதற்கு தேவையானது நீரோடு கூடிய சத்துக்கள். அச்சத்துகள் மிகையாக கோசலநாட்டு வயல்களுக்குக் கிடைத்துள்ளன. எருமையானது நீர்நிலைகளில் மேயும்பொழுது தன்னுடைய கன்றை நினைக்கிறது; நினைத்த அவ்வேளையில் அதன் பால் சுரந்து வயல்களில் உள்ள செந்நெல் பயிரை செழிப்பாக வளரச் செய்கிறது. எருமையின் பாசமானது பயிரின் வளர்ச்சிக்கு உதவுகிறது என்பதை,

"தாரை கொள்ளத் தழைப்பன சாலியே" (பால, நாட்டு. 57)

என்ற பாடல்வரி மூலம் அறியலாம்.

செந்நெல் நிறைந்திருந்த நாடு என்பது மட்டுமல்லாது நீரோடு கூடிய இனிமையான பாலையும் கலந்து வளர்ந்த இனிமையான மருதநிலப் பயிர்கள் எனக் குறிப்பிடுகிறார்.

எருமையின் பால்கொண்டு மட்டுமின்றி பயிர்களானது அரிசியைக் களைந்த கழுநீரையும் கொண்டு வளர்கிறது என்கிறார். கழுநீர் என்பது சத்தானது சத்துகள் மிகுந்தஅந்நீர் பாய்ந்து வளர்கின்ற அந்த பயிர்கள் மிக வலுவுடையன என்பதைக் கூறுகிறார்.

வருகின்றவர்களை உபசரிக்கும் விருந்தோம்பும் மாண்பும் மிகுதியாக இருக்கிறது என்பதை விரித்துரைக்கிறார்.

**குப்பைமேட்டுப் பெட்டகம்**

வேண்டாத பொருள்களை ஒதுக்கி வைக்கும் இடமாக இருக்கக்கூடாது குப்பை மேடாகும். இந்த குப்பைமேட்டில் சேவலானது குப்பையைக் கிளறுகிறது. இதில் இரத்தினங்கள் வெளிப்படுகின்றன. இதை குருவிக்கூட்டங்கள் மின்மினிப் பூச்சியென்று எண்ணி தன்னுடைய கூட்டில் கொண்டு வைக்கும் என்று கூறுகிறார்.

பெட்டகங்களில் பாதுகாக்கப்பட வேண்டிய பொருள் கீழே கிடக்கின்றது என்றால் அறியாமையா என்றால் இல்லை எனலாம். பெண்கள் அணிகலன்களை அணிந்திருந்தனர் என்பதால் அவர்கள் இரத்தினம் பற்றித் தெரிந்து வைத்திருக்கக்கூடும். அந்த அளவுக்கு மிகுதியான செல்வ வளமும் மிகுந்திருக்கிறது.

**பெண் கல்வி**

ஒரு பெண் கல்வி கற்றால் ஒரு குடும்பமே ஒளியுறும் என்பார் பாவேந்தர். பெண்கள் செல்வமும் கல்வியும் உடையவர்களாக இருந்தலால் அவர்கள் வருந்த மடைந்தவர்களுக்குக் கொடுத்தலும் விருந்தினர்களை உபசரித்தலும் தினந்தோறும் செய்கின்ற அன்றாட நடைமுறையாகக் கொண்டனர் என பெண் கல்வி இருந்தலால், பெண்களின் செயல்பாடு எப்படி இருந்தது என்பதைக் கூறுகிறார்.

"பொருந்து செல்வமும் கல்வியும் பூத்தலால்
வருந்தி வந்தவர்க் கீதலும் வைகலும்" (பால. நாடு-68)

அறிவோடு கூடிய செல்வம்தான் ஆக்கத்தை விளைவிக்கும் என்பதை பெண்கல்வி மூலம் உணர்த்துகிறார்.

"செல்வத்துப் பயனே ஈதல்
துய்ப்பே மென்னே தப்புன பலவே" (புறநானூறு )

**நற்கதி நாடு**

தவறு இழைக்காத மனிதனே இல்லை எனலாம். ஆனால், கம்பர் தாம் படைத்த கோசல நாட்டில் வாழ்கின்ற மக்கள் தவறு என்பதை செய்தது இல்லை அதனால் அவர்கள் உயிரானது பலிக்கப்படாது நிலைத்து நிற்கும் நாடு. சிந்தையில் செம்மை இருப்பதால் சினம் இல்லாத நாடு நற்செயலே நடைபெறக்கூடிய நற்கதி நாடு என்று தம் எண்ண விழைவை தம் பாடல்களில் வெளிப்படுத்துகிறார்.

**இல்லா நாடு**

கோசல நாட்டில் கொடையாளர்கள் யாரும் இல்லை. ஏனென்றால் வாங்குபவர் யாரும் இல்லாததால் ஆகும். வீரம் வெளிப்படவில்லை;

போர், பகை இல்லாமையால் என்கிறார். உண்மையின் சிறப்புத் தெரியவில்லை; ஏனெனில் பொய் பேசுபவர் இல்லாததால் ஆகும். அறிவுடையார் என்று ஒருவரையும் சிறப்பித்துச் சொல்லமுடியாத நாடு; பலரும் அறிவுடையவர்களாக நிரம்பியிருத்தலால் ஆகும்.

"வண்மை யில்லையோர் வறுமை யின்மையால்
திண்மை யில்லைநேர் செறுந ரின்மையால்
உண்மை யில்லைபொய் யுரையி லாமையால்
ஒண்மை யில்லைபல் கேள்வி யோங்கலால்" (பால, நாடு - 85)

என்பதை இப்பாடலால் அறியலாம். தம்முடைய கருத்தை, அதாவது எண்ணத்தை வறுமையில்லாத, தவவில்லாத, பொய்யில்லாத, போரில்லாத, அறிவு நிரம்பிய சமுதாயமாக வளர்ந்து ஓங்க வேண்டும் என்று வாழ்த்துகிறார்.

## ஆற்றுநீர் ஒழுக்கு

ஆற்றுப்படலத்தில் நீரும் ஒழுக்கமும் ஒன்றுக்கு ஒன்று தொடர்புடையது என்பதால் முதல் பாடலில்,

"ஆச லம்புரி யைம்பொறி வாழியும்
காச லம்பு முலையவர் கண்ணெனும்
பூச லம்பு நெறியின் புறஞ்செலாக்
கோச லம் புனை யாற்றணி கூறுவாம்" (ஆற்றுப்படலம் - 1)

நீர் வளமும், மக்கள் மனவளமும் ஒருமித்த தன்மையுடையது. நீர் வளமிகுந்தலால் ஐம்பொவிகளும் புறத்துப் போகாது கணவன், மனைவி இருவரும் ஒருமித்து வாழும் இவ்வுயர்ந்த நாட்டிலுள்ள சரயூவின் வனப்பினை எடுத்துரைக்கிறார்.

"நீன்றி அமையாது உலகெனின் யார்யார்க்கும்
வானின்றி அமையாது ஒழுக்கு"

நீரின்றி இவ்வுலக மக்களுக்கு ஒழுக்க வாழ்வு என்பது கிடையாது என்கிறார் வள்ளுவர்.

மருதநிலப்பகுதி உலகத்துக்கு உணவளிக்கக்கூடியப்பகுதி வயல்களில் நீர், பால், கழுநீர் பாய்ந்து நல்விளைச்சலும், விளைச்சலை பகிர்ந்துண்ணும் பாங்கும், குப்பைமேட்டு செல்வச் செழிப்பும் பெண்கல்வியின் சிறப்பும் நற்கதி அமைந்த கொடையாளர் இல்லாத நாடு என்று கூறி வாங்குபவர் இன்மையால் கொடையாளர் இல்லை எனக்கூறி மருதநில மாண்பினையும் தம் எண்ண விழைவையும் எடுத்துரைக்கிறார்.

# கம்பராமாயணத்தில் ஐந்திணைக் கூறுகள்

முனைவர் அ.பெத்தாலெட்சுமி
துறைத்தலைவர், கணினி அறிவியல் துறை, எம்.வி.எம் அரசினர் மகளிர் கலைக் கல்லூரி, திண்டுக்கல்.
திருமிகு. இரா. இராஜராஜேஸ்வரி,
துணைப்பேராசிரியர், கணினி அறிவியல்துறை, மீனாட்சி அரசு மகளிர் கல்லூரி, மதுரை.

## முன்னுரை

கம்பராமாயணம் தொல்தமிழின் ஆகச் சிறந்த காப்பியம். இயற்றிய கவியோ கவிவேந்தர் கம்பர். சோழ தேசத்துக்காரர். பசும் வயல்களும், வாளை மீன்கள் துள்ளியோடும் நீரோடைகளும், குவளைகள் வாசம் வீசும் குளங்களும் சூழ வசித்தவருக்கு இயற்கைமீது ஈர்ப்பு இல்லாமல் போகுமா? ஆகவேதான், அறம் போற்றும் நாயகனாம் இராமனின் கதையெனினும் கம்பராமாயணக் கதையில் கதைக்களமாகவோ, பின்புலமாகவோ, வருணணையாகவோ தொல்காப்பியத்தின் அகம் காட்டும் ஐந்திணைக்கூறுகளைக் கைக்கொண்டு காட்சிகளை நகர்த்துகிறார். கம்பரின் கவின்வரிகள் சொல்லும் ஐந்திணைச் செய்திகள் சில மட்டும், இதோ உங்கள் பார்வைக்கு.

## மருத நிலம் சொல்லும் மகிழ்வரிகள்

மருதநிலம் வயலும் வயல் சார்ந்த நிலமும். ஐந்திணைகளிலும் வளமிகுந்த திணை மருதம். பணிகள் மிகுந்திருக்க மாந்தர் சோர்வின்றி வாழும் சூழல் கொண்ட களம். கோசலநாட்டின் மாமருத வேலியை பாலகாண்டம், நாட்டுப் படலத்தில் கம்பர் எவ்வாறு விவரிக்கிறார். காண்போமா?

"ஆறு பாய் அரவம் மள்ள
ஆலை பாய் அமலை ஆலைச்
சாறு பாய் ஓதை. வேலைச்
சாங்கின் வாய்ப் பொங்கும் ஓசை" (34)

என, சலசலக்கும் ஆற்று நீரின் ஓசையையும் உழவர்கள் ஆலையாடுதலையும் அதன் பயனாய் கருப்பஞ்சாறு பாய, அச்சாறு ஓடும் ஓசையையும் செவி நுகர வைக்கின்றார் கம்பர். இவற்றோடு ஆற்றங்கரைகளில் உள்ள சங்குகளிபூமிருந்து பெரும் ஓசையும் கேட்கிறதாம். ஆற்று நீரில் சங்கு உண்டா என்ற சந்தேகம் வேண்டாம்.

சங்கு கடலுக்கு உரியதே. எனினும் புதுவெள்ளப் பெருக்கில் எதிரேறி மருத நிலத்து வந்ததாய் கம்பரின் கற்பனை. அத்தகையதாம் கோசல நாட்டின் மருத வளம். இனி மருதநிலச் சோலைகளின் விவரணை:

"தண்டலை மயில்கள் ஆட தாமரை விளக்கம் தாங்க,
கொண்டல்கள் முழவின் ஏங்க குவளை கண் விழித்து நோக்க,
தெண் திரை எழினி காட்ட தேம் பிழி மகர யாழின்
வண்டுகள் இனிது பாட மருதம் வீற்றிருக்கும் மாதோ" (35)

இங்கே மருதத்தை, அரங்கத்தில் வீற்றிருக்கும் ஓர் அரசியாக சித்திரிக்கிறார் கம்பர். குளிர் சோலையில் மயில்கள் ஆட, தாமரைகள் விளக்குகளாய் ஒளிர மேகங்கள் மத்தளங்களாய் ஒலிக்க, குவளைகள் கண் விழித்துப் பார்க்க நீர் நிலைகளின் அலைகள் திரைச் சீலைகளாகவும் வண்டுகள் ஓசை யாழின் இசையாகவும் அமையப்பெற்ற அரங்கில் மருதநாயகி கம்பீரமாக அமர்ந்திருக்கிறாள் என்பது கம்பரின் கூற்று. மருத நில வாழ்வியல் சொல்லும் வரிகளை இனி காண்போம்.

"எறிதரும் அரியின் சும்மை எடுத்து வான் இட்ட போர்கள்
குறிகளும் போற்றிக் கொள்வார்; கொன்ற நெல் குவைகள் செய்வார்
வறியவர்க்கு உதவி மிக்க விருந்து உள மனையின் உய்ப்பார்"
(51)

உழவர் வாழ்வைச் சொல்லும் வரிகள் இவை. உழவர்கள் நெல்லரிகளாகிய சுமைகளை வானம் அளாவிடக் குவித்து போர்களில் அடையாளம் இட்டுப் பாதுகாப்பர். கதிரடித்து உதிர்த்த நெல்லைக் குவித்து வைத்து, அங்கே வரும் வறியவர்க்கு நெல் அளிப்பர். மிகுந்ததை, தம் இல்லம் வரும் விருந்தினர் உண்பதற்காய் வீடுகளில் கொண்டு சேர்ப்பர். இவ்வரிகளில் விருந்தினரோம்புதலும் வறியவர்க்கு உதவுதலுமான நம் பாரம்பரிய பண்புகள் இன்னுமொருமுறை நினைவூட்டப் பெறுகின்றன. விளைநெல் பற்றி பார்த்தாயிற்று. இல்ல சமையலைப் பற்றிய கம்பரின் வரிகள் இதோ:

"முட்டு இல் அட்டில் முழங்குகிற வாக்கிய
நெட்டுலைக் கழுநீர் நெடுநித்தம் தான்
பட்ட மென்கமுகு ஓங்கு படப்பை போய்
நட்ட செந்நெலின் நாறு வளர்க்குமே (57)

சமையலறை தாண்டி பக்கத்து இல்லம் சென்றால் தோய்ந்துள்ள

வெண்தயிரைக் கடைகின்ற இடைக்குலப் பெண்களின் வளையோசை நமக்கு கம்பரின் பின்வரும் வரிகளின்வழி நமக்கு கேட்கிறது.

"தோயும் வெண் தயிர் மத்து ஒலி துள்ளவும்
ஆய வெள்வளை வாய்விட்டு அரற்றவும்
தேயும் நுண் இடை சென்று வணங்கவும்
ஆயர் மங்கையர் அங்கை வருந்துவார்" (59)

மிகுந்திருக்கும் பால் தயிராகும் அந்நிலத்தின் ஆவளமும் அழகிய வேலைப்பாடு கொண்ட சங்கு வளையல்கள் அணியும் அக்கால மகளிரின் கலைநயமும் கம்பரின் கவின் வரிகளில் வெளிப்படுகின்றன.

நவீன உழவு சாதனங்கள் விடுத்து பண்டைய உழவு முறையொத்து மிருக வளர்ப்புடன் இயைந்த விவசாயம் மிகுந்த நன்மை பயக்கும் என்பது இங்கிலாந்து பல்கலைக்கழகம் ஒன்றின் அண்மை ஆய்வுச் செய்தி. "மருத நிலம் மாடுகள் மிகுத்து" என்பர். அதை அடியொற்றி அமைந்திருக்கிறது கம்பரின் மருதநில விவரணை. இவ்வாறாய் மருதத்திணைக் கூறுகள் செவ்வனே சுட்டப் பெறுகின்றன இங்கே.

## குறிஞ்சி நிலம் காட்டும் கவின்வரிகள்

மருதநிலம் தாண்டி குறிஞ்சி நிலம் செல்வோம். சித்திரகூட மலையின் வருணனை பற்றிய கம்பனின் சுவை வரிகளில் செவி இனிமை நுகர்கிறது. அருவிகளின் ஓசை இசை கூட்ட, மென் குளிர் தாலாட்ட சித்திரக்கூட மலையின் அழகை இராமன் சீதாதேவிக்கு இயம்புவதாக களம் அமைத்துள்ளார். கம்ப நாட்டாழ்வார். தம் துன்பம் போற்றாது தம் துணையின் துன்பம் ஆற்றும் நேரிய தம்பதிக்கு மாதிரியாய் இராமனும் சீதையும். கிடைத்திருப்பதோ கானக வாழ்க்கை அச்சூழல் குறித்து கவலை கொள்ளாது போல் சீதைக்கு இராமன் கவின் சிந்தும் காட்சிகளை வருணிக்கையில் பழந்தமிழ்க்குடி வாழ்க்கை மாண்பும் சேர்ந்தே காட்டப் பெறுகின்றது.

குறிஞ்சி பற்றி சொல்லும் வரிகள் அயோத்யா காண்டம் சித்திரக்கூட படலத்தில் இடம் பெறுகின்றன.

"தாழின் ஏலமும் தமாலமும்
தொடர் தரு சாரல்" (2047)

எனும் வரிகளில் ஏலக் கொடியும் மணம் உள்ள பச்சிலைக் கொடியும் பற்றிக் கிடைக்கின்ற மலைப்பக்கம் விவரிக்கப்படுகிறது.

"மருவி மால் வரை உம்பரில் குதிக்கின்ற வருடை" (2048)

எனும் வரிகள் பெரிய மலையின் உச்சியில் பொருந்தி குதிக்கின்ற மலை ஆடுகள் நம் காட்சிக்கு தெரிகின்றன.

"கவரி மால் நிற வால் புடை பெயர்வன, கடிதின்
பவளமாய் வரை அருவியைப் பொருவிய பாராய்" (2050)

எனும் வரிகளில் கவரிமான்களின் வெண்ணிறம் உடைய வால்கள் பவளமலையின் மேலிருந்து வீழ்கின்ற வெண்ணிற அருவிகளைப் போன்றுள்ளன எனும் செய்தி சொல்லப்படுகின்றது.

"நீல வண்டினம் படிந்து எழ வளைந்து உடன் நினிர்வ
கோல வேங்கையின் கொம்பர்கள் பொன் மலர் தூவிக்
காலினிலில் தொழுது எழுவன நிகர்ப்பன" (2061)

அழகிய வேங்கை மரத்தின் பூங்கிளைகள் நீல வண்டு கூட்டங்கள் தம் மீது உட்கார்ந்து எழுதலினால் கீழே வளைந்து பிறகு மேலே நிமிர்வது காலில் வணங்கி எழுகின்றதை ஒத்திருப்பதாக கம்பர் வருணணை செய்கிறார். குறிஞ்சி நில மலரான வேங்கையின் பதிவை இங்கே காண்கிறோம்.

"எல்கொள் மால் வரை உம்பரின் இரும்புனம் காக்கும்
கொல் கொள் வேல் கணார் குரி இனத்து எறி குருவிந்தக்
கற்கள், வானிடை மீன் என வீழ்வன காணாய்?" (2062)

எனும் வரிகள் சூரியனைக்கொண்ட பெரிய மலையின் உச்சியில், பெரிய தினைப்புனம் காக்கும் குறமகளிர் குருவிக் கூட்டத்தின் மேல் குருவிந்த மணிக்கற்களை வீசி எறியும் செய்தியைச் சொல்லி குறிஞ்சி மாந்தரின் வாழ்க்கை வளத்தைப் பதிவு செய்கிறன.

### முல்லை வளம் இயம்பும் இனிய வரிகள்

சித்திரக் கூடம் தாண்டி இன்னும் பயணிக்கையில் காணப்பெறுகிறது முல்லை நிலம். காடும் காடு சார்ந்த நிலமும். தலைவன் பொருள் ஈட்ட வேறிடம் சென்றிருக்க தலைவி காத்திருக்கும் களம் இது. அதனையொத்து இராமன் சீதையைப் பிரிந்திருக்கும் நிலையை பின்புலமாய் அமைத்து கார்கால மழை பெய்யும் காட்டினை கண்முன் நிறுத்துகிறார் கம்பர்.

முல்லைநிலப் பதிவை நாம் காண்பது கிட்கிந்தா காண்டம். கார்காலப் படலத்தில் அவற்றுள் சில காட்சிகள் இதோ.

"நீல் நிறப் பெருங்கரிநிரைத்த நீர்த்து என
சூல் நிற முகிற்குலம் துவன்றி, சூழ்திரை
மால் நிற பெருங்கடல் வாரி, மூரி வான்
மேன் நிரைத்துளது என முழக்கம் மிக்கதே (4153)

இவ்வரிகள் கரிய பெரிய யானைகளை விண்ணில் வரிசையாக நிறுத்தி வைத்தாற்போலச் சூல் கொண்ட கருமேகங்கள், நெருங்கிக் குமுறுவது பெரிய கடல் வானத்தெழுந்து பேரொலி முழக்கியது போலிருந்தது எனும் செய்தி சொல்கின்றன. இனி மழை பற்றிய வருணணை.

"கல்லிடைப் படும் துழித் திவலை, கார் இடு
வில்லிடைச் சரம் என விசையின் வீழ்ந்தன.
சொல்லிடைப் பிறந்த செங் கனல்கள் சிந்தின,
அல்லிடை, மணிசிறந்து அழல் இயற்றல் போல" (4163)

இவ்வரிகள் மழைத்தாரைகள் மேகவில்லில் இருந்து பாய்கின்ற அம்புகள் போல வேகத்தோடு விழ, இரவில் மின்னும் மாணிக்க மணிகளின் ஒளியென இடிகன் சிந்தின எனும் மழைச் செய்தியை நமக்கு அறிவிக்கின்றன.

"பொருள் தரப் போயினர்ப் பிரிந்த பொய் உடற்கு,
உருளிதரு தேர்மிசை உயிர் கொண்டு உய்த்தலான்
மருள்தரு பிரிவின் நோய் மாகணம் கெட,
கருடனைப் பொருவின் காலமாரியே" (4169)

எனும் வரிகளில் பிரிதலின் துன்பம் சொல்லும் முல்லைத்திணைக் கூறு சொல்லப்படுகின்றது. பொருள் தேடி வேற்றுநாடு சொல்லும் பண்டையத் தமிழர் வாழ்வியல் கூறு செவ்வனே இங்கே செதுக்கப்பட்டுள்ளது. இவ்வரிகள் மேகங்களின்வழி தூது சொல்லும் காளிதாசரின் கவிச்சுவையை நமக்கு நினைவுப்படுத்துகிறது. மழை பற்றி பார்த்தா-யிற்று. கார்காலத்தில் காடுகள் எப்படி இருக்கும்? பதில் சொல்கிறது பின்வரும் பாடல்.

"பாடலம் வறுமை கூற பகலவன் பசுமை கூற
கோடல்கள் பெருமை கூற குவலயம் சிறுமை கூற
ஆடின மயில்கள், பேசாது அடங்கின குயில்கள் அன்பர்
கேடுறத் தளர்ந்தார் போன்றும் திருஉறக் கிளர்ந்தார் போன்றும்"

(4173)

இதன் பொருளாவது பாதிரி மரங்கள் மலர்கள் இன்றி இருந்தன. கதிரவன் குளிர்ச்சிமிக்கதாக இருந்தது. வெண்காந்தள் செடிகள் மலர்ந்திருக்க, குவளை மலர்கள் குவிந்திருக்க, மயில்கள் மகிழ்ந்து ஆடின. குயில்களோ கூவாது ஒடுங்கின என கார்காலத்தில் காட்டின் பண்புகளைச் சுவை கூட்டி தொடுத்துள்ளார் கம்பர்.

**பாலை, நெய்தல் பகரும் கோல வரிகள்**

பாலை, நெய்தல் இரண்டுமே வன்திணைகள். பாலை, வாழும் சூழலே வன்குணத்தை இயல்பாக்கும். நெய்தல் மாந்தரின் வாழ்வோ எதிர்பாரா நிகழ்வுகள் உள்ளடக்கிய கடல் எனும் களம் ஒட்டி அமைவது. இராமாயணக் காதையில் இத்திணைகளின் வருணணையொட்டியே கதையின் வன்களங்கள் அமைத்திருக்கிறார் கம்பர். முதலில் பாலை. இந்நிலத்தின் இயல்பான வருணணையாய் சொல்லும் காட்சிகள் தாடகை எனும் அரக்கியின் வதம் சொல்லும் களத்தில் இணைகிறது. பாலை பற்றிய பதிவை பாலகாண்டம், தாடகை வதைப் படலத்தில் காண்கிறோம்.

"பருதி வானவன் நிலம் பசை அறப் பருகுவான்
வருது மேற்கொண்டு உலாம் வேனிலே அல்லது ஓர்
விருது வேறு இன்மையால்" (343)

என வேனிற்காலம் அல்லாது வேறுகாலம் இல்லாத இப்பாலைநிலம் சூரியனின் ஆட்சிக்குள் அமையப்பெற்றதாக சித்தரிக்கிறார் கம்பர்.

".....................உலர் பெருள் கள்ளியின்
தாய் பிளந்து உக்க கார் அகில்களும், தழை இலா
வேய் பிளந்து உக்க வெண் தரளமும்" (346)

எனும் வரிகளில் பெருங்கள்ளி மரங்களும் தழைகளில்லாத மூங்கில்களும் பாலை நிலக் கூறுகள் அடியொற்றி காட்டப்படுகின்றன. இன்னும் சில வரிகள் காகங்களையும், கரிகளையும் விவரிக்கின்றன.

இனி நெய்தல் காட்சிகளைக் காண்போம். கடற்கரையொட்டியே யுத்த களம். ஆதலால் யுத்த காண்டம், கடல்காண் படலம் சொல்லும் நெய்தல் செய்திகள் போர் சூழலிலேயே அமைகின்றன. நெய்தல் கம்பரின் வரிகளில் இதோ.

"தூய மலர் போல் நுரைத் தொகையும் முத்தும் சிந்தி, புடை சுருட்டிய
'பாயல் உதவிப் படுப்பதே ஒத்த திரையின் பரப்பு அம்மா"
(6062)

அஃதாவது வெண்மையான நுரைத் தொகுதியையும், முத்துக்களையும் சிந்திய கடலை பாய்க்கு ஒப்புநோக்குகிறார் கம்பர்.

"கள் உயிர்க்கும்
புன்னைக் குறும்பூ நறுஞ்சுண்ணம்
பூசாது ஒரு கால் போகாதே" (6064)

எனும் வரிகள் தேனைச் சிந்தும் புன்னையினது சிறிய பூவின் மணத்தைப் பேசுகின்றன. ஆக, பாலையின் கூறுகளாய் கோடை வெம்மையும் கள்ளி மரமும் கம்பரின் வரிகளில் காணக் கிடைக்கின்றன. நெய்தல் நிலத்து புன்னை மரமும் கடற்கரை அழகும், போர் பின்புலமாக அமைந்திடினும் கூட கவியின் வரிகளுக்குள் சிக்க தப்பவில்லை.

**முடிவுரை**

கம்பராமாயணம் தனியொரு மனிதனின் சரித்திரம் சொல்லும் இலக்கியமாகவே அறியப்பட்டிருக்கிறது. வேதம், உயர்ந்த விழுமியங்கள், பார் போற்றும் அறம் இவை உரைப்பதே கவியின் முதன்மை நோக்கமெனினும் மிகுந்த நேர்த்தியுடன் பழந்தமிழ் ஐந்திணைக் கூறுகளையும், கதைக்களங்களாய், நிகழ்வுகளாய் கையாண்டிருக்கிறார் கம்பர்.

கம்பரின் கவனம் அவ்வாறு இருக்க, தமிழகத்தின் ஐந்திணை நிலங்களின் இன்றைய நிலைதான் என்ன? மருதநில வயல்களில் பல் மாடிக் குடியிருப்புகள். முல்லை நிலத்திலோ கான்கிரிட் காடுகள். குறிஞ்சி மலைகளின் தட்பவெட்பமே மரிப்போன சூழல். நெய்தல் நிலமோ, மெதுமெதுவே நீர் மட்டம் உயரும் கடலின் அச்சுறுத்தலில். பாலை நிலம் இன்னும் நீர் வற்றி கடும் பாலையாய் என பன் மாற்றங்கள் நிலத்தின் தன்மைகளிலும், நிலமாந்தர் மனங்களிலும். இச்சூழலில் பழந்தமிழ் நிலங்கள் பற்றிய செய்திகளை நம் இளையோர் அறிதல் மிக்க அவசியம். பண்டைய மரபு போற்றுதலுக்கும் சுற்றுச்சூழல் பாதுகாத்தலுக்கும் அதனை அறிவுறுத்தலுக்குமான ஒரு சிறு கருவியாய், மேற்கண்ட கம்பராமாயண ஐந்திணைச் செய்திகள் அமையும் என நம்புகிறோம்.

"ஒரே நதிக்குள் இருமுறை இறங்க முடியாது" என்பது யாவரும் அறிந்த சென் தத்துவம். இது கம்பரின் காவியத்திற்கும் பொருந்தும். அவரது வார்த்தைகளில் இயம்புவதானால் ஒவ்வொருமுறை வாசித்தலின் போதும் "ஆழியிடை உறங்கும் நல் முத்தொன்று" புதிதாய் நமக்கு கிடைக்கும். ஆக, இம்முறை சிறு திணை சன்னல் வழி, இச்சுவை காப்பியத்தை நோக்குகையில் சிறந்தோங்கிய, இயற்கை போற்றும் பழந்தமிழர் வாழ்வியல் நெறிகள் புதுப்பொலிவுடன் புலப்படுகின்றன.

# கம்பனின் சங்க அகத்திணைக் கட்டுடைப்பு

திருமிகு. பா.இரேவதி
முனைவர் பட்ட ஆய்வாளர், மதுரை காமராசர் பல்கலைக்கழகம்,
மதுரை.

வால்மீகி முனிவர் யாத்த வால்மீகி இராமயணத்தைத் தழுவி, கம்பர் எழுதிய நூல் கம்பராமாயணம். கம்பராமாயணத்தைக் கம்பர் தழுவல்நூலாக அப்படியே எழுதவில்லை. அதில் தமிழ்மரபுப்படி அகத்துறைச் செய்திகளை இணைத்தே எழுதியுள்ளார். அவர் சங்க அக இலக்கிய மரபை மறந்தாரிலர். காலத்தோடு பொருந்தத் தமிழ்நாட்டுப் பண்பாடுகளையும் போற்றி இராமக் காதையில் புதுமை புகுத்திய கம்பர் பொருத்தமான இடங்களில் தமிழ்நெறியாம் அகப்பொருள் நிகழ்ச்சிகளையும் அமைத்துள்ளார்.

**அகத்திணை**

நிலம் முதலிய புறப்பொருள்களின் தொடர்பால் மக்களுடைய மனத்தகத்தே அன்பெனும் உயிர் பண்பு வளர்ந்து சிறத்தல் அகத்திணை வளர்ச்சி. இவ்வளர்ச்சிக்குக் கருவாய் அமையும் அகப்பொருள் இயல்பு பற்றிக் கூறுவது அகத்திணையியல். ஆரிய அரசன் பிரகத்தத்தனுக்குத் தமிழ் கற்பிக்க, 'குறிஞ்சிப்பாட்டு' என்னும் அகப்பாட்டு, கபிலரால் எழுதப்பட்டது. அகவொழுக்கத்தையும் அகத்திணையியல், பொருளியல் என்ற பொதுவியல்களாகவும் களவியல், கற்பியல் என்ற சிறப்பியல்களாகவும் தொல்காப்பியர் பிரித்து ஓதுகின்றார். அகத்திணைக்குரிய மரபுகளும் கடுமையான வகையில் பின்பற்றப்பட்டன. இம்மரபுகளையே தொல்காப்பியர் இலக்கணமாக்கினார். இம்மரபைக் கம்பர் முழுமையாக பின்பற்ற இயலவில்லை, எனினும் தேவைக்கு ஏற்ப அகமரபைப் பின்பற்றியுள்ளார்.

தமிழ் அகமரபுப்படி காதலை கைக்கிளை, ஐந்திணை, பெருந்திணை என மூவகையாகப் பகுப்பர். கம்பராமாயணத்தில் கம்பரும் இந்த மூவகைக் காதலைத் திறம்பட கையாண்டுள்ளார்.

1. கைக்கிளைக் காதல் - சூர்ப்பணகை இராமன்மீது கொண்டது.
2. ஐந்திணைக் காதல் - இராமன் சீதை மீது கொண்டது.
3. பெருந்திணைக் காதல் - இராவணன் சீதை மீது கொண்டது

**கைக்கிளை**

"காமஞ் சாலா இளமையோள் வயின்
ஏமம் சாலா இடும்பை எய்தி
நன்மையும் தீமையும் என்று இரு திறத்தால்
தன்னொடும் அவளொடும் தருக்கிய புணர்த்துச்
சொல்லெதிர் பெறாஅன் சொல்லி இன்புறல்
புல்லித் தோன்றும் கைக்கிளைக் குறிப்பே" (தொல். பொ. அகம்.)

என்று கைக்கிளைக்கு இலக்கணம் வகுத்துள்ளார் தொல்காப்பியர். அகமரபுப்படி ஆண்பாற் கைக்கிளைதான் முதலில் தோன்றியது. அதற்குப்பின்னர் தான் பெண்பாற் கைக்கிளை தோன்றியது.

- முத்தொள்ளாயிரத்தில் தலைவன் உலாவரக் கண்ட ஏழு பருவ மங்கையர் காதல் கொண்டதைச் சிறப்பாகக் கூறியுள்ளனர். இது பெண்பாற் கைக்கிளையில் அடங்கும்.
- நக்கண்ணையார், நலங்கிள்ளி மீது கொண்ட காதலும் பெண்பாற் கைக்கிளையில் அடங்கும்.
- ஆண்டாள் திருமால் மீது கொண்டதும் பெண்பாற் கைக்கிளையில் அடங்கும்.

இவ்வகையில் கம்பரும் கைக்கிளைக் காதலைத் திறம்படக் கூறியுள்ளார். சூர்ப்பணகை இராமன்மீது கொண்ட காதலும் பெண்பாற் கைக்கிளையில் அடங்கும். சூர்ப்பணகை இராமனிடம் 'காந்தருவ முறைப்படி மணந்து கொள்வோம்' என்று பேச முற்படுகிறாள். இந்தக் காந்தருவ மணம் பண்டைத் தமிழ் நூல்களில் சிறப்பிக்கப்படும் களவுமணத்தை ஒத்த இயல்புடையது என்பர். சூர்ப்பணகையின் பேச்சு காந்தருவ மணத்தை ஒத்ததன்று. ஆடவர் மகளிர் சந்திப்பில் ஆடவர் மட்டுமே, பேசுவோராகக் காணப்படுவர். காதலை வெளிப்படுத்தும் உரைகள் ஆடவர் வாயிலிருந்தே பிறக்கும். பெண்டிர் பேசுவது அவர்தம் நாணம் என்னும் பெருங்குணத்திற்கு மாறுபாடாகும். சூர்ப்பணகை குலமகளாக இல்லை; அவள் கன்னியும் அல்லள். ஆவள் ஒரு விதவை; அகப்பொருள் மரபு மீறினால் வரும் குற்றங்களையும் துன்பங்களையும் இந்நிகழ்ச்சியினால் கம்பர் பெற வைக்கின்றார். மூக்கறுப்பட்டபின்பும் காதல் பேச்சுப்பேச முற்படுகிறாளெனில் அவள் நிலையை என்னென்பது? உலகியலுக்குப் பெரிதும் மாறுபட்ட பாத்திரமாக, சூர்ப்பணகையைக் காட்டுகிறார் கம்பர்.

**பெருந்திணை**

பெருந்திணை குறித்து தொல்காப்பியர் கூறும்போது,

"ஏறிய மடல்திறம் இளமை தீர்திறம்
தேறுதல் ஒழிந்த காமத்து மிகுதிறம்
மிக்க காமத்து மிடலொடு தொகை இச்
செப்பிய நான்கும் பெருந்திணைக் குறிப்பே" (தொல். பொ)

என்று கூறுகிறார். பெருந்திணைக் காதலைக் கம்பரும் கூறியுள்ளார். ஆடவரும் பெண்டிரும் ஒருவரையொருவர் எதிர்ப்பட்டுக்கண்டு இயற்கைப்புணர்ச்சி நிகழ்வது இயல்பானது. இவ்வாறன்றி ஒரு பெண்ணைப்பற்றிக் கேட்ட மாத்திரத்திலேயே காமுறுதல், அவளை அடைய வேண்டும் என காமவெறி கொள்வது விந்தையானது. இராவணன் சீதைமீது காதல்கொள்ளக் காரணமாக இருந்தவள் சூர்ப்பணகை. சூர்ப்பணகை, தான் இராமனை மணப்பதற்குச் சீதை தடையாக இருப்பதாகப் புலம்புகிறாள். 'இராவணன் யாரவள்?' என்று வினவுகிறாள். உடனே, சீதையின் பேரழகினை, சூர்ப்பணகை பலப்பட விரித்துரைக்கிறாள். அவள் சீதையின் அழகைப் பேசப்பேச இராவணன் காமநோய் மிக்கவனாகின்றான். சீதைபால் கொண்ட மோகம் காரணமாக அவளைச் சூழ்ச்சியால் கவரத் திட்டமிட்டு செயலாற்ற முற்படுகிறாள்.

இச்செய்கை பிறனொருவனுக்குரிய மனையாளை மணந்து கொள்ளவேண்டும் என்னும் தீய எண்ணமாக இராவணன் செய்கை உள்ளது. இது பிறனில் விழைதல் என்னும் பெருங்குற்றம். காமமிகுதியால் இராவணன் சீதையை இலங்கைக்குக் கொண்டு செல்கிறான். விருப்பமில்லாத பெண்ணைத் தொட்டால் இராவணின் தலை வெடித்துச் சிதறும் என்ற சாபத்தாலே அவளைத் தொடாமல் அவள் ஒப்புதலுக்காகச் சிறை வைத்தான். அரக்கியர்கள் மூலமாக சீதைக்குப் பெருந்துன்பம் கொடுக்கிறான். மேலும் கம்பர் "மாய ஜனகப் படலத்தில்" இராவணன் சீதையின் தந்தையான சனகப் பிரபு போல் மாறுவேடத்தில் வந்து சம்மதிக்குமாறு கூறுகிறான். இது மிக்க காமத்து மிகு நிலையைக் காட்டுகிறது.

**ஐந்திணை**

தலைவன் தலைவியின் காதலைக்கூட குறிஞ்சி, முல்லை, மருதம், நெய்தல், பாலை என ஐந்திணைகளின் வழியே புலப்படுத்துவர் சங்கப்புலவர்கள். இதை, "அகனைந்திணை" என்றே குறிப்பர். இது, "அன்பின் ஐந்திணை" என்றும் குறிக்கப்படும். ஐந்திணை காதற்சிறப்பைக் கம்பரும் ஆங்காங்கே கையாண்டுள்ளார்.

காப்பியத் தொடக்கமாகிய நாட்டுப்படலத்தில் மருதநில வளத்தினையும் ஏனைய முல்லை, குறிஞ்சி நில வளங்களையும் கம்பர் சிறப்புற பாடியுள்ளார். தாடகைவதைப் படலத்தில் பாலை நிலக் காட்சிகளைப் பாங்குற அமைத்துள்ளார். நிலவருணனை போலவே பெரும்பொழுதாகிய காலை, மாலை, இரவு முதலியவற்றையும் கதைப்போக்கில் அவற்றைக் குறிக்க நேர்ந்த இடங்களில் எல்லாம் எழிலுற வருணிக்கும் காட்சிகளைக் காவியம் முழுமையிலும் பரக்கக் காணலாம். தெய்வம், உணா, மா, மரம், புள் முதலிய கருப்பொருள்களும் ஏற்ற இடங்களில் கவினுறப் புனையப்பட்டுள்ளன. மேலும், பாலக்காண்டத்துள் வரும் காட்சிப்படலம், பூக்கொய்ப்படலம், புனல் விளையாட்டுப் படலம், உண்டாட்டுப் படலம் என்பவை அமைக்கப்பட்ட திறம் காவிய மரபுகளை நன்கு எடுத்துக்காட்டும்.

"குன்று சூழ்ந்த கடத்தொடும் கோவலர்
முன்றில் சூழ்ந்த படப்பையும் மொய்புனல்
சென்று சூழ்ந்த கிடக்கையும் தெந்திறை
மன்று சூழ்ந்த பரப்பும்"

என்று நானில வருணனையைக் காட்டுகிறார் கம்பர். பாலை நிலத்தில் இயல்பையும் கூறுகிறார் கம்பர். கடுமையான வெயிலும் நடப்பவரின் விரல் நுனியைத் தப்பாமல் சிதைக்கும் பரல் கற்களைப் பற்றியும் கூறுகிறார். இராமன், இலக்குவன், விசுவாமித்திரரோடு வேள்விக்காகச் சென்றபோது பாலைநிலம் குறித்த வருணனைச் செய்திகள் காணப்படுகின்றன. பெரும்பொழுது, சிறுபொழுது குறித்த குறிப்புகள் காணப்படுகின்றன.

"பரிதி வானவன் நிலம் பசையற பருகுவோன்
விருது மேற்கொண்டு உலாம் வேனிலே அல்லது ஓர்
இருகு வேறு இன்மையால் எரிசுடர் கடவுளும்
கருதின் வேள் உள்ளமும் காணின் வேம் நயனமும்"

என்று பாலை நிலம் குறித்துக் கூறுகிறார்.

## கருப்பொருள்

குறிஞ்சி, முல்லை, நெய்தல், மருதம், பாலை நிலத்தின் கருப்பொருள்களைக் கூறுவது சங்க அக இலக்கிய மரபு. கம்பரும் கருப்பொருள் குறித்துக் கூறுகிறார்.

1. குறிஞ்சிநிலக் கருப்பொருளை, சந்திரசயிலத்திலும் சித்திரகூட மலை வருணனையிலும் காணலாம்.

2. முல்லைநிலக் கருப்பொருள் குறித்து ஆற்றுப்படலம், வனப்புகு படலம், கார்காலப் படலத்திலும் காணலாம்.

3. மருதநிலக் கருப்பொருள்கள் குறித்து ஆற்றுப்படலம், நாட்டுப்படலம், பம்பை வாவிப் படலம், கங்கைப் படலத்திலும் காணலாம்.

4. பாலை நிலக் கருப்பொருள் குறித்து தாடகை வதைப் படலம், வனம்புகு படலத்திலும் காணலாம்.

"வேங்கை நாறின கொடிச்சியர் வடிகுடில் விரைவண்டு
ஏங்க நாகமும் நாறின நுழைச்சியர் ஐம்பால்
ஓங்கு நாள் முல்லை நாறின ஆய்ச்சியர் ஓதி
ஞாங்கள் உற்பலம் உழத்தியர் பித்திகை நாற"

என்ற பாடல் வரிகளின் மூலம் கருப்பொருள் குறித்துக் கூறுகிறார் கம்பர்.

**ஐந்திணைச் சிறப்புக்கள்**

களவு இன்றி கற்பு இல்லை என்பது கம்பன் நினைவு. களவு வாழ்க்கையின் முதல் நிலையான காட்சி, ஐயம், தெளிவு, தேறல் கம்பரும் கூறுகிறார்.

"நோக்குவை எல்லாம்; அவையே போறல்" என்னும் துறை சங்க அக மரபைச் சார்ந்தது. இராமன் மீது காதல் கொண்ட சூர்ப்பணகை தான் காணும் பொருள் எல்லாம் இராமனாகவே கண்டாள். காதல் மிகுதியால் சீதையும் இந்நிலையே அடைந்தாள்.

தலைவன் வருவானா? என்று அறிய, சங்ககாலத்தில் மகளிர் கூடல் இழைத்து பார்ப்பதுண்டு. கம்பரும் கூடல் இழைத்தல் சிறப்பை அரக்கியர் மூலம் காட்டுகிறார். அரக்கியர் தலைவன் வருவானா? என அறிய, கூடல் இழைத்துப் பார்க்கின்றனர்.

கம்பர் 'பொருள் வயின் பிரிவு', 'பாசறைப் பிரிவு', 'ஓதற் பிரிவு' என்ற மூன்றின் காரணமாக தலைவன் பிரிந்து செல்வான் என்கிறார்.

பிரிவாற்றாமைக் குறித்து சங்க அகமரபில் கூறப்பட்டுள்ளன. கம்பரும் சீதை இராமனைப் பிரிந்து அசோக வனத்தில் இருந்த போது பிரிவாற்றாமையால் வருந்துகிறாள். இராமனை எண்ணி அவனிருந்த திசை நோக்கி, தொழுதல், கீழே விழுதல், வாய்விட்டுப் புலம்புதல், உடம்பு மிகவும் வெப்பம் கொள்ளுதல், அஞ்சுதல், விழுந்த பின்

எழுதல், மனங்கலங்குதல் என்ற செயல்களே தொடர்ந்து செய்த வண்ணம் இருந்தாள் என பிரிவாற்றாமைக் குறித்து கூறுகிறார் கம்பர்.

செவிலி தலைவியின் மெலிவுக் கண்டு வெறியாட்டு நிகழ்;த்துவது சங்க அக மரபு. கம்பராமாயணத்திலும் வெறியாட்டு பற்றிய செய்திகள் (சான்றாக... "அந்தியில் தாக்கி தெய்வமும் உண்டு என்னும்") காணப்படுகின்றன.

**கட்டுடைப்பு**

சங்க அக இலக்கிய மரபைப் பின்பற்றிய கம்பர் மரபில் மாற்றமும் செய்து மரபினைக் கட்டுடைப்பும் செய்துள்ளார்.

- "சுட்டி ஒருவர் பெயர்க் கொளப் பெறாஅர்" என்பது அக மரபு. கம்பராமாயணத்தில் இராமன், சீதை என்று தலைவன் தலைவியர்க்குப் பெயர் சூட்டப்பட்டுள்ளது.
- தலைவி காதலை வெளிப்படுத்துவது இல்லை. ஆனால் இதில் சூர்ப்பணகை தனது காதலை வெளிப்படுத்துவதாகக் காட்டுகிறார் கம்பர்.
- ஆண்பாற் கைக்கிளைதான் அகமரபில் அமைந்துள்ளன. கம்பர் கம்பராமாயணத்தில் பெண்பாற் கைக்கிளையைக் காட்டுகிறார். கைக்கிளைப்படலத்தில் சூர்ப்பணகை இராமன் மீது காதல் கொண்டு நிலவு, கடல் பார்த்துப் புலம்புவதாகக் கூறப்பட்டுள்ளது.
- ஐந்திணைக் காதலில் தனித்தனிப் பாடல்கள் அமையவில்லை.
- ஐந்திணைக் காதலில் காதலைச் சொல்கின்ற முறை முதற்பொருள், கருப்பொருள், உரிப்பொருள் மரபுப்படி அமையவில்லை.
- தலைவனுக்குத் தான் காட்சி, ஐயம், தெளிவு, தேறல் தோன்றும். கம்பராமாயணத்தில் தலைமகளுக்குத் தோன்றியுள்ளதாகக் கூறப்பட்டுள்ளது.
- கூற்று முறை இலக்கியமாக கம்பரின் பாடல்கள் அமையவில்லை.

**நிறைவாக...**

சங்க இலக்கியத்தைப் போல திணை, துறை அமைத்து கம்பர் பாடவில்லை. ஆனால் அந்த செய்திகள் கம்பராமாயணத்தில் இடம் பெற்றுள்ளது. கம்பர் அக மரபையும் பாடியுள்ளார். மரபில் மாற்றம் செய்து கட்டுடைப்பும் செய்துள்ளார்.

# கற்புப் பொருண்மையில் கம்பனின் புதுமை

முனைவர் சே.செந்தமிழ்ப்பாவை
தமிழ்த்துறை, இணைப்பேராசிரியர், அழகப்பா பல்கலைக்கழகம்,
காரைக்குடி.

## முன்னுரை

உலகத்தில் தோன்றிய பொருட்கள் கண்ணுக்குப் புலனாவன, கண்ணுக்குப் புலனாகாதன என்னும் இருநிலையில் அமைந்துள. இதில் கண்ணுக்குப் புலனாகா அருவப்பொருள்களைக் காட்டலாகாப் பொருள் எனத் தொல்காப்பியம் குறிப்பிடுகின்றது. தொல்காப்பியம் சுட்டும் பன்னிரு காட்டலாகாப் பொருள்களில் ஒன்று கற்பு ஆகும். இக்கற்பு என்னும் காட்டலாகாப் பொருள் குறித்த கம்பனின் கருத்தியல் மரபுப் புதுமையைக் காண்பது இக்கட்டுரையின் நோக்கமாகும்.

## தொல்காப்பியம் சுட்டும் காட்டலாகாப் பொருள்கள்

தொல்காப்பியர் பொருளியலில், ஒப்பு, உரு, வெறுப்பு, கற்பு, ஏர், எழில், சாயல், நாண், மடன், நோய், வேட்கை, நுகர்தல் போன்ற பன்னிரு சொற்களின் பொருள்களை நெஞ்சால் உணர மட்டுமே முடியும். பருப்பொருள்கள் போன்று காட்ட முடியாது. அவை நுண் பொருள்கள் என்றுரைப்பர். இதனை,

"ஒப்பும் உருவும் வெறுப்பும் என்றா
கற்பும் ஏரும் எழிலும் என்றா
சாயலும் நாணும் மடனும் என்றா
நோயும் வேட்கையும் நுகர்வும் என்றாங்கு
ஆவயின் வரூஉம் கிளவி எல்லாம்
நாட்டிய மரபின் நெஞ்சுகொழின் அல்லது
காட்ட லாகாப் பொருள என்ப" (தொல்.1193)

என்னும் நூற்பா விளக்கும். இதில் குறிப்பிடப்படும் கற்பு என்னும் சொல்லுக்கு, "மகளிர்க்கு மாந்தர்மாட்டு நிகழும் மனநிகழ்ச்சி: அதுவும் மனத்தான் உணரக் கிடந்தது" என்பர் இளம்பூரணர். (தொல்.பொருள். இளம்.ப.357)

நச்சினார்க்கினியர், "கற்பாவது தன் கணவனைத் தெய்வமென்று உணர்வதோர் மேற்கோள். இது அகத்திற்குரியது. புறத்தில் நிலை கிளர் கூட னீளொவி யூட்டிய பலர் புகழ் பத்தினி (சிலப்.பதிகம்.35-36) என வரும்" என்பர். (தொல்.பொருள்.நச்.ப.517-518)

தமிழண்ணல், கற்பு - மனஉறுதி; சொல் தவறாமை பற்றிய மனநிகழ்ச்சி என்பர். (தொல்பொருள்தனிப.406) இங்ஙனம் உரையாசிரியர்கள் அனைவரும் கற்பு என்பதனைக் காட்டலாகாப் பொருளாகவே கொண்டு உரை வரைந்துள்ளனர். மேலும் தொல்காப்பியர் மெய்ப்பாட்டியலில், கற்பொழுக்கத்தின் கண் நேரும் மெய்ப்பாடுகளைப் பற்றி (தொல்.மெய்ப்.1218) உரைக்கிறாரே தவிர, கற்பை ஓர் உணர்ச்சியாகக் கருதி அதை நிலைக்களனாகக் கொண்ட மெய்ப்பாட்டைக் கூறவில்லை. எனவே தொல்காப்பியக் கருத்துப்படி கற்புணர்ச்சிக்கு மெய்ப்பாடு இல்லை என்பது பெறப்படும்.

சிலப்பதிகாரத்தில் இளங்கோவடிகள், கண்ணகியைத் தெய்வநிலைக்கு உயர்த்தியதால் கவுந்தியடிகள் வாயிலாக,

"கற்புக் கடம்பூண்ட இத்தெய்வம் அல்லது
பொற்புடைத் தெய்வம் யாம் கண்டிலமால்" (அடைக்.காதை.143-144)

என்று தெய்வப்பொலிவு கண்ணகியின் முகத்தில் திகழ்ந்ததை உரைப்பர். கம்பனோ மானிட மகளான சீதையின் கற்புத் திறம் கண்களால் காணத்தக்கது என ஒரு புதுமையைப் புகுத்துகின்றான்.

### கம்பன் காட்டும் கற்பு

கம்பன் 'கற்பு' எனும் சொல்லைக் காவியம் முழுவதும் சீதையுடன் சேர்த்தே உரைக்கின்றான். பாலகாண்டம் நாட்டுப் படலத்தில்,

'...................................... மாதரார்
அற்பின் நின்றன அறங்கள் அன்னவர்
கற்பின் நின்றன கால மாரியே' (கம்.நாட்.ப.59)

என்னும் ஓரிடத்தில் மட்டும் பெண்கள் அனைவருக்கும் உரிய பொதுத்தன்மையாகச் சுட்டப்பெறுகிறது. மற்ற இடங்களிலெல்லாம் சீதையின் குணமேம்பாட்டினைச் சொல்வதற்காகவே 'கற்பு' எனும் சொல்லைக் கம்பன் கையாளுகிறார்.

ஆரணிய காண்டத்தில் சடாயு உயிர் நீத்த படலத்தில் இராவணன் சந்நியாசி வேடங்கொண்டு சீதையிருக்கும் பர்ணசாலையின் முன் வந்து உள்ளிருப்போரை அழைத்தபோது, பர்ண சாலையிலிருந்து வெளியில் வந்த சீதையை இராவணன் கண்ட காட்சியை,

"பொற்பினுக்கு அணியினைப் புகழின் சேக்கையைக்
கற்பினுக்கு அரசியைக் கண்ணின் நோக்கினான்" (சடாயுஉ.ப.837:3-4)

என்றுரைப்பர்.

முதற்போரில் தோல்வியடைந்து வந்த இராவணன் கும்பகருணனைப் போருக்குச் செல்லும்படி கூற, அவனுக்கு அறிவுரை கூறும் கும்பகருணன் கூற்றில்

"............அலகில் கற்புடைச்
சானகி துயர் இனந் தவிர்ந்த தில்லையோ? (கும்ப.வதை.ப.1297:1-2)

"திட்டியின் விடமன்ன கற்பின் செல்வியை
விட்டிலை யோவிது விதியின் வன்மையே" (கும்ப.வதை.ப.1298:3-4)

என ஈரிடங்களில் சீதையின் கற்பு நலம் சுட்டப்பெறுகிறது.

வீடணன் இராவணனிடம், சானகியின் கற்புத்தழலால்தான் இலங்கையும், உன் வெற்றியும் அழிந்தனவேயன்றி, ஒரு வானரம் சுட்டுவிட்டதென்று நினைப்பது நல்லறிவாமோ? (யுத்தகாண்டம்.இரா.ம.ப.87) என்றுரைக்குமிடத்து சீதையின் கற்பு மேன்மை உரைக்கப்படுகிறது.

மேலும், நிறைமொழி மாந்தர்க்குரிய ஆக்கும் திறன், அழிக்கும் திறன் ஆகியன கற்புடைப் பெண்டிர்க்கும் உண்டு என்பதைச் சீதையின் இருகூற்றுவழி வெளிப்படுத்துவர் கம்பர். சீதை, 'இன்றுபோல் என்றும் நீ இருக்க' என அனுமனை வாழ்த்த, அவன் தீச்சுடாமல் இருந்தான். அங்ஙனம் ஆக்கும் திறன் பெற்ற கற்புக்கனலி, அழிக்கும் ஆற்றலையும் பெற்றிருந்ததை,

"அல்லல் மாக்கள் இலங்கைய தாகுமோ
எல்லை நீத்த உலகங்கள் யாவும்என்
சொல்லினால் சுடுவேன் அது தூயவன்
வில்லின் ஆற்றற்கு மாசென்று வீசினென்" (சூளாம.ப.18)

என்னும் பாடல் விளக்கும்.

**சீதையின் கற்பால் பெண்ணினம் பெற்ற பெருமை**

"சீதையின் கற்புச் சிறப்பால் தேவர்களின் மனைவியர் பெருமை பெற்றனர்: உமை சிவனின் தலைமேல் இருக்கப்பெற்றாள் திருமகளும் திருமாலின் ஆயிரம் முடிகளின்மேல் இருக்கத்தக்கவளாகிவிட்டாள்" (திருவடி.தொ.ப.67) என்ற அனுமன் கூற்றால் சீதையின் கற்பால் மண்ணுலகத்து மாதரேயன்றி இந்திராணி முதலிய வானவ மாதர்களும் சிறப்பு அடைந்தமையும், பெண் குலத்திற்கே பெருமை கிட்டியமையும் பெறப்படும்.

**கம்பனில் புதுமை**

கண்ணில் காண இயலாத பொருளாக விளங்கும் பொருளாகிய

கற்பை, கம்பன் கண்ணில் காணும் பொருளாக, அனுமன் கூற்றில் வைத்து உரைக்கின்றான். அனுமன் இராமனிடம் சீதையைத் தான் கண்டதைக் கண்டேன் என்று மட்டும் உரைக்காது, கண்டேன் கண்களால் என்று கூறினன். அக்காட்சி அளவை முறையால் கண்டதில்லை; ஊகித்துக் கண்டதில்லை; கண்களாலேயே கண்டது என்பதை 'கண்டேன்' என்று வற்புறுத்துகின்றான். (திருவடி.தொழு.ப.58) கண்களால் கற்பைக் காண்பது எவ்வாறு? மெய்ப்பாடுகளைக் கொண்டு காண்பதல்லது வேறு வழியில்லை. எனினும் அனுமன் இராமனிடம் மீண்டும்,

"விற்பெருந் தடந்தோள் வீர! வீங்குநீர் இலங்கை வெற்பில்
நற்பெருந்தவத்தாளாய நங்கையைக் கண்டேன் அல்லேன்
இற்பிறப்பு என்பது ஒன்றும் இரும்பொறை என்பதொன்றும்
கற்பெனும் பெயரதொன்றும் களிநடம் புரியக் கண்டேன்"

(திருவடி.தொ.பட.29)

என்றும், தவம் செய்யும் தவமாம் தையல் (திருவடி.தொ.ப.64) கண்ணினும் உளைநீ; தையல் கருத்தினும் உளைநீ; வாயின் எண்ணினும் உளைநீ (திருவடி.தொ.ப.63) என்று தான்கண்ட மெய்ப்பாடுகளைக் கூறிக் கற்பைக் கண்டேன் கண்களால் என உறுதி செய்வதன் வழி, கற்பு கண்களால் காணும் ஒன்று என்று கம்பன் உரைப்பதை அறியமுடியும்.

**முடிவுரை**

தொல்காப்பியம் கற்பு உள்ளிட்ட பன்னிரு பொருட்களைக் காட்டலாகாப்பொருள் என்றுரைக்கிறது. தொல்காப்பிய உரையாசிரியர்களும் கற்பு என்பதற்கு இது மனநிகழ்ச்சியால் உணர்வது தானே அன்றிக் காட்ட இயலாது; அவர்தம் செயல்களால் இது வெளிப்பட்டுத் தோன்றும் என்பர். கம்பன் தன் காப்பிய நாயகியான சீதையின் கற்புத்திறம் மன அளவிது மட்டுமன்று; கண்களால் காணும் பொருள்; அது காட்டும் பொருள் என்பதைத் தம் காவியத்தில் வெளிப்படுத்தி, கருத்தியல் நிலையில் தான் ஒரு புதுமை நோக்கினன் என்பதை நிரூபித்துள்ளமை சுட்டுதற்குரியது.

# கம்பனில் புறமரபுகள்

திருமிகு சு. முரளி
வேலூர்.

## அறிமுகம்

முழுமை பெற்ற மனிதர்களுக்கெல்லாம் முன்னோடியாக இராமாயண நாயகன் இராமன் திகழ்கின்றான். இராமபிரான் வாழ்ந்து காட்டிய இலட்சிய வாழ்க்கையைக் காட்டுவது இராமாயணமாகும்.

## கோசலநாடு

ஒருவர் இயல்பாகப் பெற்றுள்ள அறிவு, முயன்று பெறுகின்ற கல்வி அத்துடன் நற்பண்புகள், நல்லொழுக்கம் சேரும் பொழுது முழுமையான மனிதராக விளங்குகின்றார் என்பது அறிஞர் கருத்து. "மனிதன் ஐம்புலன்களான கண், வாய், மூக்கு, செவி, தோள் ஆகியவற்றைக் கட்டுப்பாட்டில் வைத்திருந்தால் எந்தச் சிக்கலும் இல்லை. கோசல நாட்டு மக்கள் ஐந்து புலன்களால் நெறி பிறழ்ந்தே இல்லை என்பது தான நாட்டிற்குப் பெருமை"(இராமலிங்கம். த. கம்பன் கவிச்சோலையில்,ப-5.) என்கிறார் த. இராமலிங்கம். அவரது கூற்று அந்நாட்டில் உள்ள மக்களின் பண்பு ஒழுக்கங்களை வெளிப்படுத்துகின்றது.

## புறநானூறு

சங்க இலக்கியங்கள் அக்கால மக்களின் வாழ்க்கையைக் காட்டுவர். அதில் தேவர்கள் உண்ணக்கூடிய அமிழ்தம் கிடைத்தாலும் தனித்து உண்ணாத தகைமையாளர்கள் தமிழர்கள் என்பதைப் புலப்படுத்தும் புறநானூறு பாடல்,

> "உண்டால் அம்மஇவ் வுலகம்
> இந்திரர் அமிழ்தம் இயைவ தாயினும்
> இனிதுஎனத் தமியர் உண்டலும் இலரே; முனிவிலர்;
> துஞ்சலும் இலர்; பிறர் அஞ்சுவது அஞ்சிப்
> புகழெனின் உயிரும் கொடுக்குவர்;பழியெனின்
> உலகுடன் பெறினும் கொள்ளலர்;அயர்விலர்;
> அன்ன மாட்சி அனையர் ஆகித்
> தமக்கு என முயலா நோன்தாள்
> பிறர்க்கு என முயலுநர் உண்மையானே"

என்று பாடினான் கடலுள் மாய்ந்த இளம் பெருவழுதி.

இந்திரன் உண்ணக் கூடிய அமிழ்தம் கிடைத்தாலும் இனிமையாக இருக்கிறது என்று தனியே உண்ணாதவரும், யாருடனும் வெறுப்புக் காட்டாதவரும், சோம்பல் இல்லாதவரும், அஞ்சத் தகுவனவற்றிற்கு அஞ்சி வாழ்பவரும், புகழ் கிடைக்குமெனில் உயிரையே கொடுப்பவரும், உலகமே கிடைப்பினும் பழிசெய்யாதவரும், மனக்கவலை இல்லாதவரும், தமக்காகமட்டும் முயலாமல் பிறர் நன்மைக்காகவும் முயல்பவரும் இருப்பதால் உலகம் நிலைபெறுகின்றது.

மேற்கண்ட கருத்து, தன்னுயிர்க்கு இரங்காது பிறவுயிர்க்கு இரங்கி, உதவி வாழ்வதைக் குறிக்கோளாகக் கொண்ட பண்பாளர்களே வாழ்வியல் முறைக்குச் சான்றாவார்கள். மனிதநேயம் வளர்ந்து மக்களின் வாழ்வில் மகிழ்ச்சி பொங்க வேண்டும் என்று கருதிய பேரறிவாளர்களில் கம்பரும் ஒருவர் ஆவார். நீதி நூல் ஆசிரியர்கள் தம்கொள்கைகளை நேரடியாகக் கூறுவர். காப்பியம், நாடகம், புதினம் புனையும் படைப்பாளர்கள கதைமாந்தர்கள் வாயிலாகவும், நேரடியாகவும் கூறுவர். "கம்பர் தன் வாழ்வியல் கொள்கையைக் கவிக்கூற்றில் அமைத்தும் பாடுகின்றார், மாந்தர்களின் வாயிலாகவும் பாடியுள்ளார்"(சின்னு.மா. கம்பர் காட்டும் வளங்கள், ப.18) எனக் குறிப்பிட்டுள்ளார். மக்களின் நிலையை உணர்ந்தவர் கம்பர். அதனால்தான், "மன்னர் மரபில் பிறந்த இராமனைப் பாடினாலும் மனித நேயக் கொள்கைகளைக் காப்பியத்தொடக்கத்திலிருந்து இறுதிவரை இடையிடையே கூறியுள்ளார்." (மேற்படி, ப. 89)

இராவணவதம் முடிந்தபிறகு வானுலகிலிருந்து வந்த தயரதன் இராமனிடம் வரம் கேட்கத்தூண்டுகிறார் எவ்வளவு மறுத்தும் விடாமல் 'ஏதாவது வரம் கேள்' என்று தயரதன் கேட்டதற்கு, 'தீயள் என்று நீ துறந்திருக்கிறாயே என் தெய்வமாகிய கைகேயி அவளை நான் அம்மா என்று மீண்டும் அழைக்க வேண்டும். அவளது மகன் பரதனை தம்பி என்று அழைக்க வேண்டும். இந்த வரத்தை நீ எனக்குத்தா' என்று கேட்டான் இராமன். இது இராமனின் மன்னிக்கும் நேயத்தையும், தீங்கு செய்பவருக்கும் நன்மையே செய்ய வேண்டும் என்ற உயர்ந்த உள்ளத்தையும் வெளிப்படுத்துகின்றது. தனிமனிதப் பண்புகள், குணநலன்கள் காப்பியம் முழுவதில் இடம் பெற்றுள்ளன. ஒரு மனிதன் இந்தப்பூமியில் எப்படி வாழவேண்டும் என்பதை எடுத்துக் காட்டுவது இராமகாதையின் நோக்கமாகும்.

அறிவியலிலும் ஆன்மிகத்திலும் எவ்வளவு வளர்ச்சி அடைந்திருந்தாலும் மனிதனின் பிறப்பையும் இறப்பையும் மனிதனால்

தெரிந்து கொள்ள முடியாது. அந்த இரண்டையும் தீர்மானிப்பவன் இறைவன், எனவே அவனே தலைவன் என்று கம்பராமாயண, கடவுள் வாழ்த்துப்பாடலில் கம்பர் வலியுறுத்துகிறார்.

**அறநெறி**

அறம் என்பது தமிழிலக்கியங்களில் பல்வேறு பொருள்கள் விளக்கப்படுகிறது. தரு என்ற சொல்லின் அடியாகப் பிறந்தது தருமம் என்பதே அறம் என்று தமிழில் வழங்கப்படுகின்றது. வள்ளுவர், நல்லொழுக்கம் என்னும் விதையிலிருந்து முளைப்பது அறம். இது என்றும் இன்பம் தரும் தீய ஒழுக்கம் என்னும் விதையிலிருந்து தோன்றுவது பாவம். இது என்றும் தீமையைத் தரும் என்பதை,

"நன்றிக்கு வித்தாகும் நல்லொழுக்கம் தீயொழுக்கம்
என்றும் இடும்பை தரும்' (திருக்குறள் - 138)

என்கிறார். வள்ளுவர் அறத்தை நன்றி என்று குறிப்பிடுகிறார். ஆக அறம் என்பது நல்லொழுக்கத்திலிருந்து தோன்றுவது என்று அறியலாம். மேலும், மனத்துக்கண் மாசு இலனாதல் அனைத்து அறன் என்று கூறியுள்ளார். எனவே, முதலில் மனத்தூய்மை வேண்டும். காவியத் தொடக்கமாகிய பாலகாண்டத்தில் கோசல நாட்டின் உயர்வைக் குறிக்கும் பொழுது,"ஆற்ற நல்லறம் அல்லது இலாமையால் ஏற்றம் அல்லது இழிதகவு இல்லையே" (சின்னு. மா, கம்பர் காட்டும் வளங்கள், ப.18.) என்று தருமத்தை நல்லறம் என்று கம்பர் குறிப்பிட்டுள்ளார்.

**நல்லறமும் தீயறமும்**

இராமனுக்கு முடிசூட்டப் போவது தெரிந்ததும் கைகேயின் மணத்தை, கூனி திரிக்க முயல்கிறாள். அப்போது கைகேயி, 'எனக்கு நல்லையும் அல்ல நீ, என்மகன் பரதன் தனக்கு நல்லையும் அல்லை நீ தருமமே நோக்கின் உனக்கு நல்லையும் இல்லை' என்கிறாள். தோழி, தலைவிக்கு விருப்பமுள்ளவற்றைப் பேசுதல் தருமம் என்று குறிப்பிடப்படுகிறது. அவ்வாறு பாவத்தின் எதிர்மறையான தருமம் பாவத்தின் பல இடங்களில் பல பொருள்களில் வந்துள்ளது. அதாவது நல்லறமும் தீயறமும் இடம் பெற்றுள்ளது. அது இராமனின் அறநெறியை வெளிப்படுத்துகின்றது.

**குருபக்தி**

இராமன் விசுவாமித்திரரின் விருப்பப்படி தாடகையை அழிக்கிறான். அந்த நிகழ்ச்சி இராமன் தன்ஆசிரியர் விசுவாமித்திரரிடம் கொண்டுள்ள

பெருமதிப்பை வெளிப்படுத்துகின்றது. "தாடகை பெண் எனக் கொண்டு தயங்கிய நிலையில் முனிவன் மொழி கேட்டு இராமன் செயல்பட்டது இராமனின் குருபக்தியைக் காட்டுகின்றது.

### இலட்சுமணனின் கடமையுணர்வு

கானகத்தில் இராமனும் சீதையும் உறங்க, இலட்சுமணன் இரவு முழுவதும் இமையாது, வில்லையூன்றிய கையனாய், பெருமூச்சினனாய் இராமனுக்கு நேர்ந்த துன்பத்தை நினைத்து, கண்ணீர் சொரிந்தபடி காவல்புரிந்து நின்றான் என்பதை, "அல்ல யாண்டு அமைந்த மேனி அழகனும் அவளும் துஞ்ச வில்லையூன் வியகையோடும் வெய்து-யிர்ப்போடு வீரன் கல்லையாண்டு உயர்ந்த தோளாய் கண்களில் நீர் சொரியக் கங்குல் எல்லை காண்பளவு நின்றான் இமைப்பில் நயனம் என்றான்" (டாக்டர். துரை. இராசாராம், கம்பஇராமாயணத்தில் சில படலங்கள், ப.45) இக்கருத்து இலட்சுமணன் இராமன் மீது கொண்ட பற்றையும் கடமையையும் வெளிப்படுத்துகின்றது.

### போர் தர்மம்

இலங்கையில் நடந்த இராம-இராவண முதல்நாள் போரில் இராவணன் ஆயுதங்களையும் சேனைகளையும் இழந்து நின்றதைக் கண்ட இராமன், இப்படியாவும் இழந்து இருக்கின்றவனைக் கொல்லலாகாது என்று கருதி, சென்று படைகளையும் ஆயுதங்களையும் சரி செய்து கொண்டு நாளைக்குப் போரில் விருப்பமிருந்தால் வா என்று இரக்கத்தோடு கூறியனுப்பியதை,

"ஆளையா உனக்கு அமைந்தன மாருதம் அறைந்த
பூளை யாயின் கண்டனை, இன்று போய், போர்க்கு
நாளைவா என நல்கினான், நாகிளங் கமுகின்
வாளைதாவுறு கோசலை நாடுடை வள்ளல்"

என்கிறார் கம்பர். இதனால் இராமனின் வீரத்தில் கருணையைக் காணமுடிகிறது. மேலும், "இன்று போய் நாளை வா" என்று இராமன் கூறும் சொல் அவனைப் போர்க்களத்திலும் வள்ளலாக விளங்கச் செய்துள்ளதை உணர முடிகின்றது.

### வறுமை ஒழிப்பு

வறுமையை ஒழிப்பதில் உழவர்கள் முக்கியப் பங்கு வகிக்க வேண்டும் என்று கருதுகிறார். அந்த எண்ணத்தைக் கோசல நாட்டின் சிறப்புகளைப் புகழ்ந்து பாடும்போது வெளியிடுகிறார். இதனை,

"எறிதரும் அரியின் சும்மை" என்ற வரிகள் உணர்த்தும். கோசல நாட்டு உழவர்கள் வயலில் அறுவடை செய்து, நெற்கதிர்களை அடித்துக் குறித்த நெல்லை, முதலில் வறுமையில் உழலும் ஏழை எளியவர்களுக்கு வழங்குவார்கள். பிறகு, தம் வீட்டிற்கு வரும் விருந்தினர் பசியைப்போக்க மீதி நெல்லை வண்டியில் ஏற்றி எடுத்துக் கொண்டு செல்வார்கள். வேளாளன் விருந்திருக்க உண்ணாத பெருந்தகையாளன் என்பதைப் புலப்படுத்துகின்றது.

**படித்த மகளிர்**

கோசல நாட்டின் ஒவ்வொரு குடும்பமும் தேவையான செல்வம் பெற்றிருக்கிறது. "மகளிர் அளவான கல்வி கற்றிருக்கின்றனர். பொருட்செல்வமும் கல்விச் செல்வமும் பெற்றதற்குஅடையாளமாகத் தம் இல்லத்தை நாடி வரும் வறியவர்க்கு விருந்தினர்க்கும் உணவு படைப்பதைத் தங்கள் கடமையாக கொண்டிருந்தனர்" என்கிறார் மா. சின்னு.

**பரதனின் பரந்த உள்ளம்**

பரதன் தாயின் வஞ்சனையை முன்னமே அறிந்திருந்தேன் என்றால்,

"ஆறுதன் உடன் வரும் அச்சொல் மாதரை
ஊறு கொண்டு அலைக்க தன்னுயிர் கொண்டேகினோன்,
சோறுதன் அயலுளோர் பசிக்கத் துய்த்துளோன்
ஏறும் அக் கதியிடை யானும் ஏறவே"

(அயோத்தி பள்ளிப்படை - 130)

அதாவது, வழித்துணையானவன் என்று நம்பி வந்த பெண்ணை வழியில் துன்புறுத்தியவன் அடையும் கதியை அயலே உள்ளவர் பசித்திருக்க அவருக்கு ஈயாது சோறு உண்டு மகிழ்பவன் அடையும் கதியை யானும் அடைவேனாக என்கிறான். அதன்வாயிலாக பரதனின் மனத்தூய்மையையும், பகுத்துண்டு வாழ வேண்டும் என்ற மனிதநேயக் கொள்கையை அறிய முடிகின்றது.

# கம்பனில் தொல்காப்பியக் காஞ்சித்திணைக் கூறுகள்

திருமிகு சு. பழனிராஜ்
முனைவர் பட்ட ஆய்வாளர், தமிழ்த்துறை, புதுவைப் பல்லைக்கழகம்,
புதுச்சேரி.

**முன்னுரை**

சங்ககாலப் புலவர்கள் அகவாழ்க்கைக்கு அளித்த சிறப்பினைப் புறவாழ்க்கைக்கும் அளித்தனர். அதனாலேயே அகத்திணைகளும் அவற்றிற்கொத்த புறத்திணைகளும் பாடப்பெற்றன. கம்பர் தம்காப்பியத்தில் இராம இராவணப் போரினுக்குச் சிறப்பிடம்தந்து தனியொரு காண்டமே பாடியுள்ளார். பத்தாயிரத்து நானூறு பாடல்கள் கொண்ட இக்காப்பியத்தில் நாலாயிரம் பாடல்கள் யுத்தகாண்டத்தில் உள்ளன. காப்பியத்தின் கதை வளாச்சியிலும் தாடகைவதை, வேள்வி காக்க அரக்கர்களுடன் போர், பரசுராமன் போர், கரன்வதை, வாலிவதை போன்ற பல போர்கள் இடம் பெற்றுள்ளன. என்றாலும் கம்பர் பின்பற்றும் புறத்திணை மரபுகளை யுத்தகாண்டததில் நன்கு அறிய முடிகிறது. கம்பர் காட்டும் போர்கள் வான்மீகி காட்டும் போர்களிலிருந்து வேறுபட்டுத் தமிழர் போர்முறையை ஒட்டி அமைகின்றன. வெட்சி, வஞ்சி, உழிஞை, தும்பை, வாகை, காஞ்சி, பாடாண் என்ற புறத்திணைகளையும் அவற்றின் துறைகளையும் கம்பர்தம் காப்பியத்தில் காணமுடிகிறது.

**காஞ்சித்திணை**

நிலையாமையினைக் கூறுவது காஞ்சி என்கிறார் தொல்காப்பியர்.

"பாங்கருஞ் சிறப்பிற் பல்லாற்றானும்
நில்லா வுலகம் புல்லிய நெறித்தே"

என்பது நூற்பா. கம்பர் 'பொய்ம்மை யாக்கை' 'பிணிக்கு உறுமுடை உடல்', 'நீர்க்கோல வாழ்வு' என்று உடல்நிலையாமையையும் வாழ்வு நிலையாமையையும் குறிப்பிடுகிறார். 'இறத்தலும் பிறத்தலும் இயற்கை' என்றும், 'உண்மை இல் பிறவிகள் உலப்பில் கோடிகள்' என்றும், 'நின்றும் சென்றும் வாழ்வான யாவும் நிலையாவால்' எனறும் நிலையாமைக் கருத்துக்களைக் கம்பர் கூறியுள்ளார். தந்தையின் சாவுக்கு வருந்திய இராமனை வசிட்டர்.

"கண்முதல் காட்சிய, கரையில் நீளத்த,
உள்முதல் பொருட் கெலாம் ஊற்றம் ஆவன

மண்முதல் பூதங்கள் மாயும் என்றபோது
எண்முதல் உயிர்க்கு நீ இரங்கல் வேண்டுமோ?"

எனத் தேற்றுகிறார். கடவுளர்க்கும் இறுதியுண்டு என்பதைக் கம்பர்.

"பூவின்மேல் புனிதற்கேனும்
அறத்தினது இறுதி வாழ்நாட்கு இறுதி. அஃது உறுதி"

என்று கூறியுள்ளார். இத்தகைய நிலையாமைக் கருத்தமைந்த பாடல்களைத் தொல்காப்பியர் கூறும் வண்ணம் காஞ்சித் திணையைச் சார்ந்தவை எனலாம். ஆயினும் கம்பர் நிலையாமைக் கருத்தைக் கூறும் எவ்விடத்தும் காஞ்சி என்னும் பெயரைக் குறிப்பிடவில்லை.

**காஞ்சித் துறைகள்– மன்னைக்காஞ்சி**

தசரதன் இறந்த செய்தி கேட்ட பரதனும் இராமனும் புலம்புகின்றனர். இராவணன் இறந்தமைக்கு வீடணனும், வாலிக்காகச் சுக்கிரிவனும், இந்திரசித்தனுக்காக இராவணனும் புலம்புவது மன்னைக்காஞ்சி என்னும் துறை எனலாம்.

**வஞ்சினக் காஞ்சி**

போர் மேற்கொள்ளும் சோழன் நலங்கிள்ளியும் தலையாலங் கானத்துச் செருவென்ற நெடுஞ்செழியனும் வஞ்சினம் கூறிச் செல்வதைப் புறநானூறு கூறுகிறது.

கம்பராமாயணத்தில் இராம இலக்குவரோடு போரிடவரும் இந்திரசித்தன், மகரக்கண்ணன், கும்பகருணன் ஆகியோரும் இராம இலக்குவரும் வஞ்சினம் கூறிப் போரிடுகின்றனர்.

இந்திரசித்தன் "எம்பியைக் கொன்றவன் யாக்கையை நீக்கியல்லால் இலங்கைக்கு வாரேன்! வாழ்வும் வேண்டேன், இலக்குவனைப் போரில் கொல்வேன். அன்றெனின் செங்கண்மால் முதலான தேவர்களாகிய என் பகைவர் என்னைக்கண்டு நகைக்கட்டும். நான் இராவணன் மைந்தனுமல்லேன், பகை வெல்லாவிடின் சோறு உவந்து வாழேன்' என்று பல வஞ்சின மொழிகளைக் கூறுகிறான்.

அதிகாயன் இராவணனிடம் 'உன்தம்பி (கும்பகருணன்)யின் உயிர் பறித்த இராமனது தம்பியைக் கொன்று உன் துயர் அவனுடையக் காண்பேன். அல்லனேல் நினக்கு மகன் அல்லேன்' என்று வஞ்சினம் கூறுகிறான்.

வஞ்சினக்காஞ்சித் துறை சார்ந்த பல பாடல்கள் கம்பராமாயணத்தில் இடம் பெற்றுள்ளன.

### பூசன் மயக்கு

பெரும்புகழ் நிறுவிப் போரில் பட்ட தலைவனைச் சுற்றிப் பெண் கிளையோர் அழுது புலம்புவது பூசன் மயக்கு என்கிறார் நச்சினார்க்கினியர். (தொல். புறத். நச். ப. 244) அதிகாயன் இறக்கத் தானியமாலியும், இந்திரசித்தன் இறக்க மண்டோதரியும், வாலியிறக்கத் தாரையும் புலம்புவதை இத்துறை சார்ந்தன எனலாம்.

### மகட்பாற் காஞ்சி

சீதையை மணந்துகொள்ள வந்த அரசர்கள் சனகன் காட்டிய வில்லை வளைக்க இயலாது வருந்தியும், சீதைமேல் கொண்ட காதலைத் தவிர்க்காது, அவளைப்பெறச் சனகனுடன் போர் செய்தனர். இதை மகட்பாற் காஞ்சி எனலாம். சீதையின் பொருட்டே இராம இராவணப் போர் நிகழ்ந்ததால் இதையும் மகட்பாற் காஞ்சி என்கிறார் க. ப. அறவாணன்.(க.ப. அறவாணன், அற்றைநாட் காதலும் வீரமும், பக்.227-228) தலைவன் இறந்தபின் தலைவியின் நிலை குறித்துப் பல துறைகள் வகுக்கப்பட்டுள்ளன.

### தலையொடு முடிதல்

போர்க்களத்தில் இறந்துபட்ட தலைவன் உடலைத்தேடி அதைத் தழுவி இறக்கும் தலைவியின் செயலைத் 'தலையொடு முடிதல்' என்ற துறையாகக் கூறுகிறார், ஐயனாரிதனார். இதைக் கம்பர் 'கொய்தலைப் பூசல்' என்கிறார். முதற் போரில் தலைவனைத் தேடிக் களம் வந்த தலைவியின் செயலைக் கம்பர்,

> "அரவநுண்ணிடை அரக்கிறர் கணவர்தம் அற்ற
> சிரமும் அன்னவை ஆதலின் வேற்றுமை தெரியாப்
> புரவியின் தலை பூட்கையின் தலை இவை பொருத்திக்
> கரவு இல் இன்னுயிர் துறந்தனர் கவவுறத் தழுவி" (7251)

என்கிறார். ஒருத்தி தன் தலைவன் தலை தழுவி இறக்க விரும்பித் தலைமைத் தேட, அது ஒரு பேய் கையில் இருப்பது கண்டு பறித்தனள் என்றும், சில தலைவியர் வல்லி சுற்றிய மாமரம் எனக் கணவனைத் தழுவி இறந்து கிடந்தனர் என்றும் கூறப்பட்டுள்ளன.

### இராவணன் இறந்தபின் அவன் உரிமை மகளிரது செயல்

> "தழுவினர் தழுவினர் தலையும் தாள்களும்
> எழுவுயர் புயங்களம் மார்பும் எங்கணும்
> குழுவினர் முறைமுறை கூறுகூறு கொண்டு
> அழுதனர் அயர்த்தனர் அரக்கி மார்களே" (9934)

எனக் கூறப்பட்டுள்ளது.

**மூதானந்தம்**

தலைவனோடு தலைவியும் இறக்க அதுகண்டு வாழ்த்துவது இத்துறை. சில அரக்கியர் களத்தில் வீழ்ந்து கிடந்த தலைவனைக் கண்டு தாமும் இறந்துபடுகின்றனர். கம்பர் 'ஆவி ஒன்று உடல் இரண்டு ஆயதாலே கொலாம் என வியக்கிறார். இராவணனைத் தழுவி மண்டோதரி இறக்க அவளை எல்லா உலகப் பெண்களும் வழுத்துவது இத்துறையே.

**தாபதநிலை**

தலைவனுடன் வாழும் தலைவி தன்னை அணிகலன்களாலும் மணப்பொருள்களாலும் புனைந்து கொள்ளுதல் மரவு தலைவன் இறந்துபடின் அவைந விக்கி இலையுணவுண்டு அவனுக்காகச் சில கடன்கள் கழித்து வாழ்வது தாபநிலை என்பர். வாலி இறந்தபின் தாரையின் நிலை,

"மங்கல அணியை நீக்கி, மணிஅணி துறந்து வாசக்
கொங்கலர் கோதை மாற்றி குங்குமம் சாந்தம் கொட்டாப்
பொங்கு வெம்முலைகள் பூகக் கழுத்தொடு மறையப் போர்த்த
நங்கை................" (4320)

எனக் கூறப்பட்டுள்ளமை இத்துறை எனலாம். கரனின் மனைவி தன் தலைவனைக் கொன்ற இராமன் தலையையே கலமாகக் கொண்டு கடன் களிக்க நினைப்பதும் இத்துறை எனவும் கூறலாம்.

**பாலைநிலை**

தலைவன் இறந்துபட அவனோடு எரி மூழ்கும் தலைவியின் நிலையைப் பேசுவது பாலைநிலையாகும். இதை ஆஞ்சிக்காஞ்சி என்கிறார் ஐயனாரிதனார். தசரதன் இறந்தபின் அவனுக்கு ஈமக்கடன் முடிந்தபின் அவனது பெருந்தேவியரை ஒழிந்த ஏனைய தேவியர் எரிமூழ்கினர். மாயமான் பின்ஓடிய இராமனின் குரலெடுத்து மாரீசன் அலற, இராமனுக்கு இறுதி நேர்ந்ததோ என அஞ்சி சீதை, தீக்குளிக்க முயலுவதையும் ஒருவாறு இத்துறையுள் சேர்க்கலாம்.

**முடிவுரை**

இவ்வாறு கம்பராமாயணத்தில் தொல்காப்பியக் காஞ்சித்திணைக் கூறுகள் விரவிக் காணப்படுகின்றன. காஞ்சி என்ற சொல் கம்பராமாயணத்தில் இடம்பெறாவிட்டாலும், காஞ்சித்துறைகள் இடம்பெற்றுள்ளன. அவை நிலையாமைக் கருத்தை உணர்த்தி நிற்கின்றன. மன்னைக் காஞ்சி, மகட்பாற்காஞ்சி, தாபதநிலை எனக் காஞ்சித் துறைகள் பல பரவிக் காணப்படுகின்றன.

# கம்பராமாயணத்தில் பெருமிதச் சுவை

திருமிகு சி.அருள்செல்வம்
முனைவர் பட்ட ஆய்வாளர்,
சென்னை.

## முன்னுரை

"உண்ணிகழ் தன்மை புறத்துத் தோன்ற
எண் வகை மெய்ப்பாட்டி னியல்வது சுவையே"

உள்ளத்து நிகழும் குறிப்புணர்வு புறஉடலில் ஏற்படுத்தும் மாற்றங்களான மெய்ப்பாடுகளையே சுவை என்று கூறுகிறார் தண்டியாசிரியர். சுவைகள் எத்தனை என வரையறுக்க முடியாது. காரணம், நிமிடந்தோறும் தோன்றி மறையும் உணர்வுகள், நீங்காது அமையும் சில உணர்வுகள் என்பவற்றை பலரும் பலவிதமாக அனுபவிக்கவும், வெளிப்படுத்தவும் கூடும். இருப்பினும் தொல்காப்பியம் கூறும் எண்வகை மெய்ப்பாடுகளான நகை, அழுகை, இழிவரல், மருட்கை, அச்சம், பெருமிதம், வெகுளி, உவகை, என்னும் எண்வகை மெய்ப்பாடுகளை தண்டியாசிரியர் எண்சுவை எனக் குறிப்பிடுவதால் சுவைகள் எட்டு என்பதை அறியலாம். இந்தச் சுவைகளுள் பெருமிதம் என்னும் சுவையானது கம்பராமாயணத்தில் வெளிப்படுத்தப்படுகின்ற சில காட்சிகளை இக்கட்டுரையில் காண்போம்.

## பெருமிதம் என்னும் சுவை

இலக்கியச்சுவை, பலவகை உணர்வுகளின் வெளிப்பாட்டால் அமையும். இலக்கியத்தைப் படைக்கும் படைப்பாளியின் உணர்வுகள், கற்போர் உணர்வுகள் என இருபுலத்தாரின் உணர்வுகளும் கலந்து வெளிப்படும் மெய்ப்பாட்டால் சுவை பிறக்கிறது. பெருமிதம் என்ற சுவை தோன்ற கல்வி, தறுகண், இசைமை, கொடை என்று தொல்காப்பியர் காட்டும் நான்கு நிலைக்களன்களைக் கூறுகிறார். இதன்வழியாக கம்பராமாயணத்தில் பல இடங்களில் பெருமிதச் சுவைகள் காட்டப்பட்டுள்ளன.

## கோசல நாட்டின் பெருமிதம்

ஊழிக்காலத்தில் கடல் நீர் பெருகிக் கடுங்காற்றால் மோதப்பட்டு வந்தாலும் அழிதல் இல்லாத தன்மையுடையது கோசலம் என்கிற குற்றம் இல்லாதநாடு. இங்கு வறுமை இல்லை என்பதால் பரிசுகளைத் தருவதற்கு வள்ளல் என்று யாரும் இல்லை. இம்மக்களின் வீரத்திற்கும்

ஆற்றலுக்கும் அஞ்சி நேருக்குநேர் போர் செய்யும் பகைவர்கள் இல்லை என்பதால் இவர்கள் வலிமையை பறைசாற்ற வழியில்லை. பொய் பேசுதல் இல்லை என்பதால் இந்த மொழிதான் உயர்வான சத்தியமொழி எனப்பிரித்துக் கூற இயலாத நிலை. இங்கு யாவரும் கேள்வி ஞானம் உடையவர்களாயிருப்பதால் இவர் ஒருவரே தக்க அறிஞர் எனப் பிரித்துப்பார்க்கும் நிலை இல்லை. கோசல நாட்டுப் பெண்களும், பொருந்திய செல்வமும் கல்வியும் கொண்டு விளங்குகின்றனர். இதனை,

"பெருந்த டங்கட் பிறைநுத லார்க்கெலாம்
பொருந்து செல்வமும் கல்வியும் பூத்தலால்
வருந்திவந்தவற்கு ஈதலும் வைகலும்
விருந்தும் அன்றி விளைவன யாவையே" (பால. நாடு - 68)

என்று கம்பராமாயணம் கூறுகிறது. பெருமிதம் தோன்றுவதற்கான காரணங்கள் அனைத்தும் இதில் அடங்கியுள்ளன. கோசல நாட்டு மக்கள் கல்வி அறிவிலும், கேள்விஞானத்திலும், வீரத்திலும், புகளிலும், கொடையிலும் சிறந்து பெருமிதத்தோடு விளங்கியதைக் காண்கிறோம்.

**அனுமனின் பெருமிதம்**

சீதையைத் தேடி இலங்கைக்குச் சென்ற அனுமன் சீதையைக் கண்டு தான் இராமனால் அனுப்பப்பட்டு வந்துள்ளேன் எனக் கூறுகிறான். மேலும் அனுமன் கூறிய செய்திகளைக் கேட்டு இவ்வளவு சிறிய உடலைக் கொண்ட நீ கடலைத்தாண்டியது எவ்விதம்? என வினவினாள். உடனே அனுமன், 'இராமனின் பாதத்தை அடைந்தோர் மாயையெனும் பெருங்கடலை எவ்வாறு கடக்கிறார்களோ அதைப் போன்று என் கால்களாலேயே அக்கடலைத் தாண்டிவந்தேன்' எனக்கூறி,

"சுட்டினன், நின்றனன் - தொழுதகையினன்,
விட்டுஉயர் தோழினன், விசும்பின் மேக்குஉயர்
எட்டஅடு, நெடுமுகடு எய்தி, நீளுமேல்
முட்டும் என்று, உருவொடு வளைந்த மூர்த்தியன்" (சுந்தர. உரு 587)

என்று பெருமிதம் தோன்றத் தன் திருஉருவத்தையும், பேருருவத்தைக் காட்டினான். மேலும், சீதையைத் தான் கண்டதான செய்தியை இராமனிடம் கூற விரைகிறான். இராமன் அனுமனைக் கண்டதும் முதலில் அவன் சீதாப்பிராட்டி இருக்கும் தென்திசையை நோக்கி நின்று வணங்கி,

"இற்பிறப்பு என்பது ஒன்றும் இரும்பொறை என்பது ஒன்றும்
கற்பு எனும் பெயரது ஒன்றும் களிநடனம் புரியக் கண்டேன்".

(சுந்தர. திரு-1273)

என்று அடுக்கிச் சொல்லும் உணர்வு பூத்த அனுமனின் சொற்களில் பெருமிதம் மிக்கிருப்பதை உணரமுடிகிறது. பெருமிதம் தோன்ற தொல்காப்பியர் காட்டும் நிலைக்களன்களில் ஒன்றான இசைமையால் தோன்றிய பெருமிதத்தை இக்காட்சிகளில் காண்கிறோம்.

### இராமன் பெருமிதம்

பெருமிதம் தோன்றக் காரணங்களுள் ஒன்று கொடை என்கிறார் தொல்காப்பியர். கொடை என்பது ஈதல் மட்டுமன்று உயிரும் உறுப்பும் அனைத்தும் வழங்கும் தன்னீகமுடைமையாகும். இதனை இராவணனுக்கு வழங்கிய கொடையால் அறியலாம்.

முதல்நாள் போரிலே இராமனும், இராவணனும் நேருக்கு நேர் நின்று போர் புரிகின்றனர். போரில் இராவணன் படை இழந்து, ஆயுதங்களையும் இழந்து, இராமன் முன் பரிதாபமாக வந்து நிற்கிறான் கண் இமைக்கும் நேரத்தில் இராமன், இராவணனை மாய்த்து விட முடியும். ஆனால் கொடையிற் சிறந்த வள்ளலான இராமன் பகைவனுக்கும் அருள் செய்யும் விதமாக.

"ஆளையா உமக்கமைந்த மாருதம் அறைந்த
பூளையாயின கண்டனை இன்றுபோய் போர்க்கு
நாளை வாவென நல்கினன் நாகிளங் கமுகின்
வாளை தாவுறு கோசல நாடுடைவள்ளல்" (யுத்த இராவண 1212)

என இன்று போய் நாளை போருக்கு வா என அருளிய தன்மையால் உயிரும் உறுப்பும் அனைத்தும் வழங்கும் தன்னீகக் கொடை வள்ளலாக விளங்குகிறான் இராமன்.

### இரணியன் – பெருமிதம்

தூணிலிருந்து வெளிப்பட்ட நரசிங்கமூர்த்தியை வணங்குமாறு பிரகலாதன் கூற, அதற்கு இரணியன் கூறும் பதிலில் தறுகண் பற்றிய பெருமிதத்தைக் காணலாம்

"கேள்இது நீயுங்காணக் கிளர்த்த கோளரியின் கேழல்
தோளொடு தாளும்நீங்கி நின்னையும் துணித்துப் பின்என்
வாளினை தொழுவதல்லால் வணங்குதல் மகளிர் ஊடல்
நாளினும் உளதோ என்னா அண்டங்கள் நடுங்கநக்கான்"

(யுத்த. இரணியவதை - 146)

இவை வீரத்தின் காரணமாகத் தோன்றும் பெருமிதம் எனத் தொல்காப்பிய கூறுவதால் உணரலாம்.

**முடிவுரை**

பெருமிதம் என்னும் சுவையை உண்டாக்கும் அடிப்படைக் காரணங்களாக தொல்காப்பியர் காட்டும் கல்வி, தறுகண், இசைமை, கொடை என்பவற்றை அடியொற்றி, கம்பராமாயணத்தில் கையாளப்பட்டுள்ள நிகழ்வுகளை இக்கட்டுரையில் காண முடிகிறது.

# கம்பனில் நகைச்சுவை

முனைவர் சு.வினோத்
தமிழ்த்துறைத் தலைவர், பி.கே.என் கலை – அறிவியல் கல்லூரி,
திருமங்கலம்.

இலக்கியங்கள் இன்பத்தை வாரி வழங்குகின்றன. இலக்கியங்களால் ஏற்படும் இன்பம் அதில் இடம்பெற்று வெளிப்படும் உணர்வுகளால் சாத்தியமாகிறது. மனித வாழ்வியலைப் பேசும் இலக்கியங்கள் அனைத்திலும் வாழ்வின் பல்வேறு உணர்வு வெளிப்பாடுகளும் அமைந்துள்ளன. வாழ்க்கை என்பது சூழ்நிலைக்கு ஏற்ப உணர்வுகளை வெளிப்படுத்துவதும், பிறர் உணர்வுகளைப் புரிந்து கொள்வதும் ஆகும். பல்வகை உணர்வுகளின் வெளிப்பாடு முழு மனித வாழ்க்கையாகிறது. அனைத்து உணர்வுகளையும் உடைய மனிதன் நலம் உடையவனாகக் கருதப்படுகிறான். அதிலும் நகை உள்ளிட்ட உணர்வுகளை அதிகம் உடைய மனிதன் மிகுந்த நலம் உடையவனாகின்றான். அவ்வகையில் கம்பனில் அமைந்துள்ள நகை உணர்வு குறித்து ஆய்வதாக இக்கட்டுரை அமைகிறது.

### அழுகையும் நகையும்

பேரிலக்கியங்கள் மனித நலத்தை மையப்படுத்திய உணர்வுகளை மிகுதியாக வழங்குகின்றன. அவ்வகை உணர்வுகளில் அழுகை, நகை இரண்டும் நலம் பயக்கும் இலக்கிய உணர்வுகள் ஆகும். அழுகையை முதன்மை உணர்வாக இலக்கியங்கள் கொண்டுள்ளன. இவ்வுணர்வு சமூக நலம் சார்ந்ததும் ஆகும். பிறர் துன்பங்களுக்கு இரங்கும் மென்மை உள்ளத்தை இவ்வுணர்வு வழங்குகிறது. இவ்வுணர்வை இலக்கியங்கள் மிகுதியாகப் பாடுகின்றன. சிலப்பதிகாரம், கம்பராமாயணம் போன்றவைகள் இதற்குச் சிறந்த சான்றுகள் ஆகும். 'நகை' உணர்வை இவ்விலக்கியங்கள் இரண்டாம் உணர்வாக இடம்பெறச் செய்துள்ளன. இவ்வுணர்வு இலக்கியம் படிக்கும் மனத்தின் மகிழ்ச்சியை மையப்படுத்தியதாகும். இலக்கியங்களில் இடம்பெறும் நகை, தனிமனித இன்பத்தை நோக்கியதாகவும் அழுகை சமூக இன்பத்தை நோக்கியதாகவும் அமைந்திருக்கக் காணலாம். முதல் உணர்வில் துய்ப்புத் தன்மையும் இரண்டாம் உணர்வில் துய்ப்புடன் கூடிய விளைவுத் (பயன்) தன்மையும் அமைந்துள்ளன.

### இயற்கை தரும் நகை

இயற்கை அழகினை பொருள் உணர்த்தும் வகையிலும் உணர்வு ஏற்படுத்தும் வகையிலும் இலக்கியங்களில் புலவர்கள்

பயன்படுத்தியுள்ளனர். கம்பனில் இயற்கையழகு நகை எழச்செய்யும் இடங்கள் பலவாகும். இயற்கை கொண்டு உணர்வை எழச்செய்வதே கவிதை அழகியல் ஆகும். இராமாயணக்கதை துன்ப உணர்வை மீட்டும் தன்மையது. எனினும், கம்பர் கவிதையில் இயற்கையை வர்ணிக்கும் இடங்களில் நகை உணர்வை வழங்குகின்றார்.

ஆற்றுப்படலம் பாடும் காப்பிய மரபிற்கு உட்பட்டு சரயு நதியைப் பாடும் கம்பர் வர்ணனைகளில் புதுமையைப் புகுத்துகிறார். அழகு தோன்றும் வகையில் மட்டுமல்லாமல் நகை தோன்றும் வகையில் அவ்வர்ணனையை அமைக்கின்றார். இதற்கு,

"ஈக்கள் வண்டொடு மொய்ப்ப, வரம்பு இகந்து
ஊக்கமே மிகுந்து, உள் தெளிவு இன்றியே,
தேக்கு எறிந்து வருதலின், - தீம் புனல் -
வாக்கு தேன் நுகர் மாக்களை மானுமே" (ஆற்றுப் படலம் 10)

என்ற பாடல் ஒரு சிறந்த உதாரணம் ஆகும். அருவியாக இறங்கி ஆறாக ஓடிவரும் நீரில் மிதந்து வரும் பூக்களையும் அவற்றை விரட்டி மொய்க்கும் வண்டுகளையும் கொண்டு நோக்குமிடத்து ஆறானது கட்குடி மாக்கள் போன்றிருந்தது என்கிறார் கம்பர்.

கள்ளை மிக உண்டு மயங்கி வீழ்ந்து கிடக்கும் மனிதனை ஈக்கள் மொய்ப்பதை ஒத்த காட்சியால் ஆறும் அவ்வாறானது என்கிறார். இயற்கையைச் சற்று பழிப்பது போல் வர்ணனையை அமைத்து அதில் ஓர் அழகு தோன்றச் செய்வதோடல்லாமல் கம்பர் நகையையும் பிறக்கச் செய்கிறார். மேலும், மலையில் உள்ள விலங்குகளையும், பாறைகளையும் மரங்களையும் அடித்துச் செல்லும் ஆறானது கடலுடன் போரிடச் செல்வது போன்று இருந்தது என்றும், வணிக மாக்களைப் போன்று இருந்தது என்றும் இதுபோல் பலவாறு வர்ணிப்பதன்வழி மெல்லிய நகைச்சுவை உணர்வைத் தோன்றச் செய்கின்றார்.

**காதலும் நகையும்**

காதலும் நகையும் இளமைக்குரிய வெளிப்பாடுகளாக அமைகின்றன. இராமனின் திருமணத்திற்கு அயோத்தியிலிருந்து வரும் இளமை மிகுந்த ஆண்களும் பெண்களும் காதலையும் நகையையும் ஒருசேர வெளிப்படுத்தி மகிழ்கின்றனர். இக்காட்சிகளைப் 'பூக்கொய் படலம்' 'புனல் விளையாட்டு படலம்' ஆகியவற்றில் காணலாம். இதில், கம்பர் படிப்பவர் உள்ளத்தில் நகையூறச் செய்கிறார்.

உலக வழக்கில் புதுமை கண்டவர் அதை வியப்பதையும் அப்புதுமையை விலகாது விரும்புவதையும் வண்டுகளின் செயல்களுக்கு ஏற்றி நகை உணர்வையும், அழகுணர்வையும் ஒருசேர ஏற்படுத்துவதை,

"நதியினுங் குளத்தும் பூவா நழினங்கள் குவளையோடு
மதிநுதல் வல்லி பூப்ப நோக்கிய மழலைத் தும்பி
அதிசய மெய்திப் புக்கு வீழ்ந்தன வலைக்கப் போகா
புதியன கண்ட போழ்து விடுவரோ புதுமை பார்ப்பார்"

(பூக்கொய் படலம் 9)

என்ற பாடலில் காணலாம். குவளை மலர்களுடன் பூத்த தாமரை மலர் போன்ற பெண்கள் முகங்களை நோக்கி வண்டுகள் மொய்த்திடும் காட்சியைப் புதுமை கண்டவர் எளிதில் அதை விட்டுவிலகாத தன்மை போன்றது என்கிறார். இங்கே தாமரையில் (முகம்) மலர்ந்த குவளை (கண்கள்) போன்ற பெண்களின் முகம் புதுமையாகவும் வண்டு புதுமை கண்டவராகவும் வர்ணிக்கப்படுவதன்வழி நகை தோன்றுகிறது.

அறியாமை நகையைத் தோற்றுவித்தாலும் அதில் ஓர் அழகு இருக்கவே செய்கிறது. பெண்ணிடம் அறிவைவிடவும் அறியாமையைக் கண்டே ஆண்கள் மகிழ்ந்துள்ளனர். 'பேதை' 'மடந்தை' போன்ற சொற்கள் அதன்வழிப்பட்டதாகும். கம்பர் அவ்வாறு அறியாமை மிகுந்த பெண்ணை,

"மெய்ப்போதி னங்கைக் கணியன்னார் வெண்ப ளிங்கிற்
பொய்ப்போது தாங்கிப் பொலிகின்றதன் மேனி நோக்கி
இப்பாவை யெங்கோற் குயிரன்னவ ளென்ன வுன்னிக்
கைப்போதி னோடுநெடுங் கண்பனி காரநின்றாள்" (மேலது 13)

என்ற பாடலில் காட்சிப்படுத்துகிறார். பளிங்கினில் பிரதிபலித்த தன் உருவத்தைக் கண்ட பெண் வேறு பெண் உரு என்று எண்ணி மயங்குகிறாள். அத்துடன் அப்பெண் (பிம்பம்) தனக்குப் போட்டியாக வந்துள்ளாள் என்று கண்ணீர் சிந்துகிறாள். இவ்விடத்தில் வள்ளுவர் காட்டும் புலவி நுணுக்கம் புரியும் தலைவி நினைவுக்கு வருகிறாள்.

**பகை இடை நகை**

கம்பராமாயணத்தில் யுத்தகாண்டமே பெரும்பகுதியாக அமைந்துள்ளது. யுத்தகாண்டத்தின் இடைப்பகுதியில் போரின் இளைப்பாறல் போன்று நகைச்சுவை ததும்பும் நிகழ்வுகளைக் கம்பர் அமைத்துள்ளார். கும்பகர்ணனை எழுப்பச் செல்லும் படை குறித்தும்

அதன் முயற்சியின் தோல்வி குறித்தும் கம்பர் சொல்லும் விதம் நகைச்சுவையாக மாற்றமுறுவதைக் காணலாம்.

கும்பகர்ணன் உண்ணும் உணவு அவனைப் பெருவீரனாகக் காட்டினாலும், அவன் உறங்கும் பெருஉறக்கம் அவன் மீதான அச்சத்தை அகற்றி நகை உணர்வை எழச்செய்கிறது. இவ்வுணர்வை வளர்த்தெடுக்கும் வகையில் கம்பர் கவிதையை அமைக்கிறார். கும்பகர்ணனை எழுப்பச் செல்வோர் பகைவனை எதிர்த்துச்செல்லும் படையெடுப்பு போல் செல்கின்றனர். ஆனால், அவர்கள் தோல்வியையே தழுவுகின்றனர். ஏனெனில் கும்பகர்ணன் தூக்கத்தில் வெற்றி பெறுகிறான். இவ்வெற்றி தோல்வியைக் கம்பர்,

"விட்டுற நடத்தி யோட்டி விரைவுள சாரி வந்தார்
தட்டுற குறங்கு போலத் தடந்துயில் கொள்வதானான்"

(கும்பகர்ணன் வதைப்படலம் 53)

என்கிறார். இதில், உறங்கும் கும்பகர்ணனை எழுப்பும் முகமாகக் குதிரைகளைக் கொண்டு மிதிக்கச் செய்கின்றனர். தூக்கம் சரிவர வராத நிலையில் தொடையைத் தட்டிக் கொடுக்கத் தூக்கம் வரச்செய்வது போன்றதான நிகழ்வாக அது முடிகிறது. சரிவர உறக்கம் பிடிபடாதிருந்த கும்பகர்ணன் மிக நன்றாக உறங்கத் தொடங்குகிறான். தூக்கம் கலைக்க நடந்த முயற்சி நன்றாகத் தூங்கச் செய்வதாக முடிந்தது என்னும் போது அதில் நகை தொனிப்பதை உணரமுடிகிறது. மேலும்,

"திண்டிறல் வீரன் வாயில் திறத்தலுஞ் சுவாத வாதம்
மண்டுற வீரரெல்லாம் வருவது போவதாகக்
கொண்டுறு தடக்கைப் பற்றிக் குலமுடை வலியினாலே
கண்டுயி லெழுப்ப எண்ணிக் கடிதொரு வாயில் புக்கார்"

(யுத்த-கும்பவதை 50)

என்று கும்பகர்ணனை எழுப்பும் முயற்சியைக் கம்பர் சுட்டுகிறார். கும்பகர்ணன் உறங்கும் அறையில் நுழைய முயன்ற வீரர்கள் அவன் வெளியிடும் மூச்சுக்காற்றினால் தாக்கப்படுகின்றனர். உள் மூச்சின்போது முன் செல்வதும் வெளிமூச்சின்போது பின் செல்வதுமாக உள்ளனர். பின்னர் ஒருவரை ஒருவர் கரம் பற்றியபடி மொத்த வலிமையைத் துணையாகக் கொண்டு முன்னேறிய செயல் நகை எழச்செய்கிறது.

"உறங்கு கின்ற கும்ப கன்ன உங்கள் மாய வாழ்வெலாம்
இறங்கு கின்ற தின்று காணெ ழுந்தி ராயெ ழுந்திராய்
கறங்கு போல விற்பி டித்த கால தூதர் கையிலே

உறங்குவா யுறங்குவா யினிக்கிடந் துறங்குவாய்"

(யுத்த - கும்பகர்ணன் வதை 45)

என்ற பாடலை நகையின் உச்சமாகக் கொள்ளலாம். உறக்கம் நீங்க மறுத்த கும்பகர்ணன் மேல் கோபம் கொண்டவர்கள் எதிர்மறை உணர்வுக்கு வரலாயினர். இறக்கச் சொல்லிப் பாடுகின்றனர். கும்பகர்ணனோடு எழுப்புதல் முயற்சியால் நடைபெற்ற யுத்தத்தில் அவனைப் பகைவன் போல் எண்ணிவிட்ட மனநிலையில் இவ்வாறு பாடுவதாகக் கருதலாம். இல்லை என்றால் இப்பொழுது எழுந்திரு ஆனால் பகைவர் கையால் மாண்டு நிரந்தரமாக உறங்கு என்று பாடும் வன்மை வாய்த்திருக்காது. கும்பகர்ணனை எழுப்பும்படி கட்டளையிட்ட இராவணனின் கோபத்திற்குப் பயந்து பாடியதாகவும் கொள்ளலாம்.

**முடிவுரை**

கம்பன் செய்த உயர்காப்பியத்தில் கதை தழுவிய உணர்வாக அழுகையும், கவிதை தழுவிய உணர்வாக நகையும் அமைகின்றன. இந்நகை உணர்வே காப்பியத்திற்கு அழகும் விறுவிறுப்பும் வழங்குகிறது. இயற்கையைச் சொன்னாலும் காதலைச் சொன்னாலும் பகையைச் சொன்னாலும் அதில் நகை தோன்றச் செய்கிறார் கம்பர்.

# கம்பராமாயணத்தில் உவமை நலம்

திருமிகு. ந.சரவணன்
முனைவர் பட்ட ஆய்வாளர், அ.வீ.வா.நினைவு திரு.புட்பம் கல்லூரி,
பூண்டி.

இலக்கியத்தை அழகுபடுத்தும் முதல் அணி அல்லது தாயணி உவமையேயாகும். இதுவே காலத்தால் மிகவும் முற்பட்டதாகும். உருவப்பொருளையும் அருவப்பொருளையும் உவமையாக்கி உரைக்கும் கவிமரபைச் சங்ககாலம் தொட்டுக் கண்டு வருகின்றோம். உருவஉவமைக் காட்சிக்கு உட்பட்டு வரும். அருவ உவமைக் கருத்திற்கு இசைந்து வரும். முன்னது உருவ அழகின் உறைவிடம் பின்னது பண்பின் இருப்பிடம். இந்நெறி பற்றிக் கம்பர் கையாண்ட உவமைகளில் காட்சிக்கு விருந்தான உவமை ஒன்றும் கருத்திற்கு விருந்தான உவமை ஒன்றுமாக இரண்டு உவமைகள் மட்டுமே இங்கு ஆய்வுக்கு எடுத்துக்கொள்ளப்பெறுகின்றன.

**காட்சி உவமை – தாமரை**

கவிஞர் போற்றும் உவமைப் பொருள்களுள் தாமரை மிகவும் செல்வாக்குப் பெற்றுள்ளதை யாவரும் அறிவர்.

| | |
|---|---|
| கமலம் அன்ன கண்ணன் | கம்ப - பா (9712) |
| பங்கயம் ஒத்த செங்கண் இராமன் | கம்ப - பா (1544) |
| செந்தாமரைக் கண்ணன் | கம்ப - பா (5316) |
| தடமலர்க் கண்ணன் | கம்ப - பா (6420) |

என்று தாமரைக்குரிய பலவகையான பெயர்களைக் கொண்டு இராமனின் கண்ணுடன் இணைத்துக் கம்பர் இன்புற்றிருக்கும் நிலை குறிப்பிடத்தக்கது. இவ்வாறு கம்பர் தம் காப்பியத்தில் நாற்பத்தொன்பது இடங்களில் இராமானுக்குத் தாமரையை உவமை கூறி உள்ளார்.

(கம்ப -பா- 301, 537, 1363, 1382, 1544, 1766, 1985, 2565, 2610, 2702, 2747, 2889, 2892, 3215, 3315, 3464, 3483, 3765, 3780, 3882, 3783, 3802, 5061, 5088, 5133, 5303, 5316, 6412, 6420, 6485, 6690, 6764, 7603,7688, 8112, 8163, 8427, 8528, 8609, 9696, 9712 9810, 10087, 10111, 10150, 10245, 10257, 10276.) இவற்றுள் இங்கு ஒரு உவமை மட்டும் ஆராயப் பெறுகின்றது. கம்பராமாயணத்தில் தாமரை 680 இடத்தில் வருகிறது.

**இயற்கைத் தாமரை**

முடி புனைதற்காகத் தன்னை அன்போடு அடி வணங்க வந்துள்ள இராமனை நோக்கிக் கைகேசி

"ஆழிசூழ் உலகு எலாம் பரதனே ஆள நீபோய்த்
தாழ்இருஞ் சடைகள் தாங்கித் தாங்க அருந்தவம் மேற்கொண்டு...."

என்றாள். பார் ஆளும் உரிமையை விட்டுக் காடேகு என்னும் சொல்லைக் கேட்ட இராமனின் உள்ள நிலையை விளக்கும் கம்பர்.

"இப்பொழுது எம்மனோரால் இயம்புதற்கு எளிதே யாரும்
அப்பொழுது அலர்ந்த செந்தாமரையினை வென்றது அம்மா"

என்று குறிப்பிடுகின்றார்.

இராமன் அப்பொழுது நின்ற அந்த அற்புத நிலைமையைத் தெளிவாக விளக்கிச் சொல்ல எம்போல்வாரால் இயலாது என்று வியப்புற்று நின்ற கம்பர், தாமரையை உவமையாக்கி ஒருவாறு தமது உணர்வை வெளிப்படுத்தி முடித்தார். செந்தாமரை என்னாது அன்று அலர்ந்த செந்தாமரை என்று கூறியதால் கதிரோன் உதயமாகும் பொழுது இதழ் விரித்துச் செல்வியும், எழிலும் கொண்டு பொலிவுற்று விளங்குந்தாமரையைக் குறித்தவாறாயிற்று.

சூரிய கிரணங்களைக் கண்டு தாமரை மலர்வது போல் கைகேயி கூறிய மொழிகளைக் கேட்ட இராமனது உள்ளத் தாமரை உவந்த மலர்ந்திருக்கின்றது. உள்ளத்தில் எழுந்த அவ்உவகை வெள்ளம் வெழியே துள்ளி முகமலர்ச்சியாய் பொங்கியுள்ளது எனக்கருதலாம். இன்பத்தை விழைந்து மகிழ்தலும் துன்பத்தை வெறுத்து வருந்துதலும் மனித இயல்பு. நிலையான இவ்வுலக இயல்புக்கு மாறாக இராமன் இன்ப நிலையமான பெரிய அரச பதவியைக் கொடுக்க மறுத்து அல்லலான காட்டிற்கு தள்ளும்போது கூட பெரு மகிழ்ச்சியால் உள்ளம் உவந்து நிற்கின்றான்.

**கருத்துவமை பசு**

ஆன்ற தாய்மை அன்பை அருமை தோன்றச் சொல்லும்பொழுது ஈன்ற பால் பசுவை ஒப்பாக எடுத்துக் காட்டுவது சான்றோர் மரபாய் வருகின்றது. இம்மரபை ஒட்டிக்கம்பரும் தாயன்பைச் சுட்டுதற்குப் பாற்பசுவை உவமையாக்கியுள்ளார். இந்த உவமையைக் கோசலையின் தாய்மைக்கும் இராமனின் பிரிவிற்கும் உவமையாக்கி உள்ள திறத்தைப் பார்ப்போம்.

கோசலை நீண்ட காலம் தவனிருந்து பெற்ற பிள்ளையை இடையே பிரியநேர்ந்து அல்லல் அடைந்த நிலையை விளக்கும் சூழலில் இரண்டிடங்களில் பசுவைக் கோசலைக்கு உவமை காட்டுகின்றார் கம்பர். இராமன் மன்னவன் பணியை ஏற்றுத் தான் காடேக எண்ணியதைத் தன்னிடம் சொல்லக் கேட்ட போது கோசலைபட்ட துயர நிலையை விளக்கும் நிலையில்.

"கறவை யொப்பக் கரைந்து கலங்கினாள்" (1618)

என்கின்றார். அடுத்துக் கோசலை கங்கையில் நின்றபோது பரதன் குகனுக்கு அறிமுகம் செய்;தான். அப்போது இராமன் பிரிவால் அவள் முதிர்துயர் அடைந்த நிலையைக் கம்பர்

"கன்றுபிரி காராவின் துயருடைய கொடி" (2367)
என்கின்றார்.

'கறவை ஒப்பக் கரைந்து கலங்கினாள் என்ற இந்த இடத்தில் பசு என்று கூறாது கறவை என்று கூறிய கம்பர் கலைத்திறத்தை அறிய முடிகின்றது. மலட்டுப் பசுக்களும் ஈற்று மரினவும் உள்ளன. ஆதலால் அவற்றினும் வேறுபாடு தெரியக் கறவை என்றார். மேலும் இதில் அப்பசு ஈன்று அணிமையான கன்றுடையதாய்ப், பால் கறந்து வருவது என்று பருவ நிலையைத் தெரிய உணர்த்தினார். இப்பருவநிலை தெரிய வந்ததால் கோசலை, பிள்ளைப் பிரிவை நினைத்து உள்ளம் உருகி உணர்வழிந்து நின்ற நிலையை உணர முடிகிறது.

'கன்றுபிரி காராவின் துயநடைய கொடி' என்னும் இடத்தில் கோசலையை மறுநிறம் கலவாத காராம் பசுவிற்கு உவமையாக்கியதன் திறத்தை அறியலாம். நலம்பல நிறைந்த இந்த உயர்ந்த பசுவைக் கோசலைக்கு இங்கே உவமை கூறியது இத்தாயினது குலத்தூய்மை முதலிய உயரியல்புகளை உணர்ந்து கொள்க. ஆவினங்களுள் காரா எப்படியோ, அப்படியே தாயினங்களுள் தூயவள் கோசலை எனக் கருதலாம். இதனை சங்க இலக்கியங்களும்,

"கறவை, கன்று வயிற் படர" (குறுந்தொகை- 108)
"கறவைதம் பதிவயிற் கன்றமர் விருப்பொடு" (கலித்தொகை - 119)
"ஈற்றா விரும்பிற் போற்றுபு" (பொருநர். - 151)

பகர்கின்றன. இதனைக் காப்பியங்களும்,

"சேதா முலைபொழி தீம்பால் எழுதுகள் அவிப்பக்
கன்று நினைகுரல மன்று வழிப்படர" (மேகலை - 5 : 130-132)

"கறவை கன்றிழந்த போன்றங் கிடந்தழுகின்ற கண்ணார்"

(சிந்தாமணி - பா - 1283)

"கன்றொழி கறவையிற் சென்றவண் எய்தி" (பெருங்கதை-1 : 56:146)

"கன்று தடையுண் டெதிரழைக்கக்
கதறிக் கனைக்கும் புனிற்றாப்போல்" (பெரியபுராணம்-3887)

என்று உணர்த்துகின்றது. பக்தி இலக்கியங்களும்,

"ஆவாகி ஆவினில் ஐந்தும் ஆகி" (தேவாரம்-நாவுக்-618:8)

"கற்றாவின் மனம் போலக் கசிந்துருக வேண்டுவனே"

(திருவாசகம்-684:3)

என்று கூறுகின்றது. இதனையே நீதி இலக்கியமும்,

"சிவனே சிவனே சிவனே என் பார்பின்.............
சுற்றுப் பசுப்போல் தொடர்ந்து" (நீதிசாரம்- 2705)

என்று அன்புறு பிரிவிற்குக் கன்றுபிரி கறவையைக் காட்டிக் கூறி-யிருத்தல் குறிப்பிடத்தக்கது.

கம்பருக்கு இந்த உவமையை இராமனோடு இணைத்துக் காண்பதில் ஒரு தனி ஈடுபாடு உள்ளதை அறிய முடிகிறது. இன்ப துன்பங்களில் சமன் ஒத்திருக்கும் தன்மை 'சீவன்முக்தர்'களுக்கே அமையும். அந்த அரிய பக்குவ நிலையை இயல்பாகப் பெற்றவன் இராமன் என்பதை உணர முடிகிறது. மேற்குறிப்பிட்டவாறு கோசலையின் துயர்க்கடலின் ஆழத்தையும் உள்ள இயல்புகளின் மேன்மையையும் புலப்படுத்தவே இவ்வுவமைகளைக் கம்பர் எடுத்தாண்டுள்ளார் என்பது புலனாகின்றது. இதுவரை கூறியவற்றால் காட்சி உவமை என்றாலும் கருத்துவமை என்றாலும் பாத்திரங்களின் உள்ள இயல்புகளைப் புலப்படுத்துவதே கம்பரின் முனைப்பாக உள்ளது என்பதை உணர முடிகிறது.

# அனுமனின் உடலமைவு உவமைகள்

பேராசிரியர் லி. செல்வமீனா
தமிழ்த் துறை, ஆர்.பி. கோதி ஜெயின் மகளிர் கல்லூரி,
செங்குன்றம், சென்னை.

இராமாயணம் சிறையிருந்தவள் ஏற்றத்தைக் கூறும் காப்பியம் ஆகும். திருமாலின் திருஅவதாரமான இராமபிரானின் பெருமையை எடுத்துக்காட்டுகிறது. இராமாயணம் காலத்தால் மகாபாரத்தைவிட முந்தியது ஆகும். ஆகையால் இதனை "ஆதி காவியம்" என்பர். சங்க இலக்கியக்களிலும் இராமனின் அவதாரம் குறித்த குறிப்புக்கள் காணப்படுகின்றன. இதனால் தமிழ்நாட்டில் இராம காதை நீண்ட காலமாகவே பொதுமக்களால் நன்கு அறிமுகத்தில் இருந்து வந்துள்ளது என்பது புலனாகிறது. இவ்வாறு இராமகாதை நாட்டில் பரவிவந்த காலத்தில்தான் கல்வியில் பெரிய கம்பன் வால்மீகி இராமாயாணத்தை முதல்நூலாகக் கொண்டு இராமாயணம் இயற்றினார். அதைக் கம்பரின் பெயரால் தமிழரின் நன்றிமறவாப் பண்பில் கம்பராமாயணம் என அழைக்கப்பட்டது. இக்கம்பராமாயணத்தில் அனுமனின் உடல் வருணிக்கப்படும்விதம் குறித்து ஆய்வதாக இக்கட்டுரை அமைகிறது.

**வாழ்வியல் நெறி**

அடைக்கலம் கொண்டாரை ஆதரிப்பதையே கொள்கையாகக் கொண்டு, பெற்றோரின் சொல்லைக் கடவாது, ஏகபத்தினி விரதனாக இருந்து சாதி பேதனில்லாது எவரையும் அரவணைத்து, தீயவர்களை அழித்துக் காட்டி, உலகிற்கு ஏற்ற சாதாரண அறநெறிகளை எடுத்துக்காட்டுகின்றான் காவியத் தலைவன் இராமபிரான். எம்பெருமானுக்கு அடிமை பூண்டொழுகுகின்ற ஒப்பற்ற தர்மத்தைத் தன்னை முன்னிலைப்படுத்தி எடுத்துக் காட்டுகின்றான். இலக்குவனனும் பரதனும் அஃறிணை உயிர்போல எம்பெருமானுக்குப் பரதந்திரனாய் இருந்து அணுக்கத் தொண்டனாக விளங்கினான். சத்துருக்கனனோ, பாகவதருக்குத் தொண்டுசெய்யும் அடியார்க்கு அடியனாய் விளங்கினான். சீதாப்பிராட்டி பெருமானுடன் கானகம் சென்று கணவன் கருத்தறிந்து செந்தீயில் மூழ்கித் தன் கற்பின் திண்மையை உலகிற்குக் காட்டினாள்.

அனுமன் குகன் ஆகியோரின் கைம்மாறு கருதாப் பண்பு, வீடணன், கும்பகருணன், தயரதன் ஆகியோரின் சரணாகதிப் பண்பு,

செய்ந்நன்றி அறிதல், சத்தியத்திற்காக உயிர்விடுதல் போன்ற உயர் அறங்களை உலகிற்கு எடுத்துக்காட்டியுள்ளதன்வழி வாழ்வின் உயர்பண்புகளை விளக்குகிறார் கம்பர்.

முக்கோடி வாழ்நாளை முயன்று பெற்று, பேராற்றலோடு திகழ்ந்தவனான இராவணனோ பிறன்மனை விழையாமையை எண்ணாத காரணத்தினால் பெரும் அழிவிற்கு ஆட்பட்டுநின்றான். இத்தகைய வாழ்வியல் நெறிகளைத் தம் கைவண்ணத்தால் பக்திச் சிறப்பிலும், கதைச் சிறப்பிலும் சிறந்து விளங்க அமைத்துள்ளார் கம்பர்.

**வருணனை முறை**

வருணனை முறை என்பது காப்பியம் படைக்கும் உத்திமுறைகளில் ஒன்றாகும். வருணனை வழியாக ஒரு சிறிய செய்தியைக்கூட சிறப்பாகச் சொல்லிவிட இயலும். அனுமன் மானிட வடிவந்தாங்கிய குரங்கு இனத்தைச் சேர்ந்தவன். பாதாதிகேச வருணனை என்பது கடவுளருக்கே உரியது. கம்பர் இக்காவியத்தில் அனுமனை பாதாதிகேச வருணனை முறையில் வருணிக்கிறார்.

"தாரகை சுடர்கள் மேகம் என்றிவை தவிரத் தாழ்ந்து
பாரிடை அழுந்து கின்ற படர்நெடும் பனிமாக்குன்றம்" (பா. 4772)

என்று அனுமனது திருவடிகளின் பாரத்தைத் தாங்கமாட்டாமல், நட்சத்திரங்கள், சந்திர சூரியர்கள், மேகங்கள் என்ற இவை தன்னைவிட்டு மேலே செல்லுமாறு அப்படர் நெடும் பனிமலையானது பூமியில் தாழ்ந்து அழுங்கிப் போகின்ற அளவுக்கு இறங்கிவிட்டது என சுந்தரகாண்டத்தின் கடல்தாவுப் படலத்தில் வருணனை செய்கிறார்.

மேலும், அனுமனின் திருவடிகள் அழுத்திய பாரத்தைப் பொறுக்கமாட்டாது, ஒளிமிக்க அம்மகேந்திரமலை பிளவுபட்டு வெடித்தது என்றும் உவமை கூறுகிறார்.

**மேலெழுந்த வருணனை**

வீரனாகிய அனுமன், தன் வாலை வேகமாக உயரத் தூக்கியும், வலிமைமிக்கத் தன் கால்களை மடக்கியும், மார்பைக் குறுக்கியும், பெருமைமிக்க தன்னிரு தோள்கள் பூரித்துப் பொங்குமாறு கழுத்தினைச் சுருக்கிக் கொண்டும் தன் பாய்ச்சலுக்கு உதவியாய்த் தூண்டுகின்ற காற்றினைத் தன் கைகளை நீட்டியும், பிரம்மனின் சத்தியலோகத்தை உராயுமாறு மற்றவர் காணமுடியாத உயரத்தில் வேகமாக உயர எழும்பினான்.

இதனை,

"வால்விசைத்து எடுத்து வன்தாள்மடக்கி மார்புஒடுக்கி மானத்
தோள்விசைத் துணைகள் பொய்க்க கழுத்தினை சுருக்கித் தாண்டும்
கால்விசைத் தடக்கை நீட்டிக் கட்டிலும் அதுவா வண்ணம்
மேல்விசைத்து எழுந்தான் உச்சிவிரிந்தன் நாடு உரிஞ்சவீரன்

(பா.4756)

என்று உரைக்கின்றார் கம்பர்.

தன் கண்முன்னே ஒருவன் பிறப்பதற்காக மேலெழப் போகும் நிகழ்ச்சியையும், அங்க மாறுதல்கள் மற்றும் உடலமைப்பு முறைகளையும் அழகாக எடுத்தியம்புகிறார்.

**நிலவிற்கு உவமை**

நிலவிற்கு ஒப்பாகப் பெண்களையும் சிறார்களையும் புலவர்கள் கூறுவதுண்டு. கம்பரோ, அனுமனின் உடலில் இருந்து தோன்றிய ஒளியினை உவமையாகக் கூறுகிறார்.

"கேழ் உலாம் முழுநிலாவின் கிளரொழி இருளைக்கீறப்
பாழிமா மேரு நாண விசும்புறப் படர்ந்த தோளான்
ஊழிநாள் வடபால் தோன்றும் உவாமுன் முழு மதியும் ஒத்தான்

(பா.4770)

என நிலவிற்கு உவமையாக அனுமனை வருணனை செய்கிறார் கம்பர். இத்தகைய உவமையைக் கையாளும் விதத்தில் மற்ற கவிஞர்களை விட, கம்பர் வேறுபட்டு நிற்கிறார்.

**வால் வருணனை**

திருவிக்கிரகம் அவதாரத்தில் திருமால் தனது காலினால் அளந்த மேல் உலகங்களை இவ் அனுமன் தனது வாலினால் அளந்தான் என்று சொல்லித் திருமாலுக்கு இணையாக அனுமனை எண்ணுகிறார் கம்பர்.

"......................விண்டு
காலினால் அளந்த வான முகட்டையும் கடத்திக்கால
வாலினால் அளந்தான்" (பா. 4772)

என்று வருணனை செய்கிறார். மேலும்,

அனுமனது வாலாகிய காலபாசம், அவனது பின்னே இருத்தற்கும் காரணம், அரக்கர்கள்பால் எமன் கொண்டிருக்கின்ற அச்சமேயாகும் எனக் கற்பித்துக் கூறியிருக்கிறார்.

**அங்க வருணனை**

கம்பர் அனுமனது அடி முதல் முடி வரை ஒவ்வொரு பாடலிலும் வாழ்த்தாகவும், வருணனையாகவும் குறிப்பிடுகின்றார்.

"விரைத்தாமரை வாள்முகம் விட்டு விளங்கு வீரன்" (பா. 4798)

மணமிக்க தாமரை மலர் போன்று ஒளிபொருந்திய முகத்தை உடையவன் என்றும்,

"உன்னால் உயர்ந்தோன் உயர்விற்கும் உயர்ந்த தோளாய்"

மலைபோன்ற எத்தகைய பொருள்களின் உயரத்தைவிட மிக உயர்ந்த தோள்களை உடையவன் என்றும் வருணனை செய்கிறார் கம்பர். மேலும்,

"பொற்றார் அகல்மார்ப"

என்றும் பொன்மயமான மாலை அணிந்தமையையும் குறிப்பிடுகின்றார்.

"வாளொத்து ஒளிர்வால் எயிறு ஊழின் மருங்கு இமைப்ப
நீள்ஒத்து உயர்வாலின் விசும்பு நிசம்பு மெய்யன்
கோள்ஒத்த பொன்மேனி விசும்பு இருகூறு செய்த
நாள்ஒத்து மேலொளி கீழ்இருள் உற்றஞாலம் (பா. 4804)

வாள் போன்ற வெண்மையான பற்கள் வரிசையாக விளங்கும் வானமெல்லாம் பரந்திருக்கின்ற உடம்பினையுடையவனும், நீளமாக உயர்ந்துள்ள வாலினாலே சில காலங்களில் சூரியனை மறைத்துக் கொள்பவனும், பகல் இரவு என்னும் இரண்டு பகுதிகளை உண்டாக்கியதாக அனுமனது அழகிய உடம்பு இருந்தது. அதனால் இப்பூமியின் மேல்புறம் ஒளிபெற்றிருந்தது என உயர்வு நவிற்சி அணியில் குறிப்பிடுகிறார் கம்பர்.

**முடிவுரை**

வருணனை முறை என்பது காப்பியப் படைப்பிற்கு முதன்மைத்தன்மை பெற்ற ஒன்றாகும். இது காப்பியத்தில் சிறப்புற அமையும்போது காப்பியமும் சிறக்கிறது. இந்த வருணனை வழியாக படைப்பாளியின் கற்பனைத்திறமும், ஆளுமையும் புலப்படுகிறது. அனுமனின் வருணனை வழியாக, கம்பர் அனுமன்மீது கொண்டிருந்த பக்தியின் ஒரு பகுதியைக் காணலாம்.

# கம்பனில் இடம்பெறும் உத்திகள், உவமைகள்

திருமிகு. க.அலாவுதீன்
முதல்வர், ஜே.ஏ.எஸ்.கல்வியியல் கல்லூரி,
சின்னவேடம்பட்டி, கோவை.

## முன்னுரை

கம்பன் கையாண்ட உத்திகளில் சிறந்தது உவமைகள். ஒரு பொருளைத் தெளிவாக விளக்குவதற்கும், கவிதையின் அழகிற்கும், கவிஞரின் கற்பனை வளத்திற்கும் உவமைகள் துணை செய்கின்றன. இதில் அகத்திணை, புறத்திணை செய்திகள் பற்றியும், உள்ளுறை, இறைச்சி ஆகியவற்றைப் பற்றி கம்பன் கண்ட உவமைகளைக் காணலாம்.

## பிரிவு – மீளுதல் சூழலில் உவமைகள்

தலைவனுடைய பிரிவால் வாடும் தலைவி தன்னை ஒப்பனை செய்து கொள்ளாமலும், அவன் மீண்டு வந்த பின் மகிழ்ந்து அவனோடு கூடி மகிழ்வதும் சங்க அகப்பாடல்களின் அடிப்படைச் செய்திகளாகும்.

பாலைவனத்தில் கொடுமைக்குப் பிரிவால் வாடும் தலைவியின் உள்ளத்தையும், குளிர்ந்து கொடுமை நீங்கிய பாலைவானத்திற்குத் தலைவன் வரவால் குளிர்ந்த அவளது சிந்தனையையும் உவமையாக்குகிறார் கம்பர், இதனை

"பந்த ஞாட்புறு பாசறை பொருள்வயின் பருவம்
தந்த கேள்வரை உயிர்உறத் தழுவினர் பிரிந்த
கந்த ஓதியர் சிந்தையின் கொதிப்பது - அக்கழலோர்
வந்தபோது அவர்மனம் எனக்குளிர்ந்தது அவ்வனமே (2044)

என்ற பாடலால் அறியலாம், நீரில்லாமல் வாடிய கொடிகள் பருவ மழை பெய்தவுடன் தழைத்துப் புதுப்பொலிவு பெற்றன என்ற செய்திக்குக் கம்பர் பொருள்வயின் பிரிந்து மீண்டு வந்த தலைவன் அருகில் இருக்க உயிர்பெறும் மகளிரை (4172) உவமையாகக் கூறுகின்றார்.

கோடைகாலத்தில் நீரற்ற குளங்களை விட்டுப் பிரிந்த அன்னங்கள் கார்கால மழை நீரால் குளங்கள் நிறைந்த பின் மீண்டுவந்து ஆசையுடன் உலாவும் செயலுக்குப் பிரிந்து மீண்ட தலைவன் தலைவியுடன் ஆடிக் களிக்கும் செயலை (4187) உவமையாக்குகிறார்.

கார்காலத்தில் முல்லை நிலத்தில் எங்கும் ஊர்ந்து செல்லும் இந்திரகோபப் பூச்சிகளுக்குக் கலவியில் மகளிர் உமிழ்ந்த வெற்றிலைத் தம்பூலங்களை உவமையாக்குவதை,

"கள்ளுடை ஓதியார் தம்கலிவயில் பலகால் கான்ற
வெள்ளடைத் தம்பல் குப்பை சிதர்ந்தென விரிந்தமாதோ (4176)

என்ற பாடலால் அறியலாம் கடலில் ஆறுசென்று கலக்க அங்குத் தோன்றிய முத்துக்களுக்குக் கலவியில், மகிழ்ந்த மகளிரது முறுவல் (4263) உவமையாகிறது.

**காதல் பற்றிய உவமைகள்**

காதல் நோயுற்ற இராமன், சீதை, இராவணன், சூர்ப்பணகை ஆகியோர்க்குக் கம்பர் உவமைகளைப் பயன்படுத்துகின்றார். இராமனைக் கண்டு காதலுற்று வருந்திய சீதையைக் கம்பர்

"தழலில் இடு வல்லிபோல் சாம்பினள்'
வேடன்கை அம்பொடு சோரும் மயில் அன்னவள்"

என்றும்,

"ஏவுண்டு மலங்கு உழை"

என்றும் குறிப்பிடுகின்றார்.

சூர்ப்பணகை, இராவணன் ஆகியோரது காதல் அவர்களின் உடலில் பரந்தமைக்கு பாறையிலும், வெயிலிலும் வைத்த வெண்ணெயை (2809,3151) உவமையாகக் கூறுகின்றார்.

இராமன்மீது கொண்ட காதலால் சீதையின் மனம், அறிவு, அடக்கம் ஆகிய குணங்களுக்கு அடங்காத செயல் மதம் கொண்ட யானைப்பாகனின் அங்குசத்திற்கு அடங்காது நிமிர்ந்து ஓடிய செயலைப் போன்று இருந்ததாகக் குறிப்பிடுவதை,

".......மனம் எனும் மத்த யானையின்
நிறையெனும் அங்குசம் நிமிர்ந்து போயதே"

என்ற பாடலால் அறியலாம்.

சீதையைப் பிரிந்த இராமனுக்கு அன்றிற் சேவலையும்(6841), தசரதனை இழந்த கோசலைக்கு அன்றிற் பெடையையும்(1901) கம்பர் உவமையாக்குகிறார்.

**மகளிர் வருணனையில் உவமைகள்**

மகளிரின் அழகில் ஈடுபட்டு அவர்களது உறுப்பு நலன்களைப் புனைந்து உரைப்பதும், உவமைகள் கூறுவதும் கவிஞன் சிறப்பு. கார், நீலவணி, மை, இருள் முதலியன மகளிரின் கூந்தல் நிறத்திற்கும், அறல் அதன் சுருளுக்கும் உவமையாக்கப்பட்டுள்ளன. கூந்தலின் நீட்சிக்குக் கம்பர் மழையை (1931) உவமை கூறுவதை

"மாந்தளிர் அனைய மேனிக் குறத்தியர் மாலை சூட்டி
கூந்தல் அக்கமுகின் பாளை குழலினோடு ஒப்புக்காண்பர்" (854)

என்ற பாடலில் அறிவதோடு, மேனிக்கு மாந்தளிர் உவமையாகி இருப்பதையும் காண முடிகின்றது. கண்களுக்குக் குவளையும், காவியும், உவமையாகின்றன.

கம்பர் கண்ணுக்குக் கடலையும்(3136), நஞ்சையும், வாளையும்(3138), வேலையும் (2047), அம்பையும்(1510) உவமைகளாகக் கூறுகின்றார்.

கொங்கைகளுக்கு மலர் அரும்புகளையும், யானையின் மருப்பையும், குரும்பையையும் உவமை கூறுவது மரபு. இவற்றோடு கம்பர்

"செம்மாந்த தெங்கின் மங்கையர் கொங்கைகள்"

என்றும்,

"கொ(ம்)மை உற வீங்குகின்ற குலிகச் செப்பு அனைய கொங்கை"
என்றும்,

"வார் ஆழிக்கலசக் கொங்கை'

என்றும் இளநீர், குடம், கலசம் ஆகியவற்றை உவமைகளாக்குகின்றார்.

மின்னலும்,வஞ்சிக்கொடியும் இடைக்கு உவமைகளாகிவரும் மரபை அறிவோம். கம்பர் இவற்றைப் பயன்படுத்தியுள்ளதோடு தேர்(495), நூல்(2054) இரண்டையும் இடைக்குரிய புதிய உவமைகளாகக் காட்டுகின்றார். அத்துடன்,

".........பரல் பொருள் என்ன யார்க்கும்
இல்லை உண்டு என்ன நின்ற இடை"

எனப் புதுமையாகப் பரம் பொருளையும் இடைக்கு உவமையாகச் சுட்டுகிறார்.

சங்க இலக்கியங்களில் மகளிரின் அலகுல் பாம்பின் படத்துக்கு உவமிக்கப்பட்டுள்ளது அருகிய வழக்காகும் என்கிறார், ரா.சீனிவாசன்

கம்பர் பாம்பையும்(2076) தேரையும் உவமையாகக் கூறுவதோடு,

"உயல்வு உறு பரவை அல்குல் ஒழிப்பு அறத்தழிப" (2358)

எனக் கடலை உவமையாகக் கூறுவது புதிய நிலையாகும்.

சங்க இலக்கியங்களைப்போல் நீர்க்குமிழியைக் கம்பர் உந்திக்கு உவமை கூறுகின்றார். அத்துடன் செம்பொன் தொளையையும்(2066), நந்திப் பூவையும்(4486) உவமையாகக் காட்டுகிறார். சொல்லுக்குக் கிளியும், தேனும் சங்க இலக்கியங்களில் உவமையாவதை ரா.சீனிவாசன் எடுத்துக்காட்டியுள்ளார். கம்பர் பல புதிய உவமைகளைக் காட்டுகின்றார்.

தேன், கரும்பு,யாழ், கிளி, நரம்பிசைக் கருவிகள், குயில், மழலை, குழல், கள், அமுது, பால் ஆகியவற்றை மகளிரின் சொல்லினிமைக்குக் கம்பர் உவமைகளாகக் கூறுகின்றார்.

மகளிரின் வயிற்றினுக்குப் பல புதுமையான உவமைகளைத் தருகின்றார், கம்பர்,

"ஆல்இலை, படிவம் தீட்டும் ஐய நுண் பலகை, நொய்ய
'பால் நிறத் தட்டம், வட்டக் கண்ணடி பலவும்" (4485)

என உவமைகளை அடுக்கிக் கூறுகின்றார்.

**ஆடவர் புனைந்துரையில் உவமைகள்**

பெண்களின் உடல் வனப்புக்கு உவமை கூறுவது போல் ஆடவர்க்கு மிகுதியான உவமைகள் கூறுவது புலவர் மரபு அன்று என்றாலும் பொதுவான சில உவமைகளைப் புலவர்கள் பயன்படுத்தியுள்ளனர். கம்பர் ஆடவர் பற்றிய புனைந்துரையில் பொருத்தமான உவமைகளைப் பயன்படுத்தியிப்பதைக்காண முடிகின்றது. ஆடவரது வீரம், நடை, தோற்றம் ஆகியவற்றிற்கு ஆழி, யானை, சிங்கம், காளை, குன்று ஆகியவற்றை உவமைகளாகப் பல இடங்களில் கம்பர் எடுத்தாள்கிறார்.

அழகுக்கு முருகனை உவமை கூறுதல் சங்கஇலக்கிய மரபு என்கிறார் ரா.சீனிவாசன். கம்பர் காலத்தில் மன்மதனைப் பற்றிய புராணக்கருத்துக்கள் வழக்கில் இருந்திருக்கலாம். அதனடிப்படையில் கம்பர் ஆடவர் அழகுக்கு மன்மதனை உவமையாகக் கூறுகின்றார். சூர்ப்பணகை இராம-இலக்குவரின் அழகில் மயங்கி அவர்களை வருணிக்கும் இடத்தில்,

"மன்மதனை ஒப்பர் மணி மேனி" (3118)

எனக்கூறி வியப்படைகின்றார். இங்கு மேனியின் ஒளிக்கு மணி உவமையாகி வருவதையும் அறியலாம்.

தோள் வலிமைக்கும், உயர்ச்சிக்கும் குன்று தூண், முழுவு ஆகியவை கம்பனில் உவமைகளாகியுள்ளன. அத்துடன் முத்தேவர்களும் (9837) எமனும் (6537) உவமையாகக் கூறப்படுவதுடன்,

"நீரும் நீர்தரு நெருப்பும் வன்காற்றும் கீழ் நிவந்த

பாரும் சார்வலி படைத்தவன்........" (4000)

என ஐம்பூதங்களும் வலிமைக்கு உவமையாகக் கூறப்படும் புதிய மரபைக் காண முடிகின்றது.

அரக்கர்களுக்கும், வேட்டுவர் தலைவன் குகனுக்கும் தனித்த உவமைகைளைக் கம்பர் பயன்படுத்தியுள்ளார். அவர்களுடைய முடிக்கும் மேனி நிறத்திற்கும் இருளும் (1958), தோளுக்கு அம்மியும்(1953), புருவ அமைப்பிற்குத் தேளும் (2558), மருங்கினுக்கு வச்சிராயுதமும் (1959), பார்வைக்கு அரவும் (1959), குரலுக்கு இடியும் (1971) உவமைகளை அமைத்துக் காட்டியுள்ள பாங்கு இதனால் புலப்படும்.

ஆடவர்களுள் இராமனுக்குக் கொடுக்கப்படும் உவமைகள் தனித்தன்மை வாய்ந்தவை மகளிர்க்குக் காட்டப்படும் சில உவமைகள் இராமனது உறுப்பு நலனுக்கும் காட்டப்பட்டுள்ளன. இராமனின் உடல் வண்ணத்திற்கு அஞ்சனமும் (6499), கார்மேகமும் (6499), பச்சிலையும் (5275), நீலக்கலலும் (5281) உவமைகளாகக் காட்டப்படுகின்றன.

இராமனது தொடைக்குக் கருடன் எருத்தும்(5271), யானையின் துதிக்கையும்(5271), உந்திக்கு நீர்ச்சுழியும்(5272),நெற்றிக்கு மதியும்(5283), பற்களுக்கு முத்தும்(5280), நடைக்கு மத்த யானையும்(5285) கணைக்காலுக்கு அம்புப்புட்டிலும்(5270), உவமைகளாகக் கூறப்பட்டுள்ளன.

'பெண்களுக்குரிய அழகும், ஆடவர்க்குரிய வலிமையும் பெற்றவனாக இராமன் காட்டப்படும் மரபு பத்திமை இலக்கிய காலத்தில் வழங்கியதால் அவனுக்குக் காட்டப்படும் உவமைகளிலும் பெண்டிர்க்கு உரியவை கம்பராமாயணத்தில் மிகுதியாகக் குறிப்பிடப்பட்டுள்ளன.

**அரசியல் பற்றிய உவமைகள்**

அரசனைக் கவிஞனுக்கும், அரசை அவன் காக்கும் வயலுக்கும் கம்பர் உவமை கூறியுள்ளதை,

'வையகம் முழுவதும் வறிஞன் ஓம்பும் ஓர்
செய் எனக் காத்துஇனிது அரசு செய்கின்றான்' (179)

என்ற பாடலால் அறியலாம் மன்னனை உயிராகவும், மக்களை உடலாகவும் உவமை கூறும் மரபை சுக்கிரீவனைப் பற்றிக் குறிப்பிடும் இடத்தில் (6927) எடுத்தாள்கிறார். தசரதனைப் பற்றிக் குறிப்பிடும் கம்பர் இம்மரபை மாற்றி அமைக்கின்றார்.

"செயிர் இலா உலகினில்சென்று நின்று வாழ்
உயிர் எலாம் உறைவது ஓர் உடம்பும் ஆயினான்" (177)

என மன்னனை உடலாகவும், மக்களை உயிராகவும் கூறிப் புதுமை செய்கிறார். கம்பரின் மரபு போற்றலும், மரபு மாற்றலும் இதனால் அறியப்படுகின்றது. அரசாட்சியைச் சுமையாகவும் சுமக்கும் அரசனை எருதாகவும்(1378) கம்பர் சுட்டுகின்றார். இராமன் கைகேயியின் செயலால் அரசிழந்த தன்மைக்கு வண்டியில் பூட்டப்படவிருந்த காளை அதிலிருந்து விடுபட்ட நிலையை (1603) உவமை கூறுகின்றார்.

அரசன் இல்லாத நாட்டைக் கதிரவனற்ற பகலுக்கும் நிலவற்ற இரவுக்கும் (2250), ஒப்புமை காட்டுகிறார். புகை கடிவதாலும், அருள் சுரப்பதாலும் தசரதனின் வெண்கொற்றக்குடை மதிக்கும் (176), ஆணைச் சக்கரம் பருதிக்கும் (178) உவமைகளாக அமைந்துள்ளன.

**பண்புகளுக்கான உவமைகள்**

கொடை, நடுவுநிலைமை, தூய்மை, நிலையாமையுணர்வு போன்ற உயரிய பண்புகளுக்குக் கம்பர் சிறந்த உவமைகளைப் பயன்படுத்தியுள்ளார். சான்றோர்களிடம் அமைந்த செல்வத்திற்கு வள்ளுவர் நீர் நிறைந்த ஊருணியையும், பழு மரத்தையும்(குறள் 215,217) உவமை கூறுகின்றார். கம்பர் இராமனிடம் அரசச் செல்வம் சேருவதை ஊருணி நிறைதலுக்கும், பயன்மரம் பழுத்தமைக்கும், கார்மழை பொழிவதற்கும், ஒப்பானது என வசிட்டர் வாயிலாகக் கூறுவதை,

'ஊருணி நிறையவும் உதவும் மாடுஉயர்
பார்கெழு பயன்மரம் பழுத்தற்று ஆகவும்
கார்மழை பொழியவும் கழனிபாய் நதி
வார்புனல் பெருகவும் மறுக்கின்றார்கள் யார்' (1394)

என்ற பாடலின் மூலம் அறிவதோடு வள்ளுவரின் கருத்து ஏற்றம் பெற்றிருப்பதையும் காண முடிகிறது.

தூய்மைக்கு கற்புடைய பெண்களின் சிந்தையை(408) உவமையாகக் கூறுகிறார். நடுவு நிலைமைக்குத் துலைத்தாலமும்(1425), நிலையாமைக்கு நீர்க்குமிழி(3521), புல் நுனிப்பனி நீர்(3386), மின்மினி(6499), ஆகியவை கம்பரால் உவமைகளாகின்றன.

## மெய்ப்பாட்டில் உவமைகள்

கவிஞரின் கருத்தை விளக்க உவமைகள் பயன்படுவது போலக் கதை மாந்தர் உணர்வுகளை நல்ல உவமைகள் தெளிவாகப் புலப்படுத்தும். எனவே கம்பர் உணர்வுகளை விளக்க உவமைகளைச் சிறப்பாகப் பயன்படுத்தியுள்ள பாங்கைக்காண முடிகின்றது.

தொடர்ந்து ஏற்படும் துன்பத்திற்கு வெந்த புண்ணில்வேல் பட்டதாக உவமை கூறுவது மரபு. இம்மரபைக் கம்பர் பல இடங்களில் பயன்படுத்துகின்றார். விசுவாமித்திரர் இராமனை வேள்வி காக்க அனுப்புமாறு வேண்டியபொழுது தசரதன் அடைந்த அவலத்திற்கும் (325), கைகேயியின் வரத்தால் பெற்ற துயரத்திற்கும்(1515), இராவணனால் தாக்கப்பட்ட சடாயுவைக் கண்ட சீதையின் இன்னலுக்கும்(3438), அசோக வனத்தில் சீதை அடைந்த துன்பத்திற்கும் இவ்வுவமையைக் கம்பர் பயன்படுத்துகிறார். இடிக்கு அஞ்சி வருந்தும் அரவு காப்பியத்தில் பலருடைய உணர்வுகளுக்கு உவமையாகி வருகின்றது. இலங்கை வேந்தன் பெயர் கேட்டு வானவர் அடையும் துயரத்திற்கும் அச்சத்திற்கும்(6570), இராவணன் போர்க்கோலம் கொண்டபொழுது மற்றவர்கள் கொண்ட அச்சத்திற்கும்(7140),இடிக்கஞ்சிய அரவு உவமையாகிறது.

தலைவிக்கு அரவும் அவளால் காதல் நோயுற்று வருந்திய தலைவனுக்கு அரவால் வேகமிழந்த வேழமும் உவமையாகி வருவதை, கேட்டட இரு வரத்தால் தசரதன் அடைந்த நிலையைக் கூறும்பொழுது,

"நாகம் எனும் கொடியாள் தன்நாவின் ஈந்த
சோகவிடம் தொடர துணுக்கம் எய்தா
ஆகம் அடங்கலும் வெந்து அழிந்து அராவின்
வேகம் அடங்கிய வேழன் என்ன வீழ்ந்தான்" (1505)

என்கிறார். கைகேயிக்கு அரவையும், அவளால் உணர்விழந்த தசரதனுக்கு அரவு தீண்டிய வேழத்தையும் உவமை கூறுகின்றார். பெருந் துன்பத்தால் வீழும் ஆடவர்க்கு இடியால் வேரோடு சாய்ந்த

மரமும்(2146),மிகுந்த சினத்திற்கு நெய் வார்க்கப்பட்ட நெருப்பும்(7457) உவமைகளாக இடம் பெற்றுள்ளன

**பழமொழிகள் உவமையாதல்**

மக்களிடையே வழங்கிய பழமொழிகளைக் கம்பர் உவமைகளாக எடுத்துக் காட்டுவது தனிச்சிறப்பு 'புலி புறத்தது ஆகக் குட்டி கோட்படாது' என்ற பழமொழியை அரசன் தன் குடிகளைப் புலி தன் குட்டியைக் காப்பது போலக் காக்க வேண்டும் என்ற கருத்தில் கம்பர் பயன்படுத்துகிறார்.

சூர்ப்பணகை, இராவணன் புலி போலக் காத்து நிற்கும் குட்டியாகிய தன்னை இராம - இலக்குவர் துன்புறுத்தினர் எனக்கூறிப் புலம்புவதை.

"புலிதானே புறத்துஆக குட்டி கோட்படாது என்ன
ஒலிஆழி உலகு உரைக்கும் உரை பொய்யோ (2833)

என்ற பாடலால் அறியலாம். கதலியின் கனியில்சேரும் ஊசி (4000), கம்மியனிடத்தில் ஊசிவிற்றல் (9823), எள்ளிட பூவின்மை(1847), உள்ளங்கை நெல்லிக்கனி(5252), போன்ற பழமொழிகள் கம்பரால் உவமைகளாகப் பயன்படுத்தப்பட்டுள்ளன.

**உள்ளுறையும் இறைச்சியும்**

சங்க இலக்கியங்களுக்கே உரிய தனிச்சிறப்பு உள்ளுறை உவமம் ஆகும். மாந்தர்களின் உணர்வுகளை மறைமுகமாகப் புலபடுத்தப் புலவர்கள் கருப்பொருள்களைக் கொண்டு உள்ளுறை உவமைகளைச் சிறப்புற அமைத்தனர். கம்பனில் உள்ளுறை உவமைகளோடு அமைந்த பாடல்கள் இடம் பெற்றுள்ளன. இராமன் மேல் காதல்கொண்ட சூர்ப்பணகை இலக்குவனால் தண்டிக்கப்பட்ட பின்னும்,

"சேற்றவளை தன்கணவன் அருகுஇருப்ப,சினம்திருகி
சூற்றவளை நீர் உழக்கும் துறைகெழு நீர்வளநாட" (2853)

எனக் கூறுகின்றாள். சூலுற்ற தவளை தன் தலைவனாகிய ஆண் தவளையின் அருகில் சங்கு தங்கியிருப்பதைக் கண்டு ஊடல் கொள்ளும் என்கிறாள். பெண் தவளை, தனக்கே உரியது ஆண் தவளை என நினைப்பதுபோலச் சூர்ப்பணகை இராமனைத் தனக்கே உரியவன் என்கிறாள். ஆண் தவளையின் அருகில் சங்கு இருப்பதுபோல இராமனின் அருகில் சீதையைக் கண்டதால் சூலுற்ற தவளைக்கு ஏற்பட்ட ஊடல் தனக்கும் ஏற்பட்டதாகக் கூறுகின்றாள்.

இராமன்மீது சூர்ப்பணகை கொண்ட காதலை உள்ளுறை உவமையாகக் கம்பர் குறிப்பிடுகின்றார். முதற்போரில் படையிழந்து தனித்து நின்று இராவணனை இராமன் 'இன்றுபோய்ப் போர்க்கு நாளை வா' என்பதைக் கம்பர்

"....நாகு இளங் கமுகின்
வாளை தாவுறு கோசல நாடுடை வள்ளல்" (7271)

எனக் குறிப்பிடுவதும்,

தசரதன் இறந்தபிறகு கேகய நாட்டில் இருந்து அயோத்தி வரும் பரதனை,

"ஊறுபாகுமடை உடைத்து ஒண்முளை
நாறு பாய்வயல் கோசலம் நண்ணினான்" (2119)

எனக் குறிப்பிடுவதும், கடற்கரையில் ஒரு பெண் நாரையை விரும்பி இரு நாரைகள் போரிடுவதைக்கண்டு சினம் கொள்ளும் இராமனது நிலையை(6394)குறிப்பிடும் பகுதியும் உள்ளுறை உவமைகளாக அமைந்துள்ளன.

கோசல நாட்டின் மருத நிலத்தில் அன்னம், எருமை, தவளை ஆகியவை ஒற்றுமையாக வாழ்வதைக் காட்டுவதன்மூலம் அந்நாட்டின் தலைவனான இராமன் பறவையினத்துச் சடாயுவுடனும், குரங்கினத்துச் சுக்ரீவன், அனுமன், அங்கதனுடனும், அரக்க இனத்து வீடணனுடனும், வேட்டுவ இனத்துக் குகனுடனும் அன்பு பூண்டு வாழவிருப்பதைக் கம்பர் முன்னமே எடுத்துக் காட்டுகின்றார் என்கிறார்.

**பிற உவமைகள்**

காப்பியக்கதை நிகழ்வுகளுக்கு ஏற்ப கம்பர் உவமைகளைப் பயன்படுத்தியுள்ள பாங்கை அறிய முடிகின்றது. மூங்கிலில் பிறந்த தீ அக்காட்டையே அழிக்கும் என்ற செய்தியை சூர்ப்பணகைக்கு உவமையாக்கிக் காட்டுவதை,

"வான் தொடர் மூங்கில் தந்த வயங்குவெந்தஇதுஎன்ன
தான்தொடர் குலத்தை எல்லாம் தொலைக்குமா சமைந்து நின்றாள்" (2940)

என்ற பாடலால் அறியலாம்.

அணைகட்டக் குரங்குகள் மலைகளைக் கடலில் எறிகின்றன. காய், கனி, மலர் நிறைந்த மரங்கள் நீருள் மறைகின்றன. மீன்கள் கனிகளையும், காய்களையும் கவ்விக் கொள்கின்றன. இச்செயலைக் கம்பர்,

"......வறியவர் என்ன மேன்மேல்,
உள்நிறை செல்வம் நலகாது ஒழிக்கின்ற உலோபர் ஒத்த (6672)

என்கிறார். காய்களையும் கனிகளையும் நாடிவரும் மீன்களுக்கு வறியவர்களையும், கடலுள் மூழ்கும் மரங்களுக்கு ஈகை மனப்பான்மை இல்லாத கீழோரையும் உவமை கூறுகின்றார்.

இலக்குவனது அம்பு சிலரின் கைகளையும், சிலரின் கால்களையும், சிலரின் தலைகளையும் அறுக்கிறது. இவ்அம்புகளுக்குப் பொருளுக்காகப் பிறரின், தலை, கால், கை இவற்றைப் புகழ்ந்து பாடும் புலவர்களை (7497) உவமையாக்குகிறார் கம்பர்.

**முடிவுரை**

கம்பருடைய காப்பியம் கடல் போன்றது. இதில் மூழ்கி முத்து எடுத்தால்தான் உவமைகளை ரசிக்க முடியும், சுவைக்க முடியும். அப்பொழுதுதான் இன்பம் கிடைக்கும்.

# கம்பரின் முரண்பாட்டு உத்தி

முனைவர் ஔவை இரா நிர்மலா
தமிழ் இணைப்பேராசிரியர், அவ்வையார் அரசு மகளிர் கல்லூரி,
காரைக்கால்.

'விருத்தமெனும் ஒண்பாவிற்கு உயர்கம்பன்' எனத் தமிழுலகு போற்றும் கம்பர் தமக்கு முன்பிருந்த பிற கவிஞர்களைப்போன்றே விருத்தப்பாவினைத் தம் காப்பியத்திற்குப் பயன்படுத்தியிருந்தாலும் அவர் கையாண்டுள்ள நடையியல் கூறுகளே அவருக்கு அப் புகழ்மொழியை ஈட்டித்தந்துள்ளது எனலாம். எனவே அவர் எடுத்துக்கொண்ட பொருண்மையைக் காட்டிலும் அவரது நடையே அவருக்குக் கவிச்சக்கரவர்த்தி என்ற தனிப்பெருஞ் சிறப்பை அளித்துள்ளது என்று கூறலாம். நடை சிறப்பதற்குத் துணைபுரியும் பல்வேறு கூறுகளுள் ஒன்றாகிய முரண்பாட்டு உத்தியைக் கம்பர் அதிகமாகக் கையாள்வதைக் காணமுடிகிறது. எனவே கம்பரின் முரண்பாட்டு உத்தியைக் காண்பதாக இக்கட்டுரை அமைகிறது. பக்க விரிவஞ்சி கம்பராமாயணத்தின் ஆரண்ய காண்டம் மட்டும் இங்கு எடுத்துக்கொள்ளப்பெறுகிறது.

### சொல்முரண்

ஒரு சொல்லோடு மாறுபடுகின்ற பிறிதொரு சொல்லை அமைத்தல் சொல்முரணாகும். இச்சொல் முரண், பெயர்ச்சொல் முரண், வினைச்சொல் முரண் முதலான பலவகைகளில் அமையும்.

### பெயர்ச்சொல்முரண்

விராதன் வதைப்படலத்தில் விராதனை அழிப்பதற்காக இராமனும் இலக்குவனும் விராதனின் தோள்களில் ஏறுகின்றனர். அக்காட்சியை,

> "வந்து மேருவினை நாள்தொறும் வலம்செய்து உழல்வோர்
> இந்து சூரியரை ஒத்து இருவரும் பொலியவே" (கம்.2552:3-4)

என்று கம்பர் புனைந்துரைக்கிறார். மேருவைச் சுற்றிவரும் சூரியனையும் சந்திரனையும் போன்று விராதனின் தலைக்கு இருபுறமும் தோள்களில் இராம இலக்குவர் இருவரும் தோற்றமளித்தனர் என்று கூறுகையில் சந்திரன், சூரியன் ஆகிய இரு பெயர்ச்சொற்களையும் முரண்பட உவமிக்கிறார் கம்பர்.

கனைகடல் நெடுநிலம் காவல் ஆழியான் (2706:3) என்னும் அடியில் கடல், நிலம் ஆகிய பெயர்ச்சொற்களை முரண்பட அமைக்கிறார் கம்பர்.

**வினைச்சொல்முரண்**

'இறப்பதே பிறப்பதே எனும் விளையாட்டு இனிது உகந்தோய்'
(2566:4)

என்னும் அடியில் இறப்பு, பிறப்பு என்னும் முரண்பாடுடைய இரு வினைச்சொற்களை ஒருங்கு குறிப்பிடுகிறார் கம்பர்.

"வைதேவி தன்வால் வளை மென்கை எனும்
கொய்யா மலரால் மலர் கொய்குறுவாள்" (328:3-4)

என்னும் அடிகளில் மலரைக் கைகளாகிய மலர் கொய்ததாகச் சுட்டிக் கம்பர் வினைச்சொல் முரணை அமைக்கிறார்.

**பண்புச் சொல்முரண்**

இராமனையும் இலக்குவனையும் கண்ணுறும் சடாயு, அவர்களைக் 'கருமலை செம்மலை அனைய காட்சியர்' (2704:1) என்று நினைக்கிறான். இங்கு கருமை, செம்மை என்னும் இரு பண்புகளையும் பெயரடையாக முரண்பட அமைக்கிறார் கம்பர். செங்கயல்போல் கருநெடுங்கண் (2850:1) என்னும் பகுதியில் கரிய கண்களுக்குக் கயல் மீனை மட்டும் உவமிக்காமல் செங்கயல் என்று குறிப்பிட்டுரைத்தல் பண்புச்சொல் முரணை அமைக்கவிரும்பிய கம்பரின் உள்ளக்கிடக்கையை வெளிப்படுத்துகிறது.

**எதிர்மறைச் சொல்முரண்**

நல்லாள்மேல் பொல்லாதாள் ஓட்டந்தாள் (2852:3-4) என்னும் அடியில் நல்லாள் என்று சீதையையும் பொல்லாதாள் என்று சூர்ப்பணகையையும் குறிப்பிடுகிறான் இலக்குவன். நல்லாள், பொல்லாதாள் ஆகிய எதிர்மறைச் சொற்கள் முரண்பாட்டு உத்தியாகக் கம்பரால் இங்குப் பயன்கொள்ளப் பெறுகின்றன. அவ்வாறே, 'நன்று தீது நாடலேன்' (2582:3), 'அன்றுதொட்டு இன்றுகாறும்' (2744:2) என்னும் பகுதிகளில் முறையே நன்று, தீது; அன்று, இன்று என்னும் எதிர்மறைச் சொற்கள் அமைந்து முரண்அழகைத் தோற்றுவிக்கின்றன.

"மேவாதவர் இல்லை மேவினரும் இல்லை
வெழியோடு இருள் இல்லை. மேல் கீழும் இல்லை
மூவாதமை இல்லை மூத்தமையும் இல்லை
முதல் இடையோடு ஈறுஇல்லை முன்னொடு பின்இல்லை" (2614:1-2)

". . . அரும் பொருள்கள்
மேல்கீழுற கீழனமேலுறும் வேலை" (3477:3-4)

என்னும் பகுதிகளிலும் எதிர்மறைச் சொல்முரண் அமைந்திருக்கக் காணலாம்.

**முரண் உம்மை**

முரண்பட்ட இருசொற்களை உம்மையின் மூலம் இணைத்துக் கூறலை முரண்உம்மை எனலாம். விண்ணும் மண்ணும் விரிந்த போர் அரக்கர் (2789:2), மின் வானமும் மண்ணும் (3279:2) என்னும் சான்றுகளில் முறையே விண், மண்; வான், மண் ஆகிய முரண்பட்ட சொற்கள் உம்மையால் இணைக்கப்படுகின்றன. எல்லியும் பகலும் நொந்து இரங்கி ஆற்றலெம் (2643:2) என்று தண்டகவன முனிவர்கள் இராமனிடம் தம் அல்லலைக் கூறுகின்றனர். இத் தொடரிலும் எல், பகல் என்னும் முரண்பட்ட இரு சிறுபொழுதுகளைக் கம்பர் உம்மையால் இணைத்துக் கூறுகிறார்.

அயோமுகி என்னும் அரக்கியால் தூக்கிச் செல்லப்பெற்ற இலக்குவனை மீண்டும் கண்ட இராமனின் நிலையை, இன்னலும் உவகையும் இரண்டும் எய்தினான் (3626:3) என்று குறிப்பிடுகிறார்.

**முரண் உவமை**

"பூப்பொதி அமிழ்ந்தன நடையன் பூதலம்
தீப்பொதிந் தாமென மிதிக்கும் செய்கையன்"

என்று இராவணனைக் குறிப்பிடுகிறார் கம்பர். இச்சான்றில் பூ, தீ என்னும் இருவேறுபட்ட தன்மைகளைக் கொண்ட பொருட்களை உவமையாகக் கம்பர் கையாள்கிறார்.

"தாய்தன்னை அறியாத கன்றுஇல்லை தன்கன்றை
ஆயும் அறியும் உலகின் தாய்ஆகின் ஐய
நீஅறிதி எப்பொருளும் அவைஉன்னை நிலை அறியா
மாயை இது என்கொலோ வாராதே வரவல்லாய்" (2570)

என்னும் பகுதியிலும் முரண் உவமை அமையக் காணலாம். இதனை இலக்கணநூலார் வேற்றுமை அணியாக வகுத்துரைப்பர்.

**பொருண்மை மயக்கம்**

'சாகல் இன்று பொருள் அன்று' (2557:3) என்னும் தொடரைக் காணும்போது இன்று, அன்று என்னும் இரு சொற்களும் இன்மைப் பொருண்மைகொண்ட சொற்களைப்போல் தோன்றுமாறு கம்பர் பயன்படுத்துகிறார். ஆனால் இன்று என்னும் சொல் காலத்தைக் குறிப்பதால் பொருண்மை மயக்கம் என்னும் உத்தியைக் கம்பர் இங்கு கையாண்டிருக்கிறார் எனலாம்.

**செயல் முரண்**

இருவேறுபட்ட செயல்களை ஓரிடத்தில் அடுக்கும்போது அது செயல் முரணைத் தோற்றுவிக்கிறது. நின்றாரைக் காத்தி அயலாரைக் காய்தி (2616:4) என்று இராமனை இந்திரன் துதிப்பதாக அமையும் பகுதியில் இராமனிடம் அடைக்கலமாகப் புகுவாரைக் காப்பாற்றலும் அவ்வாறு செய்யாத பகைவரை அழித்தலுமாகிய இரு முரண்பட்ட செயல்களை ஓரிடத்தில் அமைத்துக் கூறுவதால் இங்கு செயல் முரண் அமைந்திருக்கக் காணலாம்.

இவற்றைத் தவிர 'ஒன்றினொடு ஒன்று ஒவ்வாப் பூதங்கள்தொறும் உறைந்தான்' (2563) என்று கூறும்போது நிலம், நீர், தீ, வளி, விசும்பு என்னும் ஐம்பூதங்களும் ஒன்றுடன் ஒன்று முரண்பட்டன என்று அவற்றின் தன்மையை எடுத்துரைக்கிறார். இறைவன் இத்தகைய முரண்பட்ட தன்மையுடைய பொருட்களில் உறைந்துநிற்பவன் என்ற முரண் இன்பத்தைக் கம்பர் மிகுவிக்கிறார்.

சீதையிடம் கொண்ட காமமயக்கத்தால் துன்புறும் இராவணன், மெய் வெளுத்தாய் உள்ளம் கறுத்தாய் (3180:1) என்று சந்திரனைப்; பழிக்கிறான். இங்குச் செயல்முரணை நுட்பமாகப் பயன்படுத்துகிறார் கம்பர். மேலும்,

"ஒருவினையும் இல்லார்போல் உறங்குதியால் உறங்காதாய்" (2572:4)

"பெற்றும் பெறுகில்லது ஓர் பெற்றியதே (2605:2)

அறியாதான் போல அறிந்தஎலாம் சொல்வான்" (2612:4)

முதலான பகுதிகளும் செயல்முரண் அழகைத் தோற்றுவிக்கின்றன.

**பண்பு முரண்**

சூர்ப்பணகையின் காமத்தைச் சுட்டும்போது அழல்மிகு தென்றலும் (2813:1) என்று குறிப்பிடுகிறார். குளிர்ச்சி ஊட்டுகின்ற தென்றலின் பண்பை மாற்றி வெப்பத்தை ஊட்டுவதாகப் படைத்துப் பண்புமுரணைத் தோற்றுவிக்கிறார் கம்பர். இராமனை அடைந்தே தீரவேண்டும் என்று நினைக்கும் சூர்ப்பணகை,

". . . இருந்தவன் நெடிய மார்பகம்
ஒன்றுவென் அன்றுஎனின் அமுதம் உண்ணினும்
பொன்றுவென்" (2759:1-3)

என்று கூறுவதாகக் காட்டுகிறார். உயிரினை நிலைபேறுடையதாக்குகின்ற

அமுதம் உண்டாலும் இராமனை அடையாவிடில் இறத்தல் உறுதி எனச் சூர்ப்பணகை கூறுகிறாள். இராமன் சாவாமை தரும் அமுதமாகத் திகழும் அதே வேளையில் அவன் கிட்டாதபோது அவ்அமுதமே நஞ்சாகவும் மாறிவிடும் நிலையைச் சூர்ப்பணகை அறிந்திருக்கிறாள் என்னும் முரண்பாடு தோன்றக் கம்பர் அமைக்கிறார்.

உயிர் கிடக்க உடலை விசும்பு ஏற்றினார் (2712:4), உடல் இரண்டுக்கு உயிர் ஒன்று ஆனான் (2716:2) ஆகிய தொடர்களிலும் பண்பு முரண் அமைந்திருக்கக் காணலாம்.

**பாத்திர முரண்**

மாரீசன் பொன்மானாக வர அதைக் கண்ணுறும் இலக்குவன் அதைத் தொடார்ந்து செல்லல் தகாது என்று இலக்குவன் கூறியும் இராமன் அதற்குச் செவிசாய்க்கவில்லை. அப்போது கம்பர் தேவரை இடுக்கண் தீர்ப்பான் (3299:4) என்று இராமனைக் குறிப்பிடுகிறார். இராமனின் இச்செயலே இராமனுக்கும் அவனைச் சார்ந்த சீதைக்கும் இடுக்கண் ஏற்படக் காரணமாகிறது. தேவர்களின் இடுக்கண் தீர்க்கின்ற இராமன் தனக்குத்தானே இடுக்கண் ஏற்படுத்திக் கொள்ளும் பாத்திரமுரணைக் கம்பர் இங்கு அழகாக எடுத்துக்காட்டுகிறார்.

சீதையை அபகரிப்பதற்காகத் தவமுனி வேடம்கொண்டுவந்த இராவணன் சீதையிடம் இலங்கையை ஆட்சிசெய்யும் அரசனைக் கண்டுவந்ததாகக் கூறுகிறான்.

"அனைத்து உலகினும் அழகுஅமைந்த நங்கையர்
எனைப்பலர் அவன்தனது அருளின் இச்சையோர்
நினைந்துஅவர் உருகவும் உதவ நேர்கிலன்
மனக்கு இனியாள் ஒருமாதை நாடுவான்" (3365)

என்று இராவணனின் பண்புநலனை அவனே எடுத்துரைக்கும் இப்பகுதியில் பாத்திரமுரண் அமைந்திருக்கக் காணலாம்.

**காட்சி முரண்**

"மூன்றுலகு உடையவன் தங்கை மூக்கிலள்
தான் தனியவள்வர தரிக்க வல்லரோ?" (3092)

என்று சூர்ப்பணகையைப் பற்றிக் கம்பர் கூறுகிறார். இராவணன் மூன்றுலகினையும் தன் ஆட்சியின் கீழ் வைத்திருந்தாலும் அனைவருக்கும் உளதாகிய மூக்கினையும் இழந்தவளாகச் சூர்ப்பணகை

காணப்பட்டாள் என்றும் தமையன் மூன்றுலகு வைத்திருக்க தங்கை தனியளாக வந்தாள் என்றும் காட்சி முரணை ஏற்படுத்துகிறார் கம்பர்.

**நிகழ்ச்சி முரண்**

இராமனிடம் உரையாடிக்கொண்டிருக்கும் சூர்ப்பணகை அங்கே சீதைவரக் கண்டதும்,

> "வரும்இவள் மாயம்வல்லள் வஞ்சனை அரக்கி நெஞ்சம்
> தெரிவுஇல தேறும்தன்மை சீரியோய் செவ்விது அன்றால்
> உருஇது மெய்யது அன்றால் ஊன்நுகர் வாழ்க்கையாளை
> வெருவினென் எய்திடாமல் விலக்குதி வீர என்றாள்" (2794)

என்று கூறுகிறாள். இராமனிடமே சீதையை அரக்கி என்று சுட்டுவதும் அரக்கியாகிய சூர்ப்பணகை மானுடப் பெண்ணை அரக்கி என்று கூறுவதும் நிகழ்ச்சி முரணைத் தோற்றுவிக்கின்றன.

**கருத்தியல் முரண்**

காலனும் காலன்என்று அயிர்க்கும் காட்சியார் (2916:4) என்று இராமனை எதிர்த்துவந்த கரன் படையினரைப் பற்றிக் கம்பர் குறிப்பிடுகிறார். உயிரைக் கூறுபடுத்தும் காலனே படைவீரர்களின் வேகத்தையும் செருக்கையும் பார்த்துக் 'காலனோ' என்று மருண்டான் என்று கம்பர் கூறுகிறார். இங்குக் காலன் என்னும் கருத்தியல் முரண்பட அமைந்துள்ளதால் இவ் உத்தி கருத்தியல் முரணாகிறது. இவ்வாறே,

> "தவம்செய தவம்செய்த தவம்என்?" (2749:4)

> "துப்பினில் துப்புடை யாதைச் சொல்லுகேன்?" (2752:4)

> "தன்அலாது ஒருபொருள் தனக்குமேல் இலான்" (3626:4)

முதலான தொடர்களிலும் கருத்தியல் முரண் அமைந்திருக்கக் காணலாம். இதுகாறும் கண்டவற்றால் கம்பர்தம் காப்பியத்தில் சொல்முரண், பண்புமுரண், பாத்திர முரண் முதலான பலவகையான முரண்பாட்டு உத்திகளைப் பயன்படுத்திக் காப்பிய நடையைச் சிறப்பித்திருப்பதை அறியமுடிகிறது.

# கம்பனின் இடம் பெறும் உத்திகள்

முனைவர் பா. திருஞானசம்பந்தம்
உதவிப்பேராசிரியர், தமிழியல் துறை, அண்ணாமலைப் பல்கலைக்கழகம்
அண்ணாமலை நகர்.

**முன்னுரை**

தமிழுக்குக் கதி எனக் கம்பனையும், திருவள்ளுவரையும் கூறுவர். தமிழிலக்கிய உலகில் கம்பனுக்குத் தனி இடம் உண்டு. கம்பனின் கற்பனைத் திறனையும், கவிதை ஆற்றலையும் கண்ட பாரதி ஒரு மனிதனால் இத்தகைய செயலைச் செய்யமுடியுமா? என்று பாரதி ஐயுறுகிறார். அந்த நிலையில் ஆற்றலுடையவன் கம்பன். ஆயிரம் ஆண்டுகளாகக் கம்பனைப் பற்றி ஆய்வு செய்துகொண்டு இருக்கிறோம். இன்னும் பல ஆய்வு செய்வோம். இலக்கிய உலகில் கம்பன் பற்றிய ஆய்வுகள் அதிகம். அறநூல்களில் திருக்குறள் முதலிடம் வகிப்பது போன்று, காப்பிய நூல்களி;ல் முதலிடம் வகிப்பதாக கம்பராமாயணத்தைக் கருதலாம். இந்நூலில் கம்பர் படைத்தருளிய உத்திகள் பற்றி இக்கட்டுரையில் காணலாம்.

**இலக்கிய உத்திகள்**

வாழ்க்கையின் இலக்காக அமைவது இலக்கியம். வாழ்வின் இலக்கு எதுவென உணர்த்துவது; வாழ்வின் இயல்பினை இயம்புவது. இயல்பான வாழ்க்கையும் சிறப்புடையதாக இலங்கச் செய்வது இலக்கியம். கம்பனின் படைப்பில், வெளிப்படையாகவும் குறிப்பாகவும், விரிவாகவும், சுருக்கமாகவும் இலக்கியம் பற்றிய எண்ணங்கள் உணர்த்தப்படுகின்றன. கம்பனின் இலக்கியம் தன் முழு அமைப்பால் காப்பிய இயல்பும் கவிதை இலக்கணமும் குறிப்பாகத் தந்து நிற்பதுடன் வெளிப்படையாகவும், விளக்கமாகவும் செய்யுள் தன்மையும் கவிப்பான்மையும் காட்டி உவமை, உருவக வருணனை ஆட்சி கொள்கின்றது.

இலக்கியங்களின் பெரும் பகுப்பிற்கேற்பத் தனிப்பாடல் உத்தி எனவும் தொடர்நிலைச் செய்யுள் உத்தி எனவும் கருத வாய்ப்பு உண்டு. பொதுவாக இலக்கியத்தைப் பொருளும் அமைப்பும் என இரு பகுப்புக்கொண்டு அவற்றிற்கேற்ப பொருள் உத்தி, அமைப்பு உத்தி, எனவும் அக உத்தி - புற உத்தி எனவும் காணலாம். இலக்கிய வடிவ வெழியீட்டின் பெரும் பகுப்பிற்கேற்பக் கதை உத்தி-காப்பிய உத்தி, நாடக உத்தி எனவும் காண்பது பொருத்தமுடையதாகின்றது.

**வகைகள்**

உத்திகள் எவையெவை என்பது பற்றிய எண்ணம் பல்வகை நூல்களில் பரந்து அமைகின்றது. நடை, கவிதைமொழி வருணனை, ஒலிநயம் போன்றன இதனுள் அடக்கப்படுகின்றன. உருவகம், உவமை, மீமரபுவமை போன்றனவும் இங்கு இடம்பெறும். நடையியல் என்பதால் ஒத்திசை, அமைப்பொருமை, காட்சிப்படுத்தல், முரண், வேறுபாடின்மை, விகற்பம், கவிதைமொழி, இணைமை, உருவாக்கம், ஒலியின்மை, ஒலிக்குறிப்பு என்பனவும் கருதப்படுகின்றன.

மொழியைப் பயன்படுத்தும் கலை, இலக்கிய ஆளுனரின் உத்திமுறையாகச் சுட்டப்படுகின்றது. யாப்பு வடிவமும் செய்கையானதும் இயல்பு குன்றியதுமாக இருப்பினும் கவிதைக்குக் கருவி உத்தியாகின்றது. எந்த கலையும் உத்திகள் பலவற்றைப் பெற்றதுதான். எந்தப் படைப்பாளனும் தனக்குரிய பல உத்திமுறைகளைப் பயன்கொண்டே ஆக்கம் புரிகின்றான். பிற எல்லாக் கலைகளைக் காட்டிலும் இலக்கியம் ஏற்றமும் சிறப்பும் நிலைமையும் கொள்ளுதற்கேற்ப அதன் உத்திகளும் உயர்வும் வகைமையும், பயிற்சியும் புதுமையும் கொண்டு அமைகின்றன.

**ஒலிநிலை உத்திகள்**

ஒலிநிலை உத்திகளாக, கொள்ளக்கூடியன. ஒலிக்குறிப்புச் சொற்களும், இரட்டைக் கிளவிகளும், ஒலியடிப்படையில், உணர்வும், பொருளும் புலப்பட இவை ஆளப்படல் பற்றி. உத்தியாக அணுகத்தக்கன. இது வாழ்வின் பேச்சுமொழி நடையாகவும் அமைகின்றது. இதனை,

> "மாசொடு கருகி மேனி வனப்பு அழிந்திட ஊர் வந்தாள்
> "சீசி'என்று யாரும் எள்ள திகைப்பொடுது பழுவம் சேர்ந்தான்"
>
> "சீசி உற்றது எனத் தீயும் நெஞ்சினான்"

என, வெறுப்பு, இழிவு, எள்ளல் போன்ற பல உணர்வு வெளிப்பாடுகள் தொனிக்கும் வண்ணம் இவ்வொலிக் குறிப்பு ஆளப்படுகின்றது. விளக்கமாக பல சொற்களில் புலப்படுத்த வேண்டிய எண்ணத்தை ஓரொலியில் அமைக்கும் பாங்கு பற்றி இது உத்திசார்பு பெறுகின்றது.

**இரட்டைக்கிளவி**

இரண்டில் பிரிந்து இசையாத இரட்டைக்கிளவிச் சொற்கள் ஒலியடிப்படையனவாகத் தோற்றம் தருவதால் இங்கு சுட்டத்தக்கன.

மரங்கள் ஒடியும் ஒலியைச் 'சடசட' எனும் சொல்நிலையில் காட்டி, படை வரவைவுணர்த்தலும், இராமனின் செலவு, விரைவு தருதலும் கம்பனிடம் அமைகின்றன. இதனை,

"துழியின் படலை வந்து தொடர்வுற மரமும் தூறும்
தாள் இடை ஒடியும் ஓசை சடசட ஒலிப்ப......" எனவும்,

"நெடுவரை பொடிபட நிவந்த மாமரம்
ஒடிவுற நிலமகள் உலைய ஊங்கு எலாம்
சடசட எனும் ஒலி தழைப்ப"

என ஒலிக்குறிப்புடன் செய்தியை உணர்த்துவது, மக்களின் வாழ்வியல் பேச்சுடன் இணைந்து செல்வதால், காப்பியத்தை மக்கள் இலக்கியமாக்கவும் உதவுகின்றது. மழையோசை மற்றும் வில்லோசையை கவிஞர் ஒலிச்சொல்லால் தருவதும் சுட்டத்தக்கது. இதனை,

"....சளசள என மழைத்தாரை கான்றன" எனவும்,

"....சுடுமணி நெடியவள் வெஞ்சிலை
கணகண கண கண எனும் தொறும்"

எனக் காட்சிப்புலனுக்கு உட்படாத பொழுதும் அளவும் இவ்வாறு செவிபுலனை எட்டும் நிலையில் காட்டப்பெறுகின்றன. இந்நிலை ஒலியில்லாவிடத்தும், மிகுதிப்பொருள் குவிக்கும் வண்ணம் இரட்டைக் கிளவியை ஆளும் உத்திநிலை காட்டுகின்றது.

**சொல்நிலை உத்திகள்**

ஒலிநிலைகள் போன்றே, சொல்லாட்சியும் கவிஞனிடம் சிறப்புப் பெறுகின்றன. இலக்கிய ஆசிரியரின் சொல்லாற்றலும், மிக்க சொல்லறிவும் உடையனவாக இருத்தல் பற்றியே அவன் படைப்பு சொற்களஞ்சியமாக அமைந்து சிறக்க முடிகின்றது. அவன் தனித்தன்மை புலப்பட, சொல்லை ஆளும் நிலையிலும் உத்திகளைப் பயன்கொண்டு, மரபுத் தொடர்ச்சி காட்டியும், புதுமைபடைத்தும் அமைகின்றான்.

சொல் உத்திகளில் புதுமைச்சொலால் பொருள் சிறக்கச் செய்வதில் கவிஞனின் தனித்தன்மை புலப்படுகின்றது. இத்தகைய பலவிதமான சொல்தோற்றங்கள் மொழியை வளப்படுத்தும் நிலையிலும் கவிதையில் ஓசையும் பொருளும் சிறப்பாகச் சுட்டத்தக்கன.

சேனை - அறிகம் எனவும், பொன் யானையைக் கரிணி எனவும் குறிக்கும் கம்பனின் அமைப்பு முன் இலக்கியங்களில்

காணப்படவில்லை. கம்பன் இலக்கியத்திலும் சொல்லுக்கு அடைகள் ஆளும் பாங்கில் இவ்விரு நிலைகளிலும் பொருந்துகின்றன. இயற்கையின் கூறான திங்களை. பெரும்பான்மைச் சூழலிலும், அதன் வெண்மைப்பண்பு சுட்டும் அடைகள் பலவற்றை தருதலை இங்குச் சான்றாகச் சுட்டலாம். இதனை,

'ஆழிவெண் திங்கள்', 'தனிவெண் திங்கள்', 'குளிர்வெண் திங்கள்' 'வெண்நிற நிலவு' என ஒரே அடை அல்லது ஒத்த அடைப்பயிற்சி இயல்பு போன்று ஒரு பொருட்குப் பல அடைகள் இணைவதும் கருதத்தக்கது.

**தொடர்நிலை உத்திகள்**

தொடர்நிலை உத்தியாக அமைவது பல காணப்படுகின்றன. ஏறத்தாழ, யாப்புத்திகளுள் ஒன்றான இரட்டையாப்புடன் இது ஒத்துச் செல்லினும் இதனை மொழிநடை உத்தி என்ற நிலையில் தனியே எண்ணத்தகும் பான்மை கொள்கிறது. அடுக்குத்தொடர் என்பது அசைநிலையாகவும், இசைநிறையாகவும் வரும் என்பது இலக்கண நூலாரின் கருத்து. பல்சுவை நயமுடைக் காவியம் படைத்த கவிஞன் கம்பனும் இவ்வடுக்குத் தொடரைப் பயன்படுத்துகின்றான்.

அவல உணர்வு, அழுகையாக வெளிப்பட்டவிடத்துக் கம்பன் இதனை ஆள்கின்றான். சூர்ப்பணகை உறுப்பு அறுபட்டு அழுது, அரற்றலில், அண்ணாவோ, அண்ணாவோ, இராவணனோ, இராவணனோ என அரற்றுவதில் அமைகின்றது.

மாயா சனகனைக் கண்டு, 'எந்தையே எந்தையே' எனச் சீதை வாய்விட்டு அரற்றுவதும், தூண்டைச் சிரித்த நரசிங்கத்தைப் 'புறப்படு புறப்படு' என இரணியன் அவசரப்பட்டுப் போக்கு அழைத்தல் தூதுவன் கொணர்ந்த செய்தி அறிய இலக்குவன் 'சொல்லிடு சொல்லிடு' எனத் துடித்தல் போன்ற கம்பனின் தொடர்நிலை உத்திகளாக கருதலாம்.

**முடிவுரை**

கம்பனின் காப்பியப்படைப்பில், மரபும் புதுமையும் விரவிய நடை காணப்படுகின்றது. ஒலிநிலை, சொல்நிலை, தொடர்நிலை உத்திகளை கம்பன் வகுத்தும் ஆக்கியும் தருகின்றான். பயன்பாட்டு நிலையில் பழமையைப் போற்றல் மிக்கு அமையினும், மிகவும்; பொருத்தமான நயமான உத்திநிலைகளை கையாண்ட விதம் நயம் சேர்க்கின்றது.

# கம்பரும் நன்னூலாரும்

திருமிகு. டி.பாலமுருகன்
சிவகங்கை.

## முன்னுரை

கம்பர் வால்மீகியின் இராமாயணக் காவியத்தில் பேரீடுபாடு கொண்டிருந்தார். அப்பேரிதிகாசத்தைத் தமிழ் மக்கள் துய்க்க வேண்டும் என்னும் நன்னோக்கத்துடன் அதனைத் தமிழில் ஆக்குகின்றார்.

"ஆசைபற்றி அறையலுற்றேன் மற்று, இக்காசில்
கொற்றத்து இராமன் கதையரோ" (பாயிரம் 4)

என அவையடக்கத்தில் கம்பர் தம் நோக்கத்தை வால்மீகியின் காவியத்தில் தாம் கொண்டிருந்த ஈடுபாட்டைத் தெளிவாக எடுத்துரைக்கின்றார்.

"பொய்யில் கேள்விப் புலமையினோர் புகல்
தெய்வக் கவியாம்" (மேலது ப.6)

வால்மீகியின் காவிய மாட்சியைத் தமிழ் மக்களுக்குத் தெரி-விப்பதற்காகவே தாம் அதனைத் தமிழில் மொழியாக்கம் செய்ததாகக் கம்பர் தெரிவிக்கின்றார்.

## மொழிபெயர்ப்பன்று புத்தாக்கம்

கம்பர் வால்மீகியின் கதைப் போக்கையும், கதை நிகழ்ச்சிகளையும், பாத்திரப்படைப்புகளையும் பெருமளவுக்குப் பின்பற்றியிருப்பினும் கம்பராமாயணம் வால்மீகி முனிவரின் இதிகாச மொழிபெயர்ப்பன்று: மாறாக அது ஒரு புத்தாக்கமாக அமைந்துள்ளது. வால்மீகியின் காலச்சூழ்ச்சியில் தோன்றிய மானிரன் இராமனுடைய வரலாறு கம்பர் காலத்தில் திருமாலின் அவதாரக் கதையாகப் பரிமாணம் பெற்றுவிட்டது.

கதை நடத்தும் போக்கில் முனிவருக்கும் கம்பருக்கும் இடையில் காணப்படும் நுட்பமான வேறுபாடுகளுக்குக் காரணம் இராமயணக் கதைப்பற்றி இருவரும் கொண்டிருந்த வேறுபட்ட நோக்கு நிலைகளே ஆகும்.

## இறைவனும் மக்களும்

அவதாரக் கதையைக் காவியமாகப் புனையும்போது, மூலத்தில் உள்ள கதையைத் தம் நிகழ்காலத் தேவைகளுக்கு ஏற்பச் சுருக்கவும்,

விரிக்கவும், நீக்கவும், படைக்கவும் கவிஞனுக்குள்ள உரிமையைக் கம்பர் பயன்படுத்திக் கொள்கின்றார். தெய்வம் தெய்வமாக நடந்து கொள்ளுமானால், மனிதனுக்குப் பெரும்பயன் விளைவதில்லை. தெய்வம் மனிதனை நோக்கி இறங்கி வருதல் வேண்டும். அது மக்களைத் தழுவிச் சுற்றிச் சுழன்று வருதல் வேண்டும் என்கின்றார்.

"உறவேல் நமக்கிங்கு ஒழிக்க ஒழியாது" (கம்பரும் வால்மீகியும் ப.11)

என்று இறைவனும் மக்களும் இருத்தல் வேண்டும். ஆழ்வார்களின் அருளிச் செயல்களின் விளைவாக எழுந்த சிந்தனைப் பின்புலத்தில் தம் காவிய நாயகன் இராமனைக் கம்பர் படைக்கின்றார்.

**பெயருக்குக் காரணம்**

வால்மீகி முனிவர் தம் பேரிலக்கியத்துக்கு "இராமாயாணம்" என்று பெயர் சூட்டினார். தம் நூலுக்கு அவர் "சீதையின் சரித்திரம்" எனறும், "புலஸ்தியன் வாதம்" என்றும் வேறு பெயர்களும் தந்துள்ளார். இராம+அயநம் = இராமாயணம். அயநம் - பிறப்பு, வளர்ப்பு வரலாறுகள் என்று பெயர். இராமாயணம் எனில் இராமனது பிறப்பு, வளர்ப்பு பற்றிய வரலாற்றினைக் கூறும் நூல். ஆயின், கம்பனோ இராமனுடைய வரலாற்றைப் படைக்கவி;ல்லை. அவர் இராமனாக அவதரித்துள்ள பரம்பொருளின் செயல்களைப் பாடுகின்றார். எனவே தம் காவியத்துக்கு அவர் 'இரமஅவதாரம்' எனப் பெயர் சூட்டுகிறார்.

"நடையின் நின்றுயர் நாயகன் தோற்றத்தின்
இடைநி கழ்ந்த இராமா வதாரப்பேர்த்
தொடை நிரம்பிய தோமறு மாக்கதை" (கம்ப. பாயிரம் -11)

என்பது கம்பர் வாக்கு.

**வழிநூல்**

தமிழ் இலக்கண அறிஞர்கள் கூறாத வேறு சில வழிநூல் நெறிகளைக் கம்பர் நீக்கல், படைத்தல் போன்ற புத்தாக்கங்களாகப் போற்றிப் பாடியுள்ளார். மூல நூலை வழிநூலாகப் படைக்கும் போது, முதல் நூலில் சொல்லப்பட்ட ஆனால், வழிநூலில் ஆசிரியனுக்கு ஒவ்வாத நிகழ்ச்சிகளை, உரையாடல்களை நீக்கிவிடும் உரிமை வழிநூல் ஆசிரியனுக்கு உண்டு. அதனைக் கம்பர் பயன்படுத்திக் கொள்கிறார். வழிநூலாசிரியரின் மூலத்தில் இல்லாத ஆனால், சம காலத்துக்கும் பொருத்தமான, சில நிகழ்ச்சிகளை, உரையாடல்களைப் புதிதாக படைத்துக் கொள்ளும் உரிமையும் உடையவர். கம்பர்

அவர் உரிமையைப் போற்றிக் கொள்கிறார். வேறு சொற்களில் விளக்குவதாயின், தன் காலத்துக்குத் தேவையான அனைத்தையும் படைத்துக் கொள்ளும் உரிமை, வழிநூல் ஆசிரியனுக்கு உண்டு. ஆனால் அவன் மூலநூலின் முடிவுக்கு மாறுபடாமல் முதல்நூல் ஆசிரியரின் சிந்தனை நுட்பத்துக்கு கேடு சூழாமல் வழி நூலை இயற்றல் வேண்டும். இதனை நன்னூலில்,

"முன்னோர் நூலின் முடிபொருங் கொத்துப்
பின்னோன் வேண்டும் விகற்பங் கூறி
அழிய மரபினது வழி நூலாகும்" (நன். நூ)

என்கிறது. கம்பர் இந்நெறிகளைக் கவனமாகப் பின்பற்றி ஓர் ஒப்பற்ற வழிநூலைப் படைத்து அழியாப் புகழைத் தேடிக் கொண்டார்.

**தொகுத்தல்**

முதல் மூலநூலில் விரிவாகக் கூறப்பட்டிருக்கும் சில நிகழ்ச்சிகளைச் சுருக்கமாக கூறுவதைத் 'தொகுத்தல்'; நெறியாகக் கொள்கிறோம். வால்மீகரின் பேரிதிகாசத்தில் சில நிகழ்ச்சிகள் விரிவாகக் கூறப்பட்டுள்ளன. வேறு சில நிகழ்ச்சிகள் விரிவாகக் கூறப்பட்டுள்ளன. மற்றும் சில நிகழ்ச்சிகள் முன்னுக்குப்பின் முரணாகவும் அமைக்கப்பட்டுள்ளன. இத்தகைய நிகழ்ச்சிகள் கதையோட்டத்துக்கும் பாத்திரப்படைப்புக்கும் தடைகளாக அமைந்து விடுகின்றன. எனவே, கம்பர் அவற்றைச் சுருக்கிப் பாடுகின்றார்.

**சான்றாக...**

தாரை புலம்பி அழுவது தொடர்பான செய்திகள் வால்மீகி இராமாயணம், கிட்கிந்தா காண்டத்தில் 19 முதல் 25 முடிய ஏழு சருக்கங்களில் மிக விரிவாக வருணிக்கப்பட்டுள்ளன. தம் காவியத்தின் கதையோட்டத்திற்கு, இந்நீண்ட வருணனைகள் தடையாக அமையும் என்று கருதியதால் அவற்றைத் தொகுத்துச் சுருக்கமாகத் "தாரை புலம்புறு படலம்" (கம்ப.4.8.1-26) எனத் தனிப்படலம் அமைத்து இருபது பாடல்களில் கம்பர் தாரையின் சோகத்தைப் புனைகின்றார்.

**விரித்தல்**

வால்மீகி முனிவர் காலத்திற்கும், கம்பர் காலத்திற்கும் இடையில் நீண்ட இடைவெளி இருந்ததால், தம் சமகாலச் சூழ்நிலையை ஒட்டி, வால்மீகி முனிவர் குறிப்பாகவும், சுருக்கமாகவும் பாடிச் சென்ற சில நிகழ்ச்சிகளைக் கம்பர் விரித்துப் பாடியுள்ளார்.

**சான்றாக...**

வால்மீகியின் ஆரணிய காண்டத்தில் விராதனோடு தொடர்புடைய மூன்று சருக்கங்களில் (2,3,4) விரிவாகச் சொல்லப்பட்டிருந்த போதிலும் விராதன் இராமனைத் துதித்துச் சாப நீக்கம் பெறும் செய்தி சுருக்கமாகவே கூறப்பட்டுள்ளது. இவனுடைய தெய்வத்தன்மையும், திருமாலின் பரத்துவத்தையும் விளக்கும் பொருட்டு கம்பர் விராதன் கதையை 'விராதன் வதைப் படலம் என தனிப்படலமாகவே அமைக்கின்றார்.

காவியத் தலைவரின் தகுதியைக்; கதைத் தலைவன் அளவுக்கு உயர்த்திக் காட்டவும், கம்பர் மூல நூலில் கூறப்பட்டுள்ள நிகழ்ச்சிகளை விவரித்துப் பாடியுள்ளார்.

**நீக்கல்**

முதல்நூல் ஒன்றினைப் பின்பற்றி வழிநூல் செய்கின்ற புலவனுக்கு, முதல்நூலில் உள்ள எல்லா நிகழ்ச்சிகளையும் ஒன்றுவிடாமல் பின்பற்றித் தன் வழிநூலில் படைத்தல் வேண்டும் என்னும் கட்டுப்பாடு இல்லை. நன்னூலார் கூறியவாறு முதல் நூலின் முடிவுகளுக்கு ஏற்ப தான் வேண்டும் மாற்றங்களைச் செய்து கொள்ளும் உரிமை வழிநூல் புலவனுக்கு உண்டு.

கம்பர் தம் பெருங்காப்பியத்தின் கதையோட்டத்திற்கு முரணாகவும், தடையாகவும் அமையும் முதல் நூல் நிகழ்ச்சிகளையும் தம் காவிய மாந்தர்களின் பண்பு நலன்களுக்கு ஊறு விளைவிக்கும் முறையில் முதல் நூலில் இடம்பெற்றுள்ள சில செய்திகளையும், உரையாடல்களையும் தன் காப்பியக் கதையில் இடம் பெறாமல் ஒதுக்கிருப்பதை "நீக்கல்" என்கிறோம்.

**சான்றாக...**

இந்திரசித்தன் பிரமாத்திரத்தை கூறிய போதும், இராமனும் இலக்குவனும் பிரமாத்திரத்தால் கட்டுண்டு கிடந்ததாக வால்மீகி முனிவர் பாடுகின்றார். இது திருமாலின் பரத்துவத்துக்கு ஊறு செய்வதால், இராமன் தன் தெய்வப் படைப்புகளுக்கு பூசனை புரிவதற்காகப் போர்க்களத்திற்கு வெளியில் சென்று விட்டதாகக் கம்பர் மாற்றிப் படைக்கின்றார்.

**படைத்தல்**

'வழிநூல் ஒன்றனை இயற்றும் புலவன், நன்னூலார் வழிநூலுக்கு

வரைவிலக்கணம் வகுத்தவாறு, முதல் நூலின் கருத்துக்களுக்கு முரண்படாமல் தன் சமகாலத் தேவைகளுக்கேற்ப புதுமைகளைப் படைத்துக் கொள்ளலாம்.

சான்றாக, இராமன் வில்வளைத்த செய்தியைத் தோழி நீலமலை சீதையிடம் கூறியதும், "அவ்வீரன் தான் கன்னி நின்றபோது கண்டவனே" என்றும், "அவன் அல்லானாகில் உயிர் துறப்பேன்" (கம்ப.1:12:62) என்றும் சீதை முடிவு செய்கின்றார். இவை அனைத்தும் வால்மீகி முனிவர் காணாத, ஆனால் தமிழ்ப்புலவர்கள் கம்பர் புனைந்த காதல் காட்சிகளாகும்.

**நிறைவாக...**

கம்பர் வால்மீகரின் கதைப் போக்கை பல கட்டங்களில் பின்பற்றியுள்ளார். இருந்தாலும் கம்பர் படைத்த பாத்திரங்கள் வால்மீகரின் மறுபதிப்புகள் அல்ல. அவை கம்பர் என்னும் மகா கவியின் கதைப் பேரூற்றிலிருந்து பொங்கிப் பெருகித் தம்மைத் தாமே வார்த்துக் கொண்ட புதுவார்ப்புகள். கம்பராமாயணம் முழுவதையும் ஆழ்ந்து பயிலும் போது, கம்பர் வால்மீகியின் இராமாயணத்தைக் காட்டிலும் மிகவும் நுட்பமாகவும், படிப்பவர்களின் மனதைக் கரைப்பதாகவும், பாடியுள்ளது தெளிவாகின்றது.

## கம்பரின் காப்பியமரபில் கதையாக்க உத்திமுறைமை

முனைவர் ச.அன்பு
தமிழ்த்துறை, உதவிப் பேராசிரியர், திவ்யா கலை மற்றும் அறிவியல் கல்லூரி
சேத்துப்பட்டு.

இலக்கியத்தின் பாடுபொருள் தன்மைக்கேற்பவும், வகைபாட்டிற்கேற்பவும் அதன் உத்தி முறைமைகள் மாறுபட்டும், புதுவிதத்தில் உருவாக்கம் பெற்றும் அமைவவதுண்டு. அதனடிப்படையில் காப்பியமரபு நம் இலக்கிய வகைமைக்குள் அதற்கெனத் தனித்த உத்திமுறைமைகளைப் பெற்றிருக்கின்றது. அதனினும் கவிச்சக்கரவத்தி கம்பர் இயற்றிய காப்பியம் தனித்துவம் வாய்ந்தது. அவ்வகையில் இவ்வாய்வுக் கட்டுரை கம்பர் இயற்றிய காப்பிய மரப்புக்குள் பயின்றுவந்துள்ள கதையாக்க (உத்தி) மரபுகளை விளக்கும் வகையில் அமைக்கப்படுகிறது.

### காப்பியமும் கதையாக்கமும்

காப்பிய இலக்கியம் மற்ற இலக்கியங்களைப் போல, வெறும் கதையாகி, கதை கூறும் நிலைக்குரியப் பண்புகளோடு அமைந்துவிடுவதல்ல. காப்புச்செயல்பாடுகள், காப்பியப் படைப்பாளனின் மொழியாளுகைகள், கதாப்பாத்திரங்களின் கூற்றுகள், பல்வேறு காட்சிமாற்றங்கள், செயலோட்டத்தின் கீழான ஏற்ற - இறக்கங்கள் என அனைத்தும், ஒன்றாகி முத்தமிழில் - தனித்தமிழாய் அமைந்திருக்கும் நாடகத்தன்மையை ஒத்து அமைந்திருப்பதேக் காப்பிய இலக்கியமாக அங்கீகரிக்கப்படுகிறது.

தமிழ் இலக்கியங்களைப் பொறுத்த மட்டில் சங்க அகமரபுகள் தொடங்கி தற்கால இசங்கள் வரை, நாடகப்பாங்குத் தனிஇடம் பிடித்த ஒன்றாக இருக்கிறது. இதில் காப்பியக்காலம் முதன்மையானது. அதில் கம்பனின் இராமவதாரமும், அதனூடான கதைக்கூறும் நாடகப்பண்பும், கதையாக்க வெளியீடுகளும் முதன்மையின் முன்னிலைகள். இதன்கீழ், கம்பரின் காப்பியக் கதையாக்க வெளிப்பாடுகளை ஆராய்கையில் அவை கதைக்கூறும் உத்திமுறைமைகள், நாடக அமைப்புக்குள்ளான உத்திமுறைமைகள் என இருவகைப்படுத்தப்படுகின்றன.

### காப்பியத்தின் கதை கூறல்கள்

பொதுவாகக் காப்பிய இலக்கியத்தின் கதைக்கூறல் உத்திமுறைமைகள் கதைத் தொடக்கத்தின் முன் பாயிரம், காப்பியப்

பதிகப்பகுப்புகள், காப்பியக் கதையாசிரியரின் வெளிப்பாடுகள், கதைக்கான கால உணர்வு, காப்பியப் பொருண்மையின் புலப்படல்கள் ஆகியன அமைப்புமுறை உத்திகள் என்றும்; காப்பியத்தின் மூலம், கிளைக்கதைகள், முன்நிகவின் பின் கூறல், பின்நிகவின் முன் உணர்த்தல், மீவியல்புகள் ஆகியன கதைக்கூறு உத்திகள் என்றும் அழைக்கப்படுகின்றன. இவையேத் தொடக்கத்தில் காப்பியக்கதை நிகழ்வுகளின் கீழ், ஐந்து வகையாகப் பிரிக்கப்பட்டுள்ளது. அவையாவன.

1. தலைவனின் வருகையும் புறப்பாடும் (Arrival, Departure) (உரோமபதம், தசரதனை வரவேற்றல் (237 - 240); கலைக்கோட்டு முனிவர் அயோதிக்கு வருகை தரல் (247 - 248)

2. தலைவனின் காலை எழுச்சியும், மாலை ஓய்வெடுப்பும் (Hero's rising in the morning and resting at night).(இராமன் சீதையைக் கண்டு காதலுற்று - மாலை நேரங்களில் அவளது இரவுப்பொழுதைப் பற்றியும், விடியலில் அவள் விழிப்புறும் காட்சியையும் - நினைவுறல் (617 - 637)

3. ஆடை அணிதல். இது, போர்வீரர்கள் கவசம் முதலியவற்றை அணிதல் (Dreesing – the theme of dress) பெண்கள் ஆடவராக மாறுவேடம் பூணல் (disquise – women in men's clothing) என இருவேறு வகையில் அமைகிறது. (1. சீதை ஆடை அணிகலன்களில் அழகுறல்; இராகவன் தன்னுடல் அழகை ஆடைகளால் மறைப்பது., கடிமணப்படலம் (1207 - 1221) (2. இராவணன் போர்களம், தேர்ஏறும் படலம் (9645 - 9666); இராமன் போர்களம், தேர்ஏறும் படலம் (9677 - 9680) பூணுதல்; 3.இராவணன் வேடம் மாறுதல்., இராவணன் சூழ்ச்சிப் படலம் (3338 - 3342)

4. விருந்தோம்பல் மற்றும் மகிழ்வித்தல். இதில் கலை நிகழ்ச்சிகள் முதலான மகிழ்வித்தலும் இடம் பெறுகின்றன.(காடேகும் இராமன் - கங்கை கொண்ட தபோதனரை எதிர்கொண்டு விருந்தளித்தல்.)

"எதிர் கொடு ஏத்தினார் இன்இசை பாடினார்
வெதிர் கொள் கோலினார் ஆடினர் வீரனை
கதிர் தொனி தாமரைக் கண்ணணை கண்ணினால்
மதுர வாதி அமுது, என மாந்துவர்" (1937)

5. கடற்செலவு (அ) கப்பற்பயணம் (Sailing – Ship; Sea voyage). (இதில் குதிரைப்பயணம் மற்றும் தேரில் செல்லுதல் முதலியனவும் அடங்கும்.)

இதுவரைக் கண்ட வகைமை, காப்பியப் பண்புக்கு ஒருவகையில் ஒத்ததுதான். ஆனால் இதிலிருந்தும் மொழியடிப்படையில் வகைப்படுதல். (Feasts., Technique of composition – Language., Pp.215 – 253.) தனிநிலையாக அமைந்திருக்கிறது. இதை மொழிக் கூற்றுமுறை உத்தி என்று அழைப்பர். அதன்கீழ்,

- கேட்போரை விளிக்கும் முன்னிலையில் அமையும் மொழிப்பாங்கு (Poet addressing the public) - அதாவது 'நான் கூறுவேன் கேளீர், நீங்கள் இனிக் காண்பீர்கள், நான் முன்னமே கூறினேன்' ஆகிய முன்னிலைகளை எண்ணங்களாகக் கதைக்குள் கையாளுதல். கம்பரின் காப்பிய வெளியீடுகளில் இவ்வுத்தி பெரும்பாலும் ஆசிரியர் கூற்றாகவே இடம் பெற்றுள்ளது.

- புதிது புதிதாக கதைகளைச் செய்திகளை சேர்த்தல் (அ) பின்னுதல். இந்த உத்தி, கம்பரின் காப்பியம் நமக்கு முழுமையாகக் கிடைக்கப்பெற்றமையால், அதில் மிகக்குறைவாக இடம் பெறுகிறது. இருப்பினும் முதலில் வந்த செய்தி மீண்டும் வரும் சூழலில் அவை சற்று மாற்றியுரைக்கப்படுவதைக் காணலாம். உதாரணமாக, அனுமன் தனித்து, சீதையைப் பற்றி கூறும் செய்தியையும் (45., 3-18), இராமன் அனுமனை தூது அனுப்பி சீதை சிறைப்பட்டிருக்கும் சூழலைக் கண்டுவந்து சொல்லச்சொன்ன பொழுது சீதையைப் பற்றி அனுமன் கூறும் செய்தியையும் (5287., 89) குறிப்பிடலாம். அதேபோல் இரணியன் கதை கூடுதல் செய்தியாக அமைந்திருக்கிறது.

- வாய்பாடுகளைப் பயன்படுத்துதல். இது நிலைத்த அடைமொழிகளை (Fixed epithsts) பயன்படுத்துதல், தொடர்பயிற்சி மொழிகளைக் கையாளுதல் என இரண்டு வகைப்படும். பொதுவாக இவ்வாய்ப்பாட்டு நிலைக்கு இலக்கியத்தில் நேர்மாறான பாங்குக் காணப்படுவது வழக்கம். ஒரு பொருள் பலமுறை பலவிதமான தன்மைகளில் கூறப்படுவதால் இது நிகழ்கிறது. இதனை நிகழ்வு, செயல், வளம் போன்ற இடங்களில் கம்பர் கையாண்டுள்ளார். போர்க்களச் செய்திகளோ, உருவருணனைகளோ மீண்டும் மீண்டும் வரும்பொழுது வகைமை தோன்ற வெவ்வேறு விதமாகக் கூறப்படும் தன்மையில் கம்பருக்கு இது பொருந்துகிறது.

- காப்பிய இலக்கியத்தின் தொடக்கமும் முடிவும். இதில் ஒரு மறைபொருள் உருவாக்கப்பட்டு - வாசகர்கள் விரும்பும் வண்ணம், விறுவிறுப்பு ஏற்பட - படைப்பின் சலிப்புத் தவிர்த்து, நடையியலில் நயம்மிளிரக் கதையமைப்பது குறிப்பிடத்தக்கது.

மேற்கண்ட மொழிக் கூற்றுமுறை உத்தியில் மீண்டுவருதல் (Repefitions) என்பது தவிர்க்க முடியாத ஒன்றாக அமைந்துவிடுகிறது. இந்த மீண்டுவரலில் பெரும்பாலும் உவமைகள் இடம் பெறுவது காப்பியமரபு. கம்பராமாயணத்தில் கூட கம்பர் இராமனை - கதிரவன் என்றும்; சீதையை - அமுழ்து என்றும் மீண்டும் மீண்டும் உவனித்துச் செல்கிறார்.

பொதுவாக இம்மீண்டுவரல் உவமையின் கீழ்க் காப்பியமுரண் (epicantithesis) தோன்றும். இது, எதிர்மறை உவமை (negative Comparison) ஒப்பியல் உவமை (dissi - milar Comparison) என இருவகைப்படும். இதில், முதலில் ஒரு உவமைக் கூறப்பட்டு - பிறகு அதற்கு மறுப்பான பொருளாளுமைகள் வெளிப்படுவது ஒருநிலை. உதாரணமாக, கம்பராமாயணத்தில் இராமன் பல இடங்களில் சீதையின் உறுப்புகளுக்கு ஒப்புக் கூறும்பொழுது ஏற்கும் உவமைகளை, பின் அவனே மறுத்துக் கூறும் நிலைகளைக் நினைவுக் கூறலாம்.

**கம்பரின் காப்பியக் கதையாடல்கள்**

பொதுவாக நூலின் மூலம் இதுவெனச் சுட்டியுரைப்பது காப்பியத்தின் பழமரபுத்தி. கம்பனால் இது குறிப்பாகவே நூல் வந்த வரலாறு.

> "தேவ பாடையின் இக்கதை செய்தவர்
> மூவர் ஆனவர்தம் உளும் முந்திய
> நாவினார் உரையின்படி நாந்தமிழ்ப்
> பாவினால் இது உணர்த்திய பண்புஅரோ.."

எனும் பகுதியில் உணர்த்தப்படுகிறது. அதோடு கம்பராமாயணத்தில் கதைச்சுருக்கம் கிடையாது. இது அல்லாது கம்பர் நூற்பெயர் கூறிப் பாடுபொருளை உடன் உணர்த்தும் உத்தியையும்; பாயிரம் தொடங்க இறைவணக்கத்தில் உலகம் என்னும் மங்கலச்சொல்லையும் அமைத்துள்ளார்.

காப்பியத்தின் தொடக்கம் கதையின் முழு நிலையில் அதன் ஆரம்பத்தையும் கருதுபொருளையும் கொண்டதாக அமைவது வழக்கம். ஆனால் கம்பர் பாயிரத்தைத் தொடர்ந்து ஆற்றுப்படலமும், மகப்பேறு இன்மையால் வருந்தும் தசரதனின் செயலையும் கதைத் தொடக்கமாகக் கொண்டமைந்துள்ளார். இந்த இருவிதமான காட்சிகளையும் கம்பர் காப்பியக் கோட்பாட்டின் பொதுமைக்கும், தன்னுடனான சிந்தனைக்கும் ஒத்து - அணுகப் புதுமைச் செய்துள்ளது குறிப்பிடத்தக்கது.

கதைத்தொடக்கத்தைப்போல, கம்பர் படலத்தொடக்கங்களின் வாயிலாகவும் கதையை நகர்த்திச் செல்கிறார். மேலும் அதில் ஒரு படலத்தின் முடிவு, அடுத்த படலத்தின் தொடக்கமாக அந்தாதித்தன்மையில் புனைந்திருப்பது குறிப்பிடத்தக்க கம்பரின் தனிநிலை. அதேபோல் கம்பர் காப்பிய வெளிப்பாடுகளில் தன்னை ஆங்காங்கே வெளிப்படுத்திக் கொண்டுள்ளார். சில இடங்களில் காப்பிய ஆசிரியராக மட்டுமில்லாமல், சாதாரண வாசகனின் மனநிலையிலும்.

"வாங்க அரும் பாதம் நான்கும் வகுத்த வான்மீகி என்பான்
தீம்கவி செவிகள் ஆரத் தேவரும் பருகச் செய்தான்
ஆங்கு அவன் புகழ்ந்த நாட்டை அன்பு எனும் நறவம் மாத்தி
முங்கையான் பேசுலுற்றான் என்ன யான் மொழியல் உற்றேன்"

என்று கம்பர் கருத்துரைக்கிறார். இது தனி ஆய்வுக்குரிய பகுதி.

இதில், *கவிஞரின் உணர்வு வெளிப்பாடுகள் (307); *கதைக்கூற்று (311); *காப்பிய நிறைவேற்றம் (502); *பொருள்மாற்று (720); *நுதலிப்புகுதலுத்தி (3319); *தொடர்நிலைப்பாங்கு (3462); *கதாப்பாத்திரங்களின் நிலைபேறு (8027); *தொகுத்துரைப்பு (9530)- போன்ற ஆசிரியனுக்கான உணர்வுத்திகள் அடங்கும்.

**கம்பரின் – காப்பியக் கிளைக்கதை**

காப்பியத்தின் கதைக்கு இடையில் - கதைக்குள் கதையாக அமைவது கிளைக்கதை. காப்பியத்தின் தொடக்கம் முதல் இறுதி வரை செல்லும் முதல் (அ) மூலக்கதையை அடிப்படையாகக் கொண்டு காப்பியப்பாத்திரங்களின் கதையாகவும், துணைப்பாத்திரங்களின் கதையாகவும் இக்கிளைகதைகள் அமைவதுண்டு. இதில் முதலில் வரும் கதை துணைக்கதை என்றும் துணையாக பின்னால் வரும் கிளைக்கதைகள் தனிக்கதைகள் என்றும் அழைக்கப்படுகின்றன. (ச.வே.சுப்பிரமணியம்., சிலம்பும் சிந்தாமணியும்., ப.227. (1977)

பொதுவாகக் கதை நிகழ்வு என்பது ஒரு பாத்திரத்தின் கதையை அப்பாத்திரமே கூறுவதாகவும், அல்லது குறிப்பிட்ட ஒரு பாத்திரத்தின் வரலாற்றை வேறொருப் பாத்திரம் பல்வேறு கிளைநிகழ்வுகளாகக் கூறுவதாகவும் அமையும். இதில் கிளைக்கதை என்பவை பலகதைகளைக் காப்பியத்திற்குள் சொல்லுவதை மட்டுமே நோக்கமாகக் கொண்டதல்ல. மாறாக ஒரு காப்பியத்தின் எல்லா அம்சங்களோடும் பின்னிப்பிணைந்து - காப்பிய நிறைவேற்றத்துக்காகவும், கருதுகோளுக்காகவும்

காப்பியப் பண்புகளோடு ஒத்துத் துணைபோகும் பாங்குடையதாக அமைவதாகிறது. இதில்தான் காப்பியத்தலைவனின் சிறப்பியல்புகள், இறைமை குணங்கள், துணைப்பாத்திரங்களின் வருணனைகள் போன்ற உயர்வுநவிர்ச்சிகள் வெளிப்படுகின்றன. இது படைப்பிலக்கியத்தின் ஒருவித எதிர்பார்ப்பு. இதுமாதிரியான எதிர்ப்பார்ப்பு இராமாயணக் கதைக்கும் பொருந்தும் வண்ணம் அமைந்திருப்பது குறிப்பிடத்தக்கது. அதனடிப்படையில் தான், இராமாயணத்தில் இடம் பெறும் தாடகையில் கொலைசெயல், அகலிகையின் சாபவிமோசனம், விராதன் கவந்தன் ஆகியோரின் கொலைக்களங்கள், இலக்குவனின் சிறப்பியல்புகள், அனுமனின் குரங்கினச் சிறப்புகள், அங்கதன் சிறப்புகள், துமிரனின் அழிவு, இலங்காதேவியின் வெற்றி ஆகியன இராமனுடன் இணைந்துக் காப்பியக்கிளைகளாக விரிகின்றன. (ச.வே.சுப்பிரமணியம்., கம்பன் இலக்கிய உத்திகள்., பக்.394 - 398., (1982).

காப்பியக் கிளைக்கதைகள் உயர்திணையில் மட்டுமல்லாமல் அஃறிணைப் பொருட்களுடனும் கதையை நகர்த்துவதைக் காப்பியமரபில் காணமுடிகிறது. கம்பராமாயணத்தில் வரும் மாமரத்தின் வரலாறு (3857-3875) வில்லின் வரலாறு (1287 - 1293) மற்றும் கதை (3676 - 3679); ஆகியவற்றை அதற்கான உதாரணங்களாகக் கூறலாம். அதேபோல் தசரதன் தான் தன் சாபவரலாற்றைக் கோசலைக்குக் கூறும் கிளைக்கதை(1677-1692)யானது, கம்பராமாயணத்தின் துணைக்கதையைப் போலப் போற்றத்தக்கதாக அமைந்திருப்பது குறிப்பிடத்தக்க ஒன்று. இதிலிருந்துதான் முன்நிகழ்வு பின் உரைத்தலும், பின்நிகழ்வு முன் உணர்த்தப்படுதலும் கம்பராமாயணத்தில் தொடங்குகிறது. இதில் இராமன் பிரிவான் அதனால் தசரதன் உயிர் பிரியும் என்னும் பின்நிகழ்வு முன்னாதாகக் கூறப்படுதலும்; காப்பியத்தின் திடீர் திருப்பமான, கூனி - கைகேயி பாத்திரங்களின் மீதான வெறுப்பும் சலிப்பும் களையப்பட, முன்வினையின் பின்விளைவை வலியுறுத்துவதும் அமைக்கப்பட்டிருப்பதைக் காணலாம். இது விதியின் (தர்க்கத்தின்) புலப்பாடாகக் காப்பியத்தில் விளக்கப்படும் விளக்கமாக அமைந்திருக்கிறது. இதோடு இரணியனின் கதை (6316 - 6320), பரசுராமனுக்கான கதைகள், (1627 - 1629); (5195 - 1597); 5203.; இலட்சுமணன், அனுமன் உள்ளிட்ட கதைகள் ஆகியவற்றைச் சேர்த்துக்கொள்ளலாம்.

**ஆய்வுரை**

கம்பரின் காப்பிய புலப்பாடுகள், புறநிலைக் கோட்பாடுகளைத் தழுவியதாக இல்லாமல், காப்பிய இலக்கியக் கொள்கைகளை மையமிட்டதாக இருப்பது கவனிக்கத்தக்கதாகிறது.

இராமாயணத்தின் கதைச்சூழலில் வெறுமனே உத்தி முறைமைகளை மட்டும் காணவேண்டியதில்லை. அதினூடே - தன்னையும் மைய நிறுத்தி - மொழிந்துரைக்கும் கம்பரையும் காணலாம்.

இராமாயணக் காப்பியத்தின் கிளைக்கதைகள் பெரும்பான்மையும் கம்பரின் கருத்தியலாக (குரலாக) இல்லாமல், கதாப்பாத்திரங்களின் கூற்றுகளாக அமைந்திருப்பது சிறப்பு.

கம்பரின் காப்பிய - புறநிலையில் இடம்பெற்ற, முன் - பின் நிகழ்வுகள், காப்பிய நிலையிலிருந்தும்; கதை கேட்போரின் நிலையிலிருந்தும் அணுக வாய்புடையதாக அமைந்திருக்கிறது.

காப்பிய - கிளைகதைகள் தற்கால தொடர் கதைக்களுக்கான வாயில்களை ஏராளமாக திறக்கின்றன. அதிலிருந்து ஒரு புதிய முன்கதைக் கட்டமைய வாய்ப்புகள் உண்டு.

இன்னும் இக்காப்பிய வெளிப்பாடுகளில் இயற்கையின் மீட்டுருக்களும், நாடகப் பாங்கின் கீழான செயல்பாடுகளும் - போக்கும், பல்வேறுபட்ட காட்சி மாற்றங்களையும், பாத்திர உரையாடல்களையும் நிகழ்த்தி கம்பரின் காப்பிய மரபை நீட்டிக்கின்றன.

# கம்பனில் பஞ்சதந்திரம்

திருமிகு. செ.பூங்கோதை,
தமிழ்த்துறை, பூ.சா.கோ.கலை, அறிவியல் கல்லூரி.
கோவை.

## முன்னுரை

தமிழுக்குக் கிடைத்துள்ள காவியங்களில் வானுயர் மதிப்பைப் பெற்றது. கம்பராமாயணம், காவியங்களின் இமயம் கம்பராமாயணம். கவிஞர்களின் தலைவன் கம்பர், தன் உள்ளத்துணர்ச்சிகளைக் குருதியோடு கலந்து செயல்படுத்திய பாத்திரங்களைப் படைத்து உலாவவிட்டவர். இப்பாத்திரச் செயல்பாடுகளையும், கதையின் போக்கினையும், பஞ்சதந்திர உக்திகளோடு பொருத்திப் பார்ப்பதே இக்கட்டுரையின் நோக்கம் ஆகும்.

பஞ்சதந்திரம் என்பது (1)மித்திரபேதம் (2) சுகிர்லாபம் (3) சந்திவிக்கிரகம் (4) அர்த்தநாசம் (5) அசம்பிரேட்சிய காரித்துவம் (பஞ்சதந்திரக் கதைகள் தொகுப்பாசிரியர் பட்டி மு.பாலகுரு) போன்ற வகைகளைப் பேசுகின்றன.

## 1.மித்திரபேதம்

'மித்திரபேதம் என்பது சினேகத்தைக் கெடுத்துப் பகை உண்டாக்கல்" (மேலது) என்பர். அயோத்தியா காண்டத்தில் கைகேயின் தோழியாக இடம் பெறும் மந்தரை சூதுவாது நிறைந்த எதிர்மறைப் பாத்திரமாவாள், இராமன் இளவரசனால் கோசலை ஏற்றம் பெறுவாள், கைகேயி அவமதிக்கப்படுவாள் அதனால் தன் வாழ்வும் அழிந்துவிடும் என எண்ணிய நாவன்மை கொண்ட கூனி வஞ்சனை வார்த்தைகளால் பரதன் அரசு இழப்பதால் வரும் தீமைகளை எடுத்துக் கூறி கைகேயின் மனத்தை மாற்ற முற்படுகிறாள். அப்போது,

"எனக்கு நல்லையும் அல்லை! நீ என் மகன் பரதன் தனக்கு நல்லையுமல்லை" என்ற வார்த்தையைக் கைகேயி வாயிலிருந்து கேட்ட கூனி மனம் தெளிவுற்றாள். மேலும் கைகேயிடம் மாசற்றவளே! அற உள்ளம் உடையவராயினும் அரசு, செல்வம், பெற்ற பின் மனம் மாற்றம் கொண்டு நீ மனத்துன்பத்தால் அழியும் படித் தீங்கு செய்ய மாட்டார்கள் என்பதை எவ்வாறு உறுதியாகக் கூற முடியம் எனக் கூறினாள் மந்தரை. இவ்வாறு கூறிய மந்தரையிடம் கைகேயி

"பிறந்(து) இறந்துபோய்ப் பெறுவதும் இழப்பதும் புகழே"என மறுத்துக் கூறியவளிடம், மந்தரை தன் சொல் ஆற்றலால் வலுப்படுத்துகிறாள். இது மன்னனின் சூழ்ச்சி என வாதிடுகிறாள். இதனால், கைகேயின் அருள் நிறைந்த உள்ளம். மந்தரையின் சூழ்ச்சியால் இராமன் மீது கொண்ட பாசம், மாற்றம் கொண்டு. பகை உண்டானது.

**2.சுகிர் லாபம்**

'சுகிர்லாபம் என்பது தங்களுக்குள் சமமானவர்களோடு கூடி பகையில்லாமல் வாழ்ந்திருத்தல்" என்பர் கிட்கிந்தா காண்டத்தில் கிட்கிந்தையை வானரர் தலைவரான வாலி ஆண்டு கொண்டிருந்தான். அவன் தவங்கள் பலபுரிந்து சிவபெருமானை வேண்டிப் பல வரங்களைப் பெற்றவன். அவற்றில் முதன்மையானது, அவனை யார் எதிர்த்துப் போர் செய்தாலும், அவர்களது வலிமையில் பாதி வாலி-யிடம் சென்று அவனது வலிமை கூடிக் கொள்ளும் இதன் காரணமாக அவன் தன்னை எதிர்ப்பவர் எவருமின்றித் தன்னிச்சையாக ஆட்சி செய்து வந்தான்.

வாலியின் தம்பியே சுக்ரீவன், வாலியானவன் கல்வி, கேள்விகளால் பெற்ற வரங்கள் முதலியவை அவனைச் செருக்கின் விழும்புக்கே கொண்டு போய் விட்டதால், தன் இன மக்களுடன் சேர்ந்து வாழாமல், தனித்துச் சுதந்திரமாக வாழ முற்பட்டான். தான் மகிழ்ச்சியாக வாழ்வதற்காகத் தன் உடன் பிறந்த தம்பி சுக்ரீவனை நாட்டை விட்டுத் துரத்தினான்.

சுக்ரீவன் இருசியமுக மலையில் பதுங்கி வாழ்ந்து வந்த காலத்தில், அவனை இராம லட்சுமணர்கள் சந்தித்து அவனுக்கு நடந்த அநீதியைப் போக்க முற்பட்ட போரில் இராமன் மறைந்திருந்து வாலியை வதம் செய்கிறார்.

"கிளவையால் பொருள்களால் கிளைத்துறாதவன்
களைவயார் அறிகுவார் மெய்மை கண்டிலார்"

என்ற வாக்கிற்கிணங்கத் தன் இனத்துடன் கூடி மகிழ்ச்சியாக வாழாத வாலி வதம் செய்யப்படுகிறான்.

**3.சந்தி விக்கிரகம்**

சந்திவிக்கிரகம் என்பது பகைவரை அடுத்துக் கெடுத்தல்" என்பர். ஆரணியக் காண்டத்தில் சூர்ப்பணகை கொண்ட மாற்று உறவினால் இலக்குவனால் அங்கஹீனமுற்று வீழ்கின்றாள். இதனால் ஏற்பட்ட

வேதனையில் சினம் கொண்டு பழியுணர்வு ஓங்கித் துடிக்கின்றாள். ஸாம, வேத, தான உபாயங்களைக் கையாண்டு பயனில்லை தண்ட உபாயத்தாலே தான் சாதிக்க முடியும் என்று எண்ணி இலங்கை செல்கிறாள்.

இராவணன் ஒரு காமுகன் அவனிடம் சாமர்த்தியமாக நாடகம் ஆடினால் தான் காரியம் கை கூடும் என எண்ணிய சூர்ப்பணகை.

"அண்ணா! கானகத்திற்கு இரு ஆண் மானுடருடன் மின்னலிடை! வேயெனத் தோள்! பொன்னிகர் மேனி! தாமரை மலரைத் தனியே விட்டு வந்த லட்சுமி ஒருத்தி வந்திருக்கிறாள், அவளைத் தங்களுக்குப் பரிசுப் பொருளாகக் கவர்ந்து வர முற்படும் போது தான் எனக்கு இந்நிலை ஏற்பட்டது' என அவனின் பெண் மோக குணத்தினை வெறி ஏற்றச் சூட்சமம் செய்து, மெல்ல அவன் மனத்தினைக் கிளறி அதை வியப்பிலும், ஆர்வத்திலும் ஆழ்த்தினாள்.

இராவணன் 'அழகி" என்றவுடனேயே! சீதையைக் காண வேண்டும் என்ற ஆசைச் சிறகுகளை விரித்து மோக மயக்கத்தில் பறந்தான் அவனின் முகக் குறிப்பினைப் பார்த்த சூர்ப்பணகை.

"விழிநோக்கு மிடங்க டோறும் தோன்றும் மனையாளிது தொண்ணெவித் தாகுமென்றான்" என்று கூறி 'உனது காம நோய்க்கு மருந்து சீதையே'. எனவே, பூமான் குழலானை வவ்வுதி போதி யென்றாள்" என்று கூறிப் பகைவர்களைக் கெடுக்கச் சூர்ப்பணகை திட்டம் வகுத்தாள்.

**4. அர்த்த நாசம்**

அர்த்தநாசம் என்பது தன் கையில் கிடைத்த பொருளை அழித்தல்" என்பர். அயோத்தியா காண்டத்தில் அயோத்தியை ஆட்சி செய்து வந்த தசரதனின் மனைவியர் மூன்று பேர், அவர்களில் கைகேயியே, தசரதனின் மனத்தில் தனி இடம் பிடித்தவள் இப்பேரு பெற்றவள் மந்தரையின் சூழ்ச்சியில் சிக்கி மனமாற்றம் கொண்டு

"ஏய வரங்கள் இரண்டில் ஒன்றினால் என்
சேய் உலகு ஆள்வது சீதை கேள்வன் ஒன்றால்
போய் வனம் வாழ்வது எனப்பு"

எனக் கைகேயி இரண்டு வரங்களைக் கேட்டு பாம்பின் நாவிலிருந்து தோன்றிய விடம் பரவிப் பெரிய யானை விழுவது போலத் தசரதன் சரிந்தான்..

"கண்டேன் நெஞ்சம் கனிவாய்க் கனிவாய்விடம் நான் நெடுநாள்
உண்டேன் அதனால் நீ என் உயிரை முதலோடு உண்டாய்"

என்றான் தசரதன். 'அழகே! என்று சொன்ன வாயால் பேயே!' எனக் கூறக் கேட்டுத், தன் கையில் கிடைத்த பொருளை இழந்தாள் கைகேயி. மாண்டார் மன்னர்.

**5. அசம்பிரேட்சிய காரித்துவம்**

அசம்பிரேட்சிய காரித்துவம் என்பது 'ஒரு காரியத்தைத் தேற விசாரியாமல் செய்தல்"என்பர். யுத்த காண்டத்தில் இராவணன் தன் பெண் மோகக் குணத்தினால் சீதையைக் கவர்ந்து செல்கிறான். இதன் காரணமாக ஏற்பட்ட யுத்தத்தில் இராவணனை அழிக்க யுக்தி யாது எனச் சிந்தித்துப் பிரமாஸ்திரத்தினைப் பயன்படுத்தி அவன் மீது எய்துகிறார் இராமன். அது இராவணனின் மார்பினில் துளைத்து, உயிரைக் குடித்தது. இராவணன் பகைவர்களின் பலம் அறியாது மாண்டான்.

**முடிவுரை**

தேன் ஒரு துளி என்றாலும் அதனை நாக்கில் ஒற்றிச் சுவைப்பது போன்று கம்பன் காவியத்தில் உள்ள படைப்பு உயிர்ப் பிம்பப்பாத்திரங்கள். ஒவ்வொன்றும் தேனைப் போன்று ஒரு துளியானாலும் இனிய சுவை தருகின்றது.

# கம்பனின் கிளைக்கதைக் கொள்கை

முனைவர். அ.அ.ஞானசுந்தரத்தரசு,
இயக்குநர், வெங்கடேஸ்வரா கல்வியியல் கல்லூரி,
புதுக்கோட்டை

### ஆய்வு நோக்கம்

பெருங்காப்பியம், 'நாற்பொருள் பயக்கும் நடைநெறித்தாகிச் (தண்டியலங்காரம், நூற்பா. 8) செல்வது. நாற்பொருளையும் சொல்வதால் அது மிக விரிந்துசெல்கிறது. பெருங்காப்பியங்களில் பல கிளைக்கதைகள் வருவது மரபாகும். கம்பனும் கிளைக்கதைகளைச் சொல்லும்போது, அவற்றை ஒரு கொள்கையின் அடிப்படையில் அமைக்கிறான் என்பது தெரியவருகிறது. இதனை ஆய்வதே இக்கட்டுரையின் நோக்கம். இங்கே ஆய்வுக்குச் சில கிளைக்கதைகள் மட்டுமே எடுத்துக்கொள்ளப்பட்டுள்ளன.

### விரிவான வாமன அவதாரக் கதை

'வாமன அவதாரம்' என்ற கிளைக்கதை, பாலகாண்டத்தில் சொல்லப்படுகிறது. இது இருபத்து மூன்று செய்யுள்களால் இயற்றப்பட்டுள்ளது. 'இவ்வளவு வரிவான வாமன அவதாரக் கதை ஏன்? என்ற வினா எழுகிறது. இக்கதை விசுவாமித்திரரால் இராமனுக்குச் சொல்லப்பட்டது.

விசுவாமித்திரரின் வேண்டுகோளுக்கு ஏற்ப, தாடகையை, அவள் வாழும் காட்டில் இராமன் அழித்தான். பின்னர் விசுவாமித்திரர் இராம இலக்குவரைக் கவுசிகி ஆற்றங்கரையில் அமைந்ததொரு சோலைக்கு அழைத்து வந்தார். திருமாலும், காசியப முனிவனும் தவம் செய்து சித்தி பெற்ற இடமே அந்தச் சோலை என இராமனுக்கு அறிமுகம் செய்தார். திருமால் அந்த இடத்தில் பல ஊழிக்காலத் தவம் செய்தபோது, மாவலி என்ற அசுரன் மூவுலகங்களையும் தன்வசப்படுத்தினான். தான் பெற்றவை நிலைக்க வேண்டுமென, திருமாலைநோக்கித் தவம் செய்தான். தன்னை வந்தடைந்த அந்தணர்க்கு வேண்டியன கொடுத்தான். இந்நிலையில் தேவர் திருமாலை அடைந்தனர். "மாவலி தீயவன்; தன் தீமையை மறைக்கத் தவம் புரிகின்றான்" என்பதைச் சுட்டிக் காட்டினர். திருமால் தேவர் கூறியதை ஏற்றுக் கொண்டார். திருமால் குள்ள வடிவம் உடைய அந்தணனாக உருவெடுத்தார். மாவலியிடம் மூன்றடி மண்வேண்டினார். மண்ணைப் பெற்றபோது

திருவிக்கிரம அவதாரம் பூண்டார். மண்ணை ஓரடியாலும், விண்ணை மற்றோர் அடியாலும் அளந்தார். மூன்றாவது அடிக்கு இபூமில்லாது போய்விட்டது. மூன்றாவது அடியை மாவலியின் தலையின் மீது வைத்து அவனைப் பாதாள உலகில் அழுத்தினார்.

**நீதிக்கொள்கை**

இந்த வாமனன் கதையை இராமன் கவனமாகக் கேட்டான். அது அவன் உள்ளத்தில் பதிந்தது. மாவலி திருமாலின் சிறந்த அடியவன். அத்திருமாலை நோக்கியே தவம் செய்தான். ஆயினும் மூவுலக ஆட்சியைப் பவித்த அடாத செயலுக்காக வாமனனைத் திருமால் பாதாள உலகில் அழுத்தினார்.

"தெய்வம் உளது என்பார் தீயசெயப் புகின்
தெய்வமே கண்ணின்று நின்றொறுக்கும்"

என்ற பழம்பாடலை எடுத்துக்காட்டி மாவலியை ஒறுப்பது கடவுளுக்குக் கடமையே என்று வை.மு.கோ. உரைவிளக்கம் தந்துள்ளார்.

தவறு இழைப்பார் அடியவரே ஆயினும் அவரை ஒறுப்பது நீதி என்ற கொள்கையின் அடிப்படையிலேயே கம்பன் இக்கிளைக்கதையை அமைக்கின்றான். இராமனது உள்ளத்தில் ஏற்பட்ட இந்தப் பதிவு, பின்னர் வாலிவதமான வெளிப்படுகிறது. இக்கிளைக் கதையின் தத்துவக் கொள்கையே பின்னர் அனுமன், சுக்கிரீவன் ஆகியோர் கருத்தை ஏற்று வாலியை ஒறுக்கும் கருத்தாக இராமனது உள்ளத்தில் உருவானது. சுக்கிரீவனிடத்தில், "தலைமையொடு நின்தாரமும் உனக்கு இன்று தருவென்" என்று இராமன் உறுதிகூறும் சொல், வெளிவருவதற்கு இளமையில் விசுவாமித்திரரிடம் கேட்ட இவ்வரலாறு ஒரு காரணமாக அமைகிறது.

**அகலிகை சாபவிமோசனம்**

இராமபிரானுக்கு அகலிகையின் வரலாற்றைக் கூறுபவரும் விசுவாமித்திரரே. சீதையை மணங்கொள்ளும் முன்பாக, கல்போலக் கிடந்த அகலியை எழுப்புகிறான் இராமன். (கம்ப, பால, வை.மு.கோ. உரை. பக் - 301, 302.)

பெண்ணாகப் பிறந்தவர்கள் வாழ்க்கையில் எதிர்ப்பட இருக்கும் தொல்லைகளை இராமனுக்கு நினைவூட்டும் வகையில் இக்கதை அமைகிறது. அகலிகைக்குக் கொடுக்கப்பட்ட சாபம், ஒட்டுமொத்தப் பெண்மைக்குக் கொடுக்கப்பட்ட சாபமே ஆகும்.

இதிலிருந்து அவள் வெளிவர உதவியன் இராமனே. இதன் எதிரொலியைப் பின்னர்ச்சீதை சிறைவீடு பெற்றபோதும் கேட்கிறோம்.

இராமன் திருமணம் முற்றியதும், விசுவாமித்திரர், அகலிகையின் மகனான சதானந்த முனிவரிடம் பின்வருமாறு பேசுகிறார்.

"வடித்த மாதவ கேட்டி ! இவ்வள்ளல்தான்
இடித்த வெங்குரல் தாடகை யாக்கையும்
அடுத்து என்வேள்வியும், நின் அன்னை சாபமும்
முடித்து என்நெஞ்சத்து இடர் முடித்தான்"

(கம்ப. மிதிலைக் காட்சிப் படலம், 88)

என்றார் விசுவாமித்திரர். இதில் இருவகைத் துன்பநீக்கம் சொல்லப்படுகிறது. ஒன்று தாடகையை வதைத்தமையால் விசுவாமித்திரரின் துன்பம் நீக்கியது. இரண்டாவது சதானந்தரின் தாய் அகலிகை என்பதால் சதானந்தரின் துன்பம் நீக்கியது.

முனிவர் துன்பமன்றி அடியார் துன்பமும் நீக்கும் அருள் உள்ளம் உடையவன் இராமன் என்ற கொள்கையைப் படிப்பவர் உள்ளத்தில் எழுப்பவே அகலிகை வரலாறு சொல்லப்பட்டுள்ளது. எனவே துன்பநீக்கம் - இடர்முடித்தல் - என்பதே அகலிகை சாபவிமோசனக் கதையின் கொள்கையாகும்.

**ஒத்திகைக் கொள்கை**

சீதையைத் தேடிவருமாறு வானரவீரர்களுக்கு சுக்கிரீவன் கட்டளையிட்டான். அங்கதன் முதலானோர் தென்திசை நோக்கிச் சென்றனர். அப்போது ஒரு பாலை நிலம் எதிர்ப்பட்டது. அதன் வெப்பம் தாளவில்லை. எனவே வானரவீரர்கள் அங்கே ஒரு குகைக்குள் புகுந்தனர். அக்குகையின் உட்புறத்தே சென்ற அவர்கள், உள்ளே ஒரு நகரத்தைக் கண்டனர். அக்குகை நடுவே, விரிந்த சடையை உடைய சுயம்பிரபை என்னும் தேவஉலகத்துப் பெண் தவம் புரிவதைக் கண்டனர்.

சுயம்பிரபை வானர வீரர்களிடம் தன்வரலாற்றைக் கூறினாள். அதன் சுருக்கம் வருமாறு:

அசுர சிற்பியாகிய மயன் செய்த தவத்தால் அக்குகை நகரம் உருவானது, மயன் பின்னர் ஏமை என்ற தேவமாதுடன் அந்நகரில் வாழ்ந்தான். ஏமையுடன் அவள் தோழியாகிய சுயம்பிரபையும் அக்குகையில் இருந்தாள் ஏமையைத் தேடிவந்த தேவேந்திரன் அக்குகையில் சுயம்பிரபையைக் கண்டான். சுயம்பிரபை மீது வெகுண்டு

அவளும் அக்குகையில் வாழவேண்டும் என்று தேவேந்திரன் கட்டளையிட்டான் சுயம்பிரபை அத்துன்பம் எப்போது நீங்கும் என அவனை வேண்டி மன்றாடினாள். வானரங்கள் இராமபிரானது கட்டளையால் அங்கே வரும்போது நீங்கும் என்றான்.

சுயம்பிரபையின் வரலாற்றால் மனம் நெகிழ்ந்தான் அனுமன். அவளை விடுவிக்க உறுதி கூறினான். அக்குகையை நூற்று நாற்பது யோசனை தூரம் பிளந்தான். பூமியில் கால் ஊன்றித் தன் ஆற்றல் காட்டி, மேற்றிசைக்கடலில் அதனை வீசி எறிந்தான்.

"ஏழ் இருபது ஓசனை இடந்து, படியின்மேல்
ஊழுற எழுந்து, அதனை உம்பரும்ஒடுங்கப்
பாழிநெடு வன்பிலனுள் நின்று, படர் மேல் பால்;
ஆழியின் எறிந்து, அனுமனும் ஆழி என ஆர்த்தான்"

(கம்ப. பிலம்புக்கு நீங்கு படலம் - 71)

இப்பாடலில் சொல்லப்படும் செய்கை, அனுமன் பின்னாலே இலங்கையை எரியூட்டுவதற்கும், கீதையைச் சிறைவீடு செய்வதற்கும் ஒரு ஒத்திகையாக அமைந்திருக்கிறது. சுயம்பிரபையை விடுவித்ததன் காரணமாக, அனுமன், சீதையையும் விடுவிப்பான் என்ற நம்பிக்கையை ஏற்படுத்துகிறான். எனவே இவ்வரலாறு, ஒத்திகைக் கொள்கை என்ற அடிப்படையிலேயே அமைக்கப்பட்டுள்ளது.

**உபாக்கியான ரத்தினம்**

இரணியன்கதை பாகவதத்தில் சொல்லப்படுகிறது. அங்கே தருமபுத்திரருக்கு, நாரதர் சொல்வதாக அமைக்கப்பட்டுள்ளது. இரணியன் கதை வான்மீகியில் இல்லை. வான்மீகியில் சொல்லப்படாத இரணியன் கதையைக் கம்பன் எடுத்துக்கொள்கிறான். இரணியனுக்குப் பிரகலாதன் வாய்த்ததைப் போல, இராவணனுக்குவீடணன் வாய்த்ததனைக் கம்பன் நிறுவுகிறான்.

மேலும் இராவணனின் வீழ்ச்சிக்கு முன்னுரையாகவே இரணியன் கதையைக் கம்பன் வைக்கின்றான். இந்த முன்னுரை காப்பியத்தில் தக்கதொரு பக்கபலமாக அமைந்து, காப்பியக் கட்டுக்கோப்பை வலிவாக்குகிறது. கிளைக்கதைகளைக் கம்பன் தங்க அட்டிகையில் வயிரமணிகளைப் பதிப்பதைப் போலப் பதிக்கிறான்.

இதனை உணர்ந்தே வ.வே.சு.ஐயர், "அரக்கரின் மந்திரத்தில்தான், உபாக்கியான ரத்தினமாகிய இரணியன் வதைச்சரித்திரம் விபிஷணனால் ராவணனுக்குச் சொல்லப்படுகிறது" என்று குறிப்பிடுகின்றார்.

அறிவுரை பகர்தல் என்ற கொள்கையின் அடிப்படையில் கம்பன் இந்தக் கதையைக் கொண்டுவருகிறான். இராவணனின் வீழ்ச்சிக்கு முன்னால் இறுதி முயற்சியாக, இரணியன் வரலாற்றைக் கூறி, அதன் வாயிலாகவாவது இராவணன் திருந்துவானா என வீடணன் எதிர்பார்க்கிறான்.

இங்ஙனம் அகங்காரத்தின் கொடிய வீழ்ச்சியை இராவணனுக்குச் சுட்டிக் காட்டுவதற்கானதோர் அரிய வாய்ப்பைக் கம்பன்வீடணனுக்கு வழங்குகிறான். இங்கே அறிவுரை பகர்தல் என்ற கொள்கை நிலைநாட்டப்படுகிறது.

'ஐய! நின் தரம் அலாப் பெரியோர்
முன்னைநாள், இவன் முனிந்திடக்
கிளையொடும் முடிந்தார்,
இன்னம் உண்டு, யான் இயம்புவது;
இரணியன் என்பான் -
தன்னை உள்ளவா கேட்டி'
என்று உரைசெயச் சமைந்தான்(கம்ப. இராவணன் மந்திரப்படலம் -118)

என்று கம்பன் இரணியன் கதையை வைத்ததற்கான காரணத்தைச் சொல்கிறான். இரணியன் கதை முடிவிலும்,

"புத்திரர் குருக்கள் நின் பொரு இல் கேண்மையர்
மத்திரர் அடைந்துளோர், மெலியர் வன்மையோர்,
இத்தனை பேரையும் இராமன் வெஞ்சரம்
சித்திரவதை செயக்கண்டு தீர்தியோ" (கம்ப.வீட அடை. - 11)

எனவும்,

"எத்தனை வகையினும் உறுதி எய்தின
ஒத்தன உணர்த்தினேன்; உணர கிற்றிலை" (மேலது - 12)

எனவும் வீடணன் தனது இறுதிச் சொற்களில் இராவணனுக்கான உறுதியைப் பகர்வதாக எடுத்துமொழிகிறான். எனவே அறிவுரை பகர்தல் என்ற கம்பனின் கொள்கை இக்கிளைக்கதையில் செயற்படுத்தப்பட்டிருக்கிறது.

**நிறைவுரை**

- வாமனன் வரலாறு, நீதிக் கொள்கை என்ற அடிப்படையிலும்,
- அகலிகை வரலாறு, துன்ப நீக்கம் என்ற கொள்கை

அடிப்படையிலும்,

- சுயம்பிரபை வரலாறு, ஒத்திகைக் கொள்கை என்ற அடிப்படையிலும்,
- இரணியன் வரலாறு, அறிவுரை பகர்தல் என்ற அடிப்படையிலும் கம்பனால் வடிக்கப்பெற்றுள்ளன.

காப்பியக் கட்டுக்கோப்பை வலிவாக்கவே கம்பன் கிளைக்கதைகளை வைத்துள்ளான். கிளைக்கதைகளை அவசியத்தின் பொருட்டாகவே பயன்படுத்தியுள்ளான். சிறந்த கொள்கைகளை வெளிப்படுத்தும் விதமாக அவற்றை அமைத்துள்ளான். காப்பிய உயிர்ப்பை மேலும் ஒளிவிடச் செய்வதில் கம்பன் தேர்ந்துகொண்ட கிளைக்கதைகளுக்குப் பங்கு உண்டு என்பது, இதனால், முற்றிலும் தெளிவாகிறது.

# அகத்தியர் மரபில் கம்பர்

திருமிகு. சொ.அருணன்
தமிழ்த்துறை, துணைப்பேராசிரியர், சித்தர் சிவஞானி கலைஅறிவியல் கல்லூரி,
பொம்மையபாளையம்.

## தமிழின் தொன்மை

தமிழ்மொழியின் தோற்றம் ஆய்வுக்குட்பட்டது; இன்னும் எல்லைகளைக் காண இயலாததாக விளங்குகிறது. தற்போது கண்டெடுக்கப்பட்டுள்ள ஆக்கங்கள் கிறித்துவுக்கு முன்னர் 300 ஆண்டுகளுக்கு முன்னால் எழுதப்பெற்ற பிராமி வடிவம் ஆகும். இந்தியாவில் கிடைத்துள்ள 1,00,000 கல்வெட்டுகளில் 60,000 தமிழில் இடம் பெற்றிருக்கின்றன என்பதன்மூலம் தமிழின் தொன்மையை உணர்ந்துகொள்ள முடிகிறது. தமிழின் இலக்கண நூலான தொல் காப்பியம் இயற்றப்பட்ட காலம் கி.மு.200 என்று வரலாறு கூறுகிறது. அதற்கும் முன்னரே அகத்தியம் தோன்றியிருக்கிறது.

## சங்கமும் அகத்தியரும்

"தலைச்சங்கம், இடைச்சங்கம், கடைச்சங்கம் என மூவகைப்பட்ட சங்கம் இரீஇயினார் பாண்டியர்கள். அவருள் தலைச்சங்கமிருந்தார் அகத்தியனாரும், திரிபுரமெரித்த விரிசடைக்கடவுளும், குன்றெறிந்த முருகவேளும், முரஞ்சியூர் முடிநாகராயரும், நிதியின்கிழவனும் என இத்தொடக்கத்தார் ஐஞ்ஞூற்று நாற்பத்தொன்பதின்மர் என்ப. அவருள்ளிட்டு நாலாயிரத்து நானூற்று நாற்பத்தொன்பதின்மர் பாடினார் என்ப. அவர்களால் பாடப்பட்டன எத்துணையோ. பரிபாடலும், முதுநாரையும், முதுகுருகும், களரியாவிரையும் என இத்தொடக்கத்தன. அவர் நாலாயிரத்து நானூற்று நாற்பதிற்றியாண்டு சங்கமிருந்தார் என்ப. அவர்களைச் சங்கம் இரீஇயினார் காய்சினவழுதி முதலாகக் கடுங்கோன் ஈறாக எண்பத்தொன்பதின்மர் என்ப. அவருள் கவிஅரங்கேறினார் எழுவர் பாண்டியர் என்ப. அவர் சங்கம் இருந்து தமிழாய்ந்தது கடல்கொள்ளப்பட்ட மதுரை என்ப. அவருக்கு நூல் அகத்தியம்."

அகத்தியரே தமிழ்மொழியின் இலக்கண வடிவமைப்பைத் தந்தவர் என்பது இன்றுவரை வழங்கப்பட்டு வரும் வழக்கமாக விளங்குகிறது. சிவபெருமானிடமிருந்து பெற்ற அருந்தமிழ்மொழியைக் கொண்டு அகத்தியர் அகத்தியம் என்னும் நூலை இயற்றினார் என்பதும் செய்தி.

**அகத்தியரும் தமிழும்**

"முன்னொரு காலத்தில் முனிவர்கள் எல்லாம் ஒன்றுசேர்ந்து வடமொழியை வளர்ப்பான்வேண்டி வாராணாசியில் வடமொழிச் சங்கம் ஒன்றை ஏற்படுத்தினர். அச்சங்கப்புலவருள் ஒருவன் 'குடமுனி' என்று போற்றப்படுகின்ற அகத்திய மாமுனிவன் ஆவன். அம்முனிவர் பெருமான் ஏனைய சங்கப்புலவர்களோடு எப்பொழுதும் மாறாகவே தர்க்கம் செய்துவந்தான். அவனுடைய கருத்தை அவர்கள் ஏற்றுக்கொள்ளவில்லை. அவர்கள் இறுமாப்பை அடக்கும் பொருட்டு, நிலவுலாவிய நீர்மலி வேணியனாகிய சிவபெருமானிடம் தன் கருத்தை வெளியிட்டு, அவ்வகத்தியன் பேசிக் கொண்டிருந்தான். எம்பெருமானும் அதனை உணர்ந்தான்.

அப்பொழுது அவன் இருந்த மண்டபத்தில் திவ்விய பரிமள மொன்று வீச அகத்தியன் உமையொரு பாகனாகிய அப்பெருமானை நோக்கி, 'இந்நறுமணம் எங்கிருந்து வருகிறது?' என்று கேட்டான். அப்பெருமான் அகத்திய முனிவனை அம்மண்டபத்தின் ஒரு மூலைக்கு அழைத்துச் சென்று குவியலாய்ப் போட்டிருந்த சில ஏட்டுப் பிரதிகளைக் காட்டினான். அதைக் கண்ட மாத்திரத்தில் அம்முனிவர் பெருமான் இனிமை, மதுரம் என்ற பொருள்களையுடைய, சொன்னால் வாய்மணக்கும் 'தமிழ்' என்று இனிமையாகக் கூறினான். உடனே, சிவபெருமான், 'அந்த இனிமையான மொழிக்கு ஆதார விதிகள் இந்த ஏட்டுப்பிரதியில் உள்ளன' என்று கூறி, அதனை எடுத்துக் கொடுத்து உபதேசித்தான். உடனே அகத்திய மாமுனிவன் தென்றல் வீசும் பொதியமலைக்கு வந்து தனியே வாசம்செய்து கிடைத்த விதிகளைக் கொண்டு சிற்றகத்தியம், பேரகத்தியம் ஆகிய இலக்கண நூல்களை இயற்றியதோடு, தொல்காப்பியர் முதலான பன்னிரு மாணவர்களுக்குத் தமிழ்மொழியைக் கற்பிக்கவும் செய்தான்" என்று தமிழ் வளர்த்த அகத்தியரின் வரலாறு கூறுகிறது. (கம்பராமாயணம், அயோத்தியா காண்டம், தொகுதி 2, ப.232, நர்மதா வெளியீடு) இதையே,

"ஆதிசிவன் பெற்றுவிட்டான் - என்னை
 ஆரிய மைந்தன் அகத்தியன் என்றோர்
வேதியன் கண்டு மகிழ்ந்தே - நிறை
 மேவும் இலக்கணஞ் செய்து கொடுத்தான்"

எனப் பாரதியாரும் உறுதி செய்கிறார். ஆக, தமிழின் தந்தையாகவும், தோற்றுநராகவும் விளங்குபவர் அகத்தியர் எனவும், வடமொழிக்கு

இணையாக மதுரமான மொழியாகிய தமிழ் தோன்றியது என்பதும் உணரப்படுகிறது. இம்மரபினைத் தொடர்ந்தே கம்பர், தன்னை அகத்திய வழியில் நிறுவிக்கொள்கிறார்.

வால்மீகி காவியத்தில் அரக்கியர் அறியாமலிருக்கச் சீதைபால் அநுமன் மதுரமான மொழியில் பேசினான் என்பர். 'அம்மதுரமொழி (மதுரைமொழி) தமிழேயாம்' என்று அறிஞர்கள் சுட்டுவதும், கம்பர் தம் காப்பியத்தில் அம்மொழி நன்கறிந்த அநுமனைச் 'சொல்லின் செல்வன்' என்றும், அவன் பெருமைபேசும் காண்டத்திற்குச் 'சுந்தர காண்டம்' எனப் பெயர் தந்ததும் இங்கு எண்ணத்தக்கது.

**அகத்தியர் மரபில் கம்பர்**

கம்பர் தாம் வடமொழி இலக்கியத்தைத் தமிழில் மொழிபெயர்க்க விழைந்தபோது (ஆசைபற்றி அறையலுற்றதாக அவர் குறிப்பிடுகிறார்) யாது காரணம் கருதியோ தன்னையே அவர் சோதித்துக் கொள்கிறார். அக்காரணங்கள் பின்வருமாறு அமையலாம்.

- வடமொழியிடமிருந்து பெற்றது.
- வடமொழிக்கு இணையானதாக இல்லாவிடின் எழும் பழியை ஏற்பது.
- வடமொழியை விஞ்சுமாயின் பொறாமைக்கு ஆளாவது.
- சைவ இலக்கியங்களுக்கு இணையாய் வைணவ இலக்கி யத்தை ஓதுவது.

எனும் பலவாகிய, இதுபோன்ற காரணங்களை முன்வைத்தே, "வையம் என்னை இகழவும் மாசுஎனக்கு எய்தவும்" என்று காப்பியத்தின் அவையடக்கப் பாடலிலேயே தன் மனவெளிப்பாட்டைக் காட்டி விடுகிறார்.

இத்தனை பழிகளையும் கடந்து, இராமகாதையைத் தமிழில் தரவேண்டும் என்னும் உந்துதலுக்கு ஊக்கியாக இருந்தது எது அல்லது யார் எனின்- தமிழே உருவான அகத்தியரே என்பதனை ஆழப் புரிந்துகொள்ள முடிகிறது. இதற்கான சான்றுகளைக் கம்பரே தம் காப்பியத்துள் நிலைநாட்டியிருக்கிறார்.

"தேவ பாடையின் இக்கதை செய்தவர்
மூவர் ஆனவர் தம்முளும், முந்திய
நாவினான் உரையின்படி நான் தமிழ்ப்
பாவினால் இது உணர்த்திய பண்புஅரோ"

'தேவபாஷையாகிய வடமொழியில் இக்கதையை உணர்த்திய மூவருள் முதல்வராகிய வால்மீகியின் உரையின்படி நான் தமிழ்ப் பாவினால் இக்கதை செய்தேன்' என்பது உறுபொருளாக இருப்பினும், உற்று நோக்கின், 'அவர் மூவருக்கும் முந்தியவராகிய அகத்தியனாரின் வழியில் நின்று நான் தமிழ்ப்பாவினால் இக்கதை செய்தேன்' என்று உட்பொருளும் கொள்ள முடிகிறது.

கம்பர் அகத்தியரைத் துணிந்து வேண்டியே வடநூற்கு இணையான வளம் தமிழுக்குண்டு என்பதை நிறுவவும் தமிழின் தொன்மையை நிலைநாட்டவுமே இராமகாதையை ஏந்தி, இராக்கதம் குலைத்திட வேண்டி அவதாரம் கொண்ட இராமனைத் தமிழனாக்கினார்; கோசலத்தைச் சோழவளநாடாக்கினார்; சரயுவைக் காவிரியாக்கினார்; சீதையைத் தமிழச்சியாக்கினார்.

காலம்காலமாக எழுந்த தமிழ்மரபு இராமகாதையோடு இயைந்த காரணத்தின் வழியாகவே இக்காதை- தமிழ்க்காதையாயிற்று. இதனை, 'தமிழ்க்கவியாகிய கம்பர் இராமகாதையைக் கொண்டு ஒரு மூலகாவியமே படைத்து விட்டார்' என்று புகழ்கிறார் மகான் ஸ்ரீஅரவிந்தர்.

**இராமகாதையில் அகத்தியர்**

வடமொழியில் வால்மீகி அகத்தியரைக் குறித்துப் பெரிதாக எதுவும் பதிவு செய்யவில்லை என்ற கூற்று ஆய்வுக்குரியது. ஆனால், கம்பர் தனது காப்பியத்தைச் செய்வதற்கு ஊக்கியாகவும் தமிழ்மொழியின் தந்தையாகவும் விளங்கும் அகத்தியரைப் போற்றி ஒரு படலத்தையே முன்வைக்கிறார்.

"இராமாயணக் கதைவளர்ச்சியில் அகத்திய முனிவருக்குப் பங்கில்லை. முதல்நூலான வான்மீகத்திலும் பிறமொழி இராமாயணங் களிலும் அவருடைய வருகை சுருக்கமாகவே பாடப்பட்டுள்ளது. தன்னை நாடிவந்த இராமனுக்கு அவன் படைக்கலன்களைக் கொடுப்பதை மட்டுமே குறிப்பிடுகின்றது. ஆனால், கம்பன் அகத்தியருக்கென்று ஒரு தனிப்படலமே அமைக்கின்றான். தமிழ் மொழி வரலாற்றில் அகத்தியனுக்கு இருக்கும் இடத்தைக் கம்பன் கருத்தில் கொண்டுள்ளான்" என்னும் கூற்றின் மூலம் உணரலாம்.

**தமிழ்த்தலைவர் அகத்தியர்**

கம்பர் அகத்தியருக்குத் தனிப்படலம் அமைத்திருப்பினும்,

அதற்குமுன்பே அவரை அடையாளம் காட்டி விடுகிறார். கானகம் சென்ற இராமனைத் திரும்பவும் நாட்டுக்கு அழைத்துவரப் பரதன் திரட்டிய அருட்படையின் வன்மையை அகத்தியரின் திறத்துக்கு ஒப்பிட்டுக் காட்டுகிறார் கம்பர்.

"அலை நெடும் புனல் அறக் குடித்தலால், அகம்
நிலை பெற நிலை நெறி நிறுத்தலால், நெடு
மலையினை மண் உற அழுத்தலால், தமிழ்த்
தலைவனை நிகர்த்தது - அத் தயங்கு தானையே"

இதனுள்ளும் உட்பொருள் தொனிப்பதும் அகத்தியரைத் தமிழ்த் தலைவன் என்று அகத்தியப் படலத்துக்கு முன்பே பெருமையுற அறிமுகம் செய்வதும் கம்பரின் உட்கிடக்கையை வெளிப்படுத்துவதாக அமைகிறது.

**தமிழே அகத்தியர்**

கம்பர் அகத்தியப்படலத்துள் அகத்தியரைத் தமிழாகவே காட்டிப் போற்றுகிறார். குள்ள உருவமுடைய அக்குறுமுனிவர் தனது தமிழ்வளமையால் இந்த உலகை அளந்தவன் என்று பெருமை பொங்கத் தமிழோடு அகத்தியரைக் காட்சிப்படுத்துகிறார். என்றுமுள தென்றமிழ் எனும் தொடருக்கு உறுபொருள் ஒன்றாகவும் உட்பொருள் பலவாகவும் விளங்குவதையும் இங்கு உணர முடிகிறது.

"என்றுமுள தென்றமிழ் இயம்பி இசை கொண்டான்" -47

"நீண்ட தமிழால் உலகை நேமியின் அளந்தான்" -36

"தழற்புரை சுடர்கடவுள் தந்த தமிழ் தந்தான்" -41

மேற்காணும் பாடல்வரிகள் அகத்தியரோடு தமிழை ஒப்புநோக்கு வனவாகவும் ஒன்றிணைப்பனவாகவும் விளங்குகின்றன.

**அகத்திய அவதாரம்**

இராமன் அவதாரப்பெருமை உடையவன் எனினும், கம்பர் அகத்தியப்படலத்தில் அகத்தியரையும் அவதார உருவேற்றிக் காட்சிப் படுத்துவது இன்னும் சிறப்பு.

"நல்லதே நினைந்தாய் அதுநானும் முன்
சொல்லுவான் துணிகின்றது தோன்றல் நீ
செல்தி ஆண்டு அவற்சேருதி சேர்ந்தபின்
இல்லை, நின்வயின் எய்தகில் லாதவே"

என முன்பே இராவணனைத் தம் தமிழாலே வென்றவரான அகத்தியரைச் சென்று சந்திக்குமாறும் அவரிடமிருந்து படைக் கலங்களைப் பெற்று இராவணனை மாய்க்குமாறும் தன்னுள் உணர்ந்து 'அவற்சேருதி' என்றும், அவ்வாறு சேர்ந்தபின், 'இல்லை நின்வயின் எய்தகில்லாதவே' என்றும் தமது ஞானநோக்கினால் உணர்ந்து சுதீக்கிணர் கூறுவது அகத்தியரை அவதாரப் பெருமைக்கு உட்படுத்துகிறது.

மூன்று உலகங்களையும், தன் குள்ளஉருவமாகிய வாமன உருவில் எழுந்து நின்று அளந்த திருமால் பெருமைக்கு இணையாக, குள்ள உருவத்தினராகிய அகத்தியரும், தனது நீண்ட தமிழ்ப்புலமையால் அளந்தார் என்று அகத்தியரைக் கம்பர் அவதார உருவேற்றுகிறார்.

"ஆண்தகையர் அவ்வயின் அடைந்தமை அறிந்தான்;
ஈண்டு, உவகை வேலை துணை ஏழ் உலகம் எய்த,
மாண்ட வரதன் சரண் வணங்க, எதிர் வந்தான் -
நீண்ட தமிழால் உலகை நேமியின் அளந்தான்"

அரக்கர் குலம்அழிய அவதாரம் எடுத்தவன் இராமன் எனினும், அதன்முன்பிருந்தே அரக்கர் குலத்தை நசித்து வந்தவர் அகத்தியர் என்பதையும் கம்பர் அழுத்திக் குறிப்பிடுகிறார். விருத்திராசுரன் முதலிய அசுரர்கள் கடலுள் ஒளிந்ததும்,

'...............கடல் எல்லாம்
உண்டு அவர்கள் பின்னர் உமிழ்க என்றலும் உமிழ்ந்தான்' -37

அவர்களை அழிப்பதற்கு அகத்தியர் கடல்நீரைக் குடித்து தேவர்களைக் காத்ததுபோலவே, இப்போதும் இராவணனை அழிப்பதற்கு இராமனுக்குப் படைக்கலங்கள் தந்து காப்பதாகவும் குறிப்பிடுகிறார்.

அதேபோல வாதாபி அரக்கனைக் கொன்றதும்,

'.......................... வாதவிகன் வன்மைக்
காயம் இனிது உண்டு அலகின் ஆரிடர் களைந்தான்' -38

விந்திய மலையின் செருக்கை அடக்க அதை அமிழ்த்தியதும்,

'...........விந்தம் எனும் விண் தோய்
நாகம் அது நாகம் உற, நாகம் என நின்றான்' -39

இறைவன் திருமணத்தின்போது வடதிசை அழுந்தி தென்திசை உயர அதனைச் சமன் செய்யத் தென்திசை வந்ததும்

"வடாது திசை மேல்நாள்
நீசம் உற, வானின் நெடு மா மலயம் நேரா,
ஈசன் நிகர் ஆய், உலகு சீர் பெற இருந்தான்" -40

தெய்வப்பொன்னி எனப் பெயர்பெற்ற காவிரியைக் கொணர்ந்ததும்

"குண்டிகையினில், பொரு இல், காவிரி கொணர்ந்தான்" -46

எனப் புகழ்ந்து கூறப்படுகிறது.

யாவற்றுக்கும் சிகரம் வைத்தாற்போல என்றும் உளதென் தமிழை இயம்பி இசைகொண்டு நின்றவனை வந்த நெடியோனாகிய (அவதார உருவம் கொண்ட திருமாலாகிய) இராமன் அடிபணிந்தான் என்று அகத்தியரின் மாபெருமையை உணர்த்துகிறார் கம்பர்.

இங்கும் உறுபொருளினும் உட்பொருள் மிகுகிறது. நின்றவன் என்று மட்டும் கூறியதையும், வந்தவன் என்று மட்டும் கூறாது நெடியோன் என்று சேர்த்துக் கூறியதையும் உற்றுக் கவனித்தால் நின்றவனும் நெடியோன், வந்தவனும் நெடியோன் என்பதை உட்பொருளாகக் கொள்ள முடியும். வந்தவனிலும் நின்றவன், எக்காலத்தும் நிலைத்து நின்றவன் எனும் பொருளில் அமைகிறது. வந்தவன் வலிமை தெய்வத் தன்மை என்றால், நின்றவன் வலிமை தமிழ்ப்பெருமை என்பது விளக்காமலேயே விளங்குகிறது.

**கம்பனின் தமிழ்க் கடவுள்**

"உழக்கும் மறைநாலினும், உயர்ந்து உலகம்ஓதும்
வழக்கினும், மதிக் கவியினும், மரபின் நாடி
நிழல்பொலி கணிச்சிமணி நெற்றிஉமிழ் செங்கண்
தழல்புரை சுடர்க் கடவுள் தந்ததமிழ் தந்தான்" -41

உழக்கும் மறை என்பது கனம் முதலிய முறையே பயின்று ஓசை தவறாமல் ஓதி உணரத்தக்க வேதம் என்பதாம். இதனால் வேதம் ஓதுதலிலுள்ள கடின நிலை புலப்படும். 'ஆதியில் தமிழ் நூல் அகத்தியற்குணர்த்திய மாதொரு பாகனை வழுத்துதும்' எனச் சேனாவரையர் கூற்றையும் இதனோடு ஒப்பிடலாம். அகத்தியர் அருளிய இலக்கணம், சிற்றகத்தியம், பேரகத்தியம் எனப்படும். மதிக் கலையினும் எனப் பாடமோதிப் புத்தி கப்பு விட்டதனாலும் எனப்

பழைய உரை கூறும். வடமொழி தென்மொழிகளுக்கு இறைவன் சிவபெருமானே முதல் என்ற கருத்தை இது புலப்படுத்தும். (ஒவ்வொரு சமயத்தாரும் தத்தம் கடவுளரே மொழிகளைப் படைத்தனர் என்று தம் கொள்கையைக் கூறுவர்) இப்பாடல்களால் கடலை உண்டது, வாதாபி வலம் அழித்தது, விந்தத்தை அடக்கியது. தென்திசை வட திசையைச் சமனாக்கியது. முதலிய அகத்தியரின் அருஞ்செயல்களை அறிய முடிகிறது. நீண்ட தமிழால் அளந்ததில் (2666) தொடங்கி இங்கு தமிழ் தந்தான் எனக் கூறுவதால் அகத்தியரின் பெருமையில் தமிழே முதலும் முடிவுமாய் விளங்குவது புலனாம்.

இதிலும் கம்பர் உட்பொருள் தொனிக்கவே உரைக்கிறார். உழக்கும் என்பது அகத்தியரை உணர்த்த வந்ததுபோலப் புலப்படும். உழக்கின் உயரமுடையவர் எனின், உழக்கு அளவில் சிறியதாக இருப்பினும், தன் முன் இருக்கும் எத்துணை பெரிய அளவிடு பொருளையும் தன்னுள் அடக்கி அளவிட்டு விடுவது என்பது அகத்தியரின் பெருமைக்கு இணையானதாகும். மேலும், கடவுள் தந்த தமிழ் என்று தமிழில் தொடங்கி, தமிழில் நிறைக்கிற பாங்கும், கடவுள் தந்த தமிழ் தந்தான் எனும்போது தனக்குத் தமிழ் தந்த கடவுளாக அகத்தியரை முன்னிறுத்திக் கம்பர் போற்றுகிற பெருமையும் புலப்படுகிறது.

**விருந்தினன் இராமன்**

"பொருந்த, அமலன் பொழிலகத்து இனிது புக்கான்;
விருந்து அவன் அமைத்தபின், விரும்பினன்; 'விரும்பி,
இருந்தவம் இழைத்த எனது இல்லிடையில் வந்து, என்
அருந்தவம் முடித்தனை; அருட்கு அரச!' என்றான்"

இராமனை நோக்கி 'நீ இவ்வாறு எழுந்தருளியது' 'நான் முற்பிறவி களிலும் இப்பிறவியிலும் செய்த நற்றவத்தால்' என்றும் 'நான்செய்யும் தவம் உன் வருகையால் இப்போது முற்றுப்பெற்றது' என்றும் கூறினார். இனி விரும்பினனாகிப் புக்கான் எனவுமாம். இராமன் பேரருள் கொண்டு தம் தவச்சாலைக்கு வந்ததால் 'அருட்கரசு' என்றார். இராமன் வருகையே பெரும் பேறு; இனிச் செய்யும் தவம் வேறு இல்லை என்பது புலப்பட 'அருந்தவம் முடித்தனை' என்றார்.

தான் செய்த தவங்கள் எல்லாம் பலித்த தன்மையாய் இராமன் தன்னை நாடி வந்தது என அகத்தியர் இராமனைப் போற்றுகிறார். அதேபோல, 'அருந்தவம் முடித்தனை' என வாழ்த்தவும் செய்கிறார். இதனுள்ளும் உட்பொருளும் உறுபொருளும் தொனிக்கிறது.

இராமகாதை தமிழை வந்தடைந்ததைப் போற்றும் விதமாகவும், அத்தகு அருந்தவத்தைச் செய்து முடிக்க அகத்தியரே வாழ்த்திய தாகவும் இதனை உட்பொருளாகக் கொள்ள இயலுகிறது.

ஆக, இருபொருள் கொண்டு நோக்கினும் பாற்கடலை விடுத்து மண்ணுலகத்திற்கு வந்ததாலும், வடமொழி விடுத்துத் தமிழுள் புகுந்ததாலும், அகத்தியர் இல்லடைந்ததாலும் இராமனை 'விருந்தினன்' எனக் கம்பர் காட்டுவது மிகப்பொருத்தமாக அமைகிறது.

## நெடியோரின் நெடியோன்

"என்ற முனியைத் தொழுது, இராமன், 'இமையோரும்,
நின்ற தவம் முற்றும் நெடியோரின் நெடியோரும்,
உன் தன் அருள் பெற்றிலர்கள்; உன் அருள் சுமந்தேன்;
வென்றனென் அனைத்து உலகும்; மேல்இனி என்? என்றான்"

'உன்னருள் சுமந்தேன் என்றது என் தகுதிக்கு மேலாக நீ எனக்கு அருள் புரிந்தாய்' என்பதாம். அகத்தியர் தனக்குப் பின்னர்த் தெய்வப் படைக்கலன்களை அருளுவதை முன்னரே எண்ணிக் கூறியதுமாம். முன்னர் அகத்தியர் இராமனை 'அருட்கு அரச!' (2679) என்று கூறியநிலையில் தான் அகத்தியரின் 'அருள் சுமந்தேன்' எனக் கூறிய இராமன் நிலை எண்ணிப் பார்த்தற்குரியது. எல்லா உலகையும் அகத்தியர் அருளால் வெல்லும் நம்பிக்கை இராமனிடம் புலப்படுகிறது. இதனால், அகத்தியரை இராமன் மிக உயர்வாக எண்ணிய எண்ணம் வெளிப்படுகிறது.

இறைவர்களுள் சிறப்புப் பெற்றவனும் தேவர்களுக்கெல்லாம் தலைவனாகவும் விளங்கும் திருமால் அவதார உருக்கொண்டு அகத்தியரை நாடிவந்து 'நெடியோனின் நெடியோன்' எனப் போற்றுவது அகத்தியரின் பெருமைக்கு மற்றொரு சான்று. இங்கு சுட்டப்பெறும் நெடுமை என்பது அகத்தியரின் வல்லமைகள் பலவற்றுள்ளும் அவர்தம் தமிழ்ப்புலமை குறித்தே என்பது தெற்றெனப் புலப்படுவதையும் கொள்ளலாம்.

## தொகுப்புரை

- தாம் கருதிய வினைமுடிக்க இராமன் அகத்தியரை நாடியது போன்றே, கம்பரும் நாடினார். அகத்தியர், இராமனுக்குப் படைக்கலன்கள் தந்து அருளியது போன்றே கம்பருக்கு இனித்த தமிழ் தந்து அருளினார்.

- ‘என்றுமுள தென்றமிழ்’ என்பதினால் அகத்தியர் மரபில் நின்று தான் செய்த இக்காப்பியம் என்றும் நிலைத்திருக்கும் எனும் எண்ணத் துணிவோடே, முன்கூறிய ‘வையம் இகழவும், மாசு எய்தவும்’ ஆகிய பழிகளையெல்லாம் கடந்து அகத்தியரைத் துணைக்கொண்டு இராமகாதையைத் தமிழ் செய்தார் எனத் துணியலாம்.

- ‘என்றுமுள தென்றமிழ்’ என்பதற்கும் உட்பொருளும் உறுபொருளும் உண்டு. ‘என்றும் உள தென்தமிழ்’ எனின்-நிலைத்து நிற்கும் வடமொழிக்கு இணையானது தென்மொழி என உறுபொருளும், ‘என்றும் உளது என்தமிழ்’ எனின்-வால்மீகியின் இராமாயணத்திற்கு இணையாகத் தான் தமிழில் செய்த காப்பியம் நின்று நிலைபெறும் என உட்பொருள் தொனிக்கிறது.

- தனது காப்பியத்தின் நாயகனான இராமனுக்கு இணையாகவும், இராமனே தொழத்தகுந்த மேன்மைத் தவங்கள் நிறைந்த முனிவராகவும் மட்டுமின்றி, தமிழ்த் தலைவனாகவும், தமிழ்க் கடவுளாகவும் கம்பர் காட்டுவது அகத்தியரின் பெருமையை விரித்துரைக்கவேயாம்.

- ஆக, இராமகாதையைத் தமிழில் தரமுனைந்த அவருடைய முயற்சிக்கு ஊக்கியாக விளங்கிய அகத்தியரின் மரபில் நின்றே அதை நிறைவேற்றினார். அதற்காகவே, வால்மீகியில் இல்லாத அகத்தியப் படலத்தையும், அவர்தம் தமிழ்ப் புலமை, புராணப் பெருமைகளையும் காப்பியத்துள் நிறைத்துக் காட்டுகிறார் என்பதை இக்கட்டுரை எடுத்து மொழிவதாக அமைகிறது.

## இறைவனான இளையோன்

திருமிகு. அ.கி. வரதராசன்.
சிங்கப்பூர்.

இராமன் திருமாலின் அவதாரமே என்பதைக் கதையில் பல இடங்களில் கவிக்கூற்றாகவும், ஏனைய பிற பாத்திரங்களின் கூற்றாகவும் கம்பன் வலியுறுத்திச் சொல்கிறான். தன்னுடைய திருமால் பக்தியை விராதன் வாயிலாகப் பல பாடல்களில் அழுத்தமாக முழுமையாக எந்தவித ஐயத்திற்கும் இடமின்றி அவன் பதிவு செய்கிறான். அவ்வாறே அனுமன், வாலி, வீடணன் என்று பல பாத்திரங்கள் வாய்மொழியாகவும் இதைப் பலவிடத்தும் அறிவிக்கிறான்.

இராமனைத் திருமால் அவதாரம் என்றும் இலக்குவனை ஆதிசேடனின் அவதாரம் என்றும் கம்பன் பாலகாண்டத்திலேயே மிகத் தெளிவாகச் சொல்லி விடுகிறான்.

இராவணன் செய்யும் கொடுமைகள் பற்றி முறையீடு செய்து, அவனை அழிக்க அருள்புரிய வேண்டும் என்று தன்னிடம் வந்து வேண்டிய தேவர்களுக்கு, தான் அயோத்தியில் தயரதன் மகன் இராமனாக அவதாரம் செய்து, இராவணனை அழிப்பேன் என்று திருமால் வாக்குத் தருகின்றான். ஆக, திருமாலின் அவதாரம் இராமன் என்பதைக் கம்பன் பதிவு செய்யும் பாடல் இதோ:

"மசரதம் அனையவர் வரமும் வாழ்வுமோர்,
நிசரதக் கணைகளால் நீறு செய்ய, யாம்
கச ரத துரக மாக் கடல்கொள் காவலன்,
தசரதன், மதலையாய் வருதும் தாரணி" என்பது திருமாலின் கூற்று.

அத்தோடு நிற்காமல் தசரதனின் மற்ற மகன்களாக, தன்னுடைய உடன் பிறப்புகளாக யார் யார் அவதாரம் செய்யப் போகிறார்கள் என்பதையும் திருமால் சொல்வதாகக் கம்பன் பதிவு செய்கிறான். அந்தக் கட்டத்தில் இதைச் சொல்லும் கம்பன் பாடல்:

"வளைகொடு திகிரியும், வடவைத் தீதர
விளைதரு கடுவுடை விரிகொள் பாயலும்,
இளையர்கள் என அடி பரவ ஏகி, நாம் ,
வளைமதில் அயோத்தியில் வருதும் என்றனன்"

தனக்கு வாரிசு இல்லையே என்று வருந்தி, தசரதன் வசிட்டனிடம் தன் துயரத்தைப் பகிர்ந்து கொள்ளும்போது, வசிஷ்டர் இந்நிகழ்வு அனைத்தையும் தன் மனத்தில் எண்ணுவதாகக் கம்பன் கூறுகின்றான். இவ்விதம் தேவர்களுக்குத் திருமால் வாக்களித்ததை, தயரதனுக்கு மகனாகத் திருமால் அவதாரம் செய்யப் போகின்றான் என்பதை வசிட்டன் அறிந்திருந்த காரணத்தால் , அம்முனிவன் தயரதனைப் புத்திர காமேஷ்டி யாகம் செய்யச் சொல்கிறான் என்பது கம்பன் கூறும் கதை நிகழ்வு.

இவ்வளவு தூரம் இராமன் திருமாலின் அவதாரமே என்பதைத் தெளிவாகச் சுட்டிய கம்பன், மிக கவனமாக வேறொன்றையும் செய்துள்ளான். தன்னுடைய காப்பிய நாயகனை, அவனளவில் தான் ஒரு மனிதன் என்ற உணர்வோடு மட்டுமே வலம் வருபவனாகக் கம்பன் காப்பியம் முழுவதிலும் சித்திரித்திருக்கின்றான். இதைச் செய்வதில் மிகவும் கண்ணும்கருத்துமாக இருந்து, சற்றும் அதில் பிழைபடாவண்ணம் தன் காப்பியத்தை ஆக்கித்தந்திருக்கிறான். இராவணன் இன்னின்ன உயிரினங்களால் தான் அழிக்கப்படலாகாது என்று வரம் பெற்ற போது, அதில் மனிதரைச் சேர்க்க மறந்து விட்டான் என்றும் அதனாலேயே திருமால் அவனை வீழ்த்த மானிட அவதாரம் எடுத்ததாகவும் சொல்லப்படுவதுண்டு. இதைக் காரணமாகக் கொண்டோ என்னவோ தன்னைத் தெய்வம் என்றோ தெய்வாம்சம் உடையவன் என்றோ காப்பியத்தின் எந்த ஒரு கட்டத்திலும் இராமன் உணர்ந்ததாகவோ, எண்ணியதாகவோ அல்லது பேசியதாகவோ, ஏன் சூசகமாகச் சுட்டியதாகவோ சித்தரிக்காமல் கம்பன் கதையை நடத்திச் செல்கிறான்.

தன்னளவில் தான் ஒரு மானிடனே என்ற ஒரே எண்ணம் மட்டும் தான் இராமன் உள்ளத்தில் இருப்பதாகக் கம்பன் நிலை நாட்டியுள்ளான். இது குறித்துத்தானோ என்னவோ அவனுடைய மிகப்பிரபலமான சொற்றொடராகிய "மானுடம் வென்றது "அன்றே" என்பதை உள்ளடக்கிப் பின்வரும் பாடலையும் வடித்துள்ளான்.

> "தேறினன்- அமரக்கு எல்லாம் தேவர் ஆம் தேவர் அன்றே,
> மாறி இப்பிறப்பில் வந்தார் மானிடர் ஆகி மன்னோ?
> ஆறுகொள் சடிலத்தானும் அயனும் என்று இவர்கள் ஆதி
> வேறு உள குழுவை எல்லாம் மானுடம் வென்றது அன்றே!"

காப்பிய நாயகனை இவ்விதம் தான் தெய்வாம்சம் உடையவன் என்று அவனளவில் உணராவண்ணம் படைத்த கம்பன், இலக்குவனைப் பொறுத்த மட்டில் இதைச் சற்றே தளர்த்துகிறான் என்றே தோன்றுகிறது. இதைச் சற்று விரிவாக ஆராய்வதே இக்கட்டுரையின் நோக்கம்.

ஆதிசேடனின் அம்சம் இலக்குவன் என்று அயோத்தியா காண்டத்திலும் கம்பன் காட்டுகிறான். இராமனுக்கு ஆட்சி இல்லை, அது பரதனுக்குப் போகும் படி சிற்றன்னை கைகேயி செய்துவிட்டாள் என்று சினந்து எழுந்த இலக்குவனின் சீற்றம் பற்றிக் கூற வந்த கம்பன், அவன் தன் முந்தைய வடிவமான ஆதிசேடனை ஒத்திருந்தான் என்கிறான். இலக்குவன் கொண்ட சினத்தின் வெளிப்பாடுகளை மிக அழகாகச் சித்தரிக்கும் பாடல் அது.

"கண்ணின் கடைத்தீ உக, நெற்றியில் கற்றை நாற,
விண்ணில் சுடரும் சுடர் தோன்ற, மெய்ந்நீர் விரிப்ப,
உள் நிற்கும் உயிர்ப்பு எனும் ஊதை பிறக்க, நின்ற
அண்ணல் பெரியோன் தனது ஆதியின் மூர்த்தி ஒத்தான்"

பாலகாண்டத்தின் திருஅவதாரப்படலத்திலும், அயோத்தியா காண்டத்தின் நகர்நீங்கு படலத்திலும், இலக்குவனை ஆதிசேடனின் அம்சம் என்று சொன்ன கம்பன், யுத்தகாண்டத்தில், அதாவது காப்பியத்தின் இறுதிக்கட்டத்தில் இலக்குவனை எவ்வாறு சித்திரிக்கிறான் என்பதைப் பார்க்கும் போது நமக்கு வியப்பு மட்டுமே மிஞ்சும். இலக்குவன் திருமாலே என்பது போலச் சொல்லிவிடுகிறான் கம்பன். - அதாவது தான் திருமாலே என்று இலக்குவன் எண்ணுவதாக, அவ்விதம் அவன் நம்பிச் செயல்படுவதாக, தன்னைத் திருமாலாக அவன் வரித்துக் கொள்வதாகக் குறிப்பிடுகின்றான் கம்பன்.

அவ்விதம் இளையவனை இறையவனாகக் கம்பன் காட்டுவது யுத்த காண்டத்தின் நிகும்பலையாகப்படல நிகழ்வு காப்பியத்தின் எந்தஇடத்திலும் தான் இறைவனின் அவதாரம் அல்லது தான் இறைஅம்சம் என்று ஓர்அணு அளவுகூட உணராத வண்ணம் இராமனைப் படைப்பதில் மிக மிகக் கவனமாக இருந்த கம்பன், அதைச் சற்றும் பிழையுறாவண்ணம் செய்து காட்டிய கம்பன், இலக்குவன் தான் இறைவனே என்று எண்ணும்படி சித்திரிப்பதில் எந்தவிதத் தயக்கம் காட்டவில்லை என்று தோன்றுகிறது. இதோ அந்த நிகழ்வு

இந்திரசித்து இலக்குவன் இருவரும் போர்க்களத்தில் பொருதுகிறார்கள். ஏற்கனவே இவர்கள் இருவரும் இதற்கு முன்னர்

பொருதி இந்திரசித்து ஏவிய பிரம்மாஸ்த்திரத்தால் இலக்குவன் வீழ்த்தப்படுகின்றான். எனவே இம்முறை நிகும்பலை யாகத்தை அழித்து, இந்திர சித்துவை னிழ்த்துவதில் இலக்குவன் மிகக் குறியாக இருக்கிறான். அப்படியே இலக்குவனை எப்படியும் கொன்றே தீருவேன் என்ற உறுதியுடன் இந்திரசித்து போரிடுகிறான்.

இந்திரசித்து விடும் படைகளுக்கு ஏற்ப அவற்றைத் தடுக்கும் படைக்கலன்களை இலக்குவனும் ஏவுகின்றான். இந்திரசித்து காற்றின் படையை ஏவ, இலக்குவனும் அதையே ஏவுகின்றான்.

> கூற்றின்படி கொதிக்கின்ற அக்கொலை வாள்எயிற்று அரக்கன்
> ஏற்றும்சிலை நெடுநாண் ஒலிஉலகு ஏழினும்எய்த,
> சீற்றம் தலைத்தலை சென்றுஉற, இதுதீர் எனத் தெரியாக்,
> காற்றின்படை தொடுத்தான்; அவன்அதுவே கொடுகாத்தான்

காற்றின் படைக்குக் காற்றின் படையையே பதிலடியாகக் கொடுத்த இலக்குவனை அழிக்க, இந்திரசித்து அடுத்ததாக, அனல் படையை ஏவுகிறான். இலக்குவனும் அதைத்தடுக்க அப்படையையே மாற்றாக விடுகின்றான். அதுகண்ட இந்திரசித்து, புனலின்படைய ஏவ, இலக்குவனும் புனலின்படையை ஏவி அதனைத் தடுக்கின்றான். மனம் தளராத இந்திரசித்து, கதிரவன் படையை ஏவ, இலக்குவனும் கதிரவன் படையையே பதிலடியாக ஏவி அதனைத் தடுக்கின்றான்.

> அனலின் படை தொடுத்தான்; அவன் அதுவே கொடு தடுத்தான்,
> புனலின் படை தொடுத்தான் அவன் அதுவே கொடு பொறுத்தான்;
> கனவெங் கதிரவன் வெம் படை துரந்தான், மனம்கரியான்;
> சினவெந் திறல்இளங் கோளரிஅதுவே கொடுதீர்த்தான்.

இவ்விதம் இலக்குவன், இந்திரசித்து விடும் அப்படைகளுக்கு மாற்றாக அதே படைகளை ஏவி அவை ஒவ்வொன்றையும் தடுத்து வந்தான்.

இவ்விதம் படைக்குப் படை என்ற கணக்கில் இலக்குவன் அதே கணையை மாற்றாக ஏவி, தன் கணைகள் முற்றிலுமாகப் வலுவிழந்து போகும்படி செய்வதைக்கண்ட இந்திரசித்து அயன்படையை (பிரம்மாஸ்திரத்தை) ஏவுகிறான் இலக்குவன் மீது. ஏற்கனவே இருமுறை அக்கணையால் வீழ்த்தப்பட்டவன் இலக்குவன். இம்முறை தன்மீது ஏவப்பட்டது பிரம்மாஸ்திரம் என்பதை உணர்ந்துகொண்ட இலக்குவன் அதனை அழிப்பதற்கு, அதே கணையை மீண்டும் ஏவுகின்றான். என்மீது ஏவப்பட்ட அக்கணையை மட்டும் அழிப்பாய்

வேறு உயிர்களை அழிக்கும் துன்பத்தை உண்டாக்காமல் என்று கூறி பிரம்மாஸ்திரத்தை இலக்குவன் ஏவுகின்றான்.

இவ்விதமாகத் தான் ஏவிய அயன் படையும், அதே அயன் படையால் அழிந்துபோவதைக் கண்ட இந்திரசித்து அடுத்த படியாக, இலக்குவன் மீது நாராயணாஸ்திரத்தை - மாயோன் படையை - ஏவுகிறான்.

"இலக்குவா இதைத் தடுப்பாய் என்றால், உன்னை எதிர்ப்பவர் இப்புவியில் எவருமே இல்லை. ஆனால் உன்னால் இதைத் தடுக்க இயலாது. இது உன்னைக் கண்டிப்பாக அழித்துவிடும். நீ விண்ணுலகு ஏகப்போவது உறுதி" என்று சொல்லி இலக்குவன் மீது திருமாலின் கணையை இந்திரசித்து விடுகிறான்.

"மாயோன் நெடும் படை வாங்கிய வளை வாள் எயிற்று அரக்கன்,
நீயோ இது தடுத்தாய் எனின் , நினக்கு ஆர் எதிர் நிற்பார்?
போயோ விசும்பு அடைவாய்; இது பிழையாது" எனப் புகலா
தூயோன் ஊிசை உலகு யாவையும் தடுமாறிடத் துரந்தான்"

இதற்கு இலக்குவன் கொடுத்த மாற்றுக்கணை என்ன தெரியுமா? இங்கேதான்கம்பனின்கைவண்ணம்நன்குவெளிப்படுகின்றது.இதுகாறும் எக்கணை ஏவப்பட்டதோ அதற்கு மாற்றாக அக்கணையையே ஏவிய இலக்குவன் , இம்முறையும் நாராயணாஸ்திரத்துக்கு மாற்றாக நாரயணாஸ்திரத்தைத் தானே ஏவியிருக்க வேண்டும். (அப்படித்தான் - அதாவது ஏவப்பட்ட கணைக்கு மாற்றாக அக்கணையையே ஏவு தம்பி என்று - இராமன் நிகும்பலைக்குக் கிளம்பத் தயாரான இலக்குவனுக்கு அறிவுரை சொல்லி, திருமாலின் வில்லையும் அவனிடம் கொடுத்து அனுப்பியிருக்கிறான்)

இலக்குவன் இக்கட்டத்தில் தன் மீது ஏவப்பட்ட திருமாலின் கணைக்கு, மறு கணையாகத் திருமாலின் கணையை ஏவவில்லை. இலக்குவன் கையில் இருப்பதோ திருமாலின் வில். அப்படியிருந்தும் அவன் திருமாலின் கணைக்கு மறு கணையாகத் திருமாலின் கணையை அவன் ஏவவில்லை.

சரி; வேறு ஏதாவது கணையை ஏவி, தன் மீது ஏவப்பட்ட திருமாலின் கணையை இலக்குவன் முறியடித்தானா என்றால் அப்படி எந்தவித மாற்றுக்கணையையும் இலக்குவன் ஏவவில்லை. என்பது தான் கம்பன் தரும் செய்தி.

அப்படியானால் இலக்குவன் என்னதான் செய்தான்? தன்மீது ஏவப்பட்டது திருமாலின் கணை என்பதை அறிந்துகொண்ட இலக்குவன், அந்தக் கணையை எதிர் நோக்கி நடந்தான். - தன்னையே திருமாலாக எண்ணிக்கொண்டு. "நானே திருமால். என்னை இந்தத்திருமாலின் கணை என்ன செய்துவிட முடியும்?" என்று தன்னைத் திருமாலாகவே வரித்துக்கொண்டு, தன்னைக் குறிவைத்து வருகின்ற அந்தக் கணைவரும் திக்கில் அதை எதிர்கொள்ளும் முகமாக இலக்குவன் நடந்து செல்கிறான்.

"சேமித்தனர் இமையோர் தமை, சிரத்து ஏந்திய கரத்தால்;
ஆம்இத் தொழில், பிறர் யாவரும் அடைந்தார்; பழுது அடையாக்
காமிப்பது முடிவிப்பது படிகின்றது கண்டான்;
நேமித்தனி அரிதான் எனநினைந்தான் எதிர் நடந்தான்"

இலக்குவன்மீது நாராயணாஸ்திரம் ஏவப்பட்டதைக் கண்ட தேவர்கள், தத்தம் கரங்களைத் தம்முடைய தலைகளின் மீது வைத்துக் கொண்டு தங்களைப் பாதுகாத்துக் கொண்டார்கள். அதையே மற்றவர்கள் எல்லோரும் செய்தனர்.

ஆசைப்பட்டதைக் கண்டிப்பாகச் செய்தே முடிக்கும் ஆற்றலுடையது இக்கணை (காமிப்பது முடிவிப்பது படிகின்றது) என்பதை இலக்குவன் கண்டுகொண்டு, நானே நாராயணன் என்று பாவித்துக் கொண்டு அதன் எதிரே நடந்தான் - என்கிறான் கம்பன்.

தன்னையே அரி என்று எண்ணி, அரியின் கணைக்கு எதிரே இலக்குவன் நடக்கவும், அக்கணை அவனைத் தீண்டாமல், அவனுக்கு வலப்புறமாக விலகிச் சென்றது. அவ்விதம் சென்று தன் வலி இழந்து மாண்டது அக்கணை.

"தீக்கின்றது இவ்வுலகு ஏழையும் எனச் செல்வது தெரிந்தான்;
நீக்கும் தரம் அல்லா முழு முதலோன் என நினைந்தான்;
மீச்சென்றிலது அயல் சென்று அது விலங்கா வலம் கொடு மேல்
போய்த்து அங்கு அது அனல் மாண்டது; புகை வீய்ந்தது, பொதுவே."

இவ்விதம் திருமாலாகவே தன்னைக் கற்பித்துக்கொண்டவன் இலக்குவன். இப்படி, இலக்குவன் நாராயணனின் அம்சமே என்பதை இந்திரசித்துவும் தன் அண்ணன் இராவணனிடம் சொல்லி , சீதையை விட்டு விடுவதே நல்லது என்பதையும் எடுத்துச் சொல்கிறான். இந்திரசித்து வதைப் படலத்தில் இந்நிகழ்வைக் காணலாம்.

"இந்த நிலத்தை உண்டாக்கியவன் திருமால். அவனே மேலுலகத்தையும் உண்டாக்கியவன், இத்தகைய பெருமை உடைய நாராயணனின் படையை அவன் மீது ஏவினேன். ஆனால் அப்படை இலக்குவனை வலம்செய்து போயிற்றென்றால், பின்னர் இவனை அழிக்க வல்ல படை என்று வேறொன்று உண்டோ? நம் அரக்கர் குலம் செய்த தீவினையால், தந்தையே நீர் கொடிய பகையைத் தேடிக்கொண்டீர். இந்த மூவுலகையும் இலக்குவன் ஒருவனே தனி ஆளாக நின்று அழிக்க வல்லவன். ஆவான். எனவே சீதையை விட்டு விடுங்கள் அப்பா" என்று தான் மடிவதற்கு முன்னால் இந்நிகழ்வைத் தன் தந்தையிடம் பதிவு செய்து விட்டு மீண்டும் நிகும்பலைக்குப் போய் இலக்குவன் கையால் மாண்டுபோகிறான் இந்திரசித்து.

"நிலம் செய்து விசும்பும் செய்து நெடிய மால் படை நின்றானை
வலம் செய்து போயிற்றென்றால், மற்று இனி வலியது உண்டோ;
குலம் செய்த பாவத்தாலே கொடும் பகை தேடிக் கொண்டாய்,
சலம் செயின் உலகம் மூன்றும் இலக்குவன் முடிப்பான் தானே"

இவ்விதம் தானே திருமால் என்று எண்ணுவதாகவும் உணருவ தாகவும், அந்த எண்ணத்தின் அடிப்படையில் அந்த அசைக்க முடியாத நம்பிக்கையில் தன்னை எதிர்நோக்கி வரும் நாராயணாஸ்த்திரத்தை எதிர்கொண்டு நடப்பவனாகவும் இலக்குவனைக் காட்டுகிறான் கம்பன்.

இவ்விதம் தன்னைத் திருமால் என்று இலக்குவன் வரித்துக் கொள்வதற்குக் காரணம் ஏதேனும் இருக்கலாமோ என்று சற்று யோசித்துப்பார்த்தேன். ஒரு குறிப்பிட்ட நிகழ்வு இதற்குக் காரணமாக இருக்கலாம் என்பதாக ஒரு சிறு பொறி தட்டியது. இது ஒரு யூகம் தான்.

இலக்குவனைத் திருமாலுக்கு ஒப்பானவன் என்று இராமனே வீடணனிடம் சொல்கிறான் அதிகாயன் வதைப்படலத்தில். இப்போது போருக்கு வந்திருப்பவன் மாபெரும் வீரன் என்று இராமனிடமும் இலக்குவனிடமும் வீடணன் அதிகாயனின் வல்லமை குறித்து விரிவாகப் பேசுகிறான். அண்ணனுக்கு இது பொறுக்கவில்லை போலும்!. என் தம்பி இலக்குவனுக்கு முன் இந்த அதிகாயன் வெறும் தூசு என்பது போலத் தம்பியின் வீரத்தை மிகப் புகழ்ந்து, இலக்குவனின் திறமை இன்னவகைப் பட்டது என்று வீடணனுக்கு உணர்த்துகிறான். அந்தச் சந்தர்ப்பத்தில், இலக்குவன் விஷ்ணுவுக்கு நிகரானவன் என்று குறிப்பாகச் சுட்டுகிறான் இராமன். அடல் விண்டு என ஒல்வானும் இவன் என்கிறான் தம்பியைப் பற்றி. (விண்டு =

விஷ்ணு)

"கொல்வானும் இவன்; கொடியோரை எல்லாம்
வெல்வனும் இவன்; அடல் விண்டு என
ஒல்வானும் இவன்; உடனே ஒரு நீ
செல்வாய் " என ஏவுதல் செய்தனனால்"

வீடணனிடம் தன் தம்பி திருமாலுக்கு ஒப்பானவன் என்று சொன்னதோடு நிற்காமல் அதற்கும் மேற்சென்று, 'திருமாலும் உனக்கு இணையாக மாட்டானே தம்பி!' என்று இலக்குவனிடமே யுத்தகாண்டத்தின் பிரம்மாத்திரப்படலத்தில் இராமன் சொல்கிறான்.

தன்னை வணங்கி, இந்திரசித்துவுடன் போரிடப் புறப்படத் தயாராக நிற்கும் தம்பியை அணைத்து ஆசி கூறி அனுப்புகிறான் இராமன். "நீ ஒரு காரியத்தில் இறங்கி முனைந்து செயல்பட்டால், உனக்கு முன்னால் சிவனும் திருமாலும் வெற்று ஆசாமிகள் தானே" என்றல்லவோ தம்பியை உற்சாகப்படுத்தி, அவனைத் தட்டிக் கொடுத்து அனுப்புகிறான் இராமன். உலகத்தைக் காவல் செய்து காக்கின்ற கடவுளும் (காவல் இயற்றும் ஈசன் - திருமால்), உலகத்தில் அழித்தல் தொழிலைச் செய்துவரும் கடவுளும் ( இறுதியை இயற்றும் ஈசன் - சிவன்) இருவரும் உனக்கு இணையாக மாட்டார்கள் என்பது இராமனின் கணிப்பு.

முறுவல் வாள் முகத்தினன், முளரிக் கண்ணனும்,
அறிவ! நீ அடுவல்" என்று அமைதி ஆம் எனின்,
இறுதியும் காவலும் இயற்றும் ஈசரும்
வெறுவியர்' வேறு இனி விளைவது யாது என்றான்"

மிக அண்மை நிகழ்வான இவை இரண்டிலும் இராமன் சொன்னதை நினைவில் வைத்துக் கொண்டு, நாராயணாஸ்திரத்தை, அதே கணையை ஏவி முறியடிக்காமல், தானே திருமால் என்றெண்ணி அதை இலக்குவன் எதிர் கொண்டானோ?

உங்களின் முடிவுக்கே இதை விட்டு விடுகிறேன்.

# தமிழ்ப் பண்ணிசை மரபில் கம்பன்

திருமிகு. சண்முக செல்வ கணபதி
மேனாள் முதல்வர், அரசர் கல்லூரி,
திருவையாறு.

சோழ நாட்டின் வளமான காலத்தில் வாழ்ந்தவன் கம்பன். சோழார்களால் போற்றப்பெற்ற பண்ணிசைகளால் ஈர்க்கப் பெற்றவன். நாயன்மார்களும், ஆழ்வார்களும் தந்த அமுத இசை வெள்ளத்தை அள்ளி அள்ளிப் பருகியவன். ஆலயந்தோறும் வழிபடும் கலையாக இருந்த பண்ணிசை வளங்களையும் பண்ணிசையை வளப்படுத்தும் கருவி இசை முழக்கங்களிலும் ஈடுபாடு கொண்டவன். தான் படைத்த இராம காதையில் பளிச்சிடும் நிலையில் இவைகளைத் தந்துள்ளான். பண்டைய பண்ணிசை வளங்களைப் பாத்திரங்களின் வாயிலாகவும் இயற்கையின் இனிமையிலும் கண்டான். குழலோடும் யாழோடும் எழும்பிய பண்ணிசையும், முரசு, பறை, திமில் முதலான தோற்கருவிகளின் முழக்கமும் இவரின் பாடல்களை அலங்கரித்தன. பாடல் நடையை சந்தத்தை நெறிப்படுத்தின.

### கம்பன் காட்டும் பண்கள்

நிலத்தின் அடிப்படையில் அமையும் பண்கள் நான்காகும். முல்லை, குறிஞ்சி, மருதம், நெய்தல் என நில வகையால் அமையும் பண்கள் நான்காகும். கம்பன் சுந்தரகாண்டம் ஊர்தேடு படலம் பா.எண் 179இல் இராவணன் சிவபெருமானின் புகழைத்தன் அங்கையின் நரம்புகளால் நான்கு பெரும் பண்களையும் நயப்புறப் பாடினான் என்கிறார்.

"கூடி நான்குயர் வேலையும் கோக்க நின்
றாடி னான்புக ழங்கை நரம்பினால்
நாடி நாற்பெரும் பண்ணு நயப்புறப்
பாடி னான்புகழ் பாடுகின் றார்சிலர்"

இத்தகைய பண்கள் பாடலோடு அமைந்து பண்சுமந்த பாடலாகி விடுகின்றன. தேவாரம், திவ்விய பிரபந்தப் பாடல்கள் இவ்வகையின. பாடல் பண்ணோடு அமையும் நிலையைக் கம்பர் குறிப்பிடுகின்றார். பண்ணிமையடைந்தன பலகட் பொருநர் பாடல் குறிப்பிடுகிறார். இப்பாடல்கள் பண் சுமந்த பாடல்களாக அமைவதோடு தாளத்தோடு அமைந்த பாணியாக அமையும். இதனைக் கம்பன் பாணி தள்ளாத

பால முதுகப் பாடுவாரும் என்று குறிப்பிட்டுள்ளார். இப்பாடல்கள் மிடற்று வழியாகவும் நரம்புக் கருவியான யாழ், வீணை வழியாகவும் காற்றுக் கருவியான குழல் வழியாகவும் இசை இனிமையோடும் வரும் என்பதனைக் கம்பன்,

"வீணையும் குழலும் தத்தம் மிடறும் வேற்றுமையிற் றீர்ந்த
பாணிதள் ளாதபாட லமுதுகப்பாடு வாரும்"

என்கிறார். சிலப்பதிகார ஆய்ச்சியர் குரவை வாயிலாக இளங்கோ அடிகள் தொன்றுபடு இசை, ஆடல் முறைகளைக் காட்டியுள்ளார். இவற்றின் வாயிலாகப் பண்ணுப் பெயர்த்தல் என்கிற இசை மரபைத் தெளிவுபடுத்தியுள்ளார். இதன்மூலம் குரல் குரலாக அமையும் செம்பாலை, துத்தம் குரலாக அமையும் படுமலைப் பாலை, கைக்கிளைக் குரலாக அமையும் செவ்வழிப்பாலை, உழை குரலாக அமையும் அரும்பாலை, இளிகுரலாக அமையும் கோடிப்பாலை, விளரி குரலாக அமையும் விளரிப்பாலை, தாரம் குரலாக அமையும் மேற்செம்பாலை முறைகள் கண்டுணரப்பட்டுள்ளன. இவை தற்காலத்தில் வழங்கப்பெறும் இராகங்களாக முறையே அரிகாம்போதி நடபைரவி மத்திமதோடி, சங்கராபரணம், கரகரப்பிரியா, தோடி, கல்யாணி இராகங்களாக அமைந்துள. கம்பன் தொன்றுபடு இவ்விசை மரபின்படி நாற்பெரும் பண்களையும் அவற்றது திறங்களையும் போற்றியுள்ளான்.

**முல்லைப்பண்**

முல்லைப்பண் தொன்மையான பண். இது ஏழ்பெரும் பண்களுள் ஒன்றாகும். ஆயர்கள் குழல் மூலம் இசைத்த பண். இது திறப்பண்ணாக முல்லையந்தீம்பாணி உள்ளது. முல்லைப்பண் ஏழலகு கொண்ட பண்ணாகும். முல்லையந்தீம்பாணி ஐந்தலகு கொண்ட திறப்பண்ணாகும். முல்லைப் பண்ணைப் பாலையாழ் என்றும், செம்பாலை என்றும், அடிப்படைப் பாலை என்றும், குரல் பண் என்றும், தொல்லேழிசை என்றும், குழல் பண் என்றும் கூறுவர். இது குரல் குரலாக அமையும் பண்ணாகும். கூடுகொள் இன்னியம் குரல் குரலாக குரல் குரலாயது செம்பாலை, குரல்வளர் முல்லை இப்பண் பற்றிச் சங்க இலக்கியங்கள் குறிப்பிடுகின்றன. பாணர் முல்லைப் பாட முல்லை நல்யாழ்ப்பாண இதனைப் பாலைப்பாணி என்றும் கூறுவர். பாலைப்பண் பற்றிச் சிலம்பும் கம்பனின் இராமகாதையும் குறிப்பிடுகின்றது. பாற்பட நின்ற பாலைப் பண்மேல் கம்பர் இப்பாலை யாழ் குறித்துச் சூர்ப்பணகைச் சூழ்ச்சிப் படலத்தில் குறிப்பிட்டுள்ளார்.

சூர்ப்பணகையின் சூழ்ச்சியால் இராவணன் காமவெறியன் ஆனான். மயிலுடைச் சாயலாளை வஞ்சியா முன்னம் நீண்ட எயிலுடை இலங்கை நாதன் இதயமாம் சிறையில் வைத்தான். காமநோய் முதிர ஓர் குளிர்ச்சோலை புக்கான். அவன் சோலை யூடு செல்வதனைக் குறிப்பிடும் கம்பர்,

"பன்று கோடி தீபமாலை, பாலையாழ் பழித்தசொல்
பொன்னனார், எடுக்க அல்கு, ஓர் சோலைஊடு புக்கான்"

இவ்விடத்தில் பாலை யாழைக் குறிப்பிடுகிறார். பாலையாழ் என்பது செம்பாலை, முல்லைப்பண் இன்றைய அரிகாம்போதி இராகமாகும்.

**பாலை**

பாலை நிலத்தின் பெரும்பண் அரும்பாலையாகும். இது பாலையாழ், மருவின் பாலை, பஞ்சுரம், பழம் பஞ்சுரம் என்று அழைக்கப்பெறும். உழை குரலாயது அரும்பாலையாகும். இது சங்கராபரண இராகமாகும்.

இதன் திறம் கொன்றையந்தீங்குழல் என்று கூறப்படும். பாலை முல்லையும் குறிஞ்சியும் முறைமையில் திரிந்து பாலை என்று பெயர் பெறும். அரும்பாலை என்பது குறிஞ்சியையும் கொன்றையந் தீங்குழல் என்ற தொடர் முல்லையையும் குறித்துப் பின்பு பாலைக்குரியதாயிற்று. கொன்றையந்தீங்குழல் பாலை நிலத்துச் சிறுபண், பாலைப்பாணி இராகம் சுத்தசாவேரி தேவாரப் பெயர் பழந்தக்க இராகம்.

கொன்றையந் தீங்குழல் பற்றி சிலப்பதிகார ஆய்ச்சியர் குரவை குறிப்பிடுகின்றது. கம்பர் பாலகாண்டத்தில் கோவலர்கள் வேய்ங்குழல் கொண்டு முன்றலில் கொன்றைப் பண்ணை இசைக்க அதனைக் கேட்டு கன்றுகள் பண்ணிசை இனிமையில் உறங்கின என்கிறார்.

"கொன்றை வேய்ங்குழல் கோவலர் முன்றிலில்
கன்று உறங்கும்"

**குறிஞ்சிப் பண்**

குறிஞ்சிப் பெரும்பண் படுமலைப் பாலையாகும். துத்தம் குரலாக வரும் பண். தற்கால நடைபைரவியாகும். குறிஞ்சி பாடுமின் நறும்புகை எடுமின் என்று சிலம்பு குறிப்பிடுகின்றது. நறுங்கார் அடுக்கத்துள் குறிஞ்சிப்பாடி. இக்குறிஞ்சிப்பாடிப் பண்ணை யாம நல்யாழ் என்பர். யாமம் என்றும் கூறுவர். இது குறிஞ்சி நிலத்திற்குரிய சிறுபொழுதால் பெற்ற பெயராகும். குறிஞ்சி கூதிர், யாமம், குறிஞ்சிப் பெரும்பண்

படுமலைப் பாலையாகிய நடபைரவியாகும். குறிஞ்சிப் பாணி, செந்துருத்தியாகிய மத்திமமாவதியாகும். இக்குறிஞ்சிப் பண் பற்றிக் கம்பர் குறிப்பிட்டுள்ளார்.

"யாமயாழ்
யாம யாழ், மழலை யாழ்"

இக்குறிஞ்சிப் பண்ணைக் கொடிச்சியர் பாடினர். இதனைக் கம்பர் அயோத்தியா காண்டத்தில் குறிப்பிட்டுள்ளார். கொடிச்சியரின் குறிஞ் சிப் பண் கேட்டு அசுணமா பறவை வந்ததனைக் குறிப்பிடுகிறார்.

"நினைந்த போதிலும் அமிழ்து ஒக்கும் நேரிழை நிறைதேன்
வளைந்த வேங்கையில் கோங்கினில் வயின்தொறும் தொகுத்துக்
குனிந்த ஊசலில் கொடிச்சியர் எடுத்த இன்குறிஞ்சி
கனிந்த பாடல்கேட்டு அசுணமா வருவன காணாய்"

குறிஞ்சிப் பாணியைச் செந்நிறம், செந்துருத்தி என்றும் மத்தியமாவதி இராகம் என்றும் கூறுவர். இது குறிஞ்சி நிலத்துச் சிறுபண்ணாகும். இக்காலத்தில் உள்ள குறிஞ்சிப் பண் பதிகங்கள் அரிகாம்போதியில் பாடப்பெறுகின்றன.

**மருதப்பண்**

வயலும் வயல்சூழ்ந்த நிலம் மருதம். இங்கு இசைக்கப் பெற்ற பண் மருதப்பண். ஏழ்பெரும் பாலைகளுள் இது கோடிப் பாலையாகும். இளி குரலாயது கோடிப்பாலையாகும். இன்றைய நிலையில் கரகரப்பி-ரியா இராகமாகும். பஞ்சம சுரப்பண் என்பர். காலைப்பொழுதிற்குரிய பண். இப்பண் குறித்துச் சங்க இலக்கியங்கள் குறிப்பிட்டுள்ளன.

"மருதம் பண்ணிய கருங்கோட்டுச் சீறியாழ்
யாயோர் மருதம் பண்ண
புலர்ந்தது விரிவிடியல் எய்த"

இது திணை மயக்கத்தில் பாடப்பெறும். குறிஞ்சி நிலத்துக் கானவர் மருதம் பாடியதனைப் பொருநர் ஆற்றுப்படை குறிப்பிடுகின்றது. கானவர் மருதம் பாட இதனைப் பஞ்சமப் பண்ணாகிய மருதப் பண்ணைக் கம்பர் குறிப்பிட்டுள்ளார். கம்பர் யுத்த காண்டத்தில் பஞ் சமம் சிவனும் இன்னிசை பாட என்று குறிப்பிட்டுள்ளார்.

மருதப்பண் கோடிப்பாலையாகிய கரகரப்பிரியா இராகமாகும். இதன் திறப்பண் மருதயாழ்த் திறம் காமரம். சிலர் சுத்ததன்யாசி

என்கின்றனர். காமரம் என்பது சீகாமரம். இன்றைய நிலையில் சீகாமரப்பண் பதிகங்களை நாதநாமக்கிரியா இராகத்தில் பாடி வருகின்றனர்.

**மருதப்பாணி – காமரம்**

காமரப்பண்ணை ஆம்பல் என்றும் ஆம்பலந் தீங்குழல் என்றும் கூறுவர். இதனை மருதப்பாணி என்பர். மருதப்பாணியைச் சுத்த தன்யாசி என்பர். காமரப்பண் வண்டின் ரீங்காரம் போல் இருக்கும்.

"காரடைந்த சோலை சூழ்ந்த காமரம் வண்டிசைப்ப
ஏம இன் துணை தழீஇ இறகு உளர்ந்து
காமரு தும்பி காமரம் செய்யும்
தண்பனை தழீஇய தளாஇருக்கை"

கல்வெட்டுகளில் காமரப்பண் பாடியவர்கள் பற்றிய குறிப்புகள் உள.

திருமுறையில் சீகாமரப் பண்ணுக்குரியனவாக

2 ஆம் திருமுறை 40-53 பதிகங்கள்
4 ஆம் திருமுறை 19-20 பதிகங்கள்
7 ஆம் திருமுறை 86 - 89 பதிகங்கள்

கம்பர் காமரப் பண் பற்றிக் குறிப்பிட்டுள்ளார்.

"காமரம் பருத்த பாடல்கள் எனக்கனிந்த செஞ்சொல்
காமரம் முரலும் பாடல்கள் எனக் கனிந்த இன்சொல்"

அனுமன் சீதையைத் தேடச் சென்றவன் இலங்கையில் மண்டோதரியைக் கண்டான். மண்டோதரிக்கு அரம்பை, மேனகை, திலோத்தமை முதலான தேவ கன்னியர்கள் பணிவிடை செய்து கொண்டு இருந்தனர். கரும்புக்கு இனிய சுவையைக்கற்றுக் கொடுத்த சொற்களையுடைய மாதர்கள் காமரம் என்னும் பண் கனிந்து பொழிகின்ற நரம்புகளிலிருந்து இனிய கீதத்தின் இனிமையுடன் பாடினர் என்று கம்பர் காமரப் பண்ணின் இனிமையைப் பாடியுள்ளார்.

"கரும்பை யின்சுவை கற்பித்த சொல்லியர் காமரங் கனிகின்ற
நரம்பி னின்னிசை செவிபுக நாசியிற் கற்பக விரை நாற"

**நெய்தல் பண்**

நெய்தல் நிலத்திற்குரிய பண்ணை நெய்தல் பண் என்றும் விளரிப்பண் என்றும் கூறுவர். இது இரங்கல் சுவைப்பண். நெய்தல்

நிலத்துப்பண் செவ்வழியாகும். சிறுமணி விளரி ஆர்ப்ப நுழையர் விளரி நொடி தரும் தீம்பாலை விளரிப் பண்ணுக்குரிய இராகம் தோடியாகும். செவ்வழிப்பாலை இருமத்திமம் பெற்ற தோடியாகும். சரிகமதபநி செவ்வழி நெய்தலந் தீம்பாணியாக இந்தளம் அமைந்துள்ளது. குரல் முதல் கிளைமுறை தொடுக்க இப்பண் கிடைக்கும்.

"சரிரிககம" என்று இந்தளப் பண்ணை மாயாமாளவ கௌளையில் பாடுகின்றார். இவ்விளரிப் பண் இனிமையைக் கம்பர் பாடியுள்ளார். நெய்தலுக்குரிய விளரிப்பண் பற்றிக் கம்பர் குறிப்பிட்டுள்ளார்.

"விளரி நிரம்பப் பாடலொடு ஆடினார் வீதிகள் நெருங்க
விளரிச் சொல்லிய கோதையால்
விளரி நல்யாழ்
தும்பி காலைச் செவ்வழி முரல்வ"

நெய்தல் நிலத்து நுளைச்சியர் செவ்வழி இசைப்பதனையும் குறிப்பிட்டுள்ளார்.

"புன் தலைப்புனம் காப்புடைப் பொங்கரில்
சென்று இசைக்கும் - நுளைச்சியர் செவ்வழி"

**கருவி இசை**

கம்பர் நாற்பெரும் பண்களையும் அவற்றின் திறப் பண்களைப் பற்றிக் குறிப்பிட்டதோடு இசைக்கருவிகளின் இசை இன்பத்தையும் குறிப்பிட்டுள்ளார். கம்பர் மகரயாழ் பற்றிக் குறிப்பிடுகின்றார். கம்பர் காலத்தில் இத்தகைய யாழ் பழக்கத்தில் இருந்துளது.

"இறங்குவ மகரயாழ் எடுத்த இன்னிசை
நிறங்கிளர் பாடலான் நிமிர்வ"

யாழிசையும் மிடற்றிசையும் இணைந்து எழுந்துள்ள திறனைக் குறிப்பிடுகிறார். யாழிசை எங்கும் ஒலித்த நிலையையும் குறிப்பிட்டுள்ளார்.

"மழலை யாழிசை யோடு மலிந்ததுவே"

மழலை யாழ் என்று இனிமை பற்றிக் குறிப்பிடுகிறார். குழலினிது யாழினிது என்ப, மழலைச்சொல் கேளாதவர் என்கிற குறளின் கருத்தை யொட்டியும் கம்பர் பாடியுள்ளார்.

"யாழ்க்கும் இன்குழற்கும் இன்பம்
அளித்தன இவையாம் என்று

கேட்குமென் மழலைச்சொல்
கிஞ்சுகம் இடந்த வாயாள்"

என்கிறார். யாழின் வளர்ச்சி நிலையில் அமைந்த வீணை இனிமையான கருவி என்றும் அதிலும் மகர வீணையின் இசை தேன் போன்று இனியது என்றும் குறிப்பிட்டுள்ளார்.

"நல்லியல் மகரவீணைத் தேனுக
மகர வீணையின் மந்தர கீதத்து மறைந்த
சகர வேலையின் ஆர்கலி"

மங்கல கீதம் பாடுகையில் பல்வேறு இசைக்கருவிகள் முழங்கிய திறனையும் குறிப்பிட்டுள்ளார்.

"மங்கல கீதம்பாட மறையவர் ஆசிகூற
சங்கினம் குமுற பாண்டில் தண்ணுமை துவைப்பு"

பல்வேறு இசைக்கருவிகள் இணைந்து முழங்கிய திறனையும் கம்பர் குறிப்பிட்டுள்ளார். 23 தாள இசைக்கருவிகள் சேர்ந்து முழங்கிய நிலையைப் பின்வரும் பாடலால் அறிகிறோம்.

"கும்பிகை திமிலை செண்டை
குறடுமாம் பேரி கொட்டி
பம்பை தார் முரசம் சங்கம்
பாண்டில் போர்ப் பணவம் தூரி
கம்பலி உறுமை தக்கை
கரடிகை துடிவேய் கண்டை
அம்பலி கனுவை ஊமை
சகடையோ டார்த்த வன்றே"

இவ்வாறு கம்பர் இராமகாதையில் பண்டைய தமிழ்ப் பண்ணிசையையும், அவற்றது பாலை முறைகளையும், திறங்களையும், நானிலப் பண்களையும், இசைக்கருவிகள் இன்பத்தையும் தாளக்கருவிகளின் முழக்கங்களையும் தந்துள்ளார்.

# கம்பனின் இசைமுழக்கம்

முனைவர் இரா. வசந்தமாலை
தமிழ்த்துறை உதவிப் பேராசிரியர், பெரியார் பல்கலைக்கழகம்,
சேலம்.

## முன்னுரை

"ஆய கலைகள் அறுபத்து நான்கினையும்
ஏய உணர்விக்கும் என்னம்மை தூய
உருப்பளிங்கு போல்வாள் என்உள்ளத் தினுள்ளே
இருப்பளிங்கு வாரா(து) இடர்"

இது, கவிச்சக்கரவர்த்தி கம்பனின் சரசுவதிஅந்தாதியின் முதற்பாடல். கம்பனின் கலைஉணர்வைப் புலப்படுத்தும் பாடலும் இதுதான். கம்பனை ஆய்ந்தோருக்கு அவர்தம் இசைநுட்பங்கள் புலனாகும். விருத்தப்பாக்களில் கம்பன் பாடிய சந்தவிருத்தங்கள் பல; பண்வகைகள் பல; தாளவகைகள் பல; இசைக்கருவிகள் பல; இராமாயணக் கவிதைகளுக்குள் காணலாகும் இசைக்கருவிகள் குறித்து எடுத்தியம்புதலே இக்கட்டுரை.

## கம்பர் காட்டும் இசைக்கருவிகள்

தமிழர்கள் இசையை இசைப்பதற்கும், செறிவூட்டவும் பல்வகைத்துணைக் கருவிகளைப் பயன்படுத்திக்கொண்டனர். இக்கருவிகளைத் தோற்கருவி, துளைக்கருவி, நரம்புக்கருவி, கஞ்சக் கருவி என நான்காகவும், மிடற்றுக் கருவியையும் சேர்க்க ஐந்து எனவும் வகைப்படுத்திக் கொண்டனர். பழந்தமிழரின் இசைக்கருவிகள் குறித்த செய்திகளைச் சிலம்பின் உரையும், பஞ்சமரபின் உரைவிளக்கமும் தெளிவுபடுத்தியுள்ளன. கம்பர் காவியத்தில் காணலாகும் இசைக் கருவிகளை 1) தோற்கருவிகள் 2) துளைக்கருவிகள் 3) நரம்புக் கருவிகள் 4) தாளக்கருவிகள் எனப்பிரித்துக் காணலாம்.

### 1. தோற்கருவிகள்

தோலினால் போர்த்தப்பட்டு வடிவமைக்கப்பட்ட கருவிகள் 'தோற்கருவிகள்' என்றழைக்கப்பட்டன. இசைக்கு மட்டுமின்றிச் செய்தியை அறிவிக்கவும், போர்ப்பறைகளாகவும் பயன்படுத்தப்பட்டுள்ளன. நாட்டுப்புற இசையிலும் இவை முக்கியத்துவம் பெற்றுள்ளன. இத்தகு தோற்கருவிகள்,

அ) கையால் முழக்கப்படுபவை (மிருதங்கம்)

ஆ) குச்சிகளால் தாக்கி முழக்கப்படுபவை (டமாரம்)

இ) கை, குச்சி கொண்டு முழக்கப்படுபவை (தவில்)

ஈ) சுழற்றி முழக்கப்படுபவை (உடுக்கை)

உ) ஒருபுறம் அடித்தும் மறுபுறம் குச்சியால் உராய்ந்தும் முழக்கப்படுபவை (பம்பை)

எனப் பாகுபடுத்தலாம். கம்பரால் போர்க்காரணம் பற்றியே இத்தகு இசைக்கருவிகள் பல விளக்கப்பட்டுள்ளன என்பது தெளிவு. கம்பரின் ஒருபாடல்,

"கும்பிகை, திமிலை, செண்டை, குறடு, மாப்பேரி, கொட்டி
பம்பை, தார்முரசம், சங்கம், பாண்டில், போர்ப்பணவம், தூரி,
கம்பலி, உறுமை, தக்கை, கரடிகை, துடி, வேய், கண்டை,
அம்பலி, கணுவை, ஊமை, சகடையோடு ஆர்த்த அன்றே"

(பா.8445)

என்றமையும். இப்பாடலில் 23 வகையான இசைக்கருவிகள் குறித்து இயம்பியுள்ளார். இதில் இடம்பெறும் சங்கம், வேய் (துளைக்கருவி), பாண்டில் (தாளக்கருவி), இவை தவிர்த்த ஏனைய கருவிகள் அனைத்தும் தோற்கருவிகள். இதன்வழிக் கம்பருக்கு முன்பும், கம்பர் காலத்திலும் இக்கருவிகள் பயன்படுத்தப்பட்டுள்ளமை விளங்கும்.

'கும்பிகை' என்பது தோற்கருவியில் ஒருவகையாகும். 'திமிலை' என்பது ஒருமுகமுழவாகும். திமில் - பேரொலி; திமிலம் - பேரொலி என்ற பொருள்படுவதால் பேரொலிகருதியே திமிலை என்றழைக்கப்பட்டுள்ளது எனலாம். 'செண்டை' என்பது குறித்து ஆர்.ஆளவந்தார் கூறுகையில், 'செண்டை என்பது கதகளி நாட்டியத்தில் வாசிக்கப்படும் 'செண்டா' எனும் தோற்கருவியோடு ஒப்புமையுடையது என்றும், கூம்புவடிவமானது; இரண்டடி நீளமுள்ளது; இருமுகங்களும் தோலால் போர்த்தப்பட்டது' (தமிழர் தோற்கருவிகள், ப.58) என்கிறார். 'குறடு' எனும் கருவியும் இக்கருவியை ஒத்தது எனலாம். பெரிய தோற்கருவியைப் பேரி என்றும் பேரிகை என்றும் அழைத்துள்ளனர். இதனைக் கம்பர் மேற்சுட்டிய பாடலில் 'மாபேரி' என்கிறார்.

'பேரிகை பொங்கின' (பா.1200) 'குமுறுபேரி' (பா.4535)

'கொட்டும் பேரி' (பா.1431) 'பேரிகலித்தன' (பா.8326)

என்று பேரிகை குறித்துக் குறிப்பிட்டுள்ளார். 'கொட்டி' எனும் சொல் 'கொடுகொட்டி' எனும் ஒருவகைக் கொட்டுமுழக்கைக் குறிப்பிடும்.

கலித்தொகையில் (1:5-7) கடவுள் வாழ்த்துப் பாடலிலேயே இச்சொல் பயின்று வந்துள்ளது. இப்பாடலில் கொடுகொட்டி, பாண்டரங்கம், காபாலம் என்பது சிவனுக்குரிய மூவகை ஆடல் குறித்துக் கூறுமிடத்துக் 'கொடுகொட்டி' ஆடல் வகையில் ஒன்று என்பதும் விளங்கும். கலித்தொகை உரைவிளக்கத்தில் நச்சினார்க்கினியரும், சிலம்பின் உரை விளக்கத்தில் (6:39-43) அடியார்க்குநல்லாரும் இது குறித்துக் குறிப்பிட்டுள்ளனர். 'பம்பை' என்பது நீள் உருளை வடிவமுள்ள ஒரு தோல் கருவியாகும். இதனை, 'பம்பை பம்பு படை-யினன்' (பா.1955) 'பம்பை பம்பின' (பா.1554) என்றும் கூறுவார் கம்பர். முரசு-முரசம் என்று கூறப்படும் தோற்கருவியை, 'இது மிகப்பெரிய தோற்கருவி; போரில் பயன்படுத்தப்பட்டது; அரசர்களுக்குரியது; தானைகளை நடத்தப்பயன்படுத்தப்பட்டது; பகைவர்களின் காவல் மரத்தை வெட்டி வந்து செய்யப்பட்டது' என்பார் வீ.ப.கா.சுந்தரம். (தமிழிசைக் கலைக்களஞ்சியம்- ப.48). இதனை,

'வள்வார் முரசம்' (பா.165) 'ஆனைமேல் மணமுரசு' (பா.738)

'அதிர்ந்து எழு முரசு' (பா.249) 'முரசுஉமிழ் ஓதை' (பா.2118)

'இடிகுரலின் முரசு' (பா.635) 'எற்றிய முரசு ஒலி' (பா.3650)

என்று குறித்துள்ளார் கம்பர். மேலும் 'பணவம்', 'தூரி', 'கம்பலி' குறித்துக் குறிப்பிட்டாலும் (பா.8445) இக்கருவிகள் குறித்த விரிவான செய்தியை இசைநூல்கள் குறிப்பிடவில்லை. 'தூரியக் குரலின்' (பா.2931), 'பெட்கும் தூரியம்' (பா.6871) என்பதற்குப் பொருள் தருமிடத்து 'வாத்தியம்' என்பதாக மட்டுமே விளக்கப்படுகின்றது. 'உறுமை' எனும் தோற்கருவி 'உறுமி' என்றே குறிக்கப்படுகின்றது. 'தக்கை' என்பது 'அகப்புறமுழவு மூன்றனுள் ஒன்றாகிய ஒருவகைப்பறை' (மேற்கோள், ஆர்.ஆளவந்தார், தமிழர் தோற்கருவிகள், ப.59) என்கிறது பிங்கலம். மிகத் தாழ்ந்து ஒலிக்கும் மென்மைக் கருவி என்றும் கூறுவர். 'கரடிகை' என்று கம்பரால் சுட்டப்பெறும் இக்கருவி அகமுழவு வகையைச் சார்ந்ததாகும். கரடி கத்தினாற் போலும் ஓசையையுடைத்தாதலாற் 'கரடிகை' என்று பெயராயிற்று (சிலம்பு, 3:27 உரை) என்பார் அடியார்க்குநல்லார். 'துடி' என்பது இருமுகத் தோற்கருவியாகும். 'மறங்கடைக் கூட்டிய துடிநிலை' (பொருள்.செய்.62) என்கிறது தொல்காப்பியம். துடியை உடுக்கை எனும் பறைவகை என்று கூறுவதும் உண்டு. துடி என்பதைப் பதினொரு ஆடல் வகையுள் ஒன்று என்றும் பகைவரை அழித்தபின் முருகன் ஆடிய கூத்து, 'துடிக்கூத்து' என்றும் தமிழ் இலக்கியங்கள் பல பகரும்.

போர்க்களத்தே மறவரது வீரம் பெருகத் துடி கொட்டுவதைக் கூறும் புறத்துறை 'துடிநிலை' என்றழைக்கப்படுகிறது. இத்தகு துடியினை,

'பொலந்துடி மருங்குலாய்' (பா.5100) 'துடி புக்கா இடைத்திருமகள்' (பா.824)

என்கிறார் கம்பர். 'கண்டை' என்பது 'கண்டிகை' என்று அழைக்கப்பட்டுள்ளது. ஆனால், கம்பர் காவியத்தில் கண்டிகை எனும் பெயர் எங்கும் சுட்டப்பெறவில்லை. 'கண்டை ஆயிரகோடியின்' (பா.9662) என்றே கம்பர் கண்டை எனும் தோற்கருவி குறித்துக் குறிப்பிட்டுள்ளார். 'அம்பலி', 'கணுவை' என்பதும் ஒருவகை தோற்கருவி என்ற நிலையில் மட்டுமே உரையாசிரியர்களால் சுட்டப்பட்டுள்ளனவே தவிர, இக்கருவிகள் குறித்த குறிப்புகள் இசைநூல்களில் தென்படவில்லை. 'ஊமை' என்பதை 'சுருதிசேராமல் மந்தமாக ஒலிக்கும் ஒருவகைவாத்தியம்' (தமிழிசைக் கலைக்களஞ்சியம்-ஐ. ப.273) என்கிறார் வீ.ப.கா.சுந்தரம். நடப்பு வழக்கிலே கஞ்சிராவை ஊமை வாத்தியம் என்பதும் இங்கு ஒப்புநோக்கத்தக்கது. கம்பர்கூறும் 'சகடை' என்பது போர்க் காலத்துத் தோற்கருவியைச் சுட்டும். முரசடிப்போனைச் 'சகடைகொட்டி' (277) என்றழைப்பதும் உண்டு.

கம்பர் மேற்சுட்டிய தோற்கருவிகளோடு பலபாடல்களில் ஆகுளி, ஆனகம், கடுவை, குடம், சச்சரி, சில்லரி, தண்ணுமை, துத்தரி, படகம், பணை, பறை, முருடு, முழவம் - முழவு - முழா போன்ற தோற்கருவிகள் குறித்தும் குறிப்பிட்டுள்ளார்.

'பேரி, அங்கண்முருகு, ஆகுளி' (பா.6871) 'போர்த்த சங்கப் படகம்' (பா.7115) 'ஆனகம் முரசம் சங்கம் முருட்டொடும்' (பா.8821) 'தார்ப் பெரும் பணை' (பா.4161) 'வெங்குரல் திமிலையோடு கடுவையின்' (பா.5730) 'தாக்குறும் பறை' (பா.88) 'தென்நகு குடம்' (பா.5020) 'ஆங்கண் முருடு' (பா.6871) 'சங்கொடு தாரைகள் சச்சரி சின்னம்' (பா.5741) 'வயிரியர் முழவம்' (பா.462) 'சில்லரி பாண்டில் தழுவிய' (பா.5156) 'மண்ணும் முழவு' (பா.886) 'தண்ணுமை வார்ஒலி நீத்தன' (பா.1808) 'மோதுகின்றில பேரி, முழா (பா.2124) 'கொம்பு துத்தரி கோடு' (பா.1955)

போன்ற கம்பன் வரிகளைச் சான்றுகளாகச் சுட்டலாம்.

**2. துளைக்கருவிகள்**

கம்பன் பாடலில் சங்கு, குழல், கொம்பு, சின்னம், தாரை, சிலி, காளம் எனும் துளைக் கருவிகள் பற்றிய குறிப்புகளும் காணப்படுகின்றன.

சங்கம் - சங்கு - வளை - வலம்புரி - கோடு சங்கு எனும் துளைக் கருவி இயற்கை கொடுத்த ஆதி இசைக்கருவிகளுள் ஒன்று. இத்தகு சங்கைப் பாணர்கள் தூக்கிச் செல்லும் கருவிப் பையில் தூக்கணாங்குருவிக் கூடுபோல் காட்சியளித்ததாகப் புறநானூறு (பா.225) குறிப்பிட்டுள்ளது. இக்கருவியைச் சங்கம், வளை, வலம்புரி, கோடு என்று கம்பர் பதிவு செய்துள்ளார். 'வெண்சங்கம் ஆர்ப்புற' (பா.288) 'வலம்புரி முழங்கும் ஓதை' (பா.809) 'முரல் சங்கு' (பா.827) 'கோடு அலம்பின' (பா.7033) 'வளை ஒலி' (பா.10289)

**குழல் – வேய் – வங்கியம்**

சங்கத் தமிழரின் இசைக் கருவிகளுள் ஒன்று குழலாகும். மூங்கிலில் வண்டு செய்த துளையில் காற்று சென்றுஊத, அதைக்கண்ட முல்லை நிலத்தார் குழலைத் தோற்றுவித்தனர் என்று குழலின் தோற்றத்தை அகநானூறு (பா.82) விளக்கியுள்ளது. இக்கருவி பற்றி,

'கூறுபாடலும் குழலின் பாடலும்' (பா.87)

'கொன்றை வேய்ங்குழல்' (பா.65)

'வங்கியம் பல தேன்றிளம்பின' (பா.1554)

என்பார் கம்பர்.

**கொம்பு – வயிர்**

கொம்பு என்பது ஊதுகொம்பையும், வயிர் என்பது வயிரம் கூறிய மரத்தால் செய்யப்பட்ட ஒருவகை ஊதுகொம்பையும் குவிக்கும். வயிர் ஊதிய கூத்தர்கள் 'வயிரியர்' என்றழைக்கப்பட்டுள்ளனர். இதற்கு,

'சங்கு இயம்பின; கொம்பு அலம்பின' (பா.1554)

'பால்வளை, வயிர்கள் ஆர்ப்ப' (பா.702)

போன்ற வரிகளைச் சான்றுகளாகக் காட்டலாம். மேலும், 'சின்னம்' எனும் துளைக்கருவியை,

'சங்கு பேரியும், தழுவு சின்னமும்' (பா.2228)

'தீ எழு பொன்னின் சின்னம் மேவி' (பா.5734)

எனும் கம்பன் கவிதை வரிகள் புலப்படுத்துகின்றன. இறப்பு நிகழ்வின்கண் இக்கருவிகள் ஊதப்பட்டிருப்பதையும், நெருப்பில் காய்ச்சி எழுப்பிய பொன்னால் ஆகியது இவ்வூதுகொம்பு என்பதும் இதன் உரைவிளக்கத்தால் தெளிவுபடும்.

தாரை : 'தாரை பேரிகை பொங்கின' (பா.1200)

சிலி : '............. வரிகண்சிலிப் பேர்ஒலி' (பா.8447)

காளம் : '................ தாளமும் காளத்தோடு' (பா.808)

காளம் - எக்காளம். இது நீண்ட ஊதுகொம்பாகும். இறைவன் உலா வருகையில் இசைக்கப்படும். காளம் என்பதைக் 'காகளம்', 'எக்காளம்' என்பதும் உண்டு.

### 3. நரம்புக் கருவிகள்

கம்பன் காவியத்தில் கின்னரி (கின்னரம்) யாழ், வீணை குறித்த செய்திகள் காணலாகின்றன. கின்னரி என்பதை அடிப்படையாகக்கொண்டு 'கின்னரர்' தோன்றியிருக்க வேண்டும். கின்னரர் - இசைவாணர்கள். சீவகசிந்தாமணி (3068), பெருங்கதை (1:37:108) இது குறித்துக் குறிப்பிட்டுள்ளன. னிணைபோல் சிறியதாகவும், இரண்டு உலோகத் தந்திகளை உடையதாகவும் வீ.ப.கா.சுந்தரம் கின்னரியை வரையறுத்துள்ளார். (தமிழிசைக் கலைக்களஞ்சியம்- ப.129). இக்கருவியை,

'கிளைஒலி முழவு ஒலி கின்னரத்து ஒலி' (பா.153)

'கின்னரங்கள் இன் நரம்பு' (பா.4474)

என்று பாடியுள்ளார் கம்பர். மேலும், யாழைப் பற்றிக் கூறுகையில்,

'யாழின் இசைமது நுகர்வார்' (பா.1190)
'யாழ் இசை மொழி' (பா.4135)
'யாழ்மொழித் தெரிவை' (பா.6858)

என்கிறார். கம்பர் காலத்தில் யாழும் வீணையும் ஒன்றாகப் பயன்படுத்தப்பட்டுள்ளன. இத்தகு வீணைக்கு,

'வீணையில் பாடுகெனோ' (பா.992)
'நாரதன் வீணை இசைத்தேன்' (பா.2590)
'வீணை நரம்பொடுகமழும்' (பா.8448)

போன்ற வரிகளைச் சான்றுகளாகச் சுட்டலாம்.

### 4. தாளக் கருவிகள்

கம்பர் தாளம், பாண்டில் எனும் இருவேறு சொற்களைக் குறித்துள்ளார். 'தாளம்' என்பது கைத்தாளமாகவும் 'பாண்டில்' என்பது உலோகக் கருவி-யினை அல்லது கஞ்சக் கருவியினைச் சுட்டுவதாகவும் கொள்ளலாம்.

'தாளமும் காளத்தோடு' (பா.808) 'சில்லரிப் பாண்டில் தழுவிய' (பா.5156) 'கோடியர் தாளம் கொட்டல்' (பா.4180) 'நிறைபாண்டில்' (பா.5851) போன்ற வரிகளைச் சான்றுகளாகக் கொள்ளலாம்.

இதுகாறும் கூறியவற்றால்,

- கம்பன் கவிதைக்குள் காணலாகும் இசைக்கருவிகளைத் தோற்கருவிகள், துளைக்கருவிகள், நரம்புக்கருவிகள், தாளக்கருவிகள் என நான்காகப் பிரித்தறியலாம் என்பதும்,
- போர் நிகழ்வை, தானை மறவர் திறத்தை வெளிக்கொணர்வதற்கே இவ்விசைக்கருவிகள் கம்பரால் கையாளப்பட்டுள்ளன என்பதும்,
- இசைக் கருவிகள் பற்றிய பதிவுகள் கம்பரின் இசை நுட்ப உணர்வினைப் புலப்படுத்தியுள்ளன என்பதும் தெளிவாகின்றன.

# கம்பராமாயணத்தில் இசைக்குறிப்புகள் - ஓர் ஆய்வு

திருமிகு. எம்.ஏ.பாகீரதி
இசைத்துறை, இராணிமேரிக்கல்லூரி,
சென்னை.

கவிச்சக்ரவர்த்தி கம்பன் எழுதிய இராமாயணம் ஒரு உயர்வான காப்பியமாகும். இது திருமால் இராமராக அவதாரம் எடுத்து இராவணனை வென்ற கதையை அருமையாகச் செய்யுள்வடிவில் எடுத்தியம்பும் ஒரு அருந்தமிழ்ப்பொக்கிஷம். கம்பர் தனது இராமாயணத்தை ஆறு காண்டங்களாக வகுத்துப் பாடினார். அவற்றில் மொத்தம் 10600 பாடல்கள் உள்ளன. கம்பர் எழுதிய இராமாயணத்தில் ஏராளமான இசைக்குறிப்புகள் உள்ளன. அவற்றில் சிலவற்றை ஆய்வோம்.

**இசைக்குறிப்புகள் கம்பரும் ஏழிசையும்**

இராமர் திருஅவதாரம் எடுத்த நிகழ்ச்சியைப் பற்றி விளக்கும் போது கம்பர் ஏழிசை பற்றிக் குறிப்பிடுகின்றார். அது பின்வருமாறு:

"அமுத ஏழ் இசை பாடினர் கின்னரர்"

மேற்கண்ட குறிப்பில் கின்னரர்கள் ஏழிசை பாடியதைக் கம்பர் குறிப்பிடுகின்றார். கின்னரர்கள் என்போர் இதில் வல்லவர்கள். இவர்கள் இசைக்கும் கருவியாகக் கின்னரி என்பது இன்றளவும் வழக்கில் உள்ளது. மேலும் "ஏழிசை" என்பது ஏழு சுரங்களான குரல், துத்தம், கைக்கிளை, உழை, இழி, விளரி, தாரம் ஆகியவற்றைக் குறிக்கும்.

மற்றொரு இடத்தில் கம்பர், மகளிரின் கூந்தலில் வண்டுகள் இசைக்கும் இசையின் ஒலியானது ஏழிசையாகவே ஒலிக்கிறது என்று குறிப்பிடுகின்றார். அப்பாடல் பின்வருமாறு:

"வார்முகம் கெழுவுகொங் கையர்கருங் குழலின் வண்டு
ஏர்முழங்கு அரவம் ஏழ் இசை முழங்கி அரவமே
தேர்முழங்கு அரவம் - வெண்திரை முழங்கு அரவமே
கார்முழங்கு அரவம் - வெங்கரி முழங்கு அரவமே"

இவை மட்டுமன்றி "பஞ்சமம்" அல்லது 'இளி' என்ற சுரத்தினைப் பாடுவதைத் தனியாகவும் கம்பர் குறிப்பிட்டுள்ளார். அது எவ்வாறு தெரியுமா? நர்மதை நதியின் நீர்ப்பெருக்கில் அடித்துக்கொண்டுவரும் மலர்களில் இருக்கும் தேனைப் பருகுவதற்காக வரும் வண்டுகள்

ஏழுசுரங்களில் ஒன்றான, ஐந்தாவது சுரமாக விளங்கும், பஞ்சமத்தை இசைக்கின்றன என்று கூறுகிறார். பஞ்சமத்தைப் பற்றி அவர் கூறும் பகுதி பின்வருமாறு:

"அறுபதம் ஐந்தினைப் பாடுகின்றது"

ஏழிசை பற்றிய குறிப்புகள் ஒருசிலவற்றைப் பார்த்தோம். இனி ஏழிசையால் பிறக்கும் பண்களைப் பற்றிய கம்பரின் கூற்றுக்கள் சிலவற்றை ஆய்வோம்.

**கம்பரும் பண்களும்**

நரம்பின் அடைவால் நிறம் தோன்றும். அதனிலிருந்து பண்ணப்படுவது பண்ணாகும். கம்பராமாயணத்தில் காணப்படும் பண்பற்றிய செய்திகள் ஒருசிலவற்றைப் பார்ப்போம்.

சூர்ப்பணகை தனது அண்ணன் இராவணனிடம் அவனுக்கு விருப்பம் ஏற்படும் விதமாக சீதாபிராட்டியை வருணிக்கும் இடத்தில் பண் காமரம் பற்றிய குறிப்பு வருகிறது. அது பின்வருமாறு :

"காமரம் முரலும் பாடல்
கள்ளெனக் கனிந்த இன்சொல்"

சீதாப்பிராட்டியின் சொல்லானது கள்ளினைப்போல் மிகவும் இனிமையானது என்று கம்பர் வருணிக்கிறார். இங்கு பாடும் பாடலில் காமரப்பண் இடம் பெறுவதையும் கம்பர் குறிப்பிடுகின்றார். காமரப்பண் என்பது சீகாமரம் என்றும் ஓதுவார்களால் குறிப்பிடப்படுகின்றது. தற்கால வழக்கில் 'நாதநாமக்ரியா' என்ற இராகமாகச் சீகாமரப் பண் குறிப்பிடப்படுகின்றது. தற்காலத்தில் ஓதுவா மூர்த்திகள் திருஞானசம்பந்தப் பெருமான் இயற்றிய "மட்டிட்ட புன்னையங் கானல்" என்ற தேவாரத்தை சீகாமரப் பண்ணில் பாடுகின்றார்கள். காமரம் மட்டுமல்லாது பிறபண்களையும் கம்பர் குறிப்பிட்டுள்ளார். செவ்வழிப் பண்பற்றி கம்பர் கூறியுள்ளவற்றைப் பார்ப்போம்.

சோலையான் கிளையில் அமர்ந்து குயிலினங்கள் இசை பாட, வேல்விழி மாதர் ஆடுவது போல் மயிலும் ஆடின. அன்னப் பறவைகள் தூக்கத்திலிருந்து விழித்துக் கொள்ளும் வகையில் வண்டுகள் காலை வேளையில் செவ்வழிப் பண்ணைப் பாடுவதைக் கம்பர் குறிப்பிடுகின்றார். அப்பாடல் பின்வருமாறு:

"குயிலினம் வதுவை செய்யக்
கொம்பிடைக் குனிக்கும் மஞ்ஞை
அயில்விழி மகளிர் ஆடும்
அரங்கனுக்கு அழகு செய்யப்
பயில்சிறை யரசு அன்னம்
பன்மலர்ப் பள்ளி நின்றும்
துயில் எழத் தூம்பி காலைச்
செவ்வழி முரல்வ சோலை"

செவ்வழி என்பது நெய்தல் நிலத்திற்கு உரிய பண். செவ்வழிப் பண்ணில் பல தேவாரங்கள் இன்றும் பாடப்படுகின்றன.

காமரம், செவ்வழி ஆகிய பண்களை விளக்கிய கம்பர் விளரிப் பண்ணையும் கூறியுள்ளார்.

"விளரி சொல்லியர் கோதையால்"
பொருள் யாழும் விளரியும் பூவையும்
மருள நாளும் மடிலை வழங்குவாய்"

போன்ற சொற்றொடர்களால் இதனை நாம் அறியலாம்.

கம்பர் "நைவளம்" என்னும் பண்ணைப் பற்றிக் கூறியுள்ளவற்றைப் பார்ப்போம்.

சீதாப்பிராட்டி "நைவளம்" என்னும் பண்ணைப் போன்று இனிய சொல் பேசுபவர் என்று கம்பர் குறிப்பிடுகின்றார். அந்தச் சொற்றொடர் பின்வருமாறு:

"நைவள நவிற்றுமொழி நண்ணவர லோடும்"

"நைவளம்" என்ற பண் நட்டபாடைப் பண்ணோடு ஒத்ததாகும். இது தேவாரப்பாடல்களில் அதிகமாகக் காணப்படுகிறது. நட்டபாடைப் பண்ணில்தான் "தோடுடைய செவியன்" என்று துவங்கும் தமது முதல் தேவாரத்தைத் திருஞானசம்பந்தர் இயற்றினார். இது தற்காலத்தில் "கம்பீர நாட்டை" என்ற இராகத்தைக் குறிப்பதாகச் சென்னை தமிழிசைச் சங்கப் பண் ஆராய்ச்சிக் குழுவினர் ஆய்வு செய்து கூறியுள்ளனர்.

# கம்பனில் சிந்தும் சந்தநயம்

கவிஞர் மா. உலகநாதன்
முனைவர் பட்ட ஆய்வாளர், வரலாற்றுத்துறை, திரு.வி.க.அரசு கலைக் கல்லூரி, திருவாரூர்.

## முன்னுரை

"வெண்பாவிற் புகழேந்தி, பரணிக்கோர்செயங்கொண்டான், விருத்தமென்னும்
ஒண்பாவிற் குயர் கம்பன், கோவையுலா வளமடலுக்கு ஒட்டக் கூத்தன்,
கண்பாவு கலம்பகத்திற் கிரட்டையர்கள் வசைபாடக் காளமேகம்;
பண்பாகப் பகர் சந்தம் படிக்காசுஅலாதொருவர் பகரொணாதே!"

அமிழ்தினும் இனிய நம் மொழிக்கு கதியாவர் இருவர்; அவர்கள் கம்பரும் திருவள்ளுவரும் என்பார் 20-ஆம் நூற்றாண்டுத் தொடக்கத்தில் வாழ்ந்த செல்வகேசவராய முதலியார் அவர்கள். ஒப்பிலக்கண நூல் வல்லார் கால்டுவெல் பாதிரியார் அவர்கள், உலகினில் நாகரீகம் முற்ற அழிந்துவிட்டாலும் கம்பராமாயணமும் திருக்குறளும் இருந்தால்போதும் மீண்டும் அதனைப் புதுப்பித்து விடலாம் என்பார். வால்மீகி இராமாயணத்தின் சாரத்தைப் பிழிந்தெடுத்து தமிழ்ப்பண்பாடு, மொழி, காலம் முதலியவைகளுக்கு ஏற்றவாறும், கதை மாந்தர்களின் உணர்ச்சிகளுக்கு, பண்புகளுக்குத் தக்கவாறு கூட்டியும் குறைத்தும் மாற்றியும் பாடினார். இதையே, கவியரசு கண்ணதாசன் இப்படிப் பாடினார்,

"வான்மீகி சொன்ன வடமொழி நூல் ஒன்றினைத் தான்
தேன்பூசித் தருகின்றேன் செந்தமிழில் என்று சொன்னான்;
சீதைக்குத் தமிழ்நாட்டுச் சேலையினைக் கட்டி வைத்தான்;
ஸ்ரீராமன் ஒழுக்கத்தில் தென்னாட்டுப் பண்பு வைத்தான்"

கம்பன் கற்றறியாத விஞ்ஞான, மெய்ஞ்ஞான கலை, வேத, உபநிடதங்கள், உளவியல், அறிவியல், வானியல், நிலவியல், தாவரவியல், மனவியல், ஆடல், பாடல், சிற்ப ஓவியக்கலை எதுவுமே இல்லை என்பது அமரர் கம்பன் அடிப்பொடி அவர்கள் வழங்கிய பட்டயமாகும். தமிழ்நாட்டின்மீதும் தமிழ்ப்பண்பாடு, நாகரிகம் ஆகியவற்றின்மீதும் அவன் கொண்ட பற்று, நன்றியுணர்வு - பலவகைச் சந்தங்களையும் திறமையுடன், நுட்பத்துடன் இடத்திற்கேற்றவாறு அவன் பல்வகை விருத்தப் பாக்களில் வடித்துள்ள பாங்கு, நாடகபாவத்தில் கதையினை அமைத்துக்காட்டியுள்ள அரிய திறன் யாவும் அவனது கவிதைகளில் கோலோச்சுவதைக் காண்கிறோம்.

கம்பராமாயணம் கற்றோர் முதல், நாட்டில் வாழும் பலதரப்பட்ட மக்களுக்கு அன்பையும் அறநெறிகளையும், கடவுள் உணர்வையும், வாழ்வியல் முறைகளையும் உணர்த்தவல்லதாயுள்ளது. அறம் தலைநிறுத்தவே இராம காதையை கம்பர் பாடினார்.

"அறம் தலை நிறுத்தி, வேதம் அருள் சுரந்து அறைந்த நீதித்
திறம் தெரிந்து உலகம் பூணச் செந்நெறி செலுத்தித் தீயோர்
இறந்து உக நூறித் தக்கோர் இடர் துடைத்து ஏக, ஈண்டுப்
பிறந்தான் - தன் பொற்பாதம் ஏத்துவார் - பிறப்பறுப்பான்"

(கம்ப-சுந்தர-பிணி-5885)

கம்பனின் காப்பியத்திலே, சந்த நயங்கள் சிந்திக் கிடக்கின்றன. ஆற்றுவளம் பேசினாலும், நாட்டு வளம் நவின்றாலும் அவனது பாடல்களில் சந்தத்தையும் வருணனையையும் வாரிப் பெருக்கி வளப்படுத்தியுள்ளான்.

**குகனின் கோபாவேசம்**

ஒரு பாடலின் சிறப்பிற்குக் காரணமாக இருப்பது அதன் சந்த நயங்களே; ஓசை அமைப்பைக்கொண்டே பாத்திரத்தின் உணர்ச்சிக் கொந்தளிப்பை, பாடலாக்குகிறார்.

"ஆழ நெடுந்திரை ஆறுகடந்திவர் போவாரோ
வேழ நெடும்படை கண்டு விளங்கிடும் வல்லாயோ
தோழமையென்றவர் சொல்லிய சொல்லொடு சொல்லன்றோ
ஏழமை வேடன் இறந்திலன் என்றெனை ஏசாரோ!"

(கம்ப-அயோ-குகப்-2317)

பெரிய அலைகள் வீசும் இந்தக் கங்கையாற்றை கடந்த பிறகல்லவா இவர்கள் தெற்கே போகமுடியும்? யானைப்படை என்றால் நான் பயந்துவிடும் வில்லாழியா? தோழன் என்று இராமன் சொல்லிய சொல் ஓர் ஒப்புமை இல்லாத சொல்லல்லவா? அதற்காகவாவது நான் இறக்கவில்லை என்றால் பாசமற்ற, அன்பற்ற, அறியாமை கொண்ட வேடன் என்று என்னை ஏச மாட்டார்களா? இவ்வாறு பரதனைக் கண்ட குகனின் கோபத்தை கோபாவேச சந்தங்களோடு பதிவு செய்கிறார்.

பரதனின் படைகள் 60000 அக்குரோணி, புழுதிப்படலம் எழுப்பிக்கொண்டு வருவதைக் கண்ட குகனுக்கு கோபம் தலைக்கேறுகிறது. அந்த குமுறலைச் சந்த நயத்தோடு சொல்கிறார் கம்பர்,

"கட்டிய கரிகையன்; கடித்த வாயினன்;
வெட்டிய மொழியினன், விழிக்கும் தீயினன்;
கொட்டிய துடியினன்; குறிக்கும் கொம்பினான்;
கிட்டியது அமர் எனக் கிளரும் தோழினான்" (அயோ-குகப்-2316)

எப்பொழுது போர் வரும், நம் தோளுக்கும் வாளுக்கும் வேலை வரும் என்று காத்திருந்தவனைப் போல குகன், தன் சிற்றாடையை வரிந்து கட்டினான்; வெடுவெடுவெனப் பேசினான்; வாயைக் கடித்துச் சினத்தை வெளியிட்டான்; கண்கள் தீயை உமிழ்ந்தன; கையிலிருந்த துடியைக் (உடுக்கை) கொட்டி முழக்கினான்; வளைந்த கொம்பை ஊதித் தன் படைகளை வருவித்தான்; ஒரு போர் வந்தது என்று அவன் தோள்கள் கிளர்ந்தன. போர் முரசம் ஒலிக்கும் சந்த நயங்கள் இப்பாடலில் முரசு கொட்டுகின்றன.

**விதியும் தருமமும்**

"ஆழிசூழ் உலகம் எல்லாம் பரதனே ஆள நீ போய்த்
தாழிரும் சடைகள் தாங்கித் தாங்கரும் தவம் மேற்கொண்டு
பூழிவெங் கானம் நண்ணிப் புண்ணியத் துறைகள் ஆடி
ஏழிரண்டு ஆண்டில் வா என்று இயம்பினன் அரசன் என்றாள்"
(அயோ-சூழ்ச்சி-1601)

கடல் சூழ்ந்த உலகமெல்லாம் பரதனே ஆளப் போகிறான். நீ போய்ச் சடைகள் தரித்து கானகம் சென்று தவம் செய்து, புண்ணிய நதிகளிலிலெல்லாம் நீராடி 14 ஆண்டுகளுக்குப் பின் திரும்பி வா என்று அரசன் கூறினான் என்று கைகேயியின் கூற்றாக கம்பன் பேசுகிறான்.

இதுகுறித்து ஏதொன்றும் அறியாத கோசலை, முடிசூடி மகன் வருவான்; முத்த மழை பொழிந்து பெற்ற வயிறு பெருமை கொள்ள எண்ணியிருந்தாள், ஆனால்

"குழைக்கின்ற கவரி இன்றி கொற்றவெண் குடையும் இன்றி
இழைக்கின்ற விதிமுன் செல்லத் தருமம் பின் இரங்கி ஏக
மழைக்குன்றம் அனையான் மௌலி கவித்தனன் வரும் என்று என்று
தழைக்கின்ற உள்ளத்து அன்னாள் முன் தனியன் சென்றான்"
(அயோ-நகர்நீங்கு-1606)

செய்த தர்மம் எல்லாம் பின்னால் வருந்திச் செல்ல, முடி சூடி வருவான் என் பலவிதமான கற்பனைகளில் தழைத்த தாயின் முன் தனி ஒருவனாகச் சென்று நின்றான் இராமன். வந்த மகனை உற்று உற்றுப்

பார்க்கிறாள் கோசலை. தலையிலோ அரசர்க்குரிய மகுடம் இல்லை; மஞ்சனம் ஆட்டிய நீரால் கூட இவன் தலை நனையவில்லை, முடி சூட ஏதும் இடையூறு நேர்ந்துள்ளதோ? என்று ஐயுறுகிறாள்.

இங்கே, விதி முன் செல்லத் தருமம் பின் இரங்கி ஏக அன்னாள் முன் தனியன் சென்றான் என்ற கம்பனின் சொல்லாட்சியில் கொடி, படை, முரசு என வரவேற்க வேண்டியவனை வரம் எனும் பெயரில் விதி, தனி ஒருவனாக்கி விட்டது என்று சோகம் கப்பிய உணர்வுகளை ஒலிச்சந்தங்களாக கம்பன் அமைத்துள்ளான்.

**சூர்ப்பணகை**

கம்பன், சூர்ப்பணகை சூழ்ச்சிப் படலத்தை தனது குறிக்கோளுக்கு வாய்த்த நல்வாய்ப்பாகக் கவிச்சுவை சொட்டச் சொட்ட கையாளுகிறான். எடுத்த எடுப்பிலேயே சூர்ப்பணகை இராமன் முன் வந்து எதிர்ப்படுதலை ஒரு நாடக அரங்கினுள்ளே நுழையும் பாத்திரம் போன்று சித்தரித்துள்ளான்.

அரக்கியான சூர்ப்பணகை விகார வடிவத்துடன், வாய் நிறைய மாமிச உணவும் உடையவளாய் இராமன் முன் சென்றால், அவன் தன்னை ஏற்கமாட்டான் என்று எண்ணி, திருமகள் மந்திரத்தை ஓதித் திருமகள் போலவே ஓர் உருவை வானில் இருக்கும்போதே பெற்றாள்.

செம்பஞ்சுக் குழம்பு தீட்டிய தளிர் உடல்-துவளும்படியான தங்க நிறப் பாதம் - இனிய சொல் பேசும் மயில் போன்ற சாயல் - அழகிய தேர் ஒன்று வானிலிருந்து மின்னல் கொடி இறங்குவது போல் அந்த நஞ்சனைய வஞ்ச மகள் இறங்கினாளாம்.

> "பஞ்சியொளிர்; விஞ்சு குளிர் பல்லவம் அனுங்கச்
> செஞ்செவியக் கஞ்சநிமிர் சீறடியளாகி
> அஞ்சொலிள மஞ்ஞையென அன்னமென னின்னும்
> வஞ்சியென நஞ்சமென வஞ்சமகள் வந்தாள் (அயோ-சூர்ப்ப-2762)

சூர்ப்பணகையின் வருகையைக் கூறும் இப்பாடல் ஞ என்ற மெல்லொழுத்தோசையால் அமைந்துள்ளது. மென்மையும், நளினமும் உடைய பெண்ணொருத்தி நடந்தால் எப்படி ஓசை எழுமோ அதேபோல பாடலின் வரிகளை உச்சரிக்கும்போது இந்த உணர்வுகளுக்கு ஆட்படாதவர்களே இருக்க முடியாது. அப்படி ஒரு மென்மையான சந்தம் விரவிக்கிடக்கிறது.

**இராவணன் வதைப்படலம்**

முக்கோடி வாழ்நாளும் முயன்றுடைய பெருந்தவமும் பெற்ற இராவணன் பேராற்றலுடையவன்; மிகுந்த சினமுடையவன்; சிங்கம்

போன்ற வலிமையுடையவன்! செயல் தடக்கையுடையவன்; காம மயக்கமுடையவன்; அவன் மாண்டு கிடக்கிறான், எப்படி?

“தேர் நின்று கொடுநிலத்துச் சிரமுகம் கீழ்ப்
பட விழுந்தான் சிகரம் போல்வான்” (இராவணன் வதைப்-5901)

போல, அவன் மாண்டாலும் அவன் உயிர்; மட்டும் அடங்கவில்லை. மேற்சொன்ன அத்தனை பேராற்றலும், அவனது தீய பண்புகள் அனைத்தும் ஒருசேர அடங்கிவிட்டன. அதனாலேயே அவன் முகம் மும்மடங்கு பொலிவுற்றதாகச் சொல்கிறான் கம்பன்.

“வெம்மடங்கல் வெகுண்டனைய சினம் அடங்க
மனம் அடங்க, வினையம் னியத்
தெம்மடங்க பொருதடக்கைச் செயல் அடங்க
மயல் அடங்க, ஆற்றல் தேய
தம்மடங்கு முனிவரையும் தலை அடங்கா
நிலை அடங்கச் சாய்த்த நாழின்
மும்மடங்கு பொலிந்தன அம் முறை துறந்தான்
உயிர்; துறந்த முகங்கள் அம்மா!” (யுத்த- 9902)

இப்பாடலில் அடங்க, அடங்க என்ற சொல்ல திரும்பத் திரும்ப ஒலித்து அவனது தீய குணங்கள் அனைத்து அடங்கின; தீயன அகன்று விட்டதால் அவன் முகம் பொலிகிறது என்று கூறி ஓசை நயத்தால் உணர்ச்சியையும், பொருள் நுட்பத்தையும் இணைத்து தரும் பாங்கைப் பார்க்கிறோம்.

**யுத்த காண்டம்**

கும்பகர்ணனை போர்செய்ய அழைத்து வர ஏவலர்கள் நாலு பேர் சென்றனர்; எம தூதர்களைப் போல சென்ற அவர்கள் குன்றனைய தோளுடைய கும்பகர்ணன் இருக்குமிடம் அடைந்து, உறங்கும் கும்பகர்ணனை தலையிலும் காதிலும் உலக்கை கொண்டு மோதி அவன் துயிலைக் கலைத்தனர்.

“உறங்கு கின்ற கும்ப கன்ன! உங்கள் மாய வாழ்வு எலாம்;
இறங்கு கின்றது இன்று காண்; எழுந்தி ராய் எழுந்தி ராய்!
குறங்கு போல வில்பிடித்த கால தூதர் கையிலே,
உறங்கு வாய் உறங்கு வாய் இனிக் கிடந்து உறங்கு வாய்
(யுத்த- 7316)

உறங்குகின்ற கும்பகர்ணனை உங்களுடைய மாய வாழ்வெலாம் அழியப் போகிறது.

'இனி உங்களுக்கு அழிவு நிச்சயம். எழுந்திரு எழுந்திரு; காற்றைப்போல அம்பு விடும் எம தூதர்களின் கையில் கிடந்து இனி நீண்ட உறக்கம் கொள்ளப் போகிறாய். எனவே எழுந்திரு எழுந்திரு' என்று டக் டக் என்ற ஒலியுடன் உலக்கையால் நெல் குற்றும் ஓசையைப் போல சந்தம் கொண்டு இப்பாடல் அமைந்துள்ளது.

**அமுதக் கற்பனை**

கம்பனின் கற்பனைத் திறனுக்கு மிகச் சிறந்த எடுத்துக்காட்டு இரணியன் வதைப்படலம். இராவணனை விட மிகப் பெரிய தோற்றமுடையவன் இரணியன். அவன் நீராடுவதற்கு ஏழு கடல்களும் போதாதாம். அவன் கரண்டைக் கால் அளவு தான் அவை உள்ளனவாம். அவ்வாறாயின் அவன் உருவ வடிவத்தைக் கற்பனை செய்து பாருங்களேன்! கடல் நீரே போதாதென்றால் ஆற்று நீர் எவ்வாறு போதும்? மழைநீரில் குளிக்கலாம் என்றால் அவை குளிர்ச்சியில்லை என நினைக்கிறான். கடல் நீரோ உப்பு நீர்; அதில் எவ்வாறு குளிப்பது, அதனால் பேரண்டத்தில் ஓட்டை போட்டு அவ்வண்டத்தின் மேல் உள்ள நீரினால் நீராடுகிறான் என்கிறார் கம்பர். இதை அமுதக் கற்பனை என்கின்றனர்.

"ஆழம் காணுதற்கு அரியவாய் அகன்ற பேர்; ஆழி
ஏழும் தன் இரு தாள் அளவு கடந்து ஏறும்"

"வண்டல் தென்திரை ஆற்று நீர் சில என மருவான்
கொண்டல் கொண்ட நீர் குளிர்ப்பு இல என்று அவை குடையான்
பண்டைத் தென்திரைப் பரவை நீர் உவர் எனப்படியான்
அண்டத்தைப் பொதித்து, அப்புறத்து அப்பினால் ஆகும்" என்பார்

**முடிவுரை**

அறம் வெல்லும்; பாவம் தோற்கும் என்ற அடித்தளத்தின் மீது எழுப்பப்பட்ட சொல்லோவியம் கம்பராமாயணம். கம்பனின் பாத்திரங்கள் உயிர்ப்பும் துடிப்புமுள்ள மகோன்னதமானவை; அறிவுக்கு விருந்தாகவும், படித்துச் சுவைத்து இன்புறவும் அமைந்த இனிய காவியம். கவிநயம், அணிகலம், சந்தச் சிறப்பு, இலக்கியச் சுவை ததும்ப நம் உள்ளத்தை ஒளியுறுத்தி, உணர்வை உருகச் செய்து குணநலப் பண்புகளைச் செப்பனிட உதவும் வாழ்வியல் படைப்பாகும். மொத்தத்தில் கம்பராமாயணம் ஒரு நிறை அமுதக் குடம்.

## கம்பன் தந்த சந்தக்கலி விருத்தங்களில் தாள அமைதிகள்

முனைவர் செ.கற்பகம்
உதவிப்பேராசிரியர், இசைத்துறை, தமிழ்ப்பல்கலைக்கழகம்,
தஞ்சாவூர்.

### முன்னுரை

"பத்தாயிரம் கவிதை முத்தாக அள்ளித்தந்த
சத்தான கம்பனுக்கு ஈடு - இன்னும்
வித்தாக வில்லையென்று பாடு"

எனக் கவியரசு கண்ணதாசன் கூறுவதுபோல் கம்பன் சத்தான கவிதைகளைப் பத்தாயிரத்திற்கும்மேல் தந்துள்ளார். இவை சத்தான கவிதைகள் மட்டுமில்லாமல் சந்தக் கவிதைகளாகவும் உள்ளன. விருத்தம் என்னும் ஒண்பாவில் சந்தக் கவிதைகளைச் சிறப்புடன் தந்துள்ளார். இவற்றுள் ஆசிரிய விருத்தம், கலிவிருத்தம், வஞ் சிவிருத்தம் என்ற வகைகள் உள்ளன. கலி விருத்தப்பாக்கள் இசை வளமிக்க பாக்களாக உள்ளன. இப்பாக்களில் அமைந்துள்ள சந்தங்கள் தாள நுட்பங்கள் கொண்டவைகளாக அமைந்துள்ளன.

### கலிவிருத்தம்

நாற்சீர் நாலடி கொண்டதாக கலிவிருத்தம் அமையும்.

"அளவடி நான்கின கலிவிருத் தம்மே
நேரடி ஈரிரண்டாய்
விடின்அது வாகும் விருத்தம் திருத்தகு மெல்லியலே"

நாற்சீரடி நான்கு பெற்று பெரும்பாலும் ஓர் எதுகை பெற்று, கலிவிருத்தப்பாக்கள் அமையும். அளவொத்த சீருடன் வரும். இசைக்குரிய ஒன்றாம் காலம், இரண்டாம் காலம் என்கிற தாள அமைதிகளில் பாடுவதற்கு ஏற்றனவாக அமையும். கீர்த்தனையில் அமையும் சரணங்களைப் போல் உள்ளன.

### சந்தங்களும் தாள அமைதிகளும்

சந்தம் என்கிற வடசொல்லுக்கு இணையாக வண்ணம் என்கிற சொல் நிலவுகிறது. சந்தம் என்ற சொல் வழக்கில் பயன்படுத்தப்பட்டு வருகிறது. சந்த அமைப்பில் அமையும் பாக்களைச் சந்தப்பாக்கள் என்பர். இசைத்தமிழில் தென்னா தெனா என்று ஆளத்தி செய்யும் மரபுளது. இச்சொற்களின் திரிபுகளாக தன, தனன, தான, தானா போன்ற சொற்கள் உள. தேவாரப் பாடல்களில் இவ்வகைச்

சந்தங்கள் கட்டளைகள் என்று அழைக்கப் பெறுகின்றன. திருப்புகழ்ப் பாடல்கள் இவ்வகை சந்தப்பாக்களாக உள்ளன. இச்சந்தங்கள் தாள அடிப்படையில் இசை நூல்களில் கணக்கிடப்பெறுகின்றன. மும்மை (திஸ்ரம்) நான்மை (சதுரஸ்ரம்) ஐம்மை (கண்டம்) எழுமை (மிஸ்ரம்) ஒன்பான்மை (சங்கீர்ணம்) என்கிற தாள நிலைகளிலும் காணலாம். இவ்வகையில் அமையும் தாளங்களை ஐந்து ஜாதிகள், 35 தாளங்கள் என்று வகைப்படுத்துவர். மும்மை அளவு சந்தங்கள், நான்மை அளவு சந்தங்கள், ஐம்மை அளவு சந்தங்கள் என்கிற நிலையில் வகைப்படுத்துவர்.

**கம்பன் பாடிய கலிவிருத்தங்கள்**

இசைக்கு ஏற்ற பாடலாக அமையும் கலிப்பாவின் இனங்களில் கம்பன் கலித்துறை, கலிவிருத்தம் ஆகிய இரு நிலைகளில் பல பாடல்களைப் பாடியுள்ளார். இவற்றில் கலிவிருத்தத்தில் 5277 பாடல்களைப் பாடியுள்ளார்.

**யாப்பு அடிப்படையில் அமையும் கலிவிருத்தங்கள்**

கலிவிருத்த வகையில் ஏழு வகைகள் உள்ளன.

2275 பாடல்கள்- 1350 பாடல்கள்- 120 பாடல்கள்- 96 பாடல்கள்- 46 பாடல்கள்- 21 பாடல்கள்- 18 பாடல்கள்- ஆக 3926 பாடல்கள் பாடல்கள் உள.

**சந்தக் கலி விருத்தங்கள்**

சந்தக் கலிவிருத்தங்கள் 17 வகையில் 1351 பாடல்கள் உள. இவை துள்ளல் ஓசையுடன் கூடிய தாள அமைதிகளுக்கேற்ப அமைந்துள. இந்தச் சந்தக்கலி விருத்தங்களை 17 வகையாக கம்பன் பாடிய வண்ணங்கள் என்ற நூல் பிரித்துள்ளது. இப்பதினேழு வகைகளில் 1351 பாடல்கள் உள. அதிகமாக 344 பாடல்கள் கொண்ட வகையும் குறைவாக ஒரேயொரு பாடல் கொண்ட வகையும் அமைந்துள. இவ்வகையில் நான்கன்அலகு அடிப்படையில் 6 வகைகளும் 514 பாடல்களும் உள. ஐந்தன் அலகு அடிப்படையில் 3 வகைகளும் 110 பாடல்களும் உள. விரவு தாள அடிப்படையில் 8 வகைகளும் 727 பாடல்களும் உள.

**நன்மை தாளச் சந்தப் பாடல்கள்**

நான்கன் அலகினை நான்மை என்பர். இதனை வடநூலார் சதுஸ்ரம் என்பர். இவை பத்து விதமான சந்தங்களில் வரும்.

"தத்தா தனத்த தன்னா தானனா
தந்தா தனந்த தனதன தானா
தய்யா தனனா"

இவற்றைச் சதுச்சுரலகு வாய்பாடுகள் எனலாம். தாள எண்ணிக்கையில் ஒரு தட்டும் மூன்று விரல் எண்ணிக்கையும் கொண்ட 4 அலகுகளால் அமையும். இதனை நாலன் நடை என்றும் நான்மை என்றும் தாள நூலார் கூறுவர். தாளத்தில் அமையும் பொழுது,

"தகதின தகதின தகதின தகதோம்" எனவும்

தகதிமி தகதிமி தகதிமி தகதிமி எனவும் வரும் 4 மாத்திரை அடிப்படையில் இவை சற்று மாறியும் வரும் சந்த வாய்ப்பாட்டில்,

"தனதன தனதன தனதன தனதன"

எனவும் 4 மாத்திரை அடிப்படையில் வரும். இவற்றின் அடிப்படையில் கம்பன் தந்த நாலன் அலகு சந்தக்கலி விருத்தப்பாக்கள் ஆறுவகையில் 514 கலிவிருத்தப்பாக்கள் உள. வகை 309, 130, 46, 14, 11, 4 ஆகக் கூடுதல் 514.

"தனனா தனனா தனனா தனனா"

"கோதா வரியே குளிர்வாய் குழைவாய்
மாதா அணையாய் மனனே தெளிவாய்
ஓதா துணர்வார் உழைஓ டினைபோய்
நீதான் வினையேன் நிலைசொல் லலையோ"

இவை அனைத்தும் 4 மாத்திரைகள் கொண்ட சீர்களாகும். இவை நான்மை என்கிற சதுச்சுர அளவு கொண்ட தாள அமைதியில் உள. இவைபோல,

"தந்தன தந்தன தந்தன தன்னா"

"துன்னினர் துன்னினர் என்பது சொல்லார்
தானன தனதன தனதன தனனம்
கோதைகள் சொரிவன குளிர்இள நறவம்
தானம் தானன தானன தானா
மோதுற் றார்திரை வேலையில் மூழ்கான்"

"தனதன தனதன தனதன தனதன"

"இறுவன கொடியவை எரிவன இடையிடை

"தந்தன தானம் தந்தன தானம்"

"எண்ணின கோடிப் பல்படை யாவும்"

என்று தொடங்கும் பாடல்கள் ஆறு வகையில் நான்மை தாளச் சந்தப் பாடல்களாக அமைந்துள.

**ஐம்மை தாளச் சந்தப் பாடல்கள்**

ஐந்தன் அலகைத் தாள நூலில் கண்டம் என்பர். இது ஐந்து அலகுச் சந்தங்களாக அமையும் என முனைவர் இ.அங்கயற்கண்ணி குறிப்பிட்டுள்ளார்.

"தனத்தா தனதனா
தனதய்ய தனாதன
தனதனன தானதன"

தாள நடையில்,

"தகதகிட தகதகிட தகதகிட தகதகிட"

சந்தத்தில் தனதனன தனதனன தனதனன தனதனன என வரும் இவை பிற நிலைகளில் ஐந்தன் அலகில் வரும். தான தன என்றும் தனதான என்றும் பிறவாறும் வரும். முழக்கு நிலையில் ததிகிட தொம், தாங்கிட தொம், த தாங்கு தகதாங்கு தகிடதக எனவும் பிறவாறும்வரும்.

இந்நிலையில் கம்பன் தந்த சந்தக் கலிவிருத்தப் பாடலில் ஐந்தன் அலகில் மூன்று வகைகளும் 110 பாடல்களும் உள. 96, 12, 2 ஆக 110.

"தனதனம் தனதனம் தனதனம் தனதனாம்"

"முனைவரும் பிறருமேல் முடிவரும் பகலெலாம்
இனையர்வந் துறுவரென் றியறியவம் புரிகுவார்
வினையெனும் சிறைதுறந் துயர்பதம் விரவினார்
எனையரென் றுரைசெய்கே னிரவிதன் சிறுனே"

இது 5 மாத்திரை கொண்ட கண்ட நடையில் அமைந்துள்ளது இவைபோல்,

"தந்தம் தனனதன தந்தனம் தனனதன"

"அஞ்சனைக் கொருசிறுவ னஞ்சனக் கிரியனைய"

"தானனா தந்தனா தனதனன தானனா"

"ஆடினா னன்னமா யருமறைகள் பாடினான்"

என்று தொடங்கும் பாடல்கள். மூன்று வகையில் ஐம்மை தாளச் சந்தப் பாடல்கள் அமைந்துள.

**விரவுதாளச் சந்தப் பாடல்கள்**

விரவுதாளச் சந்த அடிப்படையில் கம்பன் தந்த சந்தக் கலிவிருத்தப் பாவகைகளில் 8 வகைகளும் 727 பாடல்களும் உள.

344, 213, 69, 47, 26 14, 13, 8, ஆக 727

**வகை**

"தந்ததன தந்ததன தந்ததன தனன"

"பஞ்சியொளிர் விஞ்சுகுளிர் பல்லவம னுங்க
செஞ்செவிய கஞ்சநிகர் சீறடிய ளாகி
அஞ்சொலிள மஞ்ஞையென அன்னமென மின்னும்
வஞ்சியென நஞ்சமென வஞ்சமகள் வந்தாள்"

இப்பாடலின் முதல் மூன்று சீர்கள் ஐந்து மாத்திரை கொண்டும், நான்காம் சீர் மூன்று மாத்திரை கொண்டும் அமைந்துள.

"தந்தான தந்தான தந்தான தனனா"

"வெய்யோனொளி தன்மேனியின் விரிசோதியின் மறையப்
பொய்யோவெனு மிடையாளொடு மிளையானொடும் போனான்
மையோமர கதமோமறி கடலோமழை முகிலோ
ஐயோவிவன் வடிவென்பதோ ரழியாவழ குடையான்"

இப்பாடலில் முதல் மூன்று சீர்கள் ஆறு மாத்திரைகள் கொண்டும் நான்காவது சீர் நான்கு மாத்திரைகள் கொண்டும் விரவுதாளச் சந்த வகையில் அமைந்துள்ளன.

"தந்தன தனதன்னா தனதன தனதன்னா"

"துன்புளது தெனினன்றோ சுகமுள ததுவன்றிப்
தந்த தந்ததன தந்ததன தந்ததனதாம்
பம்பு செக்கரெரி ஒக்குமயிர் பக்கமெரிய"

"தந்த தந்ததன தந்தன தானா"

"நஞ்சு மஞ்சும்விழி நாகியர் நாண"

"தனன தனனதன தனன தனனதன"

"மலையு மறிகடலும் வனமும் வறுநிலனு"

"தந்தத் தனந்ததன தந்ததன தந்தா"

"துண்டப் பிறைத்துணையெ னச்சுடரெ யிற்றாள்"

"தந்தன தனதாம் தந்தன தனதாம்"

"குஞ்சர மனையார் சிந்தைகொ ளிளையார்"

என இவ்வாறு 8 வகையில் விரவுதாளச் சந்தப் பாடல்கள் அமைந்துள.

கம்பன் தந்த கலி விருத்தப்பாக்கள் இராமகாதையிலுள்ள பாடல்களில் செம்பாகமாக அமைந்துள்ளன. 10368 பாடல்களில், 5277 பாடல்கள் கலிவிருத்த யாப்பின. இக்கலி விருத்த யாப்பில் சந்தமற்றவை. சந்தமுடையவை என இருநிலைகளில் அமைந்துள. சந்த மாற்றவையில் 3926 பாடல்களும் சந்தம் உடையவயாக 1351 பாடல்களும் அமைந்துள. முனைவர் திருமுருகன் குறிப்பிடுவதுபோல ஆசிரிய விருத்தம், கலித்துறை, கலிவிருத்தம், வஞ்சித்துறை, வஞ் சிவிருத்தம் நிலைகளை உடைய சந்தப்பாக்கள் 1826. இவற்றில் கலிவிருத்தம் மட்டும் 1351 இப்பாடல்களில் அமையும். சந்தங்கள் கதைப்போக்கின் வேறுபாட்டைத் தெளிவுபடுத்த துணைபுரிவதோடு இசைக்குரிய தாள அமைதிகளை வரையறுக்கவும் துணை நிற்கின்றன. நாலன் அலகு, ஐந்தன் அலகு, விரவு அலகு சந்தங்களோடு அமைந்துள. இசைப்பாடல்களாகவும் தாள வகைக்குரிய பாடல்களாகவும் இவை விளங்குகின்றன. சோழவளநாடு தந்த தாள நுட்பங்களையும் திருமுறைகளும் திவ்வியப் பிரபந்தங்களும் தந்த தாள அமைதியோடு மூடிய சந்தப்பாக்களைக் கேட்டுக் கேட்டுச் சுவைத்த கம்பன் புதிய நெறியில் தாள அமைதியோடு கூடிய சந்தப் பாக்களைப் படைத்துத் தந்துள்ளான். இவை பாடிப்பாடி மகிழத்தக்கவை. படித்துப் படித்துச் சுவைக்கத் தக்கவை.

# கம்பனில் காணலாகும் கவின் கலைகள்

புலவர் ந. வேங்கடேசன்
வில்லியனூர்.

நுண்கலைகள் இசை, நாடகம், நாட்டியம், சிற்பம் ஆகியவை நுண்கலைகள். பண்டைக் காலத்தில் முப்பத்திரண்டு சிற்பக்கலைஞர்கள் தத்தம் பெயர்களில் சிற்பக்கலை, கட்டடக்கலை இலக்கண நூல்களை இயற்றி அவை வழக்கில் இருந்த செய்திகளை நாம் ஓரளவு அறியமுடிகிறது. சிற்பிகள் கலைஉணர்வு, காப்பியங்களின் உணர்வு, சாத்திரப்பயிற்சி நுண்கலைகளில் தேர்ச்சி பெற்றவர்களாக இருத்தல் வேண்டும்.

சிற்பிகள் இராமாயணத்தை நன்கு கேட்டோ அல்லது படித்தோ இருக்க வேண்டும். அப்போதுதான் இராமாயணத்தில் வரும் காட்சிகளைச் சிறப்பாகச் சிற்பமாக வடித்துக்காட்ட முடியும்.

சிற்பிகள் பல நூறு ஆண்டுகளுக்கு முன் வடித்த இராமாயணச் சிற்பங்கள் இன்றளவும் நிலைத்து நம் கண்ணையும் கருத்தையும் ஈர்க்கின்றன. அக்கம்பராமாயணச் சிற்பங்கள் நாடெங்கிலும் பரவிக் கிடக்கின்றன.

புதுவைமாநிலத்துக்கு உரிய பகுதியில் உள்ளது திரிபுவனை. இதைத் "திரிபுவனை மாதேவிச் சதுர்வேதி மங்கலம்" என்று கல்வெட்டு குறிப்பிடுகிறது. இப்போது திருபுவனை என்று அழைக்கின்றோம்.

இங்குள்ள விண்ணகரம் "வீர நாராயண விண்ணகராழ்வார்" என்ற பெயரில் அமைந்த திருக்கோயில் இன்று வரதராஜப் பெருமாள் கோயில் எனும் பெயரால் அழைக்கப்பெறுகிறது.

இக்கோயிலில் உள்ள கல்வெட்டுக்களும் கற்சிற்பங்களும் நம் வரலாற்றுப்புதையல்களாகும். கி.பி.995 இல் முதல் இராசராசன் காலத்திலிருந்து கி.பி. 1121 முடிய பல விண்ணகரங்கள் எழுந்தன.

மேலே கூறிய வீர நாராயண விண்ணகரத்திலிருந்து பல எண்ணற்ற செய்திகளை அறிவதோடு கண்ணுக்கினிய கம்பராமாயணச் சிற்பக்காட்சிகளையும் இன்றும் கண்டு மகிழலாம். அவைகள் இராமாயணச்செய்திகளைத் தருவன. அவைகளில், வாலிவதை, இராம சுக்கிரீவர் அறிமுகம், மாரீசன் வதம், சீதாபிராட்டி, சூர்ப்பணகைவதம்,

தாடகை வதம் முதலியவை பழமைச் சாயலுடன் திகழ்கின்றன. அவைகளில் சில:

### இராமசுக்கிரீவர் அறிமுகம்

"சூழி மால்யானையார் தொழுகழல் தயரதன்,
பாழியால் உலகு எலாம் ஒருவழிப்படர வாழ்
ஆழியான், மைந்தர் பேர் அறிவினார்: அழகினார்:
ஊழியார்: எளிதின் நிற்கு அரசு தந்து உதவுவார்" (603)

-(உலகத்தைத் தன் ஆணையால் கட்டி ஆண்ட தசரதப் பேரரசனின் மைந்தர்கள் அறிவும் அழகும் உடையவர்கள். இவர்கள் வாலி-யிடமிருந்து உன் அரசை மீட்டுத் தருவர்.)

### வாலி சுக்கிரீவன் போர்

"வீரத்திறலோர், இவை இன்ன விளம்பும் வேலை,
தேரில் திரிவான் மகன், இந்திரன் செம்மல், என்றுஇப்
பாரில் திரியும் பனிமால் வரை அன்ன பண்பார்,
மூரித்திசை யானை இரண்டு என, முரட்டினாரே". (227)

-இமயம் ஒத்த இந்திரன் மகன் வாலியும் சுக்கிரீவனும் திசை யானைகள் மோதுவது போல் போர் செய்தனர்.

### மாரீசன் வதம்

"பற்றுவான், இனி, அல்லன்: பகளியால்
செற்று, வானில் செலுத்தல் உற்றான் என
மற்று அம் மாய அரக்கன் மனக்கொளா,
உற்று வேகத்தின் உம்பரின் ஓங்கினான்" (521)

-மாரீச மான்பிடி படாமையால் - அம்பொன்றால் அவன் ஆவியை வாங்கி வானுலகுக்கனுப்பினன்.

### சூர்ப்பணகை வதம்

"ஆக்கினேன் மனத்து ஆசை: அவ்ஆசை என்
மூக்கினோடு முடிய, முடிந்திலேன்:
வாக்கினால், உங்கள் வாழ்வையும் நாளையும்
போக்கினேன்: கொடியேன் என்று போயினாள்" (487)

- ஆசைப்பட்டேன், அந்த ஆசையால் மூக்கிழந்தேன். என் பேச்சால் உங்கள் வாழ்வின் நேரத்தைப் போக்கிய கொடியவள் என்று கூறிப்போனாள்.

இனி, நம் திருபுவனைக் கோயிலைப் போன்றே பல கோ-யில்களிலும் கம்பராமாயணச் சிற்பங்கள் காட்சி நல்குகின்றன. தஞ்சை மாவட்டத்தில் உள்ள புஞ்சையில் சிவன் கோயிலிலும், தர்மபுரியில் திருமால் கோயிலிலும்: கும்பகோணம், பெரிய காஞ்சிபுரம், தஞ் சாவூர், திருமய்யம், விரிஞ்சிபுரம், மதுரை, தாராசுரம், இளங்காடு, வேலூர், திருநெல்வேலியில் சாயமலையிலும், சங்கரன் கோயில், குடுனியாமலை, திருச்சி - குளத்தூரிலும் கம்பராமாயணக் காட்சிகளைக் கண்டு மகிழலாம்.

ஆந்திர நாட்டில் - அலவீடு, பட்டடக்கல், விஜய நகரம், கீழ்த்திருப்பதி, சந்திரகிரி: புவனேஸ்வரம்: எல்லோரா போன்ற பல ஊர்களிலும் இராமாயணச் சிற்பக் கலைக்காட்சிகள் இடம் பெற்றுள்ளன.

கம்பராமாயணத்தில் அகச்சான்றாகக் கிடைக்கும் குறிப்புகளால் கம்பர் கற்றறிந்த நூல்களின் பரப்பும் பெற்றிருந்த புலமையின் சிறப்பும் நன்கு வெளிப்படுகிறது. புறநாநூறு முதலிய பழந்தொகை நூல்களும், திருவள்ளுவர் அருளிய திருக்குறளும், சிலப்பதிகாரம் முதலிய காப்பியங்களும் கம்பரது காவியத்தில் எடுத்துரைக்கும் நயத்தினை ஆராய்ந்து அறிந்து கவிச்சுவை தேரும் அறிஞர்க்கு ஓர்இனிய விருந்தாகும். சீவக சிந்தாமணியின் சொல்லையும் பொருளையும் கம்பர் தமது காவியத்தில் பல இடங்களில் எடுத்து ஆளுகின்றார்.

கம்பராமாயணத்திற்குப் பின்னே தோன்றிய பெருநூல்கள் அனைத்திலும் கம்பரின் கருத்தும் சொல்லும் இனிது எடுத்தாளப்பெறுகின்றன. தேம்பாவணி, இரட்சணிய யாத்திரிகம் முதலிய கிறித்துவ காவியங்களிலும், நபி நாயகத்தின் பெருமையை எடுத்துரைக்கும் சீறாப் புராணம் என்னும் காவியத்திலும் கம்பர் கவிதையின் மணம் கமழ்வதைக் கண்டுகளிக்கலாம்.

தமிழ்நாட்டு மேதைகளின் கருத்தைக் கவர்ந்ததனால் இம்பர் நாட்டுச் செல்வமும் “உம்பர் நாட்டுச் செல்வமும் ஒருங்கே எய்தி இருந்தாலும் கம்ப நாடன் கவிதையைப் போல் கற்றோர்க்கு இதயம் களியாதே” என்று பாடினார் ஒரு கவிஞர்.

சோழர்கள் தமிழ் நாட்டிலும், புதுவைப்பகுதியிலும் பல கற்றளிகளை அமைத்தனர். அவற்றில், இராமாயண, பாகவத சிற்பங்களையம், பெரிய புராணத்தில் வரும் நாயன்மார்கள்: ஆழ்வார்களின் வரலாறுகளையும், நாட்டிய நங்கையரின் அபிநயங்களையும் சிற்பங்களாக வடிக்கச் செய்தனர்.

புதுவைப்பகுதியில் சோழர்கால கற்றளியாகத் திகழும் திருபுவனையில் உள்ள வீர நாராயண விண்ணகரத்தில் கம்பர் இராமாயணத்தைக் கலைச்சிற்பங்களாக வடித்துள்ளனர். நாட்டு மக்கள் இராமாயணத்தை அக்கால மக்களும், இக்கால மக்களும் எக்கால மக்களும் அறிந்து போற்றுதற்குப் பேருதவி செய்தமையை இன்றும் நாம் கண்டு மகிழ்கிறோம்.

# கம்பனில் காணலாகும் கவின்கலைகள் - ஓவியம்

முனைவர் பெரி.சே.இளங்கோவன்
அறந்தாங்கி.

## கவின் கலைகளின் தோற்றம்

மனிதகுல வரலாற்றில் உணவிற்காகவும், உறைவிடத்திற்காகவும் அலைந்த நாடோடி வாழ்க்கைமுறை பரிணாம வளர்ச்சி பெற்று ஓரிடத்தில் நிலையாகத் தங்கி வாழத்தொடங்கிய காலக்கட்டத்திலேயே கவின்கலைகளும் தோற்றம் பெற்றுவிட்டன. வாழ்வியல் நிகழ்வை கோட்டோவியமாகப் பாறைகளில் வரைந்தும், மொழியற்று சைகைகாட்டியும், உணர்ச்சிகளை ஒலியெழுப்பியும் தெரிவித்ததின் வளர்ச்சியே ஓவியக்கலை, நாடகம், இசைக்கலையாகத் தோற்றம் பெற்றன. "அழகுக்கலைகளை விரும்பாத மனிதனை நாகரிகம் பெற்றவன் என்று கூறமுடியாது. அவனை அறிவு நிரம்பாத விலங்கு என்றே கூறலாம்." என்கிறார் மயிலை.சீனி. வேங்கடசாமி. (மயிலை. சீனி. வேங்கடசாமி, நுண்கலைகள்,ப-10) அழகுக்கலைகளே கவின்கலைகள் எனப்படும்.

கல்வியில் பெரியவரான கம்பர் கவிபாடும் திறன்மட்டுமின்றிக் கவின்கலைகளை நேசிப்பவராகவும், அவைகளின் நுட்பங்களை ஆழ்ந்தறிந்தவராகவும் விளங்கினார், கம்பனின் காவியத்தில் ஓவியம், சிற்பம், இசை, வாய்ப்பாட்டு, நாடகம், நாட்டியம், பொம்மலாட்டம், அணிகலன்கள் எனப்பல்வேறு கவின்கலைகள் காணப்படுகின்றன. கட்டுரையின் நோக்கும் அளவும் கருதி ஓவியக்கலை மட்டும் இங்கு ஆய்வுக்குட்படுத்தப்படுகிறது.

## கம்பனில் கவின்கலை – ஓவியம்

குகைகளில் வாழ்ந்த மனிதன் விலங்குகளை வேட்டையாடியதைப் பாறைச்சுவர்களில் கோட்டோவியமாக வரைந்தான். அதன் வளர்ச்சி கோட்டோவியம், வண்ண ஓவியம், முப்பரிமாண ஓவியம் என மலர்ந்தன. பாறைச்சுவர்களில் வரையப்பெற்ற ஓவியத் தொன்மையே "சுவர் இருந்தால்தான் சித்திரம்" என்ற முதுமொழியாயிற்று.

சங்க காலத்தில் பாண்டியன் நன்மாறன் அவையில் ஓவியம் வரையப்பட்டிருந்ததைச் "செம்பியன் றன்ன செஞ்சுவர் புனைந்து" (மதுரைக்காஞ்சி - 485) என மாங்குடிமருதனார் மதுரைக்காஞ்சியில் குறிப்பிடுகிறார். ஓவியர்கள் 'கண்ணுள் வினைஞர்' (மதுரைக்காஞ்சி -

518) என அழைக்கப்பட்டதையும், "ஓவியச் செந்நூல்" (மணிமேகலை, ஊர் அலர் - 31) இருந்ததையும் இலக்கியங்கள் பதிவு செய்துள்ளன.

சங்ககாலத்தில் வளர்ந்து வந்த ஓவியக்கலை, கம்பர் காலத்திலும் சிறப்படைந்திருந்தது. அதனைக்; கம்பர் தம் காவியத்தில் புனையா ஓவியம், வண்ண ஓவியம், முப்பரிமாண ஓவியம் என அனைத்துவகை ஓவியங்களையும் பதிவுசெய்துள்ளார்.

இராமபிரானின் எழுதமுடியா அழகைக் குறிப்பிடும்போது "ஓவியத் தெழுத வொண்ணா வுருவத்தா யுடைமை" (கிட்கிந்தா - 323) என வாலியின் கூற்றாகவும்,

"சித்திரத்தி னலர்ந்த செந்தாமரை
ஒத்திருக்கும் முகத்தினை யுன்னுவாள்" (சுந்தர-349)

என்று சீதையின் சிந்தையாகவும், "ஓவியர்க் கெழுத வொன்னா வுருவத்தன்" (சுந்தர-1132) என அனுமானின் சொல்லாகவும் காட்டும் கம்பர், சீதையின் அழகினையும் "ஓவிய முயிர் பெற்றென்ன வுவந்தர சிருந்த காலை" (பால - 1201) எனவும்,

"ஓவிய மேயென வொளிக்க வின்குலாந்
தேவியை நாடிய முந்தித் தென்திசை" (கிட்கிந்தா - 453)

என்றும்,

"ஓவியம் புகையுண்டதே யொக்கின்ற யுருவாள்" (சுந்தர - 340) என்றும் பாடுகிறார்

இராமனின் திருமணத்திற்காக மிதிலைக்குப் பயணமாகும் காட்சியை விளக்குமிடத்து பவளம், மணி, மரகதம், முத்து போலமைந்த ஓவியமொத்தமாதர்கள் கோசலையுடன் தேரில் ஏறினார்கள் என்பதை

"துப்பினின் மணியிற் பொன்னிற் சுடர்மர கதத்தின் முத்தின்
ஒப்புற வமைந்த வைய வோவியம் போல ஏறி" (பால - 884)

என்றும், இலங்கையில் பெண்கள் புலம்புவதை "ஓவியம் புரை நலார் விழுதொறுந் சிலருயிர்த்து (சுந்தர - 977) என்றும், மிதிலையில் இராமனும் தசரதனும் ஆரத்தழுவுவதை 'ஓவியஞ் சலகெட பொலிவதோ ருருவொடே' (பால - 1136) என்றும் குறிப்பிடுகிறார் கம்பர்.

**கம்பன் காட்டும் கோட்டோவியம்**

ஓவியக்கலையின் அடிப்படை கோடுகளாகும். வண்ணம்

தீட்டப்பெறாது கோடுகளால் வரையப்பெறும் ஓவியம் 'புனையா ஓவியம்' எனப்பட்டது. கம்பர் தனது காலத்தில் கோட்டோவியக்கலை சிறப்புற்றிருந்ததை இராமபிரானின் முடிசூட்டுவிழாவிற்குப் பிற மன்னர்களை அழைக்கும்பொருட்டு ஓலை அனுப்பும் செயல் மூலம் காட்டுகிறார். தங்கத்தகடால் உருவாக்கப்பட்ட பொன்னோலையில் கருடனின் கோட்டோவியம் வரையப்பெற்றிருந்ததை,

"வென்றி வேந்தரை வருகென வுவணம் வீற்றிருந்த
பொன்றி ணிந்த தோட்டரும் பெற விலச்சினை போக்கி"

(அயோத்தி - பா - 75)

என்று குறிப்பிடும் கம்பர் தம்காலத்துப் பொற்கொல்லர்கள் கோட்டோவியக்கலையில் திறமிக்கவர்களாக விளங்கியதை உணர்த்துகிறார்.

மனிதர்கள் உடல்களில் கோட்டோவியங்களை வரைந்து அழகுபடுத்தியதைச் சீதைக்கு தொய்யிலாகக் கரும்பும் வில்லும், பூங்கொடிகளும் எழுதுவதை

"சில்லிய லோதி கொங்கைத் திரண்மணி கனகச் செப்பில்
வல்லியு மனங்கன் வில்லும் மான்மதச் சாந்திற் றீட்டிச்"

(பால-1212) என்றும்,

சீதையை பிரிந்த இராமன், சீதையின் அழகோடு தொய்யிலின் அழகையும் நினைத்து வருந்துவதை

"குழலை நோக்கி கொங்கை
இணைக்குவட்டை நோக்கி யக்குவட்டின்
தொழிலை நோக்கி தன்னுடைய"
தோளை நோக்கி நாள் கழிப்பான் (ஆரண்ய - 1067)

என்று கோட்டோவியக் கலையைக் காட்டிப் பாடுகிறார்.

**கம்பனில்; வண்ண ஓவியம்**

கோட்டோவியத்தில் உரிய வண்ணங்களை இட்டு நிரப்புதல் வண்ண ஓவியமாகும். வண்ண ஓவிய மொத்த இலங்கை நகர் இராவணின் கொடுஞ்சிந்தனையால் தீக்கிரையாயின என கும்பகருணன் கூறுவதாக "ஓவிய மமைந்த நகர் தீயுண வுளைந்தாய்" (யுத்த - 61) என்றும், சித்திரங்கள் வரிசையாக வரையப்பட்டதைப் போன்று தேவர்கள் இருந்தனர் என்பதை "சித்திர பத்தியின் தேவர் சென்றனர்" (சுந்தர - 146) என்றும் கம்பர் குறிப்பிடுகிறார்.

### கம்பனில் வியக்கும் முப்பரிமாண ஓவியம்

கோட்டோவியங்கள் உருவத்தை மட்டும் புலப்படுத்தும், வண்ண ஓவியங்கள் உருவோடு அழகியலையும் காட்டும், முப்பரிமாண ஓவியங்களோ உருவத்தின் இயங்குதலையும் அழகியலையும் ஒருசேரக் காட்டி. உயிரோட்டத்தோடு திகழும். சுவரில் மாட்டப்பட்டிருக்கும் சிட்டுக்குருவியின் படத்தைக் கண்டு சிட்டுக்குருவி மயங்குவதில்லை. ஆனால் கண்ணாடி போன்ற சமதளத்தில் தெரியும் தனது பிம்பத்தைப் பார்த்து உள்ளே பிறிதொரு சிட்டுக்குருவி இருப்பதாகக் கருதி அலகால் கொத்தி மயங்குகிறது. இச்செயலுக்குக் காரணம் பளபளப்பான தளத்தில் முப்பரிமாண உருவம் தெரிவதேயாகும். சமதளப்பரப்பான காகிதத்தில் வரைந்துள்ள முப்பரிமாண ஓவியத்தைப் பார்ப்பவர்களுக்கு, அவ்வோவியம் காகிதத்தைவிட்டு வெளியில் நிற்பதாகத் தோன்றுகிறது. இத்தகைய முப்பரிமாண ஓவியக்கலை கம்பர் காலத்திலேயே இருந்ததை கம்பர் பதிவு செய்துள்ளார். மாடத்தில் அமர்ந்துள்ள புறாக்களில் பெண்புறா புணர்ச்சிக்கு அழைக்கிறது. குரல் கேட்ட ஆண்புறா தன் இணையான பேடையிடம் செல்லாமல் அருகில் முப்பரிமாண ஓவியமாக வரையப்பட்டுள்ள புறாவிடம் செல்லப் பேடை ஊடல் கொண்டுவிடுகிறது. பறவை இனங்களில் வாழ்நாளில் ஒரே இணையோடு இருப்பது புறாக்கள் மட்டுமே, அப்படிச் சிறப்புமிக்க புறாவே மயங்குமாறு ஓவியன் முப்பரிமாண ஓவியம் வரைந்துள்ளதைக் கம்பர்

> "ஆவியொத்த சேவல்கூவ வன்பின் வந்தணைந்திடாது
> ஓவியப் புறாவின் மாடிருக்க வூடு பேடை" (பால - 116)

என்று தமிழரின் முப்பரிமாண ஓவியக்கலையைப் படம் பிடிக்கிறார்.

### ஓவியம் வரையப்பட்ட இடங்கள்

ஓவியங்கள் சுவர், துணி, மேல்விதானம், பலகை போன்று பலவிடங்களிலும் வரையப்பட்டதைக் கம்பர் படம் பிடிக்கிறார்.

### சுவரோவியம்

சுவர்களில் ஓவியம் வரையப் பெற்றிருந்தச் செய்தியை, அயோத்தியிலிருந்து இராமன் காட்டிற்குச் செல்ல, துயருற்று தசரதன் இறந்த நிலையில் இசைக்கருவிகள் இயங்காமல் கனத்த மௌனம் நிலவுவது சுவரில் வரைந்த ஓவியம் போன்று இயக்கமின்றி இருப்பதை

"மத்தள முதலிய வயங்கு பல்லியம்
ஒத்தன சேறலி னுரையி லாமையின்
சித்திரச் சுவர் நெடுஞ்சேனை தீட்டிய
பத்தியை நிகர்த்தப் படையி னீட்டமே" (அயோத்தியா-1000)

என்று குறிப்பிடுகிறார்.

### மேல் விதான ஓவியம்

கோவில் மண்டபங்களில் மேற்கூரையின் உட்புறமாக ஓவியம் வரைவர் அதொப்ப சூர்ப்பநகை இராமன் இருக்கும் ஆரண்யத்திற்கு வந்தது வானத்தில் அழகிய ஓவியம் வரையப்பெற்றது போன்று இருந்தது என்பதை "வான்றனில்; வரைந்ததோர் மாத ரோவியம்" (ஆரண்ய - 251) என்று கூறி மேல்விதான ஓவியத்தைச் சுட்டுகிறார்.

### பலகையில் ஓவியம்

பண்டைக்காலத்தில் பலகையில் ஓவியம் வரையும் பழக்கமிருந்தது. தற்காலத்தும் கோவில்கள் புதுப்பிக்கும்பொழுது பாலாலயம் நிகழ்வில் தெய்வ உருவங்கள் பலகைகளில் வரையப்படுகின்றன. ஓவியம் வரையும் பலகை வட்டிகை எனப்பட்டது 'வட்டிகை செய்தியின் வரைந்த பாவையின்'(5) என்கிறது மணிமேகலை. சீதையின் வயிறு ஓவியம் தீட்டும் பலகை போன்று இருந்தது என்பதை "ஆலிலை படிவந் தீட்டு மைய நூண் பலகை நொய்ய" (கிட்கிந்தா - 791) என்பதன் மூலம் பலகையில் ஓவியம் வரையும் மரபைக்குறிப்பிடுகிறார்.

### துணியில் ஓவியம்

படாம் என்றச் சொல்லுக்குத் துணி என்றுப் பொருளாகும். படாம் என்பதே படம் என்று மருவி வரையப்படும் ஓவியத்தைக் குறிப்பதாயிற்று. இராவணனது கொடியில் வீணையின் ஓவியம் வரையப்பட்டிருந்து என்பதனைக் கம்பர் "பாகவீணையின் கொடி யொன்று கிடந்தது பார்மேல்" (ஆரண்ய - 978) என்று குறிப்பிடுகிறார்.

### ஓவியர்களின் திறமை

ஓவியர்கள் கண்ணால் கண்டவற்றையும், கற்பனையாய் மனதில் நினைத்தவற்றையும் காண்பவர்கள் களிக்க ஓவியமாக்கும் ஆற்றல் பெற்றிருந்ததை அறிந்த கம்பர், அவர்கள் திறமையை,

"பூ நனை சினைதுன்றிப் புள்ளிடை யிடைபம்பி
நானிற நளிர்வல்லிக் கொடி நவையில் பல்கி
மானின மயின்மாலை குயிலினம் வருகானம்
தீநிகா தொழிலாடை திரைபொரு வது பாராய் " (719)

என்று இராமன் சீதைக்குச் சொல்லுவது போல நமக்குச் சொல்கிறார்.

ஓவியச் செந்நூலில் பயிற்சி பெற்றிருந்த தமிழகத்து ஓவியர்கள் தேவர் முதலாக மக்கள் கடையாக அவ்வவருக்கு ஏற்ற உருவோடு வரையும் திறன் பெற்றிருந்தனர். அவர்களின் திறமையைக் காட்ட

"புக்க நகரத்தினிது நாடினர் புகுந்தார்
மக்கள் கடை தேவர் தலை வானுலகின் மையத்து
ஒக்கவுள வோருவ மோவிய மலால்மற்று
எக்குறியி னுள்ள மெதிர்ந்திலர் திரிந்தார் (கிட்கிந்தா - 885)

என்று பிலம்புக்குப் படலத்தில் பாதாள அறையை ஓவியங்களால் அழகுபடுத்துகிறார் கம்பர்.

## ஓவியங்களின் மொழி

ஓவியங்களின் வழியாக ஓவியர் சொல்ல நினைக்கும் கருத்தைக் காட்சிவழி மொழியாக, உடல்மொழியாகச் சொல்லிவிடுவர். அழகானப் பெண்களின் அழகைப் பார்த்து கண்ணுள்ளவரெல்லாம் மயங்கி நிற்பர் என்ற கருத்தைச் சொல்ல,

"தொழுதகை மடந்தையர் சுடர் விளக்கெனப்
பழுதறு மேனியை பார்க்கு மாசை கொல் எழுது
சித்திரங்களு மிமைப்பி லாதவே" (பால - 143)

என்று சுடர் விளக்குப் போன்று மேனியொளி வீசும் மங்கையரைக் கண்டு, ஓவியங்கள் இமைக்காது நின்றன என்கிறார் கம்பர்.

ஓவியம் இயக்கமின்றி கருத்தைப் புலப்படுத்துவதைத் தசரதனின் அயர்ச்சி வழியாக 'ஓவிய மொப்ப வுயிர்ப்ப டங்கி யோயும்' (அயோத்தியா - 201) என்று குறிப்பிடுகிறார்.

இராமன் காட்டிற்குச் சென்றபோது அனைத்தும் பின் சென்றன. உயிர் இல்லாததால் ஓவியங்கள் மட்டும் பின் செல்லவில்லை என்பதை,

"தேவியர் தவிர்ந்தனர் தெய்வ மாநகர்
ஓவிய மொழிந்தன வுயிரி லாமையால் (அயோத்தியா-538)

என்று இயக்கமற்ற ஓவியத்தினுள் ஒளிந்திருக்கும் மொழியைப் புலப்படுத்துகிறார்.

## ஓவியங்களைப் புதுப்பித்தல்

ஓவியங்கள் காலவோட்டத்தில் பொலிவு குன்றுவது இயல்பு.

அவ்விதம் பொலிவு குன்றிய ஓவியங்களைப் புதுப்பிக்கும் நுட்பமும் கம்பர் காலத்தில் இருந்ததைக் கம்பர் பதிவு செய்கிறார். "ஓவியம் புகையுண்டதே யொக்கின்ற யுருவாள்" - (சுந்தர - 340) என்று ஓவியம் பொலிவுகுன்றியதை சீதையின் வழியாகவும்.

"மிதிக்கநிமிர் தூளியின் விளக்கமறு மெய்யைச்
சுதைக்கனுரை யைப்பொருவு தூசுகொடு தூய்தா
உதிர்த்தன ரிளங்குமர ரோவியரி னோவம்
புதுக்கின ரெனத்தருண மங்கையர் பொலிந்தார்" (பால - 912)

என்று மிதிலைச் செல்லும் பெண்களின் மீது படிந்துள்ள தூசியினை கணவர்கள் நுண்துகிலால் துடைத்தது. ஓவியத்தை ஓவியர்கள் புதுப்பித்தது போன்றுள்ளது என்கிறார் கம்பர்.

**கம்பனின் கலை மாட்சி**

கவின்கலைகளில் ஒன்றான ஓவியக்கலையின் அத்தனை பரிமாணங்களையும், கோடு, வடிவம், வரைதல், வண்ணம், புதுப்பித்தல் என ஆழ்ந்தகன்று கம்பர் காட்டியுள்ள பாங்கு எண்ணி எண்ணி வியக்கத்தக்கதாகும்.

# கம்பனில் புலனாகும் போர்க்கலை

முனைவர் இரா. மகேஸ்வரி
தஞ்சாவூர்.

மனிதருள் திலகமாய் விளங்கும் இராமனைப் போல் கவிஞருள் திலகமாய்த் திகழ்பவன் கம்பனே தனிமனித வாழ்விலும் சமுதாய வாழ்விலும் அரசியல் வாழ்விலும் ஏற்படும் மோதல்களையும் முரண்களையும் விளக்கிக்காட்டி மனிதனை நல்வழிப்படுத்தும் நோக்கத்தில் எழுந்தது இராமகாதை. எத்துணையோ கவிஞர்கள் இராமாவதாரத்தைப் பாடியிருந்தாலும் கம்பன் கையில்தான் அது முழுவடிவம் பெற்றுச் சிறக்கிறது. தமிழ் இலக்கியங்களில் தோய்ந்த புலமையும் வடமொழி அறிவும் கார்கால முகில்போல் கவிமழை பொழியும் கற்பனைத் திறமும் சிந்தை கவரும் சந்தம் மிளிரும் வண்ணங்களும் சிறந்த எண்ணங்களும் வற்றாமல் வளம் சுரக்கும் சொற்கோவைகளும் புத்தம் புதிய அணி வகைகளும் உணர்ச்சி ஊற்றாகக் கம்பன் கருத்துலகில் தோன்றிக் காலத்தை வென்று வாழும் காவியத்தை உருவாக்கி உள்ளன. கம்பன் படைத்த காவியம் ஒரு பெரிய உலகத்தில் எத்தனையோ மனித வகைகள் உணர்ச்சிகள் கொள்கைகள் அவன் பாத்திரங்கள் உயிர்ப்புடன் ஒளிர ஆற்றல் மிக்க அவன் கற்பனையே அடிப்படை ஆகும். மாபெரும் நகரையோ, மலையினையோ கடலையோ விரிந்த வானையோ கண்டு வியத்தல் போல கம்பன் காவியப் பரப்பைக் கண்டு வியப்பும் நயப்பும் கொள்கிறோம்.

## இராம காதை

"அரக்கர்களின் தொல்லை தாளாமல் தேவர்கள் திருமாலிடம் முறையிட திருமால் தசரதன் பிள்ளையாக அவதரிக்கிறார். தசரதன் தனது மகனுக்கு முடிசூட்ட நினைக்க கைகேயி இதனைத் தடுத்துவிட கைகேயி பெற்ற வரத்தால் இராமன் காடு போக இராமனுடன் சீதையும் இலக்குவனும் காடு செல்ல தன் தங்கை சூர்ப்பணகையின் சொல் கேட்டு இராவணன் சீதையைக் கவர, மனைவியை இழந்த இராமன் சுக்கிரீவன், அனுமன் துணையுடன் இராவணனை வென்று சீதையை மீட்டு, அயோத்தி அரசவை ஏறினார். இது இராமகாதையின் கதை அமைப்பாகும். இது ஆறு காண்டம் 114 படலம் 10386 பாடல்களைக் கொண்டது." (முனைவர் சண்முக செல்வகணபதி, ஒப்பிலக்கிய வரம்பும் செயற்பாடும், ப.106)

**கம்பராமாயணத்தில் போர்**

'கம்பர் தம் காப்பியத்தில் இராம - இராவணப் போருக்குச் சிறப்பிடம் தந்து தனியொரு காண்டமே பாடியிருக்கின்றார். கம்பராமாயணத்தில் பெரும்பாலான பாடல்கள் யுத்த காண்டத்தில் அமைந்துள்ளன. காப்பியத்தின் கதை வளர்ச்சியில் தாடகை வதை வேள்விக்காக அரக்கர்களுடன் போர், பரசுராமன்போர் கரன்வதை, வாலிவதை போன்ற பல போர்கள் இடம் பெற்றுள்ளன. "கம்பர் புறத்திணை மரபுகளை யுத்த காண்டத்தில் சிறப்பாகக் கையாண்டிருக்கிறார் போர் முறைகள் பழந்தமிழ் புற நூல்கள் குறிப்பிடும் நெறிமுறைகளுக்கு உட்பட்டு அமைந்திருப்பதை அறிய முடிகின்றது. வெட்சி, வஞ்சி, உழிஞை, தும்பை, வாகை, காஞ்சி பாடாண் என்ற புறத்திணைகளையும் அவற்றின் துறைகளையும் தேவைக்கேற்ப காப்பியத்தில் கம்பர் பயன்படுத்திருக்கும் பாங்கை உணர முடிகிறது" (முனைவர் கா. வாசுதேவன், கம்பனில் கம்பன், ப. 14)

**போர் நிகழ்வுகள்**

"முதல்நாள் வானப்படை அகழி தூர்த்துத் தாக்குதல் அரக்கர் சேனை எதிர்த்துத் தாக்குதல் அரக்கர் சேனை அழிவுகண்டு இராவணன் போர்க்குப் புறப்படுதல் ராம ராவண யுத்தம் ராவணன் படுதோல்வி இன்று போய் நாளை வாவென ராமன் கூறுதல் இரண்டாம் நாள் போர் கும்பகர்ணன் கடும்போரும் வதையும் மதியத்திற்குள் முடிந்தது. அதன்பின் அதிகாயன் போர் நிகழ்கிறது. அதிகாயன் இறந்த செய்திக் கேட்டு இந்திரசித் எழுந்து போருக்குப் புறப்பட்டான். இந்திரசித் நாகபாச பிரயோகம் இரவு வருகிறது. மூன்றாம் நாள் போர் படைத்தலைவர் வதை, மகரக் கண்ணன் வதை இந்திரசித் பிருமாத்திர பிரயோகம் மருத்துமலை கொண்டுவந்து வானரங்கள் உயிர்பெறுதல் ஆகியவை பேசப்படுகிறது. நான்காம் நாள்போர் இந்திரசித், நிகும்பலை யாகம் இந்திரசித்வதை ஐந்தாம் நாள் போர், மூலபடைவதை இராவணன் போருக்குப் புறப்படுதல் ராம, ராவண கடும்போர் ராவண வதம்" (அ.அ. ஞானசுந்தரத்தரசு, கம்பனும் உளவியலும், ப. 37) ஆகியவை போர் நிகழ்வுகள் ஆகும்.

படையின் ஒட்டுமொத்த அணிவகுப்பை முழுவதுமாக முதலிலே வருணித்து அதன் பின்னால் அவற்றின் பிரிவுகளை வருணிக்கின்றான். கற்போர் சோர்வடையா வண்ணம் போர்க்களக் காட்சிகளைக் கம்பன் வகைப்படுத்தி அமைந்துள்ள பாங்கு சிறப்புடையது.

இலங்கையை வானரப் படையினர் சுற்றி வளைந்தனர் வானர படை-யினரால் இலங்கையின் அகழி தூர்க்கப்பட்டமையால் அவ்வகழியின் நீர். இலங்கையின் ஊரினுள் புகுந்தமையைக் காட்டுகின்றான். அவ்வகழியின் உட்பகுதியில் கிடந்த தாமரைக் கொடிகள் கிழங்குகளோடு தென்பட்டுத் தெரிகின்றன அவற்றை வானரப்படைகள் பறித்து அழித்தன.

"வானரச்சேனை மதிலைச் சுற்றி வளைத்தபோது நான்கு பக்கங்களில் இருந்தும் அரக்கர் சேனை வெளிப்பட்டது. யானைப்படை கோபுர வாயில்களின் வழியாக வெளிப்படுவது மலைகள் பாய்ந்து வெளியே செல்வதைப் போல் தோன்றுகிறது. அடுத்து குதிரைப்படை புயற்காற்று சீறிப் பாய்வதைப் போல வெளியேறின. இவற்றின் பின்னால் அரக்க வீரர்கள் வெளிப்படுவதனை நீண்ட நாட்களாக ஒரு புறமாக ஒதுங்கிக் கிடந்த இருட்டு ஒரு தொகுதியாக வெளிவருவதைப் போலத் தோன்றுகிறது எனக் கம்பன் வருணிக்கின்றான்".(மேலது, ப. 38)

அரக்கர் விட்ட அம்புகள் மலைகளைக் கவர்ந்து பொடி செய்தன. அம்புகள் எல்லாம் வானரர் விட்ட பருத்த மரங்களை துண்டாக்கின பகைவரின் இரத்தம் தோய்ந்த செந்நிறம் போல் விளங்குகின்ற வேல் கூட்டங்கள் ஊடுருவிச் சென்றதனால் நறுமணமுள்ள மிகப்பெரிய மரங்கள் அழிந்தன என்பதனை, கீழ்வரும் பாடல் விளக்குகின்றது.

"அம்பு கற்களை அள்ளின. அம்பு எலாம்
கொம்புடைப் பணை கூறு உற நூறின
வம்புடைத் தட மாமரம் மாண்டன
செம் புகர்ச் சுடர்வேல் கணம் செல்லவே!" (7036)

**போர் அறம்**

"போர் நடக்கும் காலத்தில் அஞ்சி முதுகாட்டிச் செல்பவர் நடுங்கும் உள்ளம் உடையவர் தலைமயிர் குலைந்தோர், படைக்கலம் இழந்தோர் போரில் புண்பட்டோர் தம்மினும் இளையோர் ஆகிய இவர்கள் மீது பண்டைத் தமிழ் வீரர்கள் அம்பினைச் செலுத்தமாட்டார்கள்" (கோ. தனபாலன், தமிழகப் பெரும்புலவர்கள் கட்டுரைகள், ப. 235) பசுவும் பசுவின் தன்மையைக் கொண்ட பார்ப்பனர்களும் பிணியுடையோரும் பிள்ளைப்பேறு இல்லாதவர்களும் பெண்களும் அம்பிற்கு முன்னால் நிற்க வேண்டாம் என்று பின்வரும் புறநானூற்றுப் பாடல் கூறுகின்றது.

"ஆவு மானியற் பார்ப்பன மாக்களும்
பெண்டிரும் பிணியுடை யீரும் பேணித்

தென்புல வாழ்நர்க் கருங்கட னிறுக்கும்
பொன்போற் புதல்வர்ப் பெறாஅ தீரும்
எம்மம்பு கடிவிடுது நும்மரண் சேர்மின்" (புறம். 9.1.5)

"படையெடுக்கும் வேந்தன் படையெடுப்புக்கு ஆளாகும் நாட்டிலுள்ள அறப்பண்பு மிகுந்த உயிரினங்களைப் பாதுகாப்பான இடங்களுக்குக் கொண்டு செல்லும்படி அறிவிப்பது அந்நாளைய போர் அறமாக காட்டப்படுகிறது."(க. காந்தி, தமிழர் பழக்க வழக்கங்களும் நம்பிக்கைகளும், ப. 339)

**கம்பராமாயணத்தில் போர் அறம்**

சீதை தனிமையில் இருக்கும்பொழுது அவளைத் தூக்கிச் செல்ல முற்பட்டாள் சூர்ப்பணகை. இதனைக் கண்ட இலக்குவன், சூர்ப்பணகை பெண் என்ற காரணத்தால் கொல்லாமல் விடுத்தான் என்பதனை கீழ்வரும் பாடல் விளக்குகின்றது.

"நில்அடீஇ என கடுகினன் பெண் என நினைத்தான்
வில்எடாது அவன் வயங்கு எரிஆம் என விரிந்த
சில்வல் ஓதியைச் செங்கையில் திருகுறப் பற்றி
ஒல்லை ஈர்த்து உதைத்து ஒளிகிளர் சுற்றுவாள் உருவி" (2824)

யுத்த காண்டத்தில் இராவணன் தேரில் மூச்சு அற்றுக் கிடக்கிறான் மாதலி இராமனிடம் இராவணனை கொல்லத் தூண்டலும் இராமன் மூச்சு அற்று கிடக்கும்போது சொல்வது நீதியன்று என்று கூறுகிறான். இதனை கீழ்வரும் பாடல் விளக்குகின்றது.

"படை துறந்து மயங்கிய பண்பினான்
இடை பெறும் துயர் பார்த்து இகழ் நீதியின்
நடை துறந்து, உயிர் கோடலும் நன்மையோ
கடை துறந்தது போர் என் கருத்து என்றான்" (9876)

கம்பர் நிகழ்ச்சிகளை மனத்தில் காட்சிப்படுத்திக் கொண்டு அவை நிகழ்ந்த காலம் இடம் ஆகியவற்றோடு கற்பார் நெஞ்சில் அப்படியே இறக்கிவைக்க மேற்கொண்டுள்ள கைவண்ணம் வியப்பினையும் மகிழ்ச்சியினையும் ஒருசேர விளைவிக்கிறது. ஆதிகாவியமாகிய வான்மீகி இராமாயணத்தைத் தழுவி எழுதிய கம்பர் தமிழ்ப்பண்பாட்டு. மரபிற்கேற்ப காப்பிய அமைப்பையும் நிகழ்ச்சிகளையும் மாற்றிக் கொண்டமை அவர்தம் புலமைத் திறத்தைக் காட்டுவதாக உள்ளது. மூலகாப்பியம் போலவே கம்பராமாயணம் அமைந்திருப்பது அதன் காப்பியச் சிறப்பிற்கு சான்றாகும்.

# கம்பரின் கவிதைக் கலை

திருமிகு. கோ.வெற்றிச்செல்வி
உதவிப் பேராசிரியர், இந்திராகாந்தி கலை மற்றும் அறிவியல் கல்லூரி,
புதுச்சேரி.

கவிஞர்களில் சிறந்த பேரறிவும் கவிநயமும் சொல் வன்மையும் நகைச்சுவையும் மிக்குற்று நம் தமிழ்த்தாயின் தனிப்பெரும் மைந்தனாய் 'கல்வியிற் பெரியன் கம்பன்' என்று போற்றப்படுபவர் கம்பர்.

கம்பன் வரைந்த சித்திரங்களை எண்ணிப்பார்க்கும்பொழுது ஒவ்வொன்றும் நுண்ணியது. கூர்த்த மதியால் ஆழ்ந்து அனுபவிக்கத்தக்கது. கோதாவரி நதியின் வருணனையை நெஞ்சை அள்ளும் விதத்தில் புனைந்துள்ளான் செஞ்சொற் கவிஞன்.

"புவியினுக் கணியா யான்ற பொரு(ள்) தந்து புலத்திற் றாகி
அவியகத் துறைக(ள்) தாங்கி யைஞ்திணை நெறிய ளாவி
சவியுறத் தெளிந்து தண்ணென் றொழுக்கமுந் தழுவிச் சான்றோர்
கவியெனக் கிடந்த கோதா வரியினை வீரர் கண்டார். (218)

சான்றோர் கவி ஏழு கூறுகளைக் கொண்டிருக்க வேண்டும். அவையாவன:

1. பல அலங்காரங்கள் உடையதாய் உயர்ந்தோரால் நன்கு மதிக்கப்படுதல்; 2. அறம் பொருள் இன்பம் வீடு எனும் உறுதிப்பொருள்களின் தன்மை உணர்த்துதல்; 3. படிப்போருக்கு நுண்ணறிவு பயப்பதல்லாமல் அறிவைக் கொண்டு ஆராய ஆராய ஆழ்ந்த பொருள் புலப்படுத்துதலால் அறிவுக்கு உரியதாயிருத்தல்; 4. கேட்போருக்கு மகிழ்ச்சி தரும் சிருங்கார ரசமாகிய அகப்பொருள் தன்மையைக் கூறுதல்; 5. புணர்தல், இருத்தல், பிரிதல், இரங்கல், ஊடல் முதலிய ஐந்து ஒழுக்கங்களைத் தெரிவித்தல்; 6. மயங்க வைத்தல் என்னும் குற்றத்தை நீக்கி விளங்கவைத்தல் என்னும் அழகை உடையதாய் செம்மையாகப் பொருள் விளக்குதல்; 7. தீய ஒழுக்கத்தைக் கடிந்து நல்லொழுக்கத்தை நாட்டுவதன்றி இனிய ஓசையோடு தட்டின்றிச் செல்லும் நடையுடையதாயிருத்தல்.

ஓர் சிறந்த நதியின் மாண்புகள் ஏழாகும், அவையாவன:

1. உலகத்திற்கு அழகைக் கொடுப்ப தல்லாமல்,

விலகி வில்லுமிழ் விரிகதிர் மணிபல வரன்றி

பொலன் முகட்டுயர் பொன்னெடுங் குன்றின் வீழருவி
குலவு வெண்திரைக் குரைகடல் உகுத்த பார் மடந்தை
அலர்முலைத் துலைத் துயல்வரு ஆரம் ஒத்துளதால்.

(நைடதம்; நாட்டுப்படலம் 3)

என்று நைடதக்காரர் சொன்னது போன்று பூமிக்கு முத்தாரம் போல் பொலிந்து பெருநதியாகித் திகழ்தல்; 2. மணி, பொன், சந்தனம் முதலிய மலைபடுபொருள்கள் தந்து தனது பெருக்கால் விளைவுப் பொருள்கள் விளைத்தல்; 3. வயல்களுக்கு உரியதாய்ப் பெருகுதல்; 4. ஆங்காங்கே நீராடுதற்குக் குளிர்ந்த துறைகள் உடையதாய் இருத்தல்; 5. குறிஞ்சி, முல்லை, மருதம், நெய்தல், பாலை என்னும் ஐந்து வகை நிலங்கள் வழியாகச் செல்லுதல். 6. தனது உட்பொருள் விளங்குமாறு படிகம் போல் தெளிந்திருத்தல்; 7. ஜீவ நதியாதலால் குளிர்ந்த நீரோட்டம் உடையதாய் இருத்தல், முதலியன. இத்தகைய மாண்புகளெல்லாம் கோதாவரி நதியில் குறைவுபடாமல் மலிந்து கிடந்தன.

சான்றோர் கவிக்கும் கோதாவரி நதிக்கும் உள்ள பண்புகளைச் சிலேடையாக ஒரே பாடலில் புதுமை பெறும்படி வருணித்துள்ளார் செந்தமிழப்; பாவலர். இது கம்பராமயணத்தின் அற்புதமான பாடல்களில் ஒன்றாகும். சான்றோர் கவியின் மாண்பை உரைக்கப் புகுந்தவர் தன்னையறியாது தன் கவியின் இலக்கணம் விளக்கிச் சென்றார்! தான் ஒன்றை நினைத்து ஒன்றைத் தெரிவிக்க எண்ணும்போது தனக்குத் தெரியாத அரிய பொருளையும் உடன் கூறிவிடுகின்றார். இதுவே கம்பரின் கவித்திறனுக்குச் சான்றாகும். உயிரில்லாத கோதாவரி நதியை உயிருள்ளதாகப் பாவித்துப் பெண்பாலாக்கிக் கற்பனையை ஓடவிடுகின்றார். கோதாவரி நதி, மக்கள் வாழ்க்கையுடன் இயைந்து அவர்களின் நன்மைக்கு மகிழ்வதாகவும், தீமைக்குத் துயருறுவதாகவும் கொண்டு இயங்குவதாகப் படிபோர் நினைக்குமாறு படைத்திருக்கிறார். இதனையே மேல்நாட்டார் (*Pathetic Fallacy*) தற்குறிப்பேற்றவணி என்பர். உயிரில்லாப் பொருள்கள் உணர்ச்சியுடன் இயங்குவதாகப் பொருத்தமுடன் வருணித்து மனதிற்கு மகிழ்வுட்டுதல் கவிஞர் உலகில் சிறந்ததோர் நெறியாகும்.

இராமன், லட்சுமணன், சீதை ஆகிய மூவரும் கோதாவரி நதியை அடைந்ததும் முகமன் உள்ளிட்ட பதினாறு உபசாரங்களும் நிகழ்தனவாம். ஆற்று வெள;ளத்தில் மலர்ந்து வரும் அலர்ந்த தாமரை நதியின் மலர்ந்த முகமாகவும், தாமரை மலர்களின் அருகருகே

நிமிர்ந்து பூத்திருக்கும் நறுமணமுள்ள நீலோத்பல மலர்கள் கண்களாகவும் முறையாக வரும் அலைகள் ஆற்றின் கைகளாகவும் அலைகளால் கரையில் செதுக்கப்படும் பூக்கள் கைகளில் ஏந்திய மலர்களாகவும் நினைத்துக்கொண்டால் இந்த நிலையோடு கோதாவரி நதி விரைவாகத் தணிந்து வருகின்ற தன்மை கண்டால் மிகு பெருமை வாய்ந்த மூவரின் வருகையால் கோதாவரி நங்கை மகிழ்ச்சியால் முகமலர்ச்சியுற்று அன்புள்ள விருந்தினரின் வருகையையே உற்று நோக்கிய வண்ணமாய்த் தன் அழகிய கைகளால் அவரது (ராமன்) தூய அடிகளில் மலர்கொண்டு துதிப்பதுபோல் இருக்குமாம்.

"வண்முறை கமலச் செல்வி வாள்முகம் பொலிய வாச(ம்)
உண்டுறை குவளை யொண்கள் ஒருங்குற நோக்கி ஊழில்
ளெ;திறைக் கரத்தின் வாரித் திருமலர் தூவச் செல்வர்க்
கண்டடி பணிவ தென்னில் பொலிந்தது கடவுள் யாது" (219)

இதுதான் முன் விளங்கிய வருணனை. பின்வரும் வருணனை உள்ளத்தை கனியச்செய்து கண்ணருவி பாயச் செய்யும்.

"எழுவுறு காதலா(ல்) இங்கி ரைத்திரைத் தேங்கி யேங்கிப்
பழுவநாட் குவளைச் செவ்விக் கண்பனி பரந்து சோர
வழுவிலா வாய்மை மைந்தர் வனத்துறை வருத்த(ம்) நோக்கி
யழுவது(ம்) ஒத்த தாலவ் வலங்குநீராறு மன்னோ"

(கம்ப சூர்ப்ப - 220)

முகமன்கூறி வரவேற்று நலனறிந்து உண்மை தெரிந்ததும் நற்செய்திக்கு மகிழ்ச்சியும், துக்க செய்திக்குத் துயரமும் அனுபவித்தல் மக்கள் இயல்பல்லவா? இதுவும் கோதாவரிக்கு நிகழ்ந்ததாம்! அதாவது ஆண்மகன், சக்ரவர்த்தித் திருமகன், பேரழகன், மெல்லியலுடையன், கால்நடையாக வெயிலிலும் மழையிலும் நடந்தறியான், கூரிய முட்களும் கல்லும் உடைய கருங்கானகத்தில் வாழ்ந்தவனல்லன், மிகவும் மெல்லிய பஞ்சணையில் துயில்பவனே அன்றி வெட்டவெளியில் போதிய வசதிகளின்றி கரடுமுரடான தரையில் உறங்கியதில்லை, அறுசுவை உண்டி அல்லால் இலை காய் கிழங்குகளைக் கண்டவனில்லை. கம்பீரமான அரசாட்சி செய்யவிருந்தவனைத் திடீரென காட்டை ஆளும் வினை சூழ்ந்துவிட்டது. இதை எண்ணும் யார்தான் அழாதிருப்பார். 'வள்ளல் வனம் புகுவான்' என்ற மாற்றத்தால்,

"கிள்ளையோடு பூவை யழுத கிளர் மாடத்
துள்ளுறையும் பூசையழுத உருவறியாப்
பிள்ளை யழுத பெரியோரை என் சொல்ல!" (கம்பநகர்நீங்கு- 388)

ஏனை அஃறிணைப் பொருள்கள் பேசாமல் இருந்தனவோ?

"ஆவும் அழுத அதன்கன்றழுத அன்றலர்ந்த
பூவும் அழுத புனல்புள்ளழுத கள்ளொழுகும்
காவும் அழுத களிறழுத கால்வயப்போர்
மாவும் அழுத அம்மன்னவனை மானவே" (கம்பநகர்நீங்கு- 390)

என்றால் பல சிறந்த குணமும் செல்வமும் படைத்த கோதாவரி மங்கை என்ன பாடுபடுவாள்? மலர்ந்த கருங்குவளை மலர்களில் தேன் பெருகுதல் இயற்கை. விரைவாகச் செல்லும் நீர்ப்பெருக்கு மிகுந்த ஓசை உடையதாய் இருத்தலும் இயற்கையே. இவற்றைக் காணும் இராமனுக்கோ அல்லது இராமன் நிலையிலிருக்கும் நமக்கோ எவ்வாறு தோன்றும்? சக்கரவர்த்திக்குமாரர் வனத்தில் வசிக்கும் துக்ககரமான செய்தியை நோக்கிக் கண்ணீர் மல்கி அவர்களிடத்துக் கொண்ட எல்லையற்ற அன்பினால் கூக்குரலிட்டு அழுவது போன்றிருந்ததாம். இத்தகைய அழகிய முறையில் ஆற்றின் பல்வளங்களையும் கடினமின்றி வருணித்த விதம் மிக அழகு. இன்னும் இதர வளங்களையும் இதே பாங்கில் ஆசிரியர் வருணிக்கிறார்.

ஆற்றில் மிதக்கும் தாமரை மலர்களில் சக்கரவாளப் பறவைகள் ஆணும் பெண்ணுமாக இணை பிரியாமல் நெருங்கி அமர்ந்திருக்கின்றன. கரைகளில் கணக்கற்ற நீல மணிகள் செறிந்த மணற்குன்றுகள் பார்ப்பதற்கு அழகான விதத்தில் கிடந்தன. இரட்டைச் சக்கரவாளங்களைக் காணும்போது இராமனுக்கு ஓர் எண்ணம் தோன்றியதால் சீதையின் தனங்களைப் பார்த்தான். சீதையோ மணிகளின் செறிவால் நீலநிறம் வீசும் மணற்குன்றுகளைப் பார்த்து இராமனின் திரண்ட தோள்களை நினைத்தாள். இதைவிடச் சுவையான அடுத்த நிகழ்ச்சி,

"ஓதிமம் ஒதுங்கக் கண்ட உத்தமன் உழையளாகுஞ்
சீதைதன் நடையை நோக்கிச் சிறியதோர் முறுவல் செய்தான்
மாதுஅவள் தானும் ஆண்டுவந்து நீருண்டு மீளும்
போதகம் நடப்ப நோக்கிப் புதியதோர் முறுவல் பூத்தாள்"
(கம்ப.சூர்ப்ப-222)

கோதாவரி ஆற்றங்கரையில் இராமனும் சீதையும் உற்சாகமாக உலாவரும்போது அன்னப்பறவைகள் ஒதுங்குவதைக் கண்ட இராமன் மனதில் இவ்வாறு தோன்றியதாம். பெண்களுடைய நடை அன்னப் பறவையின் நடைபோன்றிருக்கும். ஆனால் மங்கையர் திலகமாகிய சீதையின் நடையைக் கண்ட அன்னம் வெட்கப்பட்டு ஒதுங்குகின்றது என்று எண்ணி சீதை நடையின் மேன்மையையும் அன்னநடையின் தாழ்மையையும் குறித்துப் புன்முறுவல் செய்தான் இராமன். ஆனால் சீதையின் எண்ணம் வேறாயிருந்தது. அங்கு நீர்வேட்கை தணிந்து மீளும் யானைக்குட்டியைக் கண்ட சீதைக்கு இராமனின் கம்பீர நடை நினைவிற்கு வந்தது. இராமனது அழகிய நடைக்குத் தோற்றே யானை ஒதுக்குவதாக சீதை நினைத்தாள். இராமனது பீடு நடையின் பெருமையையும் யானை நடையின் சிறுமையையும் நினைத்துப் புன்னகை செய்தாள்.

மேலும் வெள்ளத்தோடு அசைந்து வரும் கொடிகளைக் கண்ட காகுத்தன் ஒல்கி ஒசியும் தன்மையுள்ள சானகியின் இடையைக் கண்டான். கூட்டம் கூட்டமான நீலோத்பல மலர்களிடையே பூத்திருக்கும் தாமரை மலர்களைக் கண்ட சீதை கருத்த மேனியையும் கமலம் போன்ற பாதம், கை, கண் முதலியவற்றைக் கொண்ட இராமனை நினைவுறுத்திக் கொண்டாள். இவ்வாறு இராம சீதையரின் கற்பனையாகக் கம்பரின் கவித்திறன் வெளிப்படுகிறது. (கம்பராமாயணம், ஆரண்ய காண்டம்: சூர்ப்பணகைப் படலம் 223)

இத்தன்மையினால் கோதாவரி ஆற்றின் எண்ணற்ற வளங்களைக் கண்டு இன்புற்றவண்ணமாய் ஓர் அழகிய சோலையில் குளிர்ச்சி பொருந்திய உலாம் மலர்கள் நிறைந்த இடத்தில் அமர்ந்தனர். உலகின் குழப்பங்கள் இல்லாத இனிய தனித்த இடம். தவம் செய்வதற்கு ஏற்ற இடம். கற்பனையுள்ளவர்கள் உலகில் எய்தப்பெறும் எல்லாவித போகங்களையும் அனுபவிக்கலாம்.

> "குயிலினம் வதுவை செய்யக் கொம்பிடைக் குனிக்கும் மஞ்ஞை
> அயில்விழி மாதராடும் அரங்கினுக் கழகு செய்யப்
> பயில்சிறை அரச அன்னம் பன்மலர்ப் பள்ளி நின்றும்
> துயிலெழத் தும்பிகாலைச் செவ்வழி முரல்வ சோலை" (கம்ப நாட்டு-40)

ஓர் மரத்தின் கிளையில் குயில்கள் திருமணம் செய்துகொள்கின்றன. அந்நிகழ்வை மகிழ்வூட்ட மற்றொருகிளையில் மயில் அழகான நாட்டியமாடுகின்றது. இதன்முன் உலகில் நடக்கும் மற்ற நிகழ்ச்சிகள்

என்ன செய்யும்? அரண்மணை, மன்னன், வைகறையில் அவரை எழுப்புவதற்காகப் பாடப்படும் இன்னிசைகள் எல்லாம் நாட்டில்தான் உள்ளதா? தாமரை மலர்களில் துயின்று கொண்டிருக்கும் இராஜ அன்னங்களைக் காலையில் புதிய தேன்பருக வரும் வண்டுகள் கொட்டித் துரத்த மனமின்றி செவ்வழி ராகம் பாடி எழுப்புவது ஒவ்வொருவருக்கும் கொள்ளையின்பம் கொடுக்காதோ? மனம் இடங்கொடுக்குமானால் சோலையில் வேண்டியதைத் துய்க்கலாம். இத்தகைய இயற்கைச் செல்வங்கள் நிறைந்த காட்டில் இராம லட்சுமணர்கள் மகிழ்ச்சியுராமல் போவரோ? ஆதலின் கம்பர் 'அவ்வருவி நீராற்றின் பாங்கர் பனிதரும் படிவப் பஞ்சவடி யெனும் பருவச் சோலைத் தனியிடம் அதனை நண்ணி. இனிய பூஞ்சாலை யெய்தி இருந்தனன் இராமன்' என்று கம்பர் வரைந்தது மிகவும் பொருத்தமாகும்.

# கம்பன் தமிழ்ப் பண்பாட்டின் தாய்

திருமிகு. எ.ப.சந்திரிகா
ஆய்வியல் நிறைஞர், தமிழ்த்துறை, பாரதியார் பல்கலைக்கழகம்,
கோவை.

மத வேற்றுமையினால் ஒதுக்கப்படாது பாரததேசம் முழுவதும் போற்றி வந்த சரிதம் இராமாயணம் ஆகும். இராமாயணக் கதையில் தமிழ்நாடும் இணைந்திருக்கிறது. தமிழ்நாட்டில் பிறந்த கம்பன் தமிழிலே தமிழர்க்காகப் பாடினான். அவன் தன் இலக்கியத்தில் - காவியத்தில்-ஆங்காங்கே தமிழர் பண்பாடுகளை அமைத்துப் பாடி-யிருக்கிறான்.

### பண்பாடு– விளக்கம்

பண்பாடு என்பது சுமார் 18-ஆண்டுகளுக்கு முன் 1937-இல் திரு.டி.கே.சிதம்பரநாதமுதலியார் அவர்கள் புதிதாகத் தனிமுக்குக் கொண்டு வந்த ஒரு சொல். பண்படுதல் என்பது திருந்துதல், செம்மைப்படுதல், தகுதியாதல் என்று பொருள்படும். இவ்வினைச்சொல்லே பண்பாடு என நீண்டு அமைந்திருக்கிறது. 'தமிழர்ப்பண்பாடு' என்றால் தமிழ் மக்களுக்கே உரிய தனித்த, திருந்திய மனப்பான்மை என்று பொருள்படுகிறது.

### தமிழர்வீரம்

தமிழர் தம் வீரத்திலே நம்ர்க்கையுள்ளவர்கள். பகைவர்களுடைய கோட்டை அவர்களிடம் இருக்கும்போதே அவை இரவலர்க்கு இலவசமாக வழங்கிவிடுவார்கள். இலவசமாக முதலில் வழங்கிய பிறகு தான் பகைவர்களுடன் போர் செய்து கோட்டையைப் பிடித்து, வாக்குறுதி அழித்தவர்க்கு வழங்குவார்கள். இது தமிழரின் வீரப்பண்பு. இந்தச் சிறந்த வீரத்தை இராமனிடம் கண்டான் கம்பன்.

இராமன், தன்னைச் சரணடைந்த சுக்கிரீவனிடம் அவன் வரலாற்றைக் கேட்டறிந்து, அவன்தன் துன்பத்தைக் களைவதாக வாக்களித்தான். சுக்கிரீவனின் அண்ணனாகிய வாலி இவனுக்கு இழைத்த தீங்குக்காக வருந்தி, வாலியை வெறுத்தான். சுக்கிரீவனை நோக்கி 'கிட்கிந்தையின் அரசாட்சி உன்னுடையதே நீ வருந்த வேண்டாம்' என்று உறுதிமொழி உரைத்தான். இச்செய்தியை அநுமன் வாய்மொழியாகக் கம்பன் கூறியிருக்கிறான். அநுமன் இலங்கைக்குச் சென்றிருந்தபொழுது இந்திரச்சித்தினால் இராவணன் சபைக்குக் கொண்டு போகப்பட்டான். அங்கு நடந்த பேச்சிலே இராமனுடைய

வீரத்தை இராவணனுக்குப் பின்வருமாறு எடுத்துக்கூறுகிறான்.

"தேவியை நாடிவந்த செங்கணாற்கு எங்கள் கோமான்
ஆவி ஒன்றாக நட்டான் அருந்துயர் துடத்திஎன்ன
ஓவியர்க்கு எழுத ஒண்ணா உருவத்தன் உரிமையோடும்
கோவியல் செல்வம் முன்னே கொடுத்து வாலியையும் கொன்றான்"
(சுந்தர, பிணிவீட்டுப்படலம், பா-86)

தம் வாயினாலேயே இராமனிடம் அமைந்திருந்த தமிழர் வீரத்தைப் புகழ்ந்து பேசுகின்ற மற்றொரு நிகழ்ச்சியும் உளது. உண்மை ஒழுக்கம் உள்ளவனான வீடணன் இராவணனை விட்டுவிலகி வந்து இராமனை அடைகின்றான். தன் புதல்வி திரிசடையைச் சீதாதேவிக்குத் துணையாக அமர்த்தியிருக்கிறான். இவ்வுண்மை அறிந்த இராமன் விசிஷணனுக்கு ஆதரவளித்தான். அவன் சரணடைந்தவுடனேயே 'இலங்கை அரசு உன்னுடையதே' என்று உறுதி கூறுகிறான். 'உடனே வீடணனை இலங்கைக்கு அரசனாக இப்பொழுதே முடிசூட்டுக' என்று இலக்குவனிடம் உரைத்தான்.

"உஞ்சனன் அடியனேன் என்று ஊழ்முறை வணங்கி நின்ற
அஞ்சன மேனி யானை அழகனும் அருளின் நோக்கித்
தஞ்சம் நல்துணைவ னான தவவிலாப் புகழான் தன்னைத்
துஞ்சல் இல்நயனத்து ஐய சூட்டுதி மகுடம் என்றான்"
(யுத்த.வீடணன் அடை, பா-142)

**தமிழ்நாட்டுக் கற்புநெறி**

குடும்ப அமைப்பு தமிழர்க்கான மரபார்ந்த பாரம்பரியத்தைக் காட்டுவது. குடும்ப ஒழுக்கத்தில் கற்புநெறி முதன்மையாகப் போற்றப்பட்டது. ஒரு பெண்ணை-பிறன்மனைவியை மற்றொரு ஆடவன் தொடுவானாயின் அவளுடைய புனிதத் தன்மை போய்விட்டது என்று தமிழர்கள் நினைத்தனர். சீதையைச் சிறையெடுத்த இராவணன் அவளைத் தன் கரங்களால் தொட்டுத்தூக்கி தோள் மீது சுமந்துகொண்டு இலங்கைக்குப் போவது தமிழர் பண்பாட்டிற்கு எதிர்மறையானது என்றுணர்ந்த கம்பர் கதையை மாற்றியமைக்கிறார். இராவணன் சீதையை கையினால் தீண்டாமல் இலக்குவன் அமைத்த இலைவீட்டோடு குலையாமல் பெயர்த்தெடுத்து தேரில் வைத்துப் புறப்பட்டான். இதுவே கம்பன் காட்டும் மாறுதலான செய்தி

'தூண்தான் எனலாம் உயர்ந்தோன் வலியால்
கீண்டான் நிலம் யோசனை கீழொடுமேல்
கொண்டான் உயர்ந்தோள் மிசை' (ஆரண்ய,சடாயு பா-76-77)

இவ்வடிகளால் இராவணன் சீதையைத் தூக்கிய காட்சியைக்காணலாம். தூக்கிய சீதையை இராவணன் கொண்டு செல்லும் வழியில் சடாயு இடைமவிக்கின்றான். போரில் சடாயுவின் சிறகை இராவணன் வெட்டிவீழ்த்துகிறான். இராவணனுடைய தேரும் அழிந்துவிடுகிறது. எனவே சீதையைத் தோள்மேல் சுமந்து செல்ல நேர்ந்தது. அப்பொழுதும் கூட சீதையைத் தீண்டாது நிலத்தோடு பெயர்த்தெடுத்து தன் தோளில் வைத்துக் கொண்டு போனான். இவ்வுண்மையை மீண்டும் சுந்தரகாண்டத்திலே வலியுறுத்துகிறான் கம்பன்.

தன்னைத் தேடிவந்த அநுமனிடம் சீதாபிராட்டி இராவணன் தன்னைத் தீண்டவில்லை என்பதைக் காட்சி அளவில் காட்டுகிறாள்.

"ஆண்டு நின்றும் அரக்கன் அகழ்ந்துகொண்டு
ஈண்டு வைத்தது இளவல் இயற்றிய
நீண்ட சாலையொடு நிலைநின்றது
காண்டி ஐயா நின்மெய் உணர்கண்களால்" (சுந்தர.சூடா பா-24)

இவ்வாறு தமிழ்ப்பண்பாட்டிற்கு ஏற்றவாறு கதையைக் கம்பன் மாற்றியமைத்துள்ளான்.

**விருந்தோம்பல்**

தொல்காப்பியர் தம் நூலில் 'விருந்தே புதுமை' என்று குறிப்பிட்டுள்ளார். புதியோரைப் போற்றதலே விருந்தோம்பலின் சிறப்பு என்பதை இதன் மூலம் அறியலாம். முந்தையோர் கூறிய முறைமைகளின் அடிப்படையிலேயே கம்பர் பெருமானும் விருந்தோம்பல் பண்பினைத் தம் காவியத்தில் சிறப்பித்துக் கூறியுள்ளார். கோசலநாடு வந்தாரை வாழவைக்க வல்ல குறைவற்ற வளத்தினை உடையது என்பதைக் கம்பன் முதற்கண் விளக்குகின்றார்.

"வண்மை இல்லை ஓர்வறுமை இன்மையால்
திண்மை இல்லை நேர்செறுநர் இன்மையால்
உண்மை இல்லை பொய்உரை இலாமையால்
வெண்மை இல்லை பல்கேள்வி மேவலால்" (பால,நாட்டு பா-53)

என்னும் பாடலில் கோசல நாடுவளமுடையதாய் இருந்ததோடு பல்வேறுநிலைகளில் மேம்பட்டு விளங்கியதைக் கம்பன் உணர்த்துகின்றார்.

நாட்டுப் படலத்தில் கோசலநாட்டு வளத்தினை இயம்ப முற்பட்ட கவிச்சக்கரவர்த்தி, அந்நாட்டு மக்கள் நாம் அரிதின் முயன்று உற்பத்தி

செய்த நெற்குவையினை எல்லாம் வலியவர்க்கும்இ விருந்தினர்க்கும் பயன் நல்குமாறு செய்தலையே தம் கடமையாகக் கொண்டிருந்தனர் என்பதனை,

"எறிதரும் அரியின் சும்மை எடுத்து வான்இட்ட போர்கள்
குறிகளும் போத்தின் கொல்வார் கொன்ற நெல்குவைகள் செய்வார்
வறியவர்க்கு உதவி னிக்க விருந்துண மனையின் உய்ப்பார்
நெறிகளும் புதையப்பண்டி நிரைத்து மண்நெளிய ஊர்வார்"

(மேலது, பா-21)

என்னும் பாடலால் உணர்த்துவர்.

சேர்ந்துண்ணல்-தமிழ்ப் பண்பாட்டின் வழக்கமாகும். கோசலநாட்டு மக்கள் தம் இல்லிருந்து எவ்வாறு தாமும் விருந்துமாக மகிழ்ந்துண்டனர். என்பதை,

"முந்து முக்கனியின் நானா முதிரையின் முழுத்த நெய்யின்
செந்தயிர்க்கண்டம் கண்டம் இடையிடை செறிந்த சோற்றின்
தம்தம் இல்லிருந்து தாமும் விருந்தொடும் தமரினோடும்
அந்தணர் அமுதர்உண்டி அயிறலும் அமலைத்து எங்கும்"

(பால,-நாட்டுப்படலம் பா-19)

என்னும் பாடல் வாயிலாகப் புலப்படுத்துவர் கம்பர்.

வள்ளுவர் விருந்தினரின் இயல்பினுக்கு அனிச்சம்பூவை உவமையாகக் கூறியுள்ளார். இக்கருத்தினைக் அரிய ஓர் உவமை வாயிலாகச் சடாயு உயிர்நீத்த படலத்தில், சடாயு உடலில் வேல்மோதி விரைந்து மீண்டதை விளக்க முற்பட்ட கம்பர்,

"பொன்னோக் கியர்தம் புலனோக்கிய புன்கணோரும்
இன்நோக்கியர் இல்வழி எய்திய நல்விருந்தும்
தன்நோக்கிய நெஞ்சுடை யோகியர் தம்மைச் சார்ந்த
மென்நோக்கியர் நோக்கமும் ஆம்என மீண்டது அவ்வேல்"

(ஆரணிய,சடாயு உயிர்நீத்தபடலம் பா-119)

என்ற வகையில் புலப்படுத்துகிறார்.

## செய்ந்நன்றி மறவாமை

தமிழர் நாகரிகத்திலே செய்ந்நன்றி மறவாமை ஒரு சிறந்த பண்பு. இப்பண்பினை உணர்ந்த கம்பர், தன் தமிழ்க் காவியத்தைப் பாடிமுடிக்க உதவி செய்த வெண்ணெய் நல்லூர்ச் சடையப்பவள்ளலை மறவாமல் மனமாரப் பாடியிருக்கிறார்.

விசுவாமித்திரர் தன் வேள்வியைக் காப்பதற்காக இராமனுக்குப் படைக்கலங்களைக் கொடுத்தார். இதைப்பற்றிக் கூறும்போது,

"மண்ணவர் வறுமை நோய்க்கு
மருந்தன சடையன் வெண்ணெய்
அண்ணல் தன் சொல்லே யென்னப்
படைக்கலம் அருளினானே" (பால,வேள்விப்படலம் பா-1)

என்று கம்பன் சடையப்ப வள்ளலை ஒரு உவமானமாகக் காட்டிப் பாடுகின்றார். இங்கு இராமன் பெற்ற படைக்கலங்களையும் சடையப்பன் உறதிமொழியையும் ஒப்பிட்டுள்ளார்.

**தமிழர்ப் பண்பாடு**

பரதன் குகனிடம் இராமன் படுத்துறங்கிய இடம் எது என்று கேட்க, குகன் காண்பிக்கிறான். அவ்விடத்தில் புரண்டு புலம்பிய பரதன் இலக்குவன் உறங்கிய இடம் எது என்று வினவுகிறான். அதற்குக் குகன்,

"அல்லை ஆண்டு அமைந்தமேனிஅழகனும் அவளும் துஞ்ச
வில்லை ஊன்றிய கையோடும்வெய்து உயிர்ப்போடும்"
(அயோத்தி,குகப்படலம் பா-42)

என்று கூறுகிறான். இச்செய்யுளில் இராமனுடைய அழகை 'இருண்ட நிறமுள்ள அழகன்' என்றான் குகன். ஆனால் சீதையை 'அவளும்' என்று மட்டும் குறிப்பிட்டான். பிற பெண்களை ஏறெடுத்துப் பார்ப்பது மட்டுமின்றி உற்று நோக்கினால் பெண்கள் அழகு மனத்தில் தீய எண்ணங்களை உண்டாக்கும் என்று எண்ணினர் தமிழர். இத்தமிழர்ப் பண்பாட்டை குகன்பால் அமைத்துக் காட்டியுள்ளார்.

**முடிவுரை**

இராமாயணம் சொல்தோறும், தொடர்தோறும், பெயர்தோறும், வினைதோறும் சுவை பொதிந்தது. சீனித்துளிகளும் இனிக்குமாப்போல் கம்பன் பாடலின் ஒவ்வொரு சீரும் கவிச்சுவைதருவது. கம்பர் காப்பியம் கதையால் தழுவலாயினும் மொழியாலும், நடையாலும், பண்பாலும் தமிழ்மண்ணிற் பிறந்த நிலக்காப்பியமே ஆகும்.

# கம்பர் போற்றும் தமிழ்ப்பண்பாடு

பேராசிரியர் ம. உமாமகேசுவரி
ஸ்ரீ முத்துகுமாரசுவாமி கல்லூரி,
சென்னை.

பண்பாடு என்பதற்குப் பல்கலைக்கழக அகராதி பிறர் இயல்பை அறிந்து நடக்கும் 'நற்குணம்' எனக் குறிப்பிடுகின்றது.

## கம்பர் போற்றும் தமிழ்ப் பண்பாடு

தமிழ்ப் பண்பாட்டின் தனித்தன்மையைத் தனியழகோடு பறை சாற்றுவது கம்பராமாயணம் ஆகும். இதில் நீதி நிலைக்கும், அநீணி அழியும், தெய்வத்தால் ஆகாதது ஒன்றுமில்லை, ஒழுக்கமே உயிரினும் சிறந்தது எனும் ஒப்பற்ற உண்மைகளை அடிப்படையாகக் கொண்டு கம்பர் இயற்றியுள்ளது குறிப்பிடத்தக்கதாகும்.

மேலும் ஆராயின் செய்ந்நன்றி போற்றுதல், விருந்தோம்பல் அனைவரையும் அன்பால் பிணைத்தல், கற்பென்னும் திண்மையோடு வாழ்தல், மானம் போற்றுதல், புகழ்படவாழ்தல், தீவினை செய்ய அஞ்சுதல் முதலான சிறந்த பண்பாட்டு மரபுகளும் காணக்கிடைக்கின்றன. வடமொழியை மூலமாகக் கொண்டு கம்பர் தமிழில் இராமாயணம் இயற்றியிருந்தாலும், தமிழ் கலாச்சாரம், பண்பாடு, பழக்க வழக்கங்கள் முதலானவற்றை மனதில் கொண்டு தமிழ் காப்பியமாகவே கம்பராமாயணத்தைப் படைத்திருப்பது குறிப்பிடத்தக்கதாகும்.

## கம்பன் போற்றும் தமிழ் மரபுகள்

தமிழ்த் தொன்மை மரபுகளான களவு, கற்பு ஆகிய இரு பெருமரபு நெறியின் வழியில் தாம் எழுதும் காப்பியத்தை எடுத்து செல்லவும் தாம் வாழும் நாட்டு மக்களின் நிலைக்கு ஏற்ப மாற்றிப் படைத்து அவனது தனிப்பெருமைக்கு சான்றாகும். வால்மீகி இராமாயணத்தில் திருமணத்திற்கு முன் சீதையும், இராமனும் ஒருவரை ஒருவர் கண்டு கொண்டதாக வால்மீகி கூறவில்லை. ஆனால் கம்பரோ தமிழ்ப்பண்பாட்டு மரபிற்கேற்ப அவர்களின் திருமணத்தைக் காதல் மணமாக அமைத்துக் காட்டியுள்ளது சிறப்பானதாகும்.

"கண்ணொடுகண் இணை கவ்வி, ஒன்றை ஒன்று
உண்ணவும், நிலைபெறாது உணர்வும் ஒன்றிட
அண்ணலும் நோக்கினான் அவளும் நோக்கினாள்

(மிதிலைக் காட்சிப்படலம் 514)

**சகோதரபாசம்**

உடன்பிறந்தவர்களை உயிருக்கு உயிராகப் போற்றுவது தமிழ் மரபு. அதன்படி கம்பர் சகோதரபாசத்தை உணர்ந்தவர். இதனை வால்மீகி இராமாயணத்துடன் ஒப்பிட்டுப் பார்க்கும்போது முற்றிலுமாக மாறுபடுகின்றது.

வால்மீகி இராமனை அழைத்துவரச்சென்ற பரதன் பரத்துவாசர் ஆசிரமத்தில் விருந்துண்டு, நாட்டியங்கண்டு மகிழ்ந்து மறுநாள் சிவிகையிலேறி, இராமனைத் தேடிச் செல்கின்றான் என வால்மீகி காவிய பாதையில் கூறுவர்.

கம்பரோ சகோதரப்பாச உணர்வு மேலிட உள்ளம் உருகிக் கண்ணீர் சிந்திட 'கற்கனியக்கனிகின்ற' துயரனாக தமிழ் மரபிற்கேற்ப பரதன் இராமனைத் தேடிச் செல்வதாகக் குறிப்பிடுவர்.

**கற்பின் மாண்பு**

தமிழ்ப் பெண்கள் தொடக்கத்தில் இருந்தே கற்பில் சிறந்தவர்கள் என்று இலக்கிய நூல்கள் எடுத்துச் சொல்கின்றன. இதன்படி கம்பர் தமது காப்பியத்தில் கற்பிற்கு சிறப்பிடம் கொடுத்துள்ளார். இதனை வால்மீகி இராமாயணத்தோடு ஒப்பிடுகையில் வால்மீகி பஞ்சவடியில் இருந்து சீதையைஇராவணன் கைகளால் பற்றித் தூக்கிச் சென்றதாகக் கூறியுள்ளார். தமிழ் மரபுப்படி ஒரு ஆண் ஒரு பெண்ணை நினைத்தாலே கற்பு அழிந்துவிடும் என்பதைக் கருத்தில் கொண்டவர் கம்பர். இதன்படி சீதையைத் தெய்வத்தன்மை உள்ளவள், கற்பினுக்கு அணிகலம் தீண்டமுடியாத சுடுநெருப்பு என்று நினைத்தவர் கம்பர். இதனை நிலைநிறுத்தும் வழி இராவணன் சீதையைத் தூக்கிச் சென்ற முறையை தமிழ் முறைப்படி காட்டுகின்றார்.

"ஆண்டு, ஆயிடை தீயவன் ஆயிழையைத்
தீண்டான், அயன் மேல் உரைசிந்தைசெயா
தூண்தான் எனல் ஆம்உயர் தோள் வலியால்
கீண்டான் பிலம், யோசனை கீழொலிமேல்" (ஆரணிய காண்டம் 3390)

சீதை தங்கி இருந்த இடத்தை தேடிச்சென்ற இராவணன் அப்படியே சீதையை தன்வசப்படுத்தி சீதை இருந்த பிலத்தோடு பெயர்த்துக் கொண்டு புறப்பட்டு இலங்கைக்குக் கெண்டுசென்றான். இதன்படி சீதையைத் தொடாமல் இராவணன் சீதையை இலங்கைக்கொண்டு சென்றது தமிழ் மரபின் கற்பின் சிறப்பை விளக்குவதாக அமையும்.

**தமிழ்மகளின் இயல்பு**

வாலி இறந்தபிறகு அவனுடைய மனைவி தாரையைச் சுக்ரீவன் தன் மனைவியாக்கிக் கொண்டான் என்பது வால்மீகி இராமாயணக் கருத்து. ஆனால் கம்பரோ இதனை மாற்றிக்காட்டுபவர். அதாவது தமிழ்ப் பண்பாட்டுநெறி முறைக்கேற்ப, தாரையை உயர்ந்தவளாகப் படைத்து, சுக்ரீவனையும் குற்றனில்லாதவனாகப் படைத்துள்ளார். மங்கல அணிஇழந்து மலர் புனைதல் இல்லாமல் துயரமே வடிவாய் விதவை வாழ்வை நடத்துவதாகத் தமிழ்மகளிர் தொன்று தொட்டு பின்பற்றிவரும் நெறியை காட்டும் வகையில் கம்பர் காட்டுவர்.

**கம்பர் காட்டும் அனுமன்**

இராமகாதையில் இராமனுக்கு அடுத்த இடத்தைப் பெறுபவன் அனுமன் காற்றின் வேந்தற்கும் அஞ்சனை வயிற்றில் நிறந்தவன். குணமெனும் குன்றேறி நிற்பவன். உத்தம வீரனாகவும் தமிழர்களுக்கே உரிய அறம், பொருள், இன்பம் முதலான இவ்வுலகில் வழங்கும் மறைபொருள்களில் நிறைந்தவனாக அனுமனைப் படைத்துக் காட்டுவார் கவிச்சக்கரவர்த்தி கம்பர். ஒருகணம் நோக்கி இயல்பினை அறியும் திறன் கொண்டவன் அனுமன்

இந்திரன் மகன் வாலி என்னும் தன் அண்ணனுக்குப் பயந்து அம்மலையில் மறைந்து வாழும் சுக்ரீவன் மானிட வடிவில் வந்து நிற்கும் இராம இலக்குவனர்களைக் கண்டு நடுங்குகின்றான். வாலியின் ஏவலால் வரும் வீரரோ இவர்கள் என்று வினைத்து வெருவிஓடுகின்றான். அமைச்சன் அனுமனிடம் உண்மை கண்டு கூறுமாறு வேண்டுகின்றான். அஞ்சி ஓடும் வானரரை அனுமன் தேற்றுகிறான். நொதுமலராய் வந்தோர் நல்லவரே, நம்மவரே என்று எண்ணத்தைப் பணியவைத்து வானரரின் அச்சத்தை நீக்குகிறான். வந்தோரை ஒரு கணம் நோக்கியவுடனே அவர் தம் இயல்பினை அறியும் ஆற்றலைப் பெறுகிறான் அனுமன்.

**வெற்றிக்கே முதலிடம்**

தமிழர்கள் தாம் மேற்கொண்ட செயலில் வெற்றிபெறவேண்டும் என்ற எண்ணம் படைத்தவர்கள் பகைவரை அழிப்பது பெரிதல்ல. தாம் எதற்காகப் பகைவரை அழிக்க வேண்டும் என நினைக்கின்றோமோ அச்செயல் சீரிய முறையில் நடைபெற வேண்டும் என நினைத்தும் வெற்றிபெற்றும் வந்தனர். தமிழர்களின் இந்நிலையை அடிப்படையாகக் கொண்டே இராவணனை வெல்வது தம்முடைய செயல் அல்ல.

சீதையை எடுத்துக் கொண்டு செல்வதே தாம் செய்ய வேண்டிய செயல் என்று உணர்ந்தான் அனுமன்.

### கடமையில் கவனம்

தமிழர்கள் தாம் செய்யும் கடமையில் காலம் தாழ்த்தாது செயல் புரிந்தனர். செயலில் ஈடுபடும்போது இன்பமோ, துன்பமோ அல்லது எது வந்தாலும் பொருட்படுத்தாது செயலாற்றினர். இதனை வெளிப்படுத்தும் வகையில் கம்பர் நின்வருமாறு காட்டுவர். அனுமன் சீதையைத் தேடிச் செல்கின்றான். வழியில் மைநாகமலை வழிமறித்து விடுகின்றது. வாயுபகவான் செய்த உதவியினால் நன்றிக்கடன் செலுத்த விருந்துண்ணுமாறு வேண்டுகின்றது. ஆனால் அனுமனோ அதை மறுத்து தான் செய்கின்ற செயலே முக்கியத்துவம் வாய்ந்தது எனக் கூறிவிட்டு கடமையில் ஈடுபடுகின்றான்.

### தமிழர் பண்பாட்டின் தனித்தன்மை

தமிழ் மக்களின் வாழ்வியலை ஒப்பற்ற வாழ்வியலாகக் காட்டுவது ஒருவனுக்கு ஒருத்தி என்பதே. அதன்படி தமிழ்ப் பெண்கள் எந்தச் சூழ்நிலையிலும் தன் கணவனுடனே வாழ வேண்டும் என நினைத்து வாழ்ந்த வருபவர்கள். இதனை உறுதி செய்யும் வகையில்

"இம்மைமாறி மறுமையாயினும்
நீயாகியர் என் கணவனை
யானாகியர் நின் நெஞ்சுநேர்பவளே"

என்று குறுந்தொகையும்,

"சாதல் அஞ்சேன் அஞ்சுவன் சாவில்
பிறப்புவி தாருவதாயின்
மறக்குவேன் காதலன் என்கொல்"

என்று நற்றிணையும், தமிழ் மக்களின் மரபை அடிப்படையாகக் கொண்டு எழுந்த சிறப்புமிகு சொல்லோவியங்கள் ஆகும். இக்கருத்தை மையப்படுத்தியே கம்பர் சீதையின்வழி இதனை புகுத்திக் காட்டுகின்றார்.

இலங்கையிலே மீட்கப்படாமல் நான் இருந்து என் இன்னு-யிரை நீத்தாலும் மீண்டும் இப்பூவுலகில் பிறந்து இராமபிரானது திருமேனியையே தீண்டப்பெறுவதோர் ஒப்பற்ற வரத்தைத் தொழுது வேண்டினாள்.

**முடிவுரை**

கம்பர் தன் காலத்தில் நிலவிய தமிழ்ப் பண்பாட்டின் கருவூலத்தை தம் படைப்பின் வழி னிகச்சிறப்பாகப் பறைசாற்றுகின்றார். ஒவ்வொரு கதாப்பாத்திரத்தின்வழியும், கதைப்போக்கின் நிலையிலும் எடுத்தாண்டுள் ளதை முழுமையாகக் கண்டால் கம்பரின் தமிழ்ப்பண்பாட்டைப் போற்றும் திறம் நன்கு வெளிப்படும் என்பது உறுதி.

# பண்பாட்டின் உறைவிடம் கம்பன்

திருமிகு. சே. பாண்டிச்செல்வி
தமிழாசிரியை, கம்பன் கற்பகம் மெட்ரிக் மேனிலைப் பள்ளி,
காரைக்குடி.

வால்மீகி இராமாயணத்தை நன்கு கற்று,உணர்ந்து, தெளிந்து, அறிந்த பின்னர் அதனை தனக்கே உரிய நடையில் மொழியில் தன்னுடைய நாட்டின் பண்புகளுக்கேற்பவும் நமது பண்பாட்டின் பெருமையை பிறர் புரிந்து கொள்ளும்படியாகவும் இந்நூலை, கம்பன் படைத்துள்ளார். இந்நூலின்வழி, பண்பாட்டின் உறைவிடமாகக் கம்பன் திகழும் பெற்றியை இக்கட்டுரை வழி காணலாம்.

## சகோதரத்துவம்

நம் நாட்டின் பண்பு யாதெனின் "யாதும் ஊரே யாவரும் கேளிர்" என்பதை இராமன் என்றும் காவியத்தலைவன் மூலமாக வாழ்ந்து காட்டினார், கம்பர்.

அரியணை தனக்கு இல்லையென்ற போதும், பகைவனுக்கு அருளும் போதும் இராமன் சகோதரத்துவத்தையே மேற்கொண்டார்.

"குகனொடும் ஐவர் ஆனோம் முன்பு; பின் குன்று சூழ்வான்
மகனொடும் அறுவர் ஆனோம் எம்முறை அன்பின் வந்த
அகனமர் காதல் ஐய! நின்னோடும் எழுவர் ஆனோம்;
புகலருங் கானந் தந்து புதல்வரால் பொலிந்தான் நுந்தை" (6507-13)

என்கிறான் கம்பன். இவற்றில் "நுந்தை" என்னும் சொல் கிளைநுதல் பெயராக வந்து சொல்லினால் கூடப் பிரிக்க முடியாத முதனிலைப் பொருள் உணர்த்துமாறு அமைத்த கம்பரின் சொல்லாட்சித்திறன் பாராட்டுக்குரியது.

## பகுத்துண்டு பல் உயிர் ஓம்புதல்

கங்கைக் கரையை வந்தடைந்த மூவருக்கும் காட்டுக்கரசனாகிய குகன் தன்னிடமுள்ள தேனையும், மீனையும் அவர்களுக்கு அழித்து வணங்கினான். அவற்றை உண்ணாமல் குகன் அன்போடு அளித்த உணவின் பெருமையையும், அவன் உணவை பகிர்ந்தளிக்கும் பவித்திரத்தையும் இராமன் எடுத்துரைப்பதின்மூலம் கம்பர் தமிழரது பண்பாடான விருந்து உபசரிக்கும் பெருமையை எடுத்துரைக்கின்றார்.

"அரியதாம் உவப்ப உள்ளத் தன்பினால் அமைந்த காதல்
தெரிதரக் கொணர்ந்த என்றால் அமர்தினும் சீர்த்த அன்றே?
பிரிவினிற் றழீஇய என்னின் பவித்திரம் எம்ம னோர்க்கும்
உரியன இனிதின் நாமும் உண்டனம் அன்றோ? என்றார்"

(1962-67)

**கம்பனின் சீதை**

இராமனிடமிருந்து சிறையெடுக்கப்பட்ட சீதையை அடைய இராவணன் எவ்வளவோ முயற்சி செய்தும் பலனில்லை இறுதியில் சீதையின் தந்தையை அவள் கண்முன்னே கொல்ல முயலுமாறு பாவனை செய்தபோதிலும்கூட, சீதை தன் உறுதியான நெஞ்சம் படைத்ததாக கம்பர் பாடினார். இதனை,

"என்னையும் கொல்லாய்; இன்னே இவனையும் கொல்லாய்; இன்றும்
உன்னையும் கொல்லாய்; மற்றுஇவ் உலகையும் கொல்லாய்;யானோ
இன்உயிர் நீக்கி என்றும் கெடாப்புகழ் எய்துகின்றேன்;
பின்னையும் எம்கோன் அம்பின் கிளையோடும் பிழையாய் என்றாள்"

(7699-705)

தமிழ் நாட்டின் தலைசிறந்த ஒழுங்கு நிலையை சீதையின் படைப்பு மூலம் நிறுவிக் காட்டினார் கவிச்சக்ரவர்த்தி.

**தீயவன் ஆயிழையைத் தீண்டான்**

சீதையை இராவணன் தூக்கிச் சென்ற முறையை வான்மீகி தொட்டுத் தூக்கிச் சென்றான் என்றார்.தொட்டுத் தூக்குவது என்பது தமிழ்ப்பண்பாட்டுக்கு இழுக்கு என்பதால் அக்காட்சியை தமிழ்ச்சூழலுக்கேற்ப மாற்றி அமைக்கிறான் கம்பன்.

துறவுக்கோலத்தில் வந்த இராவணன் தன் உண்மை உருவம் காட்டி தன்னைச் சேருமாறு வேண்டும்போது நெருப்பினை ஒத்த சீதையானவள் என் கணவன் அம்பினால் உன் உயிர்போகும்முன் இங்கிருந்து போய் விடு என்று கூறிய சொல் கேட்டு தன் வலிமை மிக்க தோளால் சீதை நின்ற இடத்தையே பர்ணகசாலையோடு பெயர்த்து எடுத்து தேர்மீது வைத்து சென்றான் என்று கூறுகிறார்.

"ஆண்டு ஆயிடை ,தீயவன் ஆயிழையைத்
தீண்டான், அயன் மேல் உரை சிந்தை செயா
தூண்தான் எனல் ஆம் உயர் தோள் வலியால்,
கீண்டான் நிலம்; யோசனை கீழோடு மேல்"

(3385- 90)

ஒப்புதல் இல்லாது ஒரு பெண்ணைத் தொடுவது என்பது தமிழர் பண்பாட்டிற்கு இழுக்கு என்பதை உணர்த்த கம்பர் தன் படைப்பாகிய இராவணன் சீதையை தொடக் கூட முடியாது என்பதை மிகச் சிறப்பாக கம்பராமாயணக் காட்சியாக மட்டுமன்றி தமிழ்மக்களுக்கு நற்சான்றாகவும் எடுத்துக் காட்டினார்.

## இராமனின் வீரம்

காதலும் வீரமும் இரண்டு கண்களாகவே போற்றுபவர்கள் தமிழர்கள். இராம பெருமாசிவின் வீரத்தை பல பாடல்களில் கம்பர் போற்றி புகழ்ந்து பாடினாலும்,

"பிரிந்தார் பலர்; இரிந்தார் பலர்; பிழைத்தார் பலர்; உழைத்தார்;
புரிந்தார் பலர்; நெரிந்தார் பலர்;புரண்டார் பலர்; உருண்டார்;
எரிந்தார் பலர்; கரிந்தார் பலர்; எழுந்தார் பலர்; விழுந்தார்;
செரிந்தார் குடல்; துமிர்ந்தார் தலை; கிடந்தார் எதிர், தொடர்ந்தார்"
(9406-13)

"மா கொலை செய்த வள்ளல்" என்று இராமனின் கைவண்ணத்தை எடுத்துரைத்தார் கம்பன்.

## கம்பரின் காப்பியம்

கம்பர் எழுதிய காப்பியம் கதையின் கரு பிறமொழியை தழுவியதாக இருந்தாலும், மொழி, நடை, பண்பு, உணர்ச்சி, அன்பு போன்றவற்றால் தமிழ் மண்ணில் பிறந்த காப்பியமாகவே கம்பன் படைத்துள்ளார் என்பதில் ஐயமில்லை.

# கம்பன் கண்ட தமிழர் பண்புகள்

திருமிகு. இரா. சாந்த லெட்சுமி
முனைவர் பட்ட ஆய்வாளர், அ.வீ.வா.நி.புட்பம் கல்லூரி,
பூண்டி.

## தமிழ்க்கவிஞன் கம்பன்

இராமாயணம் வடநாட்டுக் கதை என்று சொல்லுகின்றனர் சிலர். இது முற்றிலும் உண்மை அன்று. இராமாயணக் கதையிலே தமிழ்நாடும் இணைந்திருக்கின்றது. வேறு பல நாடுகளும் இணைந்திருக்கின்றன. ஆகையால் இதனை உலகத்து மக்களுக்கு நல்லறிவு புகட்டும் பொதுக் கதை என்று கூறுவது தான் பொருத்தமாகும்.

இப்பொது இதிகாசத்தை தமிழ்நாட்டிலே பிறந்த கம்பன் தமிழிலே தமிழுக்காக பாடினான். அவன் தன் இலக்கியத்திலே, கவிதையிலே, காவியத்திலே, ஆங்காங்கே தமிழர் பண்பாடுகளை அமைத்துப் பாடியிருக்கின்றான். தமிழர் நாகரிகத்திற்கு மாறான தமிழ்க் காவியத்தை தமிழர்கள் அவ்வளவாக பாராட்டமாட்டார்கள்; படிக்கமாட்டார்கள்; பின்பற்ற மாட்டார்கள். இது கம்பன் கண்ட உண்மை எனலாம்.

## காதல் மணம்

தமிழரின் காதல் மணமுறை இவ்வாறு நெடுங்காலத்திற்கு முன்னே மாற்றம் அடைந்து விட்டாலும் காதல் மணமே சிறந்தது என்பது கம்பன் கருத்து. ஆதலால் இராமனுக்கும் சீதைக்கும் திருமணம் நடத்துவதற்கு முன்பே அவர்கள் இருவரையும் சந்திக்க வைக்கின்றான். இருவரும் ஒருவர்மேல் ஒருவர் காதல் கொள்கின்றனர். இக்காதலுக்கு பிறகுதான் இராமன் வில்லை முறித்து சீதையை மணக்கின்றான்.

சீதையின் கண்கள் இராமனுடைய தோள்களிலே பாய்ந்தன; இராமனுடைய கண்கள் சீதையின் மார்பிலே பாய்ந்தன; இதன் பலன் இராமன் நெஞ்சத்திலே சீதை குடி புகுந்தாள். சீதையின் உள்ளத்தில் இராமன் குடிபுகுந்தான். இவ்வளவும் சில வினாடிகளில் நடந்துவிட்டன.

"எண்ணரு நலத்தினாள் இனைய நின்றுழி
கண்ணோடு கண்ணினை கவ்வி ஒன்றை ஒன்று
உண்ணவும், நிலைபெறாது உணர்வும் ஒன்றிட
அண்ணலும் நோக்கினான்; அவளும் நோக்கினாள்"

(பால.மிதிலை.37)

என எண்ணத்தகுந்த சிறந்த அழகும் குணங்களும் நிறைந்த சீதை இவ்வாறு தன்னை அலங்கரித்து கொண்டு நிற்கும் போது கண்களோடு கண்கள் ஒன்றாக பொருந்தின. ஒருவர் கண்களை மற்றொருவர் கண்கள் அப்படியே விழுங்கின. அவர்களுடைய உணர்ச்சியும் அவர்களிடம் நிற்கவில்லை. இருவர் உணர்ச்சிகளும் ஒன்றுபட்டன. இப்படி நிகழும்படி இராமனும் அண்ணாந்து பார்த்தான். அதே சமயத்தில் சீதையும் குனிந்து நோக்கினாள்.

**தமிழ்நாட்டுக் கற்பு**

சீதை தெய்வத்தன்மை உள்ளவள்; கற்பினுக்கு அணிகலன்; அந்நியர் தீண்ட முடியாத சுடுநெருப்பு என்ற கருத்து உள்ளவன் கம்பன். இத்தகைய கற்புக்கு அரசியை இராவணன் தன் கைகளால் தொட்டுத் தூக்கிச் சென்றான் என்றால் அது தமிழர் பண்புக்கு ஒவ்வாது என்று எண்ணினான் கம்பன்.

ஆனால் இராவணன் சீதையை எடுத்துச் சென்ற நிகழ்ச்சியை இயற்கையாகக் கூறினான். கம்பன் காலத்திலும் அவனுக்கு முன் தமிழ்நாட்டில் இருந்த பழக்கம் வேறு. ஒரு பெண்ணை, பிறன் மனைவியை, மற்றொரு ஆடவன் தொடுவானாயின் அவளுடைய புனிதத்தன்மைப் போய்விட்டது என்று தமிழர்கள் நினைத்தனர். ஒரு பெண்ணை அயலான் ஒருவன் கெட்ட எண்ணத்துடன் பார்த்தாலே போதும் அப்பெண்ணின் கற்பு அழிந்துவிட்டது என்ற கொள்கையை தமிழர்கள் பாராட்டி பேசிக்கொண்டிருந்த காலம் கம்பன் காலம்.

கம்பன் இந்த உண்மையை உள்ளத்தில் கொண்டுதான் தன்னுடைய கற்புத் தெய்வமாகிய சீதாப்பிராட்டியை இராவணன் சிறையடுத்த நிகழ்ச்சியை இயற்கைக்கு மாறாக மாற்றியமைத்தான். இராவணன் சீதாதேவியை கையினால் தொடவில்லை. இவள் இருந்த இடத்தை அப்படியே நிலத்தோடு பெயர்த்தான். தேரிலே வைத்து கொண்டு புறப்பட்டான். இதுவே கம்பன் காட்டும் மாறுதலான நிகழ்ச்சி

"தூண்தான் எனலாம் உயர்தோள் வலியால்
கீண்டான் நிலம், யோசனை, கீழொடுமேல்
கொண்டான் உயர்தோள் மிசை" (ஆரணிய.சடாயு. ர்.75-76)

தூண் என்று சொல்லத்தகுந்த புயவலிமையால் கீழும்மேலும் ஒருயோசனை அளவுள்ள நிலத்தை சீதையுடன் சேர்ந்து அகழ்ந் தெடுத்தான். தனது உயர்ந்த தோள் மேல் தூக்கி வைத்துக்கொண்டான்.

**தமிழர் பண்பு**

கம்பன் தமிழர் பண்பை மற்றொரு இடத்திலும் காட்டுகின்றான். இதனை குகப்படலத்திலே காணலாம். பரதன், குகனிடம் இராமன் படுத்துறங்கிய இடம் எது என்று கேட்டான். அவ்விடத்தை குகன் காட்டினான். பரதன் அவ்விடத்திலே வீழ்ந்து புரண்டு புலம்பினான். பின்னர் 'இலக்குவன் அவ்விடத்தில் இராப்பொழுதைக் கழித்தான்' என்றான் பரதன். அதற்கு குகன் கூறும் விடையிலே தமிழர் பண்பாடு அமைந்து கிடக்கின்றது.

"அல்லை ஆண்டு அமைந்த மேனி அழகனும் அவளும் துஞ்ச
வில்லை ஊன்றிய கையோடும் வெய்து உயிர்போடும், வீரன்
கல்லை ஆண்டு உயர்ந்த தோளாய்! கண்கள் நீர்சொரியக், கங்குல்
எல்லைக்காண் பளவும் நின்றான்; இமைப்பு இலன் நயனம் என்றான்"

(அயோத்தி.குக.42)

மலையின் தன்மையைக் கொண்ட உயர்ந்த தோள்களை உடையவனே! இருளை தன்னிடத்திலே கண்டு அழகாக அமைந்த நிறத்தை உடைய இராமனும் சீதையும் உறங்கினர். வீரனாகிய இலக்குவன் கையிலே பிடித்த வில்லை நிலத்திலே ஊன்றியபடியே இரவு முழுதும் நின்றான். பெருமூச்• விட்டுகொண்டு நின்றான். கண்களிலே நீர் சொரியும்படி நின்றான். விடியும் மட்டும் அப்படியே அவர்களைப் பாதுகாத்து நின்றான். நானும் கண்ணிமைக்காமல் அக்காட்சியைக் கண்டு நின்றேன் என்றான் குகன்.

**தமிழர் வீரம்**

தமிழர் வீரத்தையும் இராமகாதையில் கம்பன் கண்டான். அதையும் விளக்கிச் சொல்லுகிறான். அனுமான் இலங்கைக்குப்போயிருந்தபோது இந்திரசித்தினால் இராவணன் சபைக்குக் கொண்டுபோகப்பட்டான். அப்போது இராவணனுக்கும் அனுமானுக்கும் பேச்சு நடக்கின்றது. அப்பேச்சிலே அனுமான் இராமனுடைய வீரத்தை இராவணனுக்கும் எடுத்துக் கூறுகின்றபோது இவ்வுண்மையை உரைக்கின்றான்.

"தேவியை நாடிவந்த செங்கணாற்கு, எங்கள் கோமான்
ஆவி ஒன்றாக நட்டான் அருந்துயர் துடத்தி என்ன ;
ஓவியர்க்கு எழுத ஒண்ணா உருவத்தன்; உரிமையோடும்
கோவியல் செல்வம் முன்னே கொடுத்து வாலியையும் கொன்றான்"

(சுந்தர -பிணிவீட்டு.86)

செந்தாமரைக் கண்ணன் தன் தேவியைத் தேடிக்கொண்டு

நாங்கள் இருந்த பக்கம் வந்தான். அப்பொழுது எங்கள் தலைவனாகிய சுக்கிரீவன் அவனுடன் உயிர் ஒன்றே என்று சொல்லும்படி நட்புக்கொண்டான். தன்னுடைய பெருந்துன்பத்தைப் போக்க வேண்டும் என்று வேண்டிக்கொண்டான்; ஓவியர்களும் எழுத முடியாத அழகனான இராமன் சகோதர உரிமையுடன் கிட்கிந்தையின் அரசியல் செல்வத்தை முதலிலே கொடுத்தான்; அதன் பின்பே சகோதரத் துரோகியாக பலதாரம் விழைந்தவனாகிய வாலியை கொன்றான்.

இவ்வாறு அனுமான் வாயினால் இராமனுடைய வீரத்தை வெளியிட்டான் கம்பன். தன் வாயினாலேயே இராமனிடம் அமைந்திருந்த தமிழர் வீரத்தைப் புகழ்ந்து பேசியது பாராட்டுக்குரியது.

இவ்வாறு பல்வேறு இடங்களில் தமிழர் பண்புகள் பலவற்றை தம் காவியத்திலே பல நிலைகளில் அமைத்து பாடியிருப்பது தமிழ் உள்ளவரையும் தமிழருக்குப் பெருமை தருவதாகும்.

# கார்காலப்படலத்தில் தமிழர் பண்பாட்டு நிலவியல்

முனைவர் சு.இராசாராம்
பேராசிரியர், தமிழ்த்துறை, அழகப்பா பல்கலைக்கழகம்,
காரைக்குடி.

## முன்னுரை

பண்பாட்டு நிலவியல் மேலைநாடுகளில் வளர்ந்துவரும் அறிவியல் துறையாகும். நிலவெழிகளைப் (டுயனௌஉயிநள) பண்பாட்டின் அலகுகளாகப் பார்ப்பது, பண்பாட்டு நிலவியலின் அடிப்படையாகும். பண்பாடு, நிலவெழிகளால் வளர்த்தெடுக்கப்படுவது போல நிலவெழிகளும் பண்பாடுகளால் உருவாக்கப்படுகின்றன என்பது இதன் முக்கியக் கூறாகும். சூழல் பற்றி மனிதர்கள் உருவாக்கிக்கொள்ளும் புரிதல், பண்பாட்டு நிலவியலின் மரபுகளுள் ஒன்றாகக் கருதப்படும். அவ்வகையில் கம்பர் கார்காலப்படலத்தில் தமிழர் பண்பாட்டு நிலவியல் சார்ந்து சூழல்சார் நிலவெழிகளைப் பாடியிருப்பது தனித்தன்மையாகக் காணப்படுகிறது.

## சூழல் பற்றிய புரிதலில் தமிழர் நிலவியல்

கார், கூதிர், முன்பனி, பின்பனி, இளவேனில், முதுவேனில் என ஓர் ஆண்டை அறுகூறாக்கிப் பெரும்பொழுதுகளாகக் கொள்வது தமிழர் மரபு. ஆவணி, புரட்டாசி தொடங்கி இரண்டிரண்டு மாதங்களை ஒவ்வொரு பொழுதுகளுக்கும் உரிய மாதங்களாகக் கொள்வர். வேனிற்பருவம் வெம்மை னிகுந்திருப்பதும் கார்ப்பருவ வெம்மை குறைந்து மழையால் குளிர்வதுமாகிய இயல்புகளைப் பெறும். இவ்வாறு வேனிலின் முடிவும் கார்காலத்தின் தொடக்கமும் தொடர்ச்சியும் அமைதலைக் கம்பர்,

> "உறவெ துப்புறுங் கொடுந்தொழில் வேனிலா னொழியத்
> திறநி னைப்பருங் காரெனுஞ் செவ்வியோன் சேர
> நிறைம னத்துறு குளிர்ப்பினி னெடுநில மடந்தை
> புறம யிர்த்தலம் பொடித்தன போன்றன பசும்புல்" (கம்ப. 4295)

எனப்பாடுவர். மழையால் நிலத்துத் தோன்றும் பசும்புற்களின் தோற்றம், ஒளியால்; செவ்வியனாய் உயிரை வெதுப்புங் கொடுந்தொழில் புரியும் வேனிலானாகிய அரசன் நீங்க, நிறத்தால் கரியனாய் உயிர்களைக் குளிர்வித்து நன்மை புரியும் திறத்தால் செவ்வியோனாகிய கார்காலம் என்னும் அரசன் வந்து சேர்தலால் நிலமடந்தை மனத்துக்கொண்ட

மகிழ்ச்சியால் அவளுடம்பில் மயிர்க்கூச்சுத் தோன்றினாற்போன்று இருந்தது என வேனிற்காலத்தின் இயல்பும் கார்காலத்தின் இயல்பும் ஒருங்கு பாடப்பட்டுள்ளது.

ஆடி மாதம் முதல் மார்கழி மாதம் வரை சூரியன் தென்திசையாக ஒதுங்கிச்செல்லும். இது தெக்கணாயனம் எனப்படும். தை மாதம் முதல் ஆனி மாதம் வரை சூரியன் வடதிசையாக ஒதுங்கிச் செல்லும். இது உத்தராயணம் எனப்படும். கார்காலத்தில் சூரியன் வடதிசையாக ஒதுங்கிச் செல்வதிலிருந்து மாறித் தென்திசையாக ஒதுங்கிச் செல்லும். இதனைக் கம்பர் தற்குறிப்பேற்றமாக இராமன் தன் மனைவியாகிய சீதையைத் தேடத் தென்திசைக்கு அனுப்பிய தூதாகச் சூரியன் வடதிசையிலிருந்து தென்திசை நோக்கி ஒதுங்கிச் செல்லத் தொடங்கினான் என்பர். இதனை,

"மாவியல் வடதிசை நின்று மானவன்
ஓவிய மேயென வொழிக்க வின்குலாம்
தேவியை நாடிய முந்தித் தென்றிசைக்
கேவிய தூதென விரவி யேகினான்" (கம்ப. 4253)

என்பது உணர்த்தும். இவ்வியல்பைச் செல்வக்கடுங்கோ வாழியாதனோடு ஞாயிறை ஒப்புமைப்படுத்திப் பாடும் கபிலரும், "மாறி வருதி" (புறநா. 8:8) எனச் சுட்டுவர். இதற்குப் பழைய உரைகாரர், "தெற்கும் வடக்குமாகிய இடங்களில் மாறிமாறி வருவை" (ப.23) என விளக்குவர்.

சிவந்த இதழ்களையுடைய செங்காந்தள் மலர்கள் அசைந்து நிற்றலைக் கம்பர், பெரியநிலமாகிய பெண், கார்காலம் வேனிற் காலத்தை வென்றுவிட்டதே அம்மா! என வியப்புடன் கைகளை ஆட்டி நிற்பதுபோல இருந்தது எனத் தற்குறிப்பேற்றமாகக் கூறுவர். இதனை,

"தேனுற மலர்ந்த சைந்த சேயிதழ்க் காந்தட் செம்பூ
வேனிலை வென்ற தம்மா காரெென வியந்து நோக்கி
மானிலக் கிழத்தி கைகண் மறித்தன போன்ற மன்னோ" (கம்ப. 4279)

என்பது உணர்த்தும். இவ்வாறு வேனிற்பருவத்தையும் கார்ப்பருவத்தையும் வேறுபடுத்திக் காட்டும் போக்கிலும், கார்ப்பருவத் தொடக்கத்தையும் தொடர்ச்சியையும் காட்டும் போக்கிலும் தமிழர் நிலவியல் புலப்படும்.

**திணைசார்; நிலவெளிகள்**

கம்பர் கார்காலப்படலத்தில் மேகங்கள் பெருகிப் பரவுதல் (கம்ப.

4255), மேகங்கள் முழங்குதல் (கம்ப. 4258), மின்னல் மின்னுதல் (கம்ப. 4259-4262), வாடைக்காற்று ஙிசுதல் (கம்ப. 4263-4265), மழை பெய்தல் (கம்ப. 4267-4276), மலர்கள் பூத்துக்குலுங்குதல் (கம்ப. 4278, 4279) போன்ற பல்வேறு இயல்புகளைப் பாடுவர். இவை பொதுவான இடம் *(Place)* வெளி (*Space*) சார்ந்தனவாகவும் அதே சமயத்தில் தமிழர் நிலவெழி சார்ந்தனவாகவும் கொள்ளத்தக்கனவாக உள்ளன. வேனிற் காலத்துப் பூக்கும் பூவாகிய பாதிரி மலர்கள் இன்றி வறுமை கூர்தல், வெண்காந்தள் மலர்கள் பூத்துக் குலுங்குதல், குவளை மலர்கள் குவிதல், குயில்கள் கூவாது அடங்குதல், மயில்கள் ஆடுதல் (கம்ப. 4278), செங்காந்தள் மலர்ந்து நிற்றல் (கம்ப.4279), தம்பலப் பூச்சிகள் மிக்குத் தோன்றுதல் (கம்ப.4281) என்பன அவ்வகையினவாகும்.

கார்கால இயல்புளைச் சுட்டும் கம்பர் திணைசார்ந்த நிலவெளிகளையும் பாடியிருப்பது தமிழர் நிலவியலை நன்கு வெளிப்படுத்தும். கிட்கிந்தையிலுள்ள மலையருவிகள் அங்குள்ள பொன்னிறமான வேங்கை மலரையும் கொன்றை மலரையும் அடித்துக்கொண்டு வருதலை,

> "வேங்கையின் மலருங் கொன்றை விரிந்தன வீயு மீர்த்துத்
> தாங்கின கலுழி சென்று தலைமயக் குறுவ தம்மில்" (கம்ப.4282)

என்னும் பாடலடிகள் உணர்த்தும். இதில் மலையருவிகள் வேங்கை மலரும் கொன்றை மலருமாகிய இருதிறப் பொன்னிற மலர்களை ஈர்த்துக் கொண்டு வந்தன எனப் பாடப்பட்டுள்ளது. வேங்கை குறிஞ்சிக்கும் கொன்றை முல்லைக்கும் உரிய மரங்களாகையாலும் அவ்விரு நிலங்களும் அடுத்தடுத்து அமைந்திருக்கும் ஒற்றுமை கருதியும் கம்பர் அவ்விருநிலத்து மலர்களையும் மலையருவிகள் ஈர்த்து வருவதாகக் கூறினார். அவ்வாறு கூறும்பொழுது மலைக்குரிய வேங்கை மலரை முன்னும் காட்டிற்குரிய கொன்றை மலரைப் பின்னும் ஈர்த்து வந்ததாகவும் அவை தம்முள் தலைமயங்குவதாகவும் கூறுவது நோக்குதற்குரியதாகும்.

குறிஞ்சி, முல்லை ஆகிய இரு நிலங்கள் சார்ந்து பாடிய கம்பர் கார்காலத்தில் நானிலத்தும் மலர்கள் பூத்தன என்பதை அவ்வந்நிலத்து மகளிர் கூந்தலில் சூடப்பெற்ற மலர்களின் மணத்தைச் சுட்டுவதன்மூலம் உணர்த்துவர். குறிஞ்சி நிலத்துக் கொடிச்சியரின் அழகு செய்யப்பெற்ற கூந்தலில் இயற்கை மணத்தை நுகர்ந்துகொண்டிருந்த வண்டுகள் அம் மணத்தை விட்டு விலகி ஏங்குமாறு அவர்கள் கூந்தலில் வேங்கை

மலர்கள் சூடப்பெற்று மணம் விசின் நெய்தல் நிலத்து நுளைச்சியர் கூந்தலில் அந்நிலத்துப் பூத்த புன்னை மலர்கள் சூடப்பெற்று மணம் வீசின் முல்லை நிலத்து ஆய்ச்சியர் கூந்தலில் அந்நிலத்துப் பூத்த முல்லைமலர்கள் சூடப்பெற்று மணம் வீசின் மருதநிலத்து உழத்தியர் கூந்தலில் அந்நிலத்துப் பூத்த செங்கழுநீர் மலர்கள் சூடப்பெற்று மணம் வீசின. (கம்ப.4300) இவ்வாறு நானில மகளிர் கூந்தலில் மணம் வீசின எனப் பாடுவதன் மூலம் திணைசார் நிலவெழிகள் பாடப்பட்டிருப்பது விளங்கும்.

**முடிவுரை**

கம்பர் வான்மீகத்தோடு வேறுபடும் இடங்களுள் கார்காலப்படலமும் ஒன்று. கார்காலத்துக் காட்சிகளை இராமன் இலக்குவனுக்குக் காட்டிக் கூறுவதாக வான்மீகி அமைக்க, கம்பர் தம் கூற்றாகவே பாடுவர். கிட்கிந்தைக்கு மன்னனாகச் சுக்கிரீவன் சென்றபின், இராமன் பிரசிரவணம் என்னும் மலையில் தான் தங்குவதற்குத் தேர்ந்தெடுத்துக் கொண்ட பெரிய குகையின் அமைப்பையும் சிறப்பையும் இருபத்தைந்து சுலோகங்களால் வான்மீகி விவரிக்க, கம்பர் அக்குகையைப் பற்றி ஒன்றும் கூறாது விடுவர். இராமன் இலக்குவனிடம் சுக்கிரீவன் மனைவியோடு மகிழ்ந்திருத்தலையும் தான் மனைவியைப் பிரிந்து வருந்துதலையும் கூறியதாக வான்மீகத்தில் அமைய, கம்பர் இக்கருத்தை மாற்றி மரத்தில் தொங்கும் கூடுகளில் குருவிகள் தத்தம் பெடையோடு இன்புறுவதைக் கண்டு இரங்குவதாகப் பாடுவர். அவ்வகையில் கம்பர் கார்காலத்தையும் சூழல்சார் நிலவெளிகளையும் தமிழர் பண்பாட்டு நிலவியல் சார்ந்து பாடியிருத்தலும் அடங்கும்.

# கம்பனில் வாழ்வியல் அறம்

முனைவர் நா. பழனிவேலு
தமிழ்ப்பேராசிரியர்–துறைத்தலைவர், அரசு ஆடவர் கலைக்கல்லூரி,
கிருட்டினகிரி.

உலகில் அறத்தை நிலைநிறுத்த, நடையின் நின்றுயர் நாயகனாகப் பிறந்தவன் இராமபிரான். அவனது சரிதத்தைக் கூறும் 'இராமாவதாரத்தில்' கம்பர் அரசியல் அறங்களையும், தனிமனித வாழ்வியல் ஒழுக்கங்களையும், சமூக, சமய நல்லிணக்கத்தையும் கதைமாந்தர் உரையாடல்கள் மூலமாகவும், கவிக்கூற்றின் வாயிலாகவும் வலியுறுத்துகின்றார். அவற்றில் கம்பர் வலியுறுத்தும் தனிமனித வாழ்வியல் அறங்களைக் கண்டறிந்து, அவற்றை வெளிப்படுத்தும் நோக்கில் இக்கட்டுரை அமைகிறது.

**அறன் வலியுறுத்தல்**

'அறம் வெல்லும்; பாவம் தோற்கும்' என்பது இராமாவதாரத்தின் பாவிகம். இதனை வாய்ப்பு நேரும் இடங்களில் கதைமாந்தர் கூற்றின் வாயிலாகவும், கவிக்கூற்றின் வாயிலாகவும் கம்பர் வலியுறுத்திக் கூறுகின்றார்.

மேலும், இராமன்(97, 4692, 9166, 9903, 9874, 10267), இலக்குவன்(852); அனுமன்(5512); சீதை(5860); சுனித்திரை(2369) ஆகியோரை அறத்தோடு தொடர்புபடுத்தியும், அரக்கர்களை அறத்திற்கு மாறானவர்களாகவும்(3030, 4248, 9304) சித்திரிக்கிறார்.

வேல் ஏற்ற படலத்தில், இராவணன் வீடணன்மீது வேல் எறிய, இலக்குவன் தான் முந்திச் சென்று அதனைத் தன் மார்பில் ஏற்றிட, அனுமன் மருந்து கொண்டுவந்து இலக்குவனை உயிர்ப்பிக்கிறான். இராமன் வானரத் தலைவர்களிடம் நடந்ததை வினவுகிறான். அப்போது,

"அருமை என் இராமற்கு? அம்மா! அறம் வெல்லும், பாவம் தோற்கும்" (9574)

எனக் கம்பர் கவிக்கூற்றின் வாயிலாகக் கூறுகிறார். ஊர்தேடு படலத்தில் இலங்காதேவி அனுமனிடம் தன் வரலாற்றைக் கூறும்போது,

"அறம்வெல்லும் பாவம் தோற்கும் என்னும் ஈது இயம்ப வேண்டும் தகையதோ..... (4929)

எனக் கூறுவதாகக் கூறுகிறார்.

நாகபாசப்படலத்தில், 'வெல்லாது, அறத்தினைப் பாவம்'(8234) என்றும்; நிகும்பலையாகப் படலத்தில், 'அறத்தினைப் பாவம் வெல்லாது'(9109) என்றும்வீடணன் கூறுவதாகக் கூறுகிறார்.

இராமன் கடலினைக் கடக்க வருணனை வழிவேண்டித் தியானிக்க, ஏழுநாள் சென்றும் வருணன் வராது தாமதிக்கின்றான், இராமன் சினந்து அவன்மீது சதுமுகன் கணையை ஏவுகிறான். பின்னர், வருணன் வந்து இராமனிடம் நிகழ்ந்ததைக் கூறிச் சரணடைய, அம்பு வருணனை ஒன்றும் செய்யாது மருகாந்தாரத்திலுள்ள அவுணர்களை அழித்து மீண்டது. இதனைக் கம்பர்,

"ஆய்வினை உடையர் ஆகி, அறம் பிழையாதார்க்கு எல்லாம்
ஏய்வன நலனே அன்றி, இறுதி வந்து அடைவது உண்டோ?"(6667)

எனக் கூறுவதன்மூலம் அறநெறிப்படி வாழ்வோர்க்கு எப்போதும் நன்மையே வந்தடையும் அழிவு நேராது எனக் கூறுகிறார். திரிசடை நற்குறிப்பயன்களைச் சீதையிடம் கூறும்போது,

"தீயது தீயவற்கு எய்தல் திண்ணம்" (5106)

எனக் கூறுகிறார். மாயமான் குரல் கேட்டு, சீதை கடுஞ்சொல் கூறிட, இலக்குவன் செய்வதறியாது கையற்ற நிலையில், 'அறம்தனால் அழிவு இலது ஆகல் ஆக்கலாம்'(3336) எனக் கூறுவதன்மூலம் அறத்தினால் மட்டுமே அழிவு இல்லாமையை ஆக்குவது முடியும் எனும் கருத்தை உணர்த்துகிறார்.

வீடணன் இராவணனுக்கு இரணியனது வரலாற்றைக்கூறி, அவனைத்திருத்தி நன்னெறிப்படுத்த முயல்கிறான். இராவணன் சினந்து அவனைத் துரத்துகிறான். அப்போது வீடணன் வானில் எழுந்து பல நீதிகளை மொழிகிறான்.

"வாழ்மைதான், அறம் பிழைத்தவர்க்கு, வாய்க்குமோ?" (6374)

என, அறம் பிழைத்தார்க்கு வாழ்க்கை வாய்க்காது எனக் கூறுகிறான்.

முதல்நாள் போரில் இராவணன் மகுடம் இழந்து நாணி நிற்கிறான். இராமன் அறிவுரை கூறி, 'இன்று போய் போர்க்கு நாளை வா' எனக் கூறி அனுப்புகிறான். அப்போது,

"அறத்தினால் அன்றி அமரர்க்கும் அருஞ்சமம் கடத்தல்
மறத்தினால் அரிது என்பது மனத்திடை வலித்தி" (7266)

என அறிவுரை கூறுகிறான். அறநெறியைப் பின்பற்றாது மறநெறியைப் பின்பற்றினால் தேவர்களால் கூட வெற்றிபெற இயலாது எனும் கருத்தை இராமன் வாயிலாக வலியுறுத்துகிறார்.

அறம் வெல்லும்; பாவம் தோற்கும்; தீயோர் கட்டாயம் தீமையே எய்துவர்; அறம் பிழைத்தோர்க்கு வாழ்க்கை அமையாது; அறநெறியைப் பின்பற்றினால்தான் வெற்றியை அடைய இயலும் எனும் உண்மைகளை மேற்குறித்த நிகழ்வுகளின்மூலம் கம்பர் எடுத்துரைக்கின்றார்.

**ஊழ்வினை**

மாரீசன்மீது இராமன் அம்பு தொடுக்க, அவன் அலறி வீழ்கிறான். சீதை இராமனுக்கு ஆபத்து நேர்ந்ததாகக் கருதிக்கொண்டு, இலக்குவனை இராமனிடம் செல்லுமாறு கூற, இலக்குவன் 'இராமனுக்கு அழிவு நேராது' என்று அறிவுறுத்தியும் கேளாது, 'நின்ற நின் நிலை இது நெறியிற்று அன்று'(3390) எனக் கூறி, எரியிடை வீழ்ந்து இறப்பதாகக் கூற(3331), இலக்குவன், 'வெஞ்சின விதியினை வெல்ல வல்லமோ?'(3333) என்று கூறி இராமனிடம் செல்கிறான்.

உயிர்ப்பற்ற நிலையிலுள்ள சடாயுவை இராமஇலக்குவர் கண்டு, தகர்ந்த வீணைக்கொடி, வில், சூலம், புட்டில் முதலியன வீழ்ந்து கிடத்தலைக் கண்டு, சடாயு போர் செய்தமையை அறிந்து, அவனைக்கண்டு இராமன் புலம்பிச் சோர்கிறான்(3507,3508-3515).

புகழற்ற மனிதப்பிறவிக்கு வருகிற இன்பதுன்பங்கள் ஊழ்வினைப்படியே வருகின்றன என்ற கோட்பாட்டை ஏற்றுக் கொண்டால்தான், நம் அறிவின் வலிமையால் அவற்றை நீக்க முடியும். விதிவயப்படியே எல்லாம் நடக்கும் என்பதை ஏற்காவிடின், நம் அறிவின் வலிமையால் ஊழ்வினையை வெல்ல முடியாது; வருவன வந்தே தீரும்; அவற்றைத் தடுக்க முடியாது. வந்ததன்பின் விதிவயம் என எண்ணி ஆறுதல் அடைந்து அவற்றை அறிவின் வலிமையால் போக்கிக் கொள்ளலாம். இதனை,

> "துதி அறு பிறவியின் இன்ப துன்பம்தான்
> விதி வயம்" என்பதை மேற்கொளாவிடின்,
> மதி வலியால் விதி வெல்ல வல்லமோ? (3508)

எனும் அடிகளில் உணர்த்துகிறார். 'இன்ப துன்பங்கள் விதிவயப்படியே நடக்கின்றன; அவற்றை அறிவின் வலிமையால் வெல்ல முடியாது' எனும் வாழ்வியல் மெய்ம்மையைக் கம்பர் உணர்த்துகிறார்.

விதிவயத்தால் வருகிறதென்று தெளியப்பட்ட துன்பம் வந்துசேர, அதற்காக மனத்தைக் கலங்கவிட்டு, அழிகிற தன்மை பேதைமைத் தன்மையாகும்.

"தெரிவுறு துன்பம் வந்து ஊன்ற, சிந்தையை
எரிவுசெய்து ஒழியும் ஈது இழுதை நீரதால்;" (3509)

எனும் அடிகளில் விதியினால் வரும் துன்பத்திற்காக மனம் கலங்கி அழிவது பேதைமைத் தன்மையாகும் எனக் கூறுகிறார்.

துன்பமும் இன்பமும் வருங்காலத்து அவற்றை வரவிடாமல் தடுத்து விடுவோம் என்பது உண்மை உடையது ஆகாது என்பதை,

"அலக்கணும் இன்பமும் அணுகும் நாள், அவை
விலக்குவம் என்பது மெய்யிற்று ஆகுமோ?" (3510)

எனும் அடிகளில் உணர்த்துகிறார்.

சிவன் பிரமனது ஐந்து தலைகளில் ஒன்றைக் கிள்ளிக் களைந்த புராணச் செய்தியை விதியின் வலிமைக்குச் சான்றாகக் காட்டியும்; வாழ்நாளில் வரும் இன்ப துன்பங்களைத் தடுக்க முடியாது என்பதற்குச் சினத்தால் பிரமனின் தலையைக் கிள்ளிய சிவன் பிரம்மதோஷத்தால் மண்டையோட்டில் பிச்சையேற்றுத் திரிந்த புராணச் செய்தியையும் குறிப்பிட்டு, வருகிற இன்ப துன்பங்களைத் தடுக்க முடியாது என உணர்த்துகிறார்.

ஒருவனுக்குத் துன்பங்கள் வந்து சேர்வதும், அவை நீங்குவதும் தொன்றுதொட்டு வருகிற ஊழ்வினையின் பயனாலேயேயாகும். தேவகுரு பிரகஸ்பதியின் சாபத்தால் இந்திரன் அடைந்த துன்பங்களை எடுத்துக்காட்டி, ஊழ்வினைப் பயனால் இன்ப துன்பங்கள் ஏற்படுகின்றன என்பதை,

"அந்தரம் வருதலும், அனைய தீர்தலும்,
சுந்தரத் தோளினிர்! தொன்மை நீரவால்; (3512)

எனும் அடிகளின்மூலம் உணர்த்துகின்றார்.

**அருளாளர்**

வீடணனுக்கு இராமன் அடைக்கலம் அருளியதைச் சுக்கிரீவன்வீடணனிடம் தெரிவிக்கிறான்(6485). அதனைக் கேட்ட வீடணன் மகிழ்ந்து செம்மையான மனத்தையுடைய அருளாளர்கள் தீராத இன்னல்களைப் பிறர் தமக்குச் செய்தாலும் அவர்கள் தமக்கே உரிய நற்செய்கைகளிலிருந்து மாறுபடமாட்டார்கள்,

"தீர்வு அரும் இன்னல் தம்மைச் செய்யினும், செய்ய சிந்தைப்
பேர் அருளாளர் தம்தம் செய்கையின் பிழைப்பது உண்டோ?(6489)

எனக் கூறுகிறான். தீர்த்தற்கரிய துன்பத்தைப் பிறர் செய்தாலும் அருளாளர்கள் தமக்கே உரிய நற்செயல்களிலிருந்து மாறமாட்டார்கள். இன்னா செய்தார்க்கும் இனியவே செய்வர் என அருளாளர்களுடைய இயல்புகளைக் கம்பர் வீடணன் உரையின்மூலம் உணர்த்துகின்றார்.

வீடணன், கும்பகருணனை இராமனிடம் சரண்புகுமாறு வேண்டிட(7410-7424), கும்பகருணன் வீடணனுடைய வேண்டுகோளை மறுத்துவிடுகிறான். இச்செய்தியைவீடணன் இராமனிடம் கூற, இராமன், 'தீமையிலிருந்து தப்பித்துக் கொள்கிற மனக்கூறுபாடு உடையவர்களுக்குத்தான் அறநெறிப்படி செல்லும் மனம் அமையும்' என்பதை,

"உய் திறம் உடையார்க்கு அன்றோ, அறன் வழி ஒழுகும் உள்ளம்?"
(7441)

எனக் கூறுகிறார்.

## பொய்சாட்சி கூறுவோர் குலம் அழியும்

அனுமன் தன்னைப் பிடித்து வருமாறு இராவணனால் தன்மீது ஏவப்பட்ட கிங்கரர்களுடன் பொருது, அவர்களை அழித்தொழிக்கிறான். இச்செய்தியைக் காவலர் இராவணனுக்கு உணர்த்துகின்றனர். அதற்கு இராவணன்,

"இறந்து நீங்கினரோ? இன்று, என் ஆணையை இகழ்ந்து
துறந்து நீங்கினரோ? அன்றி, வெஞ்சமர் தொலைந்தார்
மறந்து நீங்கினரோ? என்கொல் வந்தது?" (5545)

எனக் கூறுகிறான். அதற்குக் காவலர்கள்,

"புலம் தெரி பொய்க் கரி புகலும் புன்கணார்
குலங்களின், அறிந்தனர், குரங்கினால்" (5546)

எனக் கூறுகின்றனர்.

இதன்மூலம், 'அறிவுக்குப் பொய்யென்று தெரிந்தும் பொய்க்கரி கூறும் இழிந்த அற்பர்களின் குலங்கள் அழிந்தொழியும்' - எனும் உண்மையைக் கிங்கர வீரர்கள் அழிந்தொழிந்தமைக்கு உவமையாகக் கூறுவதன்மூலம் 'பொய்சாட்சி கூறுவோர் குலம் அழிந்து ஒழியும்' எனும் வாழ்வியல் உண்மையைக் கூறுகின்றார்.

**உலோப குணம் நற்குணங்களை அழிக்கும்**

விசுவாமித்திரன் இராமனிடம் தாடகையின் வரலாற்றைக் கூறும்போது, தாடகையின் வலிமையையும்(359-61), தோற்றத்தையும்(361-62) கூறி, உள்ளத்தில் பருத்த பிணிப்பு நீங்காத உலோப குணம் ஒன்று மட்டுமே அளப்பதற்கரிய நற்குணங்களையெல்லாம் அழிக்கின்ற தன்மையைப் போல, தாடகை கேடே இல்லாத வளம் நிறைந்த மருத நிலத்தையெல்லாம் கொன்று தின்று அழித்து, பாலை நிலமாக மாற்றி விட்டாள் என்பதனை,

"உளப் பரும் பிணிப்பு அறா உலோபம் ஒன்றுமே
அளப்ப அருங் குணங்களை அழிக்குமாறு போல்," (363)

எனும் அடிகளின் மூலம் உவமையாக்கிக் கூறுகின்றார். குலம், கல்வி, கேள்வி, ஆற்றல், ஆகிய நற்குணங்களை உடையவராயினும் உலோப குணம் ஒன்று மட்டும் இருந்தால் அது அந்நற்குணங்கள் அனைத்தையும் அழித்து விடும் எனக் கூறுகின்றார்.

**பரத்தையர்**

அனுமனைப் பற்றிக் கொணருமாறு இராவணன் சம்புமாலிக்கு ஆணையிட, சம்புமாலி அதனை ஏற்று அரக்க வீரர்களுடன் சென்று, அனுமனுடன் போருடற்றுகிறான். அனுமன் அரக்க வீரர்களுடன் கடும்போர் செய்து திரிந்து கொண்டிருக்கிறான். இந்நிகழ்வைக் கம்பர், இன்னார் இனியார் என்று பாராமல் யாவர்க்கும் அவர்கள் கொடுக்கும் விலைப்பொருளுக்கே தம் வளர்முலைகளைக் கொடுக்கத் தீர்மானித்தவர்களாய்ப் பொருளுக்குத் தக்கபடி தம்மை அளிக்கும் விலைமகளிரின் மனத்தைப் போல அனுமன் திரிந்தான் என்பதை,

"....எவர்க்கும் வரு முலை விலைக்கு என மதித்தனர் வழங்கும்
தெரிவையர் மனம் என....திரிந்தான்" (5584)

எனும் அடிகளின் மூலம், தங்களை நாடி வருவோர் அளிக்கும் பொருளுக்குத் தக்கபடி, தம்மை அளிக்கும் மனத்தை உடையவர் பரத்தையர் என்பதைக் குறிப்பிடுகிறார்.

தம்மிடம் வருவோரின் தலை, மார்பு, பாதம் முதலியவற்றைத் தழுவி அவர்களிடம் உள்ள பொருளை எல்லாம் கவர்ந்துகொண்டு, அவர்மாட்டுத் தங்காது, சிறிதுநேரம் தங்கியிருப்பதுபோலக் காட்டி, அவர்களை விட்டுவிட்டு விரைந்து செல்லும் விலைமகளிரைப்போல, மலையில் பெய்த மழைநீர் வெள்ளப்பெருக்கெடுத்து மலையில் உள்ள

பொருள்களையெல்லாம் வாரிக்கொண்டு விரைவாக மலையிலிருந்து நீங்கிச் சென்றது(17) எனக் கூறுகிறார்.

· நகரப் படலத்தில் அகழியின் ஆழத்தை வருணிக்கும்போது, 'பொன்றிலை மகளிர் மனம் எனக் கீழ்ப்போய்'(106) - என்று னிகுந்த பொருள் ஆசையையுடைய விலைமகளிர் மனம் எவ்வளவு பொன் பெறினும் தூராமல் மேலும் ஆழமாதல்போல, அகழியும் அளவு காண முடியாத ஆழமுடையதாக இருந்தது எனக் கூறுகிறார்.

இவற்றின்மூலம், தம்மிடம் வருவோரிடம் அன்பு கொண்டோர்போலத் தம்மைக் காட்டிக்கொண்டு, அவர்களிடம் உள்ள பொருளையெல்லாம் பறித்துக் கொண்டு, அவர்களிடம் சிறிது நேரம்கூடத் தங்கியிருக்காது அவர்களைவிட்டு விரைவில் நீங்குகிற விலைமகளிரின் இயல்புகளைக் கூறி, ஆடவர்களை எச்சரித்து நன்னெறிப்படுத்தும் நோக்கில் விலைமகளிர் பற்றிய செய்திகளைக் கூறியிருப்பதாகக் கருதலாம்.

**தொகுப்புரை**

அறம் வெல்லும்; பாவம் தோற்கும்; இன்ப துன்பங்கள் விதிவயப்படியே நடக்கின்றன; விதியினை வெல்ல இயலாது; அருளாளர்கள் பிறர் இன்னா செய்யினும் அவர்க்கு இனியவற்றையே செய்வர்; பொய்சாட்சி கூறுவோர் குலம் அழியும்; உலோப குணம் நற்குணங்கள் அனைத்தையும் அழித்து விடும்; பரத்தைமை ஒழுக்கத்தால் மிகுந்த பொருள் இழப்பு ஏற்படும் - எனும் தனிமனித வாழ்வியல் அறங்களைக் கம்பர் தமது இராமாவதாரத்தில் பல இடங்களில் வலியுறுத்திக் கூறுகின்றார்.

# அறம் உணர்த்திய கம்பர்

திருமிகு ந.மு.கவிதா
தமிழ்த்துறை உதவிப்பேராசிரியர், வேளாளர் மகளிர் கல்லூரி (சுயநிதிப்பிரிவு)
ஈரோடு.

மனித வாழ்க்கைக்கு ஆதாரமாக உள்ளது அறமாகும். தனிமனித வாழ்க்கையில் அறம் பின்பற்றப்பட்டால் தான் சமுதாய அரசியலில் அறம் வேர் ஊன்ற முடியும். கம்பர் அறத்தை நிலை நாட்டவே இராமன் பிறந்தான் என்பார். தனது ஆற்றல் மிக்க படைப்பாகிய கம்பராமாயணத்தில் நாம் கற்கத்தகும் அரசியல் அறங்கள் பலவற்றை விளக்கியுள்ளார்.

## அறம்

அறத்திற்கு ஒழுக்கம், நீதி, கடமை, புண்ணியம், வழக்கம், அறிவு, நோன்பு, ஈகை, அறக்கடவுள், சமயம், தருமம் எனப் பொருள் கூறுவர். தனிமனிதனின் வாழ்வும் பொது வாழ்வும் சீராக இயங்கத் தனிமனிதன், அரசு போன்றவர்கள் கடைப்பிடிக்க வேண்டிய ஒழுக்கத்தின் அடிப்படையிலான நெறி முறைகள் அல்லது கடமைகள்; (Ethics : Morality) (க்ரியாவின் தற்காலத் தமிழ், ப81)

அறம் என்பது ஒன்றை அறுத்துச் சொல்லப்படுவது. 'அறு' என்ற வினைச்சொல்லின் அடியாகப் பிறந்ததே அறமாகும். மனிதன் தனக்கென வரையறுத்துக் கொண்ட ஒழுக்க முறையே அறம் எனப்படும்.

## அறத்தின் இயல்பு

அறத்தினைக் கடைப்பிடித்தால், இப்பிறப்பில் புகழும், பேரின்பப் பெருவாழ்வாகிய வீடுபேறும் கிட்டும். ஆதனால் அறத்தின் இயல்பு வலிமை உடையது எனலாம்.

'அல்லவை செய்வார்க்கு அறம் கூற்றாகும்" (நான்மணிக்கடிகை)

'அரசியல் பிழைத்தார்க்கு அறம் கூற்றாவதூஉம்" (சிலம்பு பதிகம் -55)

'மனத்துக்கண் மாசிலன் ஆதல் அனைத்தறன்
ஆகுல நீர பிற" (திருக்குறள் -34)

மேற்கூறிய பண்டையோர் கருத்தைப் போற்றும் கம்பன், கம்பராமாயணத்தில் அறச்சிந்தனையை இழையோட விட்டுள்ளார்.

**அறம் வழுவாமல் ஆட்சி புரிதல்**

சிறந்த அரசன் என்பவன் ஆட்சி முறைக்கு உரிய அறத்திலிருந்து தவறாமல் ஆட்சி புரிய வேண்டும். அறமல்லாதவற்றை நீக்க வேண்டும். வீரத்தில் குறைவில்லாதவற்றை நீக்க வேண்டும். வீரத்தில் குறைவில்லாத மானத்தை உடையவனாக இருக்க வேண்டும். இதனை வள்ளுவர்,

'அறன்இழுக்காது அல்லவை நீக்கி மறன்இழுக்கா
மானம் உடையது அரசு" (திருக்குறள் -384)

என்ற குறளில் கூறுகிறார். இந்த வான்மறையைப் பின்பற்றி கம்பர் பல செய்யுள்களை இயற்றியுள்ளார்.

நாடாளும் மன்னன் மானத்திற்கு அஞ்சிவாழ வேண்டும். அறம் வழுவாமல் ஆட்சி புரிய வேண்டும். மனு தரும சாஸ்திரத்தின் வழியே நடந்து மன்னன் தன் ஆட்சியைக் காக்க வேண்டும். இவ்வாறு நடப்பவனே புகழுக்கு உடையவன். ஆற்று நீர் அப்படிப்பட்ட மன்னனின் புகழ் போல ஒடியது என்கிறார் கம்பர்.

'மானம் நேர்ந்து அறம் நோக்கி மனுநெறி
போன தண்குடை வேந்தன் புகழென
ஞானம் முன்னிய நான்மறையாளர் கைத்
தானம் என்னத் தழைத்தது நீத்தமே" (பாலகாண்டம், ஆற்றுப்படலம் 16)

இயல்பாய் நடக்கும் இயற்கை நிகழ்வில் கூட அறம் நிலைபெற வேண்டுமென்று எண்ணுகிறார் கம்பர்.

**குடிமக்களின் அறம்**

வளம் நிறைந்த நாடு கோசலம். வாழும் பெண்கள் அறத்தின் பண்பை உடையவர்கள். குறிப்பறிந்து விருந்தினர்களை உபசரிப்பர். ஈகை என்ற சொல்லுக்கு இலக்கணமாய் திகழ்பவர்கள். அறச்செயலைஅன்றி வேறு செயலை அறியாதவர்கள்.

'பெருந்தடக்கண் பிறைநுதலார்க் கெலாம்
பொருந்து செல்வமும் கல்வியும் பூத்தலால்
வருந்தி வந்தவர்க்கு ஈதலும் வைகலும்
விருந்தும் அன்றி விளைவன யாவையே" (பால, நாடு-16)

பெண்ணுக்கு நீதி புகட்டும் இப்பாடல் கோசல நாட்டு மக்களின் மாண்பை உணர்த்துகின்றது. இதன் மூலம் அரசு மட்டுமல்ல

குடிமக்களும் அறத்துடன் வாழ வேண்டும் என்பதை உணர முடிகிறது.

### சிறந்த அறம்

மனமறிந்து யார்க்கும் தீங்கு செய்யாமல் இருப்பதே சிறந்த அறமாகும். மனதில் மாசில்லாதவனால்தான் அவ்வாறு செய்ய இயலும். இதனை வள்ளுவர்,

"எனைத்தானும் எஞ்ஞான்றும் யார்க்கும் மனத் தானாம்
மாணா செய்யாமை தலை" (திருக்குறள் - 387)

என்பார்.

பிறர்க்கு தீங்கு செய்யாதிருத்தலே தலையாய அறம் என்பார் கம்பர். வாலி ஆற்றல் மிக்கவன். இராமன் அவனை மறைந்து நின்று அம்பு எய்து கொன்றான். அவன் இறந்த பின் அவன் மகன் அங்கதன்

"எந்தையே எந்தையே இவ்வெழுதிரை வளாகத் தியார்க்கும்
சிந்தையாற் செய்கையாலோர் தீவினை செய்திலாதாய்"
(கிட்கிந்தா காண்டம், வாலி வதைப் படலம் - 149)

என்று புலம்புகிறான். சிந்தனையும் மனமும் தூய்மையானதாக இருந்தால் அறம் பிறக்கும் என்கிறார் கம்பர்.

### அறத்தின் வகை

கம்பர் சொல்லாற்றல் மிக்கவர் கவிச்சக்கரவர்த்தி. அறத்துக்கு அரணாக விளங்குபவர். பண்பாட்டின் கண்ணாடி.மனித இனத்தின் மணிமகுடம் அறத்தை இல்லறம், வில்லறம், சில்லறம், நல்லறம் என வகைப்படுத்தித் தன் அறிவுசால் பண்பை உணர்த்துகின்றார்.

"இல்லறம் துறந்திலாதோர் இயற்கையை இழந்தும் போரின்
வில்லறம் துறந்தும் வாழ்வேற்கு இன்மை மேன்மை இல்லாச்
சில்லறம் புரிந்து நின்ற தீமைகள் தீருமாறு
நல்லறம் தொடர்ந்த நோன்பின் நவை அறநோற்பல் நாளும்"
(கிட்கிந்தா காண்டம், அரசியல் படலம் - 149)

என்ற பாடலில் கூறியுள்ளார்.

### உலக மாந்தர்க்கு அறம் உணர்த்திய கம்பர்

உலகில் அமைதி நிலவ வேண்டும். சமாதானம் தழைத்தோங்க வேண்டும். நன்னெறி படர வேண்டும். பகை கொள்ளாமல் வாழ்ந்து, போரைத் தடுத்து உயிர்களைக் காக்க வேண்டும். மக்கள் சமுதாயத்தின் அழிவுக்குக் காரணமாக உள்ளது பகை அதனை ஒழிக்கத் தன்

பாடலில் ஒரு வழி சொல்கிறார். புகழ் வேண்டும் என்றால் பகையை ஒழி என்கிறார். இதனை,

"யாரொ டும்பகை கொள்ளலன் என்றபின்
போரொ டுங்கும் புகழ் ஒடுங்காதுதன்
தாரொடுங் கல் செல்லாது அதுதந்தபின்
வேரொடுங் கெடல் வேண்டல் உண்டாகுமே"

(அயோத்தியாக்காண்டம், மந்தரைசூழ்ச்சிப்படலம்-1479)

என்ற பாடலில் கூறியுள்ளார். இப்பாடல் அரிய உலகத்தத்துவத்தை விளக்குகிறது.

ஊருடன் பகைக்கின் வேரொடு கெடும் என்பதற்கிணங்கப் பகை வந்தால் புகழ் ஒடுங்கும். அதனால் பகையை ஒழிக்க வேண்டும் என்கிறார் கம்பர்.

**அறம் தவறாத அரசு**

குடிமக்கள் நலமுடன் வாழ அறம் தவறாமல் ஆட்சி புரிய வேண்டும். அரசே அறம் தவவினால் வேலியே பயிரை மேய்ந்துவிட்டது போலாகிவிடும். அறம் தவவிய கைகேயியிடம் பரதன் அறத்தை அறுத்து, அருளைக் கொன்று விட்டாய் என்று புலம்புகிறார்.

"அறம்தனை வேர்அறுத்து அருளைக் கொன்றனை
சிறந்தநின் தண்ணளித் திருவைத் தேசழிந்து
இறந்தனை ஆமெனில் இறைவன் நீதியை
மறந்தனை உனக்கு இதின்மாசு மேலுண்டோ" (அயோ. பள்ளி-1479)

இப்பாடலில் அறத்தின்பால் பரதன் கொண்ட பற்று விளங்கும். தாயின்மேல் பாசமுள்ள பரதன், அவளது அறமற்ற செயலால் அவளை வெறுக்கத் துணிந்தான்.

இதன் மூலம் அறத்தின் முன் தாய், தந்தை என்ற உறவுகள் கூட நிற்காது என்பதை அறியலாம் .கம்பர் பாடிய அறத்தின் கூறுகளை நாமும் வாழ்வில் அறத்தைக் கடைபிடித்து அன்பு, பண்பு, அருள், ஈகை, உலக ஒற்றுமை, இரக்கம் முதலியவற்றைப் பெற்று மகிழ்வோம்.

# கம்பன் கூறும் சமுதாய அறங்கள்

திருமிகு. த. சிவக்குமார்
தமிழ்த்துறைத் தலைவர், ஆர்.வி.எஸ். கலை அறிவியல் கல்லூரி,
காரைக்கால்.

## முன்னுரை

தமிழாய்ந்த கம்பர், தமிழ் மண் வாசனையுடன், மரபு வழிப்பட்ட அறச்சிந்தனைகளைத் தம்காப்பியத்துடன் ஆங்காங்கு இழையவிட்டிருப்பதனையும் காணுதல் தேவையாகின்றது. திருக்குறளின் காலம் தொடங்கிப் பண்டை நூல்கள் யாவும் அறத்தையே முதன்னைப் படுத்தின. அறம் பாடவந்த அறிஞராகக் கம்பரைக் காட்டவும், அவரால் சுட்டப்பெறும் அறச்சிந்தனைகளை அடையாளங்காணவும் முயலுகின்றன. அவரின் கவிதைகள் வெளிப்படுத்தும் சிந்தனைகளும் கொள்கைகளும் பிறவும் எண்ணிலடங்கா. அவற்றுள் ஒன்றான 'அறம்' பற்றிய எண்ணங்களைத் தொகுக்கவும், பகுக்கவும், வகைப்படுத்திக் காணவும், இன்னதெனக் கண்டுரணவும் இக்கட்டுரை முனைகிறது.

## அறத்தின் மாறுபாடு

காலந்தோறும் வாழ்வியல் மாற்றங்கண்டு இருப்பதைத் தமிழ் இலக்கியங்கள் ஆவணப்படுத்தியுள்ளன. கள்ளுண்ணல், பரத்தமை, புலாலுண்ணல் போன்றவை சங்க காலத்தில் சமுதாயத்தால் வெறுக்கப்படாத சமூக இசைவினைப் பெற்ற வாழ்வியல் கூறுகள், அவையே திருக்குறளார் காலத்தில் ஒதுக்கப் பெற வேண்டியவைகளாகவும், சமுதாயத்தைக் கெடுப்பனவாகவும் சுட்டப்பெற்றன. இவ்வாறாக காலத்திற்கேற்ப சமுதாய தேவைகளுக்கு ஏற்ப அறங்களும் மாறுவது இயல்பானது. அத்தகைய மாற்றங்கள் நிலம், சூழல், நோக்கம், பிற தேவைகள் ஆகியவற்றின் கூறுகளைக் கருதாமல் எல்லா இடத்திற்கும், எல்லா காலங்களுக்கும் எல்லாருக்கும் உரிய மாறா அறங்கள் பல உள்ளன.

## ஒருமைப்பாடு மாற்றம்

வான்மீகிக்கு இரண்டாயிரம் ஆண்டுக்குப் பிந்திய கம்பர் வாழ்ந்த சகாப்தத்திலே, தேசிய ஒருமைப்பாட்டுப் பிரச்சனையும் இருந்தது. அத்துடன் மதவழி ஒருமைப்பாடும் அவசியப்பட்டுவிட்டது. வான்மீகி காலத்தில்லாத சமணமும் பௌத்தமும் கம்பர் காலத்தில் தமிழ் நாட்டிலே வலுவாகக் காலூன்றிக் கொண்டிருந்தன.

கம்பரது காலத்தில் தேவைப்பட்ட ஒருமைப்பாடு வேறு; இப்போது தேவைப்பட்டுள்ள ஒருமைப்பாடு வேறு; கம்பரது காலம் இன்றைக்கு சற்றேறக்குறைய ஆயிரமாண்டுகளுக்கு முற்பட்டதாகும். அவரும் வான்மீகி ராமாயணத்தை முதனூலாகக்; கொண்டுதான் தமிழ்ல் வழிநூல் படைத்தார். ஆகவே, வான்மீகி காலத்தில் தேவைப்பட்ட தேசிய ஒருமைப்பாடு வேறு கம்பரது காலத்தில் தேவைப்பட்ட ஒருமைப்பாடு வேறு கம்பருக்கு ஆயிரமாண்டுக்குப் பிற்பட்ட நம் காலத்துக்குத் தேவைப்படும் ஒருமைப்பாடு வேறு.

**கம்பனின் தேசீயம்**

கிஷ்கிந்தாபுரி வேந்தனான சுக்ரீவன் நாற்றிசைகளிலுள்ள நாடுகளையும் நிதிகளையும் மலைகளையும் விரிவாகக் கூறுவதைக் கேட்டு கோவல நாட்டரசான இராமன் வியப்படைகிறான். அதனால் சுக்ரீவனைப் பார்த்து பாரத நிலப்பரப்பை பற்றி எப்போது கற்றாய்? யாரிடம் கற்றாய்? என்று கேட்கிறான்.

'என் அண்ணன் வாலி என்மீது அடங்கச் சினங்கொண்டு யான் ஓரிடத்திலும் நிலைபெற வொட்டாது விரட்டி விரட்டி அடித்தான். அவனுக்குப் பயந்து நாற்றிசையும் ஓடியலைந்தபோது கற்றேன். என்றான் இது, வான்மீகி தரும் செய்தி.

கம்பர் தென் திசையைப் பற்றி மட்டும் வான்மீகி சொன்னதை விடவும் சற்று விரிவாகக் கூறுகிறார். ஆம் தமிழகம் அவரது தாய் வீடல்லவா! தாய் நாடு பரந்து கிடப்பினும் அதிலே தாய் வீடும் உண்டு தானே! ஆனால் நாட்டை மறந்து வீட்டை நினைப்பதுதான் தேசபக்தியற்ற போக்கு. அதை விடவும் நாட்டின் நலனுக்கு எதிராக வீட்டின் நலத்தை கருதுவது தேசத்துரோகம். இது கம்பர் கொள்கை. இங்கே தான் அவர் தேசிய வாதியாகிறார்.

கைகேயின் ஆணையால் இராமன், தம்பி, மனைவியுடன் காடு சென்றான். அயோத்தி வாழ் மக்களை எல்லாம் துயரக் கடலில் ஆழ்த்தி, பரதன் தன் மாமன் வீட்டிலிருந்து திரும்பி வந்து நடந்ததை எல்லாம் அறிகிறான். வெகுண்டு தாயை ஏசுகிறான். பட்டம் சூட்டிக் கொள் என்றியம்பிய வசிட்டனுக்கும் சபையோர்க்கும் தனது உள்ளடக்கிடையைக் கல்லும்உருகும் வண்ணம்,

"அன்னவன் தனைக் கொணர்ந்து அலங்கல் மாமுடி
தொன்னெறி முறைமையின் சூட்டுவேன்"

என்கிறான். தொடர்ந்து,

"அன்றெனின் அவனொடும் அரிய கானிடை
நின்றினிது அருந்தவம் நெறியின் ஆற்றுவன்"

என்பான். மேலே தன் மனத்தை மாற்ற ஏதோ வசிட்டன் கூற தொடங்குமுன்,

"ஒன்று இனி உரைப்பின் என் உயிரை நீக்குவேன்"

என்று அறத்தின் வெறியில், அன்பின் கொடு முடியில் நின்று பேசுவான் பரதன். பின் தம்பியை அழைத்து,

"முரசு அறைந்து இந்நகர் முறைமை வேந்தனைத்
தருதும் மீண்டு என்பது சாற்றித் தானையை
விரைவினில் எழுக என விரும்புவாய்" (அயோ - ஆறு - 17-21)

என்று ஆணையிடுவான். கம்பர் தம் காப்பியத்தின்வழியே முன் வைக்கின்றனர். அவருடைய எண்ணங்களுக்கு ஏற்ப மூலநூலின் பலநிகழ்வுகள் மாற்றங்கொள்கின்றன. மேற்சுட்டியாங்கு இராமனை எடைபோடுங்கள் அவன் ஓர் அறவழியாளனாகத் தோன்றுகிறான். "ஒன்றுமில்லாத நிலையிலிருந்து அறநெறிமுறைகளை உண்டு பண்ணுவது அறவழியாளனின் வேலையன்று. அவனே ஒரு சமுதாயச் சூழ்நியைவில் வாழ்கிறான். இந்தச் சமுதாயத்தில் குறிப்பிட்ட சில அறநெறிமுறைகள் இருந்து வருகின்றன... இந்த நெறிமுறைகளே அறவியல் நமக்கு அடிப்படைக் கருத்தாக அமைகிறது. இத்தகைய கண்ணோட்டத்தில் இரு மாதரைச் சிந்தையாலும் தீண்டாத போக்குடையவனாக இராமனைக்; கம்பர் முன் நிறுத்துகிறார். தாமாகவே விரும்பி வந்த சூர்ப்பணகையை இராமன் விலக்குவதும், பிறர் நல்லுரை கூறியபோது மறுதலித்து விட்டுச் சீதையை இராவணன் விழைவதும் தனிமனிதச் செயல்பாடுகளாகவே தென்படும். ஆனால் மன்னராகவும், வழிகாட்டுவராகவும் இவர்கள் இலங்குவதால் இவர்களின் அசைவுகள் ஒவ்வொன்றும் சமுதாயத்தில் தாக்கங்களை ஏற்படுத்துகின்றன. அவர்களின் இயக்கம் நல்வழி எனில் சமுதாயம் மகிழ்கிறது. மறுதலையாயின் வீழ்ச்சியையே அச்சமுதாயம் பெறுகின்றது.

"மறந்தும் பிறன்கேடு சூழற்க சூழின்
அறம் சூழும் சூழ்ந்தவன் கேடு" (குறள் - 204)

என்ற குறட்பா சிந்திக்கத் தக்கது. பிறன் என வந்துவிட்டாலே சமுதாயம் அங்கே இடம் பெறுகிறது. என்பது பொருள்.

**சமுதாயப் பண்பு**

கம்பர் இராமனைக் காப்பியத் தலைவனாக்கினார். ஆயினும் உதயணன், சீவகன் போல் ஒரு குற்றமும் இல்லாதவனாகப் படைக்காமல்,

"வாய்மையும் மரபுங் காத்து மன்னுயிர் துறந்த வள்ளல்
தூயவன் மைந்தனே நீ பரதன் முன் தோன்றினாயே
தீமைதான் பிறரைக் காத்துத் தான் செய்தால் தீங்கன்றாமோ"

என்று வாலி ஏசுவதற்குக் காரணமான குற்றம் உடையவனாகப் படைத்தார். பரதன், வாலி, சடாயு, அனுமன், சீதை, தாரை, ஆகியோரின் படைப்புகளும் உயர்ந்தவையே. கோசலத்து வீரம் மட்டுமன்றி, கிட்கிந்தையின் வீரமும் இலங்கையின் வீரமும் உயர்ந்தவையே. அரசகுமரன் பரதனின் அன்பு மட்டுமன்று காட்டு வேடன் குகனின் அன்பும் உயர்ந்ததே. கோசலத்து அன்புக்குப் பரதன், இலங்கையின் அன்புக்குக் கும்பகர்ணன், கிட்கிந்தையின் அன்புக்கு அனுமன், வேறு வேறு குலம், ஆனால் பண்பு ஒன்று என்று காட்டுகிறார் கம்பர். இளங்கோ கண்ட கனவு - பண்புகளுக்குச் சிறப்புக் கொடுத்து ஆட்களைப் பெரிதாக மதிக்காத அவர்களின் பிறப்பு, சமுதாய நிலை ஆகியவற்றைப் பொருட்படுத்தாத காப்பிய நெறிக்கனவு கம்பரால் ஒருவாறு நனவாக்கப்படுகிறது. அதன் விளைவே அவரது காப்பியத்தில் உள்ள மானிடப் பொதுமைப் பண்பு ஆக்கம்.

"மானுடம் வென்ற தன்றே"

என்று கம்பர் கூறுவது சுக்ரீவன் கண்டஇராமன் அளவிலன்றி மேற்கூறிய கருத்தில் அவரது காப்பிய முழுமைக்கும் பொருத்துவது, காப்பியத்தில் ஒருவனைத் தலைவனாக்க வேண்டிய நிலை, வான்மீக முதனூலால் அவருக்கு இருந்தது. ஆயினும், கருத்தளவில் அதை விரும்பவில்லை என்பதை, எந்தப் பேரரசு சித்தாந்தம் புலவர்களின் காப்பிய மரபைமாற்றி ஒரு தலைவன் துதிபாடச் செய்ததோ, அப்பேரரசுச் சித்தாந்தத்தையே ஏற்றுக் கொள்ளதவர்போல்,

"மன்னன் உயிர்த்தே மலர்தலை உலகம் புறம்"

என்று வழி வழி வந்த அரசத் தன்மைக் கொள்கையையே மாற்றி,

"செயிரிலா உலகினில் சென்று நின்று வாழ்
உயிரெலாம் உறைவதோர் உடம்பும் ஆயினான்"

என்று அவர் தசரதனைப் பற்றிக் கூறுவதால் அறியலாம்.

**சமுதாய அறம்**

நல்லதோர் சமுதாயங்காண விழைந்த காவிய ஓவியனைக் கம்பர் சுய அறிமுகத்தால் இனங்காட்டுகிறார்.

சத்ருக்கனன் கூனியை அடித்து துன்புறுத்த நெருங்குகின்றான். வான்மீகத்தில் அடித்து ஒறுத்ததாகவே வருகின்றது. கம்பர் பரதனை இடையில் நிறுத்துகிறான். "பெண்ணைத் துன்புறுத்துவது அறமன்று. சமுதாயத்தில் விலக்கப் பெற்ற செயல்பாடுகளுள் அதுவும் ஒன்று. அவளை அடித்தால் சமுதாய அறந்தவறி நடப்பவர்கள் ஆவோம். அஃது இராமனுக்குப் பிடிக்காது. நம்மை வெறுப்பான்" என்று பரதன் பகர்வான்.

குகன் இராமனுக்குத் தேனையும், மீனையும் வழங்குகிறான். "குகனுடைய வேண்டுதல் இராமனைத் திக்கு முக்காடச் செய்துவிட்டது. இராமனோ சைவ உணவு உண்பவன், இருப்பதோ முனிவர்களின் ஆசிரமம் சற்று நேரத்திற்கு முன்புதான் கீரையுணவு முனிவர்களோடு உண்டு முடித்தான். குகனுடைய பரிவு இராமனை ஏற்கும்படி வேண்டுகிறது. வேதனையும் மீனையும் வேண்டாமென்று மறுத்து வீட்டில் குகனுடைய மனம் வேதனைப்படும். சங்கடமான நிலையை மிகச் சாமார்த்தியமாகச் சமாளிக்கிறான் இராமன்,

> "அரியதாம் உவப்ப உள்ளதன்பினால் அமைந்த காதல்
> தெரிதரக் கொணர்ந்த என்றால், அனிழ்தினும் சீர்த்ததன்றே?
> பிரிவினின் தழீஇய என்னின் பவித்திரம் எம்மன்னோர்க்கும்
> உரியன் அனிதின் நாம் உண்டனென் அன்றோ"

என்கிறான். இரு சாராரையும் திருப்தி செய்யும் சொற்றொடரைப் பயன்படுத்திய இராமனைப் பாராட்டுவதா? இராமன் உற்றாகக் கையாண்ட கம்பரைப் பாராட்டுவது"

தனி மனித அறங்களும் சமுதாய அறங்களும் சிலபோழ்து முரணிய நிலையில் ஒன்றையொன்று எதிர்கொள்ள வேண்டியும் வரலாம். அப்போது அவ்வறங்கள் தத்தம் தனித்;தன்மையைக் காத்துக் கொள்ளும். தயரதன் கூறுவது போல அவரவரே அவரவர் தம் தருமத்தைக் காத்துக் கொள்கின்றனர். சமுதாயத்தில் அறம் தலை தூக்கி நிற்கத்தோன்றிய இராமனை அதனால் தான் பலகோணங்களில் அறவடிவினன் என்கிறார் கம்பர்.

**முடிவுரை**

நட்பின் இலக்கணத்தை நட்பறத்தைச் சடாயு பேசுவான்.

இப்படி பல நிகழ்வுகளால் சமுதாய அறங்களை இனங்காட்டும் கம்பரின் கவிதை உலகை ஆண்ட அவரது கருத்துலகில் பேரரசன் சிறப்பில்லாதவன். அவன் மக்களின் தொண்டனே. அவர் இவ்வாறு கருதினும் இராமனையே தம் காப்பியத்திற்குத் தலைவணங்கினார். அவர் பரம்பொருளின் அவதாரம் எனக் கம்பர் துணிந்தமை ஒன்று அவனது பணியில் அவருக்கிருந்த தனித்த ஈடுபாடு மற்றொன்று. ஆதலின் காப்பியத் தொடக்கத்திலேயே "அவர் தலைவர் அன்னவர்க்கே சரண் நாங்களே" எனக் குறிப்பிடுகின்றார். இது பத்தியின் விளைவு.

# கம்பனில் சமுதாய அறம்

முனைவர் இரா. காமராசு
இலக்கியத்துறை உதவிப்பேராசிரியர், தமிழ்ப் பல்கலைக்கழகம்,
தஞ்சாவூர்.

கம்பன் மானிடத்தைப் போற்றியவன். மக்களை மையமிட்டு தன் காப்பியத்தைப் படைத்தவன். கம்பன் வாழ்ந்த காலச் சூழல் முக்கியமானது. அவன் வாழ்ந்த கி.பி. 12ஆம் நூற்றாண்டு தமிழகத்தில் பேரரசு நிலைகொண்ட காலம். கடல் கடந்தும் எல்லைகளை கடந்தும் எல்லைகளை அமைத்த ஏகாதிபத்தியம் உருவான காலம். உழவர்களை, தொழிலாளர்களை விரட்டி விரட்டி வரிகள் பல விதித்து அரசின் கருவூலங்கள் நிரம்பு வழிந்தக் காலம். மடங்கள், பண்ணைகள், பெருநிலக்கிழார்கள் ஆகியோரின் ஆதிக்கமும் உழைக்கும் மக்கள்மீதான சமூக அவமதிப்புகளும் பெருகிய நிலை. மன்னன் இறைவனுக்கு நிகராக நிறுவப்பட்டச் சமூகச்சூழல். பிராமணர்களும், மனுதர்மமும் சமூகத்தளத்தில் மேலுக்கு வந்து அரச உரிமை பெற்றதான தருணம்.

இக்காலத்தே வாழ்ந்து, கல்வி கற்று பேரிலக்கியம் படைக்கும் அளவுக்கு விழிப்புற்ற கம்பனை சோழ அரசர்கள் கொண்டாடவில்லை. ஆதரிக்கவில்லை. சடையப்ப வள்ளல் என்கிற நிலவுடைமையாளரின் நிழலிலேதான் கம்பன் வாழ்ந்தான். கம்பன் தன் கால அரசை, அரசனை, சமூக நியதிகளை ஏற்றுக் கொள்ளவில்லை. அவனிடம் இவை குறித்த பகைவுணர்வே மண்டிக் கிடந்தது. எனவேதான் வால்மீகியின் கற்பனைகளிலிருந்து மாறி தமிழ் மரபைப் பலவிடங்களில் பின்பற்றியவன் தன் காலத்து நிகழ்சமூகத்தை விமரிசிக்கும் வகையில் பல காட்சிகளை, கருத்துருக்களைத் தன் காப்பியத்திலே படைக்கிறான்.

'மன்னன் உயிர்த்தே மலர்தலை உலகம்' என புறநானூறு சுட்டும். 'மன்னுயிர் ஞாலத்து இன்னுயிர் ஒக்கும் மன்னன்' எனப் பெருங்கதை கூறும். அரசனை கடவுளாகவும், உயிராகவும், உருவகித்து காட்டின பண்டைய இலக்கியங்கள். ஆனால் கம்பனோ இதற்கு நேர்மாறாக தசரதனை இப்படி அடையாளப்படுத்துகிறான்.

"வையகம் மன்னுயிராக அம்மன்னுயிர்
உய்யத்தாங்கும் உடல் அன்ன மன்னனுக்கு"

மன்னன் உடல், அவ்வுடலை இயக்கும் உயிர் மக்கள் என்ற இந்தக் கருத்து சனநாயகத்தின் ஊற்றுக்கண். இப்படிச் சிந்தித்தக் கம்பன் தன் காலத்து மன்னராட்சியை மறுதலிப்பதாகவே கொள்ள வேண்டியுள்ளது.

அரசு அதிகாரத்தைத்தான் நிலைநாட்டும். அறம் அதற்கு பொருட்டல்ல, மாறாக சமுதாயம் அறத்தை முன்னிலைப்படுத்தும். குடிமைச் சமூகத்தில் அரசதிகாரம் அறத்தை தன்வயப்படுத்தும். காலம் தோறும் சமுதாயத்தின் மனசாட்சியாக கலைஞர்கள் திகழ்கிறார்கள். கம்பன் தன் காலத்து சமுதாய அறங்களை கம்பராமாயணம் வழியே முன்வைக்கின்றான்.

சமுதாயம் என்பதற்கு விளக்கமாக மனிதன் தோன்றி பன்னெடு நாட்களுக்குப் பின்பே சமுதாயம் உருவாகி இருக்க வேண்டும். அது என்று என்பதை அறுதியிட்டுத் திட்டமாகக் காட்ட இயலாவிட்டாலும் ஒன்றை திட்டமாகக் கூற இயலும். மனித உள்ளம் பண்பாட்டை அறிந்து கொண்ட நாளே சமுதாயம் தோன்றிய நாள். மனித வாழ்வோடு பண்பாடு இணைந்த நாளே சமுதாயம் உருவான பெருநாள். (அமுடபரம சிவானந்தம், சமுதாயமும் பண்பாடும் ப.26) எனச் சுட்டுவர்.

**வறுமையும் வளமையும்**

வறுமையின் கொடுமையை உணர்ந்தவர் கம்பர். பொருள் இல்லாமை அருள்இல்லாமைக்கு அடிப்படையாகி அறம் கேள்விக் குள்ளாவதை அறிந்தவர் அவர். கல்வியும், கருத்தும் நிறைந்தும் பொருள் குறைவால் தான் பட்டப்பாட்டின் ஊடாக மக்கள் சமூகத்தின் மனநிலையை உள்வாங்கியவர். இந்த உணர்வுநிலை காரணமாகவே அவர் படைத்தச் சமுதாயம் வளம் நிறைந்ததாக இருக்கின்றது.

"கொள்வார் இலாமையால் கொடுப்பார்களும் இல்லைமாதோ"

எந்த ஒரு மனிதனும் தன்னிடம் இல்லை என்கிற நிலையில் தான் அடுத்தவரை நாடி யாசிக்கிறான். அவ்வகையில் கோசல நாட்டில் பொருளை யாசிப்பவர் இல்லாததால் கொடையாளிகளும் இல்லை அப்படி வளமையான சூழல்

"எல்லாரும் எல்லாப் பெருஞ்செல்வமும் எய்தலாலே
இல்லாரும் இல்லை, உடையார்களும் இல்லை மாதோ"

எல்லாருக்கும் எல்லாமுமான சமுதாயத்தில் மேல், கீழ் ஏது. உடைமையற்ற, உரிமைப் பெற்றச் சமுதாயத்தைக் கம்பன் கனா காண்கின்றான்.

"வண்மை இன்மை ஓர் வறுமை இன்மையால்"

வள்ளண்மைக்கு இடம் இல்லை. ஏனெனில் வறுமை அங்கில்லை. பசியும் வறுமையும் பிணியானால் கொடையும் அறமும் மருந்தாகத் தேவைப்படும். இவை இல்லாதபொழுது இத்தகு அறங்கள் தேவையற்றதாகி விடுவதைக் கம்பன் அழகாகச் சித்தரிக்கின்றான்.

**கல்வியறிவு**

எந்தவொரு சமுதாயமும் மேன்மையுற கல்வியறிவு அடிப்படை யானது அறங்களிலேயே தலையாய அறம் கல்வி வழங்குதலே என நீதி நூல்கள் உரைக்கின்றன. கம்பனும் கல்வியைப் போற்றுகின்றான்.

"கல்லாது நிற்பார் பிறர் இன்மையின் கல்விமுற்ற
வல்லாரும் இல்லை அவை வல்லர் அல்லாரும் இல்லை"

கோசல நாட்டில் கல்வியறிவற்றவர்கள் யாரும் இல்லை. எனவே கல்வியுடையார் என்று யாரையும் விளிக்க முடியாது. எல்லோரும் சமமான கல்வி உடையவர்களாக விளங்கினர் என தன் எண்ணத்தைக் கம்பன் பதிவு செய்கிறான். மேலும், கல்வியின் சிறப்பினை அழகாக காட்சிப்படுத்துகிறார்.

"ஏகம் முதல் கல்வி முளைந்து எழுந்து,
எண்இல் கேள்வி ஆகும்முதல் திண்பணை போக்கி அருந்தவத்தின்
சாகம் தழைத்து, அன்பு அரும்பி, தருமம் மலர்ந்து
போகங்கனி ஒன்று பழுத்தது போலும் அன்றே."

அன்பு என்னும் அரும்பினைத் தோற்றுவித்து தருமம் என்னும் மலரை மலரச் செய்து பேரின்பம் என்னும் பழத்தைப் பழுக்கச் செய்வதைப் போல் - கல்வி என்னும் ஒரு விதையானது முளைத்து, வளர்ந்து அளவற்ற கேள்விகள் என்னும் கிளைகளை வளர விட்டு செய்தற்கரிய தவம் என்னும் இலைகளைத் தழைக்கச் செய்கிறது என்பதன்மூலம் கல்வியின் சிறப்பினைச் கூறி அதனை அறத்தோடு ஒப்பிடுகிறார்.

கம்பன் இதோடு நிற்கவில்லை. நிலவுடைமை கோலோச்சிய ஆணாதிக்கம் கொடிகட்டிப்பறந்த சமுதாயத்தில் வாழ்ந்த கம்பன்,

"பெருந் தடங்கண் பிறைநுதலார்க்கு எலாம்
பொருந்து செல்வமும் கல்வியும் பூத்தலால்"

என்று கல்வியும் செல்வமும் பெண்களுக்கு இருந்ததாகக் கற்பனை செய்கிறான் எவ்வளவு துணிச்சல்?

## சாதி ஒழிப்பு

சமுதாயத்தின் பெருங்கேடுகளுள் ஒன்று சாதி. நாட்டு முன்னேற்றத்திற்கும், மக்கள் ஒற்றுமைக்கும் தடையாக இருப்பது சாதி. கம்பன் மனித ஒற்றுமைக்கு மட்டுமல்ல, உலக உயிர்களின் ஒருமைப்பாட்டிற்கும் வித்திட்டவன்.

சாதிமுறையைக் கடுமையாகக் கண்டிப்பதற்காக, அதன் தீங்கை அழுத்தமாக உணர்த்துவதற்காக மிகச் சரியான இடமாக, களமாக கும்பகர்ணன் குற்றுயிரும் கொலையுயிருமாக கணைகளால் துளைக் கப்பட்டு உயிருக்குப் போராடிக் கொண்டிருக்கும் நேரத்தில் தன் முன் நிற்கும் இராமனைப் பார்த்து கூறுகின்ற இடம் அமைந்துள்ளது. வீடணன் இளமைதொட்டுப் பேணிவரும் நல்லியல்புகளை, அறவழிச் சிந்தனைகளைப் பற்றி பலவாறு எடுத்துக் கூறுகிறான். அங்ஙனம் கூறுகையில் அவனுக்கு நீதியின் பாற்பட்ட நெடுந்தரும நெறி தவிர வைதீக வழிவந்த சாதி நெறியான சிறுநெறி அறவே கிடையாது என்று கூறுகின்றான்:

"நீதியால் வந்ததுஒரு நெடுந் தரும நெறி அல்லால்,
சாதியால் வந்த சிறு நெறி அறியான் என் தம்பி"

நீதியை உயர்பண்பாக ஒழுகும் நெடுந்தரும நெறியைப் போற்றியும் மனித குலத்தை இழிவுப்படுத்தும் சிறு நெறியாகிய சாதி முறையை இகழ்ந்தும் பேசுவதில் கம்பனின் சாதியற்றச் சமுதாயத்தை நிலை நிறுத்தும் அறநிலையை உணரமுடிகிறது.

## சமயப் பொதுமை

மக்களை நல்நெறிப்படுத்த உருவானவை சமயங்கள். காலப் போக்கில் மக்களைப் பிளவுப்படுத்தவும், மக்களிடத்து உயர்வு, தாழ்வு கற்பிக்கவும் சமயங்கள் காரணமாகிப்போயின. உயர்நிலையில் சமயப்பொறை வலியுறுத்துவதே பேரறமாகிப் போனது. கம்பன் வாழ்ந்த காலத்தே சோழநாட்டில் சமயப் பூசல்கள் அதிகரித்திருந்தன. குறிப்பாகச் சைவ, வைணவச் சண்டைகள் பெருகியிருந்ததைக் கண்ட கம்பன் சமயப் பொதுமையை வலியுறுத்தவே தனது கடவுள் வணக்கப் பாடலைப் பொதுமையாகப் படைத்துப் புதுமைப் படைக்கிறான்.

"உலகம் யாவையும் தாம் உளவாக்கலும்
நிலை பெறுத்தலும், நீக்கலும், நீங்கலா
அலகு இலா விளையாட்டு உடையார் - அவர்
தலைவர்; அன்னவர்க்கே சரண் நாங்களே"

இது பொதுமை வாழ்த்து. இதில் குறியீடுகள் இல்லை. இதைப்போலவே நாடவிட்ட படலத்தில்,

"அரன் அதிகன் உலகு அளந்து அரி அதிகன்
என்று உரைக்கும் அறிவிலோர்க்குப்
பரகதி சென்று அடைவு அரிய பரிசேபோல்
புகல் அரிய பண்பிற்று ஆமால்"

என்பதன் மூலம், சிவனும் திருமாலும் ஒன்று என்று பகுத்துக் கூறத் தக்க தத்துவஞானம் இல்லாதவர்கள் நற்கதியை அடைவதில்லை என உணர்த்துவது சைவ, வைணவ வேறுபாடு மட்டுமல்ல பர சமய வேறுபாடுகளும் கூடாது என்பதற்காகவே பாடப்பெற்றதாகத் தோன்றுகின்றது.

**அரசியலறம்**

சமுதாயத்தின் ஒட்டுமொத்த நடவடிக்கையும், அரசிலும், அரசியலிலும் அடங்கி நிற்கின்றது. எனவே அரசியலில் அறம் மிகவும் அடிப்படையானது. கம்பன் பல்வேறு நிலைகளில் அரசியல் அறத்தினைத் தன் காப்பியத்தில் படைந்துள்ளான்.

வசிட்டர் இராமனுக்குக்கூறும் அறிவுரையின் வாயிலாக அரசனுக் குரிய இயல்புகள் அறங்களாக கம்பனால் முன் வைக்கப்படுகின்றன.

- நல்லறமும் மனச்செம்மையும், அருளும் கைக்கொள்ள வேண்டும்.
- பத்து தீயப்பழக்கங்கள் - சூது, வேட்டை, பகல் தூக்கம், வம்புவளர்ப்பு, காமம், இச்சை, பாட்டு, கூத்து, வாத்தியம், திரிச்சல், முதலிய தீயபழக்கங்கள் தவிர்க்க வேண்டும்.
- புலனடக்கம் வேண்டும்.
- பகை கூடாது
- நடுவுநிலைமை
- பொருள் வளம்
- உயிர் நேயம்
- இன்சொல், ஈகை, முயற்சி, தூய்மை, சீர்மை, வெற்றி, நீதி ஆகிய பண்புகள்

- உடைமை
- காலங்கருதுதல்
- சான்றோர் சொல் கேட்டல்

இவை அரசர்க்குரியவை. இவற்றைப் பின்பற்றினால்தான் அரசியலறம் ஓங்கும்.

மன்னனாக இருந்தாலும் குடிமக்களிடம் அன்பு காட்டுவதில் தாயாய் இருந்து அதே நேரத்தில் சமுதாயத்திற்குத் தீங்கு புரியும் கொடியவர்களை அறத்தின் வரம்பு கடவாமல் தீயாச்சுட்டுத் திருத்த வேண்டும் என்பதை,

"நாயகன் அல்லன், நம்மை நனி பயந்து எடுத்து நல்கும்
தாய் என, இனிது பேணி, தாங்குதி தாங்குவாரை
ஆயது தன்மையேனும், அறவரம்பு இகவா வண்ணம்
தீயன வந்தபோது சுடுதீயால் தீமையோரை"

என்ற பாடல்வழி கம்பன் உணர்த்துகின்றான்.

கம்பன் அவன் காலத்தில் நிலைபெற்று விட்ட வர்ணாசிரம தர்மத்திற்கு எதிராக பல கருத்துக்களைக் கம்பன் முன்வைக்கின்றான். அரச ஆதரவு பெற்று சநாதனமும் பிரமணியமும் முன்னிலை பெற்ற நிலையில் கம்பனின் கருத்தியல் கவனிக்கத்தக்கது.

பாலகாண்டத்தில் இடம்பெறும் மாவலி கதை. இவ்வுலகையும் மேலுலகையும் கைப்பற்றி மாபெரும் வேள்வியில் ஈடுபடுகின்றான் மாவலி. தான் கைப்பற்றிய உலகம் முழுவதையும் பிராமணர்களுக்குத் தானமாக வழங்குகின்றான். இக்கொடியவனின் கொட்டத்தை அடக்க எண்ணி திருமால் வாமனாவதாரம் எடுத்துவந்து மூன்றடிமண் கேட்டு அவனையழிக்கிறார்.

இந்தக் கதையில் இரண்டு கூறுகள் உள்ளன. ஒன்று பிராமணர்களுக்கு நிலங்கள் தானமாக அளிக்கப்படுவது. மற்றொன்று மக்கள் கோரிக்கையையேற்ற திருமால் வாமனாவதாரம் எடுத்து மாவலியை அழிப்பது.

இக்கதை பிராம்மணர்களுக்கு விளை நிலங்களையும், கிராமங்களையும், கன்னிகளையும், பசுக்களையும் மக்களிடமிருந்து பறித்துத் தானமாக வழங்கிய சோழமன்னர்களுக்கு எதிரானது

மட்டுமல்லாமல் பெருநிலவுடைமையாளர்களாக விளங்கிய பிராமணர்கள் மீது கம்பன் காட்டிய எதிர்ப்புணர்வு என்றும் விளங்கிக் கொள்ளலாம்.

"சமுதாயத்தின் ஓர் அங்கமாய் அதனோடு இணைந்தும் முரண்பட்டும் மோதியும் இசைந்தும் குறிப்பிட்ட சூழலில் வாழ்கிறவன் மனிதன். மனித குலத்தில் தானும் ஒருவனாய் வாழும் அவன் வாழ்க்கை நடைமுறைகளின் காரணமாக அமையும் உணர்வு நிலையின் ஒரு வெளிப்பாடாக இலக்கியத்தைத் தோற்றுவிக்கிறான்." (தி.சு. நடராசன், திறனாய்வுக்கால, ப. 52) என்ற கூற்றிற்கேற்ப கம்பனின் இலக்கியப் பெரும்படைப்பில் சமுதாய வெளிப்பாடு அமைந்துள்ளது.

கம்பன் தன் காப்பியத்தில் தனிமனித அறம், சமுதாய அறம், அரசியலறம் என்ற நிலைகளில் அறத்தினை மையப்படுத்தியே காட்சிகளை அமைத்து கருத்துக்களை முன் வைக்கின்றான். எனவே தான் மன்னர்கள் போற்றாத போதும் மக்கள் அவனுக்கு வழங்கிய கவிச்சக்கரவர்த்தி என்னும் பட்டம் நிலைத்துவிட்டது.

# கம்பர் காட்டும் அரசியல் அறம்

திருமிகு. ஐ.பபீதா
தமிழ்த் துறை, உதவிப் பேராசிரியர், அக்சிலியம் கல்லூரி,
வேலூர்.

## முன்னுரை

கம்பன் காட்டக்கூடிய அரசியல் தலைவனும் அறச்சிந்தனையாளனாக விளங்கக்கூடியவனும், புறப்பகையால் மட்டுமின்றி அகப்பகையாலும் வெல்ல முடியாத நகரம் என்னும் பொருளில் வழங்கப்படும் அயோத்திக்கு அரசனாக திகழ்க்கூடியவன் தசரதன். இவனது அரசியலையும் அறச்சிந்தனையையும் ஆராய்ந்து செல்வதே இக்கட்டுரையின் நோக்கமாகும்.

## அரசனின் இயல்புகள்

தசரதனை யாரும் அரசனாகக் கருதவில்லை. அயோத்தி மக்கள் யாவரும் தங்கள் தாயைப்போலவே கருதினார்கள். மன்னனும் மக்களை தன் உயிராகவும் தான் அவர்களின் உடலாகவும் கருதி வந்தான். இதனை,

'உயிரெலாம் உறைவதோர் உடம்பின் ஆயினான்;' (177)

என்ற வரிகள் உணர்த்துவதோடு, அங்கு வாழும் மக்களுக்கு எந்த குறையும் ஏற்படாமல் முறையாக ஆட்சி செய்தததனையும் கம்பர் குறிப்பிடுகிறார்.

முறையோடு குடிமக்களை காக்கும் மன்னனை, மக்கள் இறைவனாகக் கருதுவர் என்பதனை வள்ளுவப் பெருந்தகையும்,

'முறைசெய்து காப்பாற்றும் மன்னவன் மக்கட்கு
இறைஎன்று வைக்கப் படும்' (குறள். 388)

என்கிறார். இதே கருத்தை வலியுறுத்தும் விதமாக சங்க இலக்கியப்பாடல் ஒன்றும்,

'நெல்லும் உயிரன்றே நீரும் உயிரன்றே
மன்னன் உயிர்த்தே மலர்தலை உலகம்
அதனால் யான்உயிர் என்பது அறிகை
வேல்மிகு தானை வேந்தர்க்கு கடனே' (புறம். 186)

என்ற வரிகளும் நெல்லும் நீரும் உலக உயிர்களைக் காக்கும்

தன்மையுடையன. ஆனால் அவற்றைவிட மேலாக மன்னனே உலகின் உயிராக விளங்கினான். அத்தகைய உயிராக, தசரதனைக் கம்பர் படைத்துக் காட்டுகின்றார்.

பாரத நாட்டின் 56 தேசங்களுக்கும் அவன் ஒருவனே பேரரசனாக இருந்த காரணத்தினால் அவனை 'சக்கரவர்த்தி' என்றே யாவரும் அழைத்தனர். சரயு நதிக்கரையில் உள்ள அயோத்தி என்ற பெரிய பரப்புள்ள நாட்டையே கொண்டிருந்தாலும் ஒரு சிறுநிலத்தைப் போற்றிக் காக்கும் உழவனைப்போல ஆட்சி செய்தான் இதனை,

'வையகம் முழுவதும் வறிஞன் ஓம்புவோர்
செய் எனக் காத்து இனிது அரசு செய்கின்றான் (கம்ப. 179)

என்று அவனுடைய ஆட்சிமுறை கம்பரால் குறிப்பிடப்பட்டுள்ளது.

**அரசியலில் அறம்**

இராமாயணத்தில் கூறப்படுவது முடியாட்சி அரசியலாய் இருந்தாலும், அது எக்காலத்துக்கும், பொருந்தக்கூடிய அறவழி அரசியலாய் மாற்றம் அடையக் கம்பர் சுட்டிய அறமே காரணம் ஆதலால் அரசியலிலும் ஒரு தனி அறம் கம்பரால் கடைப்பிடிக்கப்பட்டதை அறிக!

அரசியல் என்று சொல்லும்போது அது நாட்டை ஆளக்கூடிய அரசனையும், அரசனுக்கு ஆலோசனைக்கூறும் அமைச்சர்களையும், நாட்டிலே வாழும் மக்களையும் ஒருங்கே இணைக்கக்கூடியது. இவ்வாறாக மூவகையினரையும் இணைக்கக்கூடிய கருவியாக அறம் அமைந்துள்ளது. இத்தகைய அரசியல் நிலைமையைப் பெறும் சமுதாயமானது வரலாற்றிலும் நீங்காமல் நிலைப்பெற்று நிற்கும். சிறப்பையும் செல்வத்தையும் அழிக்கும் அறமே உயிர்வாழ்க்கைக்கு மேலானது (குறள்.31) என்றும், மனத்தில் குற்றம் இல்லாதவனாக இருத்தலே சிறந்த அறம் (குறள்.34) என்றும் வள்ளுவப் பெருந்தகை குறிப்பிடுகிறார். மேலும், பொறாமை, பேராசை, சினம், கொடியசொல் ஆகியவற்றை நீக்கி வாழ்வதும் அறமே இதனை,

'அழுக்காறு அவாவெகுளி இன்னாச்சொல் நான்கும்
இழுக்கா இயன்றது அறம்' (குறள்.35)

என்று கூறுவதன் வாயிலாக அரசனும், குடிமக்களும், அமைச்சர்களும் இதனைப் பின்பற்றி வாழலாம் என்பது பொதுநோக்கு! அறம் என்பது நல்வினை; நல்வினை ஒன்றே உயிர்க்கு உறுதியாவது என்று

மணிமேகலையும் வற்புறுத்துகிறது. உலக வாழ்க்கை நிலையற்றது, நிலைத்து நிற்பது அறம் ஒன்றேதான் என்பதனை,

"இளமையும் நில்லா யாக்கையும் நில்லா
வளவிய வான்பெருஞ்செல்வமும் நில்லா
புத்தேள் உலகம் புதல்வரும் தாரார்
மிக்க அறமே விழுத்துணை யாவது" (மணி. காதை 22 வரி :135-138)

என்ற வரிகள் வாயிலாக சாத்தனாரும் அறமே சிறந்தது என்று நிறுவியுள்ளதை அறிக!

அரசாள்பவர் அருளையும், அறத்தையும் பின்பற்றி வாழ்ந்தால் அக்குடி மக்கள் சிறப்புற வாழ்வார்கள்! நாட்டு மக்கள் சிறப்புற வாழவேண்டுமென்றால் அவர்களுக்கு உணவு, உடை, உறைவிடம் போன்றவற்றை அமைத்து தருவதும் சிறந்த அறமே (மணி. காதை.25 வரி 226-231) என்பதையும் ஒப்பு நோக்குக!

இராமனின் முடிசூட்டு விழாவைத் தன் விருப்பமாக முடிவு செய்யாமல் மக்களின் முடிவாக இதனை விடுத்து அனைவரின் ஒப்புதலையும் பெற்று, மக்களின் அரசியல் விழாவாக அதனை அமைத்தான தசரதன். இராமன் முடிசூடப் போவதை எண்ணி மக்கள் மகிழ்ச்சி ஆரவாரம் செய்தனர், இராமனின் பண்பு பற்றி கூறும்போது, மன்னனே இராமனை பெற்றெடுத்த உனக்கு இராமன் நல்லனாய் இருப்பதில் வியப்பில்லை, உலக உயிர்களுக்கும் அவன் நல்லவனாக உள்ளான் என்பதை,

"தற்பயந்து எடுத்த
உன் உயிர்க்கு என நல்லன், மன்னுயிர்க்கெலாம் உரவோய்!'

என்று கூறுவதிலிருந்து மன்னன் தன் முடிவை தானாக எடுக்காமல் மக்களின் முடிவினை ஏற்று செயல்படும் அரசியல் பாங்காக கம்பர் படைத்திருப்பது பாராட்டுதற்குரியது. இராமனின் முடிசூட்டு விழாவை முன்னிட்டு அரசியல் அறத்தைக்கூற வேண்டும் என்று தசரதன் வசிட்ட முனிவரிடம் வேண்டி நின்றான். இராமனுக்கு அறிவுரை வழங்க வசிட்ட முனிவனும் இராமன் திருமனை சென்றபோது அவர் வரவை அறிந்த இராமன் வாயிலில் வந்து வரவேற்றான்.

வசிட்ட முனிவர் அரசன் பெற்றிருக்க வேண்டிய அறங்களைக் கூறும்போது,

"இனிய சொல்லினன்; ஈகையன் எண்ணினன்
வினையன்; தூயன்; விழுமியன்; வென்றியன்
நினையும் நீதிநெறி கடவான் எனில்
அனைய மன்னற்கு அழிவும் உண்டாம் கொலோ?' (கம்ப. 1424)

என்று அறிவுரையோடு அரசியல் அறவுரையும் வசிட்டன் கூற்றாக கம்பரே மொழிந்துள்ளது அறிக!

## உயர்ந்த அறம்

நாட்டின் குடிமக்களைக் காக்கும் மன்னனுக்குச் செங்கோல் ஆட்சியே சிறப்புடைய வெற்றியைத் தரும்.

"வேலன்று வென்றி தருவது மன்னவன்
'கோலதூஉம் கோடா தெனின்" (குறள். 546)

என வள்ளுவரும் செங்கோல் ஆட்சியை சிறப்பித்துள்ளமையை உணர்க! அதே போன்று கம்பரும், அறவழி அரசியலுக்கு ஆக்கம் கொடுப்பவனாகத் தசரதனைப் படைத்துள்ளார் தன்னையே பணயமாகக் கொடுத்து தருமத்தை வாழவைத்தவன் என்ற பொருளில்,

"தன்னை நல்கி, அத்தருமம் நல்கினான்"

என்று கம்பர் கூறுவதிலிருந்து அவனுடைய தருமத்தை உணர்ந்து கொள்ள முடிகிறது. கைகேயி தசரதனிடம் பெற்ற வரத்தை அவள் திருப்பிக் கேட்கின்ற பொழுது இக்கட்டான நிலையில் சிக்கித் தவிக்கும் தசரதனை கொடுத்த வரத்தை கொடுக்க மறுத்தால் வாய்மை அழியும் பழியும் வந்து சேரும், மூத்தவன் இருக்க இளையவனுக்கு அரசாளும் உரிமை தந்தால் அரசியல் மரபின் தூய்மையும் கெடும் இதனை,

"வாய்மையும் மரபும் காத்து மன்னுயிர் துறந்த வள்ளல்
தூயவன்"

என்ற வரிகள் இத்தகைய வாய்மையும், அரசியல் தூய்மையும் அழியாது பாதுகாக்க வேண்டுமாயின் அதற்கு ஈடாக தன் உயிரையே கொடுக்க வேண்டும் என்றெண்ணி அரசியல் நெறியின் உயர்வைக் காக்கும் பொருட்டு தன் உயிரையே அர்ப்பணம் செய்தான் தசரதன் என்று அறநெறி அரசியலை படைக்கிறார் கம்பர்.

## தொகுப்புரை

வறுமையில்லாத பகையில்லாத ஒரு நாட்டை அரசியலின் வழியே உருவாக்க நினைத்த கம்பர்,

"கள்வர் இலாமைப் பொருட்காவலும் இல்லை, யாதும்
கொள்வார் இலாமை, கொடுப்பார்களும் இல்லை மாதோ"

என்றும்,

"எல்லாரும் எல்லாப் பெருஞ்செல்வமும் எய்தலாலே
இல்லாரும் இல்லை; உடையார்களும் இல்லை மாதோ"

என்றும் கூறுவதிலிருந்து சிறந்த அரசியலை உருவாக்கிட முனைந்துள்ள பாங்கு பாராட்டுதற்குரியது. இத்தகைய அரசியலையும் அது பின்பற்றி செல்லக்கூடிய அறநெறியையும் எக்காலத்தவரும் பாரட்டும் விதமாக கம்பர் படைத்துள்ளார்.

# கம்பனிடம் கற்கத்தகும் அரசியல் அறங்கள்

முனைவர் இரா.தருமராசன்
தமிழாய்வுத்துறை, உதவிப் பேராசிரியர்,
மீனாட்சி இராமசாமி கலை அறிவியல் கல்லூரி, தத்தனூர்.

கம்பனிடம் நாம் கற்கத்தகும் பல அறங்களும் நெறிகளும் அவர் படைத்த காப்பியங்களில் கதைமாந்தர் கூற்றுகளில்: செயல்பாடுகளில் காணமுடிகிறது. ஆதிகவி வான்மீகி படைத்த காப்பிய ஓட்டத்தைவிட கம்பன் படைத்த காப்பிய நடை தனியானது. ஒழுக்கத்தில் உயர்வானது. தனித்தன்மையில் தகுதிப்பாடுகள் நிறைந்தது. அங்ஙனமே, கம்பன் காணும் இராமனுக்கும் வான்மீகி படைத்த இராமனுக்கும் பெருத்த வேறுபாடுகள் உண்டு. காப்பியத் தலைவனில் கம்பர் இம்மாறுபாட்டைக் காணவிழையும்பொழுது, காப்பியக்கட்டமைப்பிலும் நிகழ்வை அமைக்கும் உத்தியிலும் கம்பன் கண்டுமகிழும் கவிதாஉள்ளம் சமுதாய சீர்மையினை புலனாக்குகிறது.

பல்வேறு அறங்களை வலியுறுத்தும் கம்பன் காவியம் முப்பெரும் அரசியல் சூழலை விவரித்துச் செல்கிறது. அவ்வரசியல் தலைவர்களின் செயல்பாடுகள் அரசு இயற்றும் நிர்வாகத் திறன்கள், அவர்கள் சேருகின்ற அல்லது சேர்க்கின்ற இனத்தூய்மை இவற்றை வைத்து அரசு இயற்றும் தலைவனின் பண்பும் அரசியல் அறமும் உணர்ந்துகொள்ள முடிகிறது. "கம்பனின் இராமகாதை ஓர் அரசியல் சாஸ்திரம்" என்பர் குன்றக்குடி அடிகளார். (குன்றக்குடி அடிகளார், கம்பன் கண்ட ஆட்சியில் அரசியல் சமூகம், ப.13)

"கம்பனது அரசியல் கருத்துக்கள் காலத்தை வென்றவை. உன்னதமான தேசத்தை உருவாக்கும் வளமிக்கவை. கம்பன் நேற்று பயன்பட்டதைவிட இன்றும் நாளையும் அதிகம் பயன்படக்கூடிய இடம் அரசியல்" என்கிறார் சுகி. சிவம். (சுகி. சிவம், கம்பன் நேற்று இன்று நாளை, ப.145.) கம்பன் காணவிழையும் அரசியல் அறங்கள் பல கம்பராமாயணக் காப்பியத்துள் பொதிந்து கிடக்கின்றன. அவையாவும் நாம் கம்பனிடம் கற்கத்தகுவனவாகும்.

## முப்பெரும் அரசியல்; சூழல்

கம்பராமாயணம் அயோத்தி, கிட்கிந்தை, இலங்கை எனும் முப்பெரும் அரசியல் சூழல்களைச் சித்திரித்துச் செல்கிறது. அந்நகர்களை ஆண்ட தலைவர்களான தசரதன், வாலி, இராவணன் ஆகியோரின்

அரசியல் நிலைகள் கம்பனால் படம் பிடித்துக்காட்டப்படுகின்றன. அரசன் எத்தகைய திறன் படைத்தவனாயினும் திறமையும் தகுதியும் மிக்க அமைச்சர்கள், தூதுவர்கள், ஒற்றர்கள், படைவீரர்கள், போதிய படைக்கலக்கருவிகள் முதலானவற்றைப் பெற்றிருக்க வேண்டும்.

வள்ளுவர் கூறும் "காட்சிக்கு எளியன் கடுஞ்சொல்லன் அல்லன்" (குறள். 386) என்ற நிலையில் இரகு குலத்திலகனான இராமனும், அவன் தந்தை தசரதன் மட்டுமே இருந்திருக்கிறார்கள். மற்றவர்கள் அங்ஙனம் இல்லை என்பது அவர்களின் விரைவான வீழ்ச்சியே ஆட்சியைப்பற்றி நிர்மாணிக்கிறது.

முப்பெரும் அரசியலிலும் அமைச்சியல் திறம்படவே நியமிக்கப்படுகிறது. 'அதருமத்திற்கும் தருமத்திற்கும் நடக்கின்ற போராட்டமே இராமாயணம்'. மானிடன், வானரன், அரக்கன் மூவினங்களுக்கிடையேயான தருமயுத்தம். வானரத் தலைவன், அரக்கர் தலைவன் ஆகிய இருவரும் தம் குலத்திற்குப் பொருந்தாது என்று மனிதத்தைப் பேண மறுத்தார்களேயன்றி மாற்றான் மனைவியைப் பேண மறுத்தவர்கள் அல்லர். இதற்கு அடிப்படைக் காரணம், அரசன் எப்பெரியனாயினும் 'நீ செய்வது தவறு' என்று எடுத்துக்கூறும் அமைச்சர்களைப் பெறாததனாலேயாகும். திருவள்ளுவரும்,

"இடிப்பாரை இல்லாத ஏமரா மன்னன்
கெடுப்பார் இலானும் கெடும்" (குறள். 448)

என்கிறார். அதாவது, இடித்துக்கூறும் பெரியவர்களை துணையாகக் கொள்ளாத அரசன் பாதுகாப்பற்றவன். அத்தகையவன் கெடுப்ப வர்கள் இல்லையென்றாலும் கெட்டுப்போவான். ஆதலால் சிறந்த அரசனானவன, தாம் நெறிபிறழும் நேரத்தில் உடனிருந்து நெறிப்படுத்தும் அமைச்சர்களை நியமித்து அவர்களை ஆலோசித்து நடப்பான்.

### அரசியல் பிழைத்தோர்க்கு அறம் கூற்றமாம்

தலையாலங்கானத்துச் செருவென்ற பாண்டியன் நெடுஞ்செழியன் ஆராயாது அவசரத்தில் கோவலனுக்குத் தீர்ப்பு வழங்கியதால் பாண்டியன் அரசில் அரசியல் பிழை செய்துவிட்டது. அதனால், அறக்கடவுள் கூற்றுவனாக மாறியது என்கிறது சிலம்பு. அங்குள்ள அமைச்சர்களும் தசரதன், வாலியின் அமைச்சர்கள் போன்று பேசா மவுனியாயினர். அதனால்தான் இளங்கோவடிகள் 'அரசியல் பிழைத்தோர்க்கு அறம் கூற்றாகும்' என்ற கருத்தை காப்பியத்தில்

பதிவு செய்கிறார்.

சிலம்பில் எங்ஙனம் பாண்டியன் ஆட்சியில் குறை ஏற்பட்டு நீதிதேவதை தண்டிக்கப்பட்டாளோ அங்ஙனமே இராவணன் அரசிலும் வாலி அரசிலும் குறை நடந்திருக்கிறது. அரசு செய்த குற்றத்தை பொறுக்கவியலாத கண்ணகி மதுரையை எரித்தது போன்று சீதையும் இலங்கையை எரிக்க ஒரு கட்டத்தில் துணிகிறாள். அந்த வேலையை அனுமன் செய்ததனாலும் இராமன் செய்வான் என்ற நம்பிக்கையாலும் கற்புக்கனலை அடக்கத்தலைப்பட்டாள். இதனை அசோகவனத்தில் அனுமனிடம் சீதை,

"அல்லல்; மாக்கள் இலங்கையது ஆகுமோ?
எல்லை நீத்த உலகங்கள் யாவும் என்
சொல்லினால் சுடுவேன் அது தூயவன்
வில்லின் ஆற்றற்கு மாசென்று வீசினேன்" (சுந்தர. 622)

என்கிறாள். இலங்கை அனுமனால் எரிந்ததைக்கூட வீடணன் இராவணனிடம்,

"சானகி எனும்பெயர் உலகின் தம்மனை
யானவள் கற்பினால் வெந்தது அல்லது ஓர்
வானரம் சுட்டதென்று உணர்தல் மாட்சியோ? (யுத்த. 75)

என்று கூறுவதன் மூலம் கற்புடைய பெண்களைக் கட்டிக்காப்பது அரசனுடைய கடமை என்பதை உணர்த்துகின்றான்.

"அறனிழுக்காது அல்லவை நீக்கி" (குறள். 384) என்கிறார் வள்ளுவர். நல்ல அரசன் நாட்டின் அமைதிக்கும் குடிகளின் நல்வாழ்வுக்கும் ஒவ்வாதவற்றை செய்ய விரும்பான். அல்லதை நீக்கி நல்லதைத் தேர்வான். ஆனால், இலங்கை அரசில் இராவணன் தவறு செய்தவிடத்து தன்னை இடித்துரைத்த கும்பகருணனை கோபித்தும் வீடணனை விரட்டியும் விடுவதோடு, "எனக்கு அறிவுடை அமைச்சன் நீ அல்லை" (யுத்த. 1308) என்றும், "என்னை வெல்லுமாறு உன்னினை அரசின் மேல் ஆசை ஊன்றினை" (யுத்த. 312) என்று அறம்பேசி அறிவுரை சொல்ல வந்தவனை தம்பி என்றும் பாராமல் விரட்டியடித்தவன் இலங்கை வேந்தன். இராவணன் அரசிலும் வாலி அரசிலும் அன்பு இல்லை, அமைதி இல்லை, அறமும் இல்லை. இதனை,

"அறம் உனக்கு அஞ்சி இன்று ஒளித்ததால்" (யுத்த. 1302)

"கீழ்மையோர் சொற்கொடு கெடுதல் நேர்தியோ
வாழ்மைதான் அறம் பிழைத்தவர்க்கு வாய்க்குமோ?" (யுத்த. 317)

என்று கும்பகர்ணனும் வீடணனும் இலங்கை அரசில் அணுவளவும் அறமின்மையைச் சுட்டிக்காட்டி தம்மால் இயன்றவரை அரசனைத் திருத்த முயன்றனர். ஆனால், அவர்களால் இயலவில்லை. அயோத்தியரசில் அறத்தொடு கூடிய மறம் இருந்தது. அதனால், அவ்வரசு நல்லரசு ஆயிற்று. இலங்கையரசிலும் கிட்கிந்தையரசிலும் மறம் மட்டும் இருந்ததால் அறப்பயனும் தவப்பயனும் நீங்கி அவமாயிற்று. அரசியலில் அறம் பிழைத்தவர்க்கு வாழ்வில்லை என்பதை வீடணனும் ஆணித்தரமாக அறைகின்றான். இவையாவும் கம்பர் காணவிழையும் அயோத்தி அரசு போன்று அறம்வழுவா நல்லரசை இராமன் மூலம் முடித்துக்காட்ட விழைகிறார் என்றே கருத இடமளிக்கிறது.

**பண்புடை வேந்தன்**

அரசன் குடிகளிடத்து மிகுந்த அக்கறை கொண்டவனாகவும் அன்புடையவனாகவும் இருக்க வேண்டும். அயோத்தி அரசன் தசரதன் குடிகளைக் காப்பதில் கண்ணுங்கருத்துமாக இருந்துள்ளான். "அம்மாண் நகருக்கு அரசன் அரசர்க்கு அரசன்"(பால.169) என அரசர்க்கு அரசனாகவும், "நல்லற மூர்த்தி"(பால.169)யாகவும் சிறந்து விளங்கியவன். அன்பு உள்ளவனிடம் நல்ல பண்புகளும் நிறைந்திருக்கும். வள்ளுவரும், "செவிகைப்பச் சொற் பொறுக்கும் பண்புடை வேந்தன்" (குறள்.389). அதாவது, பிறர் கசந்து கண்டித்துப் பேசினாலும் பொறுமையுடன் கேட்டு குற்றங்களைத் திருத்திக்கொள்ளும் அரசனே சிறந்த அரசன் என விளக்கமளிப்பர்.

தசரதனிடம் இத்தகைய பொறுமைக்குணமும் தவறைத் திருத்திக்கொள்ளும் மனநிலையும் இருந்தது. ஆனால், அயோத்தியில் தவறுகள்தான் நேரவில்லை. "கூற்றமில்லை ஓர் குற்றம் இலாமையால்" (பால. 71). காரணம், குடிகளிடம் தாயைப்போன்று அன்பு செலுத்தியவன் தசரதன். "தாயொக்கும் அன்பில் தவமொக்கும் நலம் பயப்பின்" (பால. 172) என்ற கம்பன் வரி இக்கூற்றை மெய்ப்பிக்கும்.

"ஒரு நாடு வாழவேண்டுமானால், அந்நாட்டு மக்கள் நாகரிகம், பண்பாடு என்பவற்றில் நிலைக்க வேண்டுமானால் புலனடக்கம் அடிப்படை. இதைக்காட்டுவதே கம்பனுடைய குறிக்கோள்". (அ.ச. ஞானசம்பந்தன், கம்பன் புதிய பார்வை, ப.145)

'அப்பனுக்குப் பிள்ளை தப்பாமற் பிறப்பான்' என்னும் பழமொழிக்கேற்ப தந்தைக்கேற்ற தனயனாக சூரியகுலத்தில் இராமன் தோன்றினான். அவன் கல்வி பயிலும் காலத்தில் வீதி வழியே நடந்து செல்கையில்,

"எதிர்வரும் அவர்களை எமையுடை இறைவன்
முதிர்தரு கருணையின் முகமலர் ஒளிரா
எதுவினை இடரிலை இனிதினு மனையும்
மதிதரு குமரரும் வலியர்கொல் எனவே! (பால. 314)

என்று நலம் விசாரிக்கும் பண்பை இராமனிடம் காணமுடிகிறது. அங்ஙனமே, அயோத்தியா காண்டத்தில் குகனை ஆறுதல்படுத்தும் பொழுது, 'உன் கிளை எனதன்றோ? உறுதுயர் உறலாமோ?' (அயோத். 700) என்று இரங்கிப் பேசுகிறான். இத்தகு அன்பு, கருணை, பண்புடை வேந்தனையே குடிகளும் விரும்பும். இராமனை அறிமுகப்படுத்தும்பொழுதே கம்பர், 'நடையில் நின்றுயர் நாயகன்' (தற்சிறப்புப் பாயிரம். 11) என்று போற்றுகிறார். இத்தகு குணங்கள் நிரம்பியவரை கிட்கிந்தையில் அனுமன், இலங்கையில் வீடணன் ஆகியோரைத் தவிர மற்றவர்களிடத்து காணமுடிவதில்லை.

**நன்னடை நல்கல் வேந்தன் கடன்**

மக்களுக்கு ஒழுக்கத்தைக் கற்பிப்பது நாடாளும் மன்னனின் கடமை. 'அரசன் எவ்வழி குடிகள் அவ்வழி'. அரசனானவன் மற்ற அரசர்க்கும் மக்களுக்கும் எடுத்துக்காட்டாக வாழ வேண்டும். முப்பெரும் அரசியல் தலைவர்களை இத்தகைய கடமையுணர்வு கொண்ட பேரரசனாக தசரதனையே கம்பர் காட்டுகின்றார்.

"கோனிகர் குடிகள்தம் கொள்கை சான்றன" (பால. 127)

கோசலநாட்டு மக்கள் அனைவரும் தங்கள் மூதாதையரும் அரசனும் கடைப்பிடித்த நல்லொழுக்கத்தை வழிவழி பின்பற்றி ஒழுகினர். இதனை, "குலஞ்சுரக்கும் ஒழுக்கம் குடிக்கெலாம்" (பால. 70) என்று கம்பர் குறிப்பிடுகிறார். தனிமனிதனாயினும் சமுதாயமா- யினும் அல்லது அச்சமுதாயத்தைக் கட்டிக்காக்கும் அரசனாயினும் ஒழுக்கத்தை உயிரினும் சிறந்ததாகக் கொண்டு ஒழுக வேண்டும். "ஒழுக்கம் உயிரினும் ஓம்பப்படும்" (குறள். 131) என்று வள்ளுவர் குறிப்பிடுவதைப்போல கம்பரும், "உயிரினும் ஒழுக்கம் நன்று" (அயோத். 1107) என்று குறிப்பிடுகிறார்.

"கடமைகளை நிறைவேற்றி உரிமைகளை அனுபவிக்கும் அரசன் மக்களிடையே கண்ணியமுடையவனாக மதிக்கப்படுகிறான்" என்பர் அறிஞர் ச.வே.சு. (ச.வே. சுப்பிரமணியன், கம்பன் கவித்திறன், ப.45)

இத்தகைய கடமையுணர்ச்சி மற்ற இருநாட்டு அரசர்களிடத்து இல்லை. இதுவே, கம்பன் கொள்ளும் ஆதங்கம். சூரியகுல அரசர்களிடத்தில் உள்ள அரசியல் நெறியும், அரசியல் அறங்களும் உலகில் ஒவ்வொரு அரசனும் கடைப்பிடிக்க வேண்டிய அறங்களாக கம்பர் தம் காப்பியத்தில் அரசியல் சூழலை விவரித்துச் செல்கிறார்.

# கம்பனியம் புலப்படுத்தும் அரசியல் அறங்கள்

திருமிகு. த. திருமால்
முனைவர்பட்ட ஆய்வாளர், சி அப்துல் அக்கீம் கல்லூரி,
மேல்விசாரம்.

## முன்னுரை

மக்களுக்கும் மன்னனுக்கும் உள்ள தொடர்பை மக்களாட்சி முறைக்கண் கொண்டு அரசியல் அறங்களை வகுத்தவர் கம்பர். முன்னோர்களது அரசியல் கருத்துக்களைக் கசடறக் கற்றுத் தேர்ந்து தெளிந்த கம்பர் கொள்வன கொண்டும், விடுப்பன விடுத்தும், புதியன புனைந்தும் ஆட்சிக் கலையில் புரட்சி செய்தவர். முடியாட்சிகளை திறனாய்வுப் பார்வையில் அணுகி அவற்றின் குறைகளைச் சுட்டிக்காட்டுகிறார். இடையிடையே ஒரு நல்லரசின் பண்புகளையும் விளக்குகிறார். தான் காண விரும்பிய இலட்சிய அரசு பற்றியும் பதிவு செய்கிறார். இவ்வகையில் அரசியல் கோட்பாட்டைக் கூறும் அரசியல் அறிஞனாகவும், அரசியல் தத்துவத்தைக் கூறும் தத்துவ ஞானியாகவும் கம்பர் பெருமான் அடையாளப்படுத்தப்படுகிறார். கம்பரில் வெளிப்படும் அரசியல் விழிப்புணர்வுச் சிந்தனைகள் நேற்று மட்டுமல்லஞ் இன்று மட்டுமல்ல. நாளையும் நின்று ஆட்சியாளர்களை கூர்மைப்படுத்தும் வகையில் இவ்வாய்வு மேற்கொள்ளப்படுகிறது.

## கம்பரில் அரசியல் அறிவின் குறியிலக்கு

அரசறிவியலின் குறியிலக்கு எல்லை (*Scope*) கம்பர் தன் அரசியல் கோட்பாடுகளையும், அரசியல் விழிப்புணர்வுச் சிந்தனை களையும் வெளிப்படுத்துவதற்குரிய களமாக இராமகாதையினைப் பயன்படுத்தியிருக்கிறார் என உய்த்துணர முடிகிறது.

அயோத்தி, கிட்கிந்தை, இலங்கை ஆகிய மூன்று அரசுகளிலும் ஏற்பட்ட குழப்பங்களும், அரசியல் நெறிகளின் சீரழிவு மட்டுமின்றி ஆளுகின்ற தலைமையின் பலவீனங்களும், விழிப்புணர்வு இன்மையும் காரணம் என்பதைக் கம்பர் புலப்படுத்துகிறார். முடியாட்சி வரம்பிலாஅதிகாரங்களைத் தனிமனிதன் கையில் குவிப்பதால் தோன்றக் கூடிய தீமைகளையும் சுட்டிக் காட்டுகிறார்.

அரசு பற்றியும் அரசியல் நெறிமுறைகள் பற்றியும் உன்னதமான, உயர்வான கருத்துக்களைக் கொண்டிருக்கும் கம்பருக்கு இந்த மூன்று அரசுகளுமே வெவ்வேறு வகையில் புல்லரசுகளாத் தோன்றுகின்றன.

## கம்பன் விளம்பும் நல்லரசின் மன்னன்

நாட்டுக்கு உயிர்மூச்சாய் இருப்பது நெல்லும் நீரும் அன்று: மன்னனுடைய செங்கோல் முறையே என்பது புறநானூறு சொல்லும் செய்தி. இதனை,

'நெல்லும் உயிர்அன்றே நீரும் உயிர் அன்றே
மன்னன் உயிர்த்தே மலர்தலை உலகம்' (புறம்.186)

என்னும் பாடல்வரிகளால் அறிய முடிகிறது. சிலப்பதிகாரமும், மன்னனது செங்கோல் எத்துணை இன்றியமையாதது என்பதனை,

'மழை வளம் சுரப்பின் வான்பேர் அச்சம்
பிழை உயிர் எய்தின் பெரும்பேர் அச்சம்
குடிபுரவுண்டும் கொடுங்கோல அஞ்சி
மன்பதை காக்கும் நன்குடிப்பிறத்தல்
துன்பம் அல்லது தொழுதகவு இல்' (சிலம்பு- காட்சி 100-104)

என இயம்புகிறது. இதனை அடுத்துவந்த பக்திக் காலத்திலும்

'திருவுடை மன்னரைக் காணில் திருமாலைக்
கண்டேன் என்னும்...' (நாலாயிர திவ்விய பிரபந்தம் 2454)

என்று நம்மாழ்வார் பாடுகிறார்.

'மன்னரை இன்றி வைகும் மண்ணுலகு எண்ணுங்காலை
மன்னுயிர் இன்றி வைகும் யாக்கையை ஒக்கும்'

என, பெரியபுராணம் அரசன் இல்லாத நாடு உயிர் இல்லாத உடல் போன்றது என்கிறது. சங்க காலம் முதல் பன்னிரண்டாம் நூற்றாண்டு வரை நிலைபெற்று இருந்த கருத்தை மாற்றிக்கூற விரும்புகிறார் கம்பர். தன்னாட்டில் வாழும் மக்கள் முதல் எந்த உயிராக இருப்பினும் அவற்றின் விருப்பத்தை நிறைவேற்றும் ஓர் உடம்பே மன்னன் என்பதை,

"வயிரவான் பூண்அணி மடங்கல் மொய்ம்பினான்
உயிர் எலாம் தன் உயிர் ஒக்க ஓம்பலால்
செயிர் இலா உலகினில் சென்று நின்று வாழ்
உயிரெலாம் உரைவது ஓர் உடம்பும் ஆயினான்" (177)

என்று காட்டுகிறார் கம்பர். "மன்னனின் உயிர் நாட்டு மக்களின் உயிர், நாட்டு மக்களின் நலம் மன்னன் நலம்" மக்களின் வாட்டம் மன்னவன் வாட்டம் எனப் பொருள் தந்து அரச இலக்கணத்தை அறிவிக்கிறார் கம்பர்.

உடம்பாகிய மன்னன் உயிராகிய மக்களை எவ்வாறு நடத்தினான் என்பதை,

"வையகம் முழுவதும் வறிஞன் ஓம்பும் ஓர்
செய் எனக் காத்து இனிது அரசு செய்கின்றான்" (179)

என்று காட்டுகிறார். மன்னர்கள் தம் கடமைகளை, மக்கள் தேவைகளை உணர்ந்து செயல்பட்டாலும், தொலைநோக்கு பார்வை இல்லாமல், தன்னுடைய அதிகார ஆணவத்தால் மக்களை நசுக்க நினைக்க முயன்றாலும் அம்மன்னன் அழிவான் என்பதையும் எடுத்துரைகிறார். இனி அமைச்சர்கள் பற்றிய கம்பனின் கருத்துகள் பற்றிக் காண்போம்.

அமைச்சர்கள் பெற்றிருக்க வேண்டிய அடிப்படைத் தகுதிகளாகக் கம்ப நாட்டாழ்வார் குறிப்பன:

1. நற்குடியில் பிறந்து பல கலைகளையும் கற்றுத் தேர்ந்தவர்களாக இருத்தல் வேண்டும்.
2. கடந்தகால, நிகழ்கால நிகழ்ச்சிகளை நன்குணர்ந்த வர்களாகவும், எதிர்கால நிகழ்வின் போக்கை அறியக் கூடியவர்களாகவும் இருத்தல் வேண்டும்.
3. அரிய அரசியல் நூல்களையும் கற்றுத் தேர்ந்தவர்களாகவும், 'மானமே பெரிது' என்னும் இயல்பு உடையவர்களாகவும் இருத்தல் வேண்டும்.
4. அரசன், சினந்தாலும் அச்சினத்தைத் தாங்கிக் கொண்டு நீதியை விடாமல் இடித்துச் சொல்லும் இயல்வினராதல் வேண்டும் என்பதை,

"தம் உயிர்க்கு இறுகி எண்ணார் தலைமகன் வெகுண்ட போதும்
வெம்மையைத் தாங்கி நீதி விடாது நின்று உரைக்கும் வீரர்" (1321)

என்னும் பாடல் வழி கம்பர் காட்டுகிறார்.

## ஆட்சி செய்யும் முறை

'உயிர் எலாம் உறைவதோர் உம்பும் ஆயினான்' என்று கூறிய கம்பர் தயரதன் மூலம் ஆட்சி செய்யும் முறையினையும் குறிப்பிடுகிறார். தயரதன் மூலம் ஆட்சி செய்யும் முறையினையும் குறிப்பிடுகிறார். துயரதன் உயிர்களுக்குத் தாய்போல் அன்பு காட்டினான். மேலைத் தவம் போல் நலம்புரிந்தான். குழந்தையாக

நின்று அவர்கள் நற்கதியடையச் செய்தான். நோயாக விளங்கிய மக்களுக்கு மருந்தாக நின்றான். அறிவாக நின்ற யாவருக்கும் துணைபுரிந்தான் என்பதை,

“தாய் ஒக்கும் அன்பின் தவம்ஒக்கும் நலம்பயப்பின்
சேய்ஒக்கும் முன்நின்று ஒருசெல்கதி உய்க்கும்நீரால்
நோய்ஒக்கும் என்னில் மருந்துஒக்கும் நுணங்குகேள்வி
ஆயப் புகுங்கால் அறிவுஒக்கும் எவர்க்கும் அன்னான்” (171)

என்னும் பாடல் வழி அறியலாம்.

அரசன் முறை தவறி ஆள்வானாயின், அவன் மக்களால் வெறுக்கப்படுவான் அவன் ஆளும் நாடும் பாழடையும் என்பதைக் கம்பர் குறிப்பாக அறிவுறுத்தும் அழகே அழகு. தாடகை வாழ்ந்த இடம் பாழ்பட்ட ஒன்றாக இருந்தது என்பதைக் கூறப்புகுங்கால்,

‘பழிபடர் மன்னர் படைத்த நாடுபோல அழிவது’ (358)

என்று பாடுகிறார். இன்னுமோர் எடுத்துக்காட்டின் எழிலைக் காண்போம்!

‘அஞ்சாமை ஈகை அறிவுஊக்கம் இந்நான்கும்
எஞ்சாமை வேந்தர்க்கு இயல்பு’ (குறள்-382)

‘கொடைஅளி செங்கோல் குடியோம்பல் நான்கும்
உடையானாம் வேந்தர்க்கு ஒளி’ (குறள்-390)

என்னும் குறட்பாக்களின் இலக்கணத்திற்கு ஏற்ப இலக்கியம் படைத்து, கவந்தனின் கொடுமைக்கு அஞ்சி அவ்வனத்திலுள்ள உயிர்கள் நிலை திரிந்து உருக்குலைந்து வாழ்கின்றன என்றும் இயம்புகிறார் கம்பர்.

**தயரதன் ஆட்சியில் காணும் குறைபாடுகள்**

1. தயரதன் இராமன் மீது காட்டும் அளவு கடந்த அன்பும், கைகேயி மீது கொண்ட மோகமும் அவனை அரசன் என்ற நிலையில் செயல்பட விடாமல் தடுக்கிறது.

2 ஆட்சிப் பொறுப்பிலே உள்ளவர்கள் ஒரு குறிப்பிட்ட பெண்ணின்மீதோ, குழந்தையின்மீதோ அன்பு பாராட்டுவது சார்புணர்வை உண்டாக்கி நல்லாட்சிக்கு இடையூறு விளைவிக்கும் என்று கிரேக்க அறிஞர் பிளாட்டோ கூறுவதை இங்கே நினைவில் கொள்ளலாம்.

3. கைகேயின் வரங்கள் தொடர்பாக அமைச்சர் அவையின் கருத்தையோ, மக்களின் கருத்தையோ அறிவதில் அவன் அக்கறை காட்டவில்லை.

4. தயரதனுடைய அமைச்சரவை நெருக்கடியான நேரத்தில் அவனுடைய தவறுகளைச் சுட்டிக்காட்டி அறிவுரை கூறும் பொறுப்பையும், கடமையும் செய்யாது செயலற்றுக் காணப்படுகிறது.

'மன்பதை காக்கும் நன்குடிப் பிறத்தல்
துன்பம் அல்லது தொழுதகவுஇல்' (சிலம்பு 3.2. 103-104)

என சிலம்பு வழிகாட்டும் கடமை உணர்வு மறைந்துபோய், தயரதனின் அதிகார வேட்டையும், கைகேயியின் சூழ்ச்சியும் அயோத்தியில் அரசியற் குழப்பங்களை ஏற்படுத்துகின்றன எனக் கம்பர் விளம்புவதன் மூலம் தயரதனின் பலவீனங்கள் அடையாளப்படுத்தப்படுகின்றன.

**சுக்ரீவனிடத்தில் சுட்டும் அரசியல் அறங்கள்**

'அரச பதவி ஆணவம் மிக்கது, பிறர்மீது அதிகாரம் செலுத்தி அடக்கி ஆள எண்ணுவது'. கார் காலம் கழித்து வருகிறேன் என்று சொல்லிச் சென்ற சுக்ரீவன் வரவில்லை. சுக்ரீவன் காலம் தாழ்த்துவதைக் கண்ட இராமன்,

"பெறலருந் திருப்பெற்று உதவிப் பெருந்
திறம் நினைந்திலன்: சீர்மையின் தீர்நதனன்:
அறம் மறந்தனன்: அன்பு கிடக்க நம்
மறம் அறிந்திலன்: வாழ்வின் மயங்கினான்" (4270)

சுக்ரீவன் அரசபதவி பெற்றதும் நாம்செய்த நன்றியை மறந்துவிட்டான், நெறிமறந்தான், அறம் துறந்தான், வாழ்வியல் திரிந்தான் என இராமன் கூறுவதன் வாயிலாக அரசபதவி எப்படி பட்டது என்பதைச் சுட்டிக்காட்டிப் பதவி மோகத்தால் ஒருவர் செய்த உதவியை மறக்கும் தகாத செயலைக் கம்பர் குறிப்பாக உணர்த்துகிறார்.

'அரச செல்வம் களிப்பூட்டும், மகிழ்ச்சிக்கடலில் ஆழ்த்தும், மயக்கும், பிறரை எண்ணி இகழ வைக்கும் நீ அந்நிலை எய்தாமல் உனக்கு அரசு தந்தவனை மறவாது வாழ்'! என வாலி சுக்ரீவனுக்கு அறிவுரை பகர்தலிலும் வழிகாட்டலிலும் அரசியல் அறங்களை விதைக்கிறார் கம்பர்.

"முறை செய்து காப்பாற்றும் மன்னவன் மக்கட்கு
இறை' என்று வைக்கப்படும்"

என்ற இலக்கணத்திற்கு இலக்கியம் படைத்தவர் கம்பர் பெருமான். அரசன் அறமுறை அறிந்து, அவா அற்று, ஒறுத்தற்குரிய இடத்தில் ஒறுத்து அணைத்தற்குரிய இடத்தில் அணைத்து குடிகளுக்கு உதவி மண்ணுலகைப் பொண்ணுலகாக்கி நிற்றல் கடன் என்பதைக் கம்பர் தெளிவுபடுத்துகின்றார்.

### சுக்ரீவன், வாலியிடம் தென்படும் பலவீனங்கள்

செருக்கும், சினமும் சிறுமையாகிய காமமும் அரசனாக இருப்போன் கடிய வேண்டிய குற்றங்களாகும் என வள்ளுவர் கூறுகிறார்

"செருக்கும் சினமும் சிறுமையும் இல்லார்
பெருக்கம் பெருமித நீர்த்து" (431)

1. செருக்கு , சினம், காமம் ஆகிய மூன்று குற்றங்களும் வாலி-யிடம் அமைந்திருந்தன.

2. வாலி தன் குற்றம் காணாமல் பிறர் குற்றம் காண்பவனாகவும், கல்வி கற்றிருந்தும் அதற்குத் தக அவன் நிற்காமல் தம்பியின் தாரத்தையே கவர்ந்து வலிந்து துய்க்கும் இழிந்த ஒழுக்கத்தில் ஈடுபடுகின்றான். இவையெல்லாம் ஒரு அரசனுக்கு இருக்கக் கூடாத பண்புகள் எனப் புலப்படுத்துகின்றார் கம்பர். தீய ஒழுக்கங்கள் ஓர் அரசனை, அவன் ஆட்சியை எவ்வாறு சீரழிக்கும் என்பதை வாலியின் வாயிலாக அரசியல் அறத்தை நிலை நிறுத்துகின்றார் கம்பர்.

3. பக்குவம் பெறாதவன் பதவி பெற்றால் பதவிச் சுகத்தில் மயங்கித் தவறு செய்ய வாய்ப்புண்டு என்பதைக் கம்பர் சுக்ரீவன் வாயிலாக உணர்த்துகிறார்.

### இராவணன் வீழ்ச்சியால் பெறப்படும் அரசியல் கோட்பாடுகள்

'இராவணன் வீழ்ச்சிக்கும், இலங்கையின் அழிவுக்கும் அவனுடைய தவறான அணுகுமுறைகளும், செயல்பாடுகளும் காரணங்களாக அமைகின்றன.

1. 'பிறன் மனை நோக்கல்' பெருங்குற்றமாக அமைந்து அவனது அழிவுக்குக் காரணமாக அமைகிறது.

2. இராவணன் அரசு வல்லரசு, அளவற்ற வரங்களைப் பெற்றிருப்பினும் அந்த ஆற்றலால் அறமிலா வழியில் ஆட்சி செய்கிறான்.

3. தனது ஆற்றலால் அயலவர்க்கும் அளப்பரும் துன்பம் செய்கின்றான், அடிமைப்படுத்தி அல்லல் செய்கின்றான்.

4. அறமில்லா வழியில் தீட்டி செல்வம் அவனைத் தீய வழியில் செலுத்துகிறது.

5. 'காமம், வெகுளி, கடும்பற்று, மானம், உவகை, மதம்' என்று ஆறு பகைவர்க்கும் அவனிடம் ஒருங்கே குடி புகுகின்றன.

6. தன்னையே வியந்து பேசித் தவறிழைக்கின்றான்.

7. நல்லவர்கள்தொடர்பை நாடாமல் நாசமுறுகின்றான். இத்தகைய தனி மனித குற்றங்கள் அவனை அழிப்பதோடு நாட்டையும் சீரழிக்கின்றன என தவறான ஆட்சியமைப்புப் பற்றிக் கம்பனியத்தில் அறச்சீற்றம் பதிவு செய்யபட்டுள்ளது.

8. இராவணன் சர்வதிகாரியாகச் செயல்பட்டு அமைச்சர்கள், மக்கள் கருத்தை துச்சமாக மதிக்கிறான். வரலாற்றில் ஹிட்லர் முசோலினியைப் போல இராவணன் திகழ்கிறான் என்று வரலாற்று அறிஞர்களின் பதிவு இங்கு குறிப்பிடத்தக்கது.

கோசலம், கிட்கிந்தை, இலங்கை என்னும் மூவரசுகளின் முறைகேடுகளைச் சுட்டிக்காட்டி அரசியல் அறங்களைப் பதிவு செய்கிறார் கம்பர்.

## ஆய்வுத் தொகுப்புரை

அயோத்தி, கிட்கிந்தை, இலங்கை ஆகிய மூன்று அரசுகளின் அழிவுக்கும், மன்னர்களின் வீழ்ச்சிக்கும் உரிய அரசியல் அறங்களை, காரணங்களாகக் கம்பர் சுட்டும் கருத்துகள் தொகுத்துத் தரப்படுகின்றன.

<u>அ. தயரதன் வழி வெளிப்படும் அரசியல் அறங்கள்</u>

1. தலைமைப் பொறுப்பில் இருப்பவர்கள், ஆட்சியோடு தொடர்புடையவர்கள் சூழ்நிலைக்குத் தக்கவாறு விழிப்புடன் பேச வேண்டும்.

2. வாய்மொழி ஆணை அரசியலில் சிக்கலை ஏற்படுத்தும் எனவே ஆணைகள் உரியவர்கள் மூலமாக அரசாணையாக வெளியிடப்பட வேண்டும்.

3. ஆட்சிப் பொறுப்பில் இருப்பவர்கள், வேண்டியவர்கள் வேண்டாதவர்கள் என்ற பாகுப்பாட்டைக் கடந்து பொது நிலையில் அரசியல் காழிப்புணர்ச்சியின்றி செயல்பட வேண்டும்.

4. தயரதனுடைய அமைச்சர்கள் நெருக்கடியான நேரத்தில் அறிவுரை கூறாது அவனின் செயல்களுக்கு ஒத்து ஊதுபவர்களாய் இருக்கின்றனர்.

<u>ஆ. வாலி, சுக்கிரிவன் வாயிலாக பெறப்படும் அரசியல் அறங்கள்</u>

1. ஆட்சியாளர்களுக்கு இருக்கும் ஆணவச் செருக்கு அவர்களையும் அழித்து ஆட்சியையும் அகற்றும்.

2. மற்றவர்களின் உரிய கருத்துக்கு மதிப்பளிக்க வேண்டும். கருத்தில் உண்மைஇருப்பின் தன்நிலையை மாற்றிக் கொள்ள முன்வரவேண்டும். குறிப்பாக மக்கள் கருத்தை அறிய வேண்டும்.

3. பண்பாட்டைப் பேணுவதிலும், ஒழுக்கம் காப்பதிலும் தலைமையில் இருப்பவர்கள் மற்றவர்களுக்கு எடுத்துக் காட்டாய் விளங்க வேண்டும்.

4. தந்த வாக்குறுதிகளை நிறைவேற்றும் பண்புடையவர்களாக விளங்க வேண்டும் பதவிக்கு முன்னும் பின்னும் முரண்பாடு கூடாது.

5. தலைமைப் பதவி முள் போன்றது. அது தன்னையே மாற்றி அழிவுக்கு ஆளாக்கும் என்பதை உணர்ந்து கவனமாக செயல்பட வேண்டும்.

<u>இ. இராவணன் வீழ்ச்சியால் உணரப்படும் விழிப்புணர்வுச் சிந்தனைகள்</u>

1. தவத்தினால் வரங்களைப் பெற்று ஆணவத்தோடு செயல்படும் இராவணனைப்போல, மக்கள் பலத்தினால் பெரும்பான்மை பெற்று ஆணவத்தோடு செயல்படுவதைத் தவிர்க்க வேண்டும்.

2. உயிர்க்கு அஞ்சி இராவணனுக்கு அடிமையாய் இருந்த அமைச்சர்களைப் போல பதவி பறிபோகும் என்ற பயத்தால் அமைச்சர்கள் பதுமைகளாய்ச் செயல்படுதல் கூடாது.

3. அவையில் தங்களுடைய கருத்துகளை உறுதியாக எடுத்துச் சொல்லும் திறன்கொண்டவர்களாக அமைச்சர்கள் செயல்பட வேண்டும்.

4. எதைப்பற்றியும் கவலைப்படாது, தான் நினைத்ததைச் சாதிக்கும், திணிக்கும் ஆணவச் செருக்கு ஆள்பவர்களுக்கு இருத்தல் கூடாது.

# கம்பன் வலியுறுத்தும் அரசியல் அறங்கள்

திருமிகு. பொன்.செல்வகுமார்
தமிழ்த்துறை உதவிப் பேராசிரியர், தூய நெஞ்சக் கல்லூரி,
திருப்பத்தூர்.

கவிச்சக்கரவர்த்தி கம்பன் படைத்த இராமகாதை காலந்தோறும் மானுடச்சமூகம் தழைத்தோங்க பல்வேறு வழிகாட்டுதல்களை வழங்கி வருகின்ற பெருநூலாகும். தனிமனித ஒழுகலாறு, குடும்பம், சகோதரத்துவம், அரசியல், சமூகம், உலகஒருமைப்பாடு முதலான பல்வேறு சிந்தனைகளை வழங்கி வருகிறது. தயரதனின் மகனான இராமபிரானைக் காவியத்தலைவனாகக் கொண்டும், இலங்கை வேந்தனான இராவணனை எதிர்நிலைத்தலைவனாகக் கொண்டும் இலங்குகின்ற இக்காப்பியத்தில் அரசியல் குறித்த செய்திகளும், அரசியல் ஆலோசனைகளும், அமைச்சர்களின் பங்களிப்பும் பரவலாக இடம் பெற்றுள்ளன. வீடணனின் அடைக்கலப்படலத்தில் ஆலோசனைகள் மற்றும் அமைச்சர்களின் பங்களிப்பின்மூலம் கம்பர் வலியுறுத்தும் அரசியல் அறங்கள் குறித்து ஆராய்வது இக்கட்டுரையின் நோக்கமாகும்.

## வள்ளுவரின் பார்வையில் அமைச்சர்

அரசியலில் தலைமைப் பொறுப்பில் உள்ள மன்னனுக்கு அமைச்சர்கள் அவசியம் என்பதை,

"படைகுடி கூழ் அமைச்சு நட்பரண் ஆறும்
உடையான் அரசருள் ஏறு" (திருக்குறள் .381)

என்று வள்ளுவர் குறிப்பிட்டுள்ளார்.

படை, குடி, கூழ், நட்பு, அரண் ஆகியற்றுடன் அமைச்சர்களையும் சேர்த்து ஆறு அங்கங்களை உடையவனாக அரசனை வள்ளுவர் சுட்டியிருப்பதன் மூலம் அமைச்சரின் இன்றியமையாமை விளங்கும்.

வள்ளுவருக்குப் பின் தோன்றிய இராமகாதையிலும் ஆட்சியாளருக்கு அமைச்சரின் துணை வேண்டும் என்று வலியுறுத்தப்படுகிறது.

## கம்பர் காட்டும் அமைச்சர்

வசிட்டன் இராமபிரானுக்குக் கூறும் அறிவுரையாகக் கம்பர் உணர்த்தும்போது,

"உமைக்கு நாதற்கும் ஓங்கு புள் ஊர்திக்கும்
இமைப்பு இல் நாட்டம் ஒரெட்டு உடையானுக்கும்
சமைத்த தோள் வலி தாங்கினர் ஆயினும்
அமைச்சர் சொல்வழி ஆற்றுதல் ஆற்றலே! (மந்தரை சூழ்ச்சி- 23)

என்று பாடுகிறார்.

இதன்மூலம் சிவன், திருமால், பிரமன் ஆகிய மும்மூர்த்திகளுக்கு இணையான தோள் வலிமை பெற்றவனாக ஒரு மன்னன் இருந்தாலும், அமைச்சரின் சொற்கேட்டு ஆட்சி நடத்தலே சிறப்புடையது என்ற கருத்து வலியுறுத்தப்பட்டுள்ளது.

**அமைச்சரின் இன்றியமையாமை**

அமைச்சரின் இன்றியமையாமையை விளக்க வந்த கம்பர், "அரசர் சீற்றம் கொண்ட காலத்திலும் இதனைச் சொன்னால் தம் உயிர்க்கு அழிவு விளையும் என்றுகூட நினையாதவராய் அவனது சீற்றத்தின் கொடுமையை ஏற்றுக் கொண்டு தம் கடமையை விட்டுவிடாமல் உறுதியாக நின்று உரிய நீதிகளை எடுத்துச்சொல்லும் துணிவுமிக்கவர்கள்: நன்னெறியிலிருந்து வழுவுதல் இல்லாத தெளிவுடையவர்கள்: அறியத்தக்க முக்கால நிகழ்வுகளையும் உணரத்தக்க ஆற்றல் பொருந்தியவர்கள் உண்மையையே பேசும் இயல்பினையுடையவர்கள்"என்ற கருத்தினை

"தம் உயிர்க்கு இறுதி எண்ணார்: தலைமகன் வெகுண்ட போதும்,
வெம்மையைத் தாங்கி நீதி விடாதுநின்று உரைக்கும் வீரர்:
செம்மையின் திறம்பல் செல்லாத் தேற்றத்தார்: தெரியும் காலம்
மும்மையும் உணர வல்லார்: ஒருமையே மொழியும் நீரார்"

(மந்திரப்படலம். 8)

என்று பாடுகிறார். ஆட்சியை நடத்துவதில் அரசனுக்கு உற்றத் துணையாக அமைச்சர்கள் இருப்பதைக் கம்பர் வற்புறுத்துகிறார்.

**வீடணனின் ஆலோசனை**

சீதாப்பிராட்டியைக் கவர்ந்து சிறை வைத்துள்ள இராவணனுக்கு வீடணன் பல்வேறு அறிவுரைகளைக் கூறுகிறான். வீடணனின் அறவுரைகளைக் கேட்காதது மட்டுமின்றி ' எனக்கு இது போன்ற அறிவுரைகள் கூறுவதை விட்டு விடு: இங்கிருந்து நீங்கிப் போய்விடு என் கண் எதிரில் நீ இனி நிற்பாயானால் சாவாய்' என்று கூறுகிறான். இதைக் கம்பர்,

"ஒழி, சில புகலுதல்: ஒல்லை நீங்குதி:
விழி எதிர் நிற்றியேல் விழிதி என்றனன் (வீடணன் அடைக்கல- 8)

என்று கூறுகிறார். இதன் காரணமாக, இராவணனை விட்டு நீங்கிய வீடணன் தான் செய்யத்தகுந்தது என்ன என்பதைத் தெரிவிக்குமாறு அமைச்சர் நால்வரிடம் ஆலோசனை கேட்கிறான். அதற்கு அமைச்சர்கள் அறமே வடிவமான இராமபிரானைக் கண்டு தரிசிப்பதே இனி நமக்குரிய கடமை என்று வலியுறுத்திக்கூறுகின்றனர். இதனை,

"மாட்சியின் அமைந்தது வேறு மற்று இலை:
தாட்சி இல் பொருள் தரும் தரும மூர்த்தியைக்
காட்சியே இனிக் கடன்' என்று, கல்வி சால்
சூட்சியின் கிழவரும், துணிந்து சொல்லினார்" (வீ.அ.படலம் 18)

என்ற பாடலில் கம்பர் அமைச்சர்களின் ஆலோசனைத்திறத்தை வெளிப்படுத்துகிறார். இராமபிரானை இதற்கு முன்பு பார்த்திராத வீடணன், கேள்விப்படாதவனாகியவீடணன் என்பும் குளிர்ந்து மனம் உருகுவதாகக் காட்டுவதன்மூலம் வீடணனின் மனக்குறிப்பை உணர்ந்தவர்களாக அமைச்சர்கள் விளங்குவதை அறிய முடிகிறது.

**வீடணனின் வருகை**

இராமபிரானை நாடி வந்த வீடணன், இராமபிரான் தங்கியிருக்கும் பாசறையை அடைந்து வானர சேனைக்குப் பக்கத்தில் செல்கிறான். வீடணனைக் கண்ட வானரப் படையினர் 'வீடணனைக் கொல்வோம்' என ஆர்ப்பரிக்கும்போது, நடந்ததை அறிந்து வருமாறு அனுமன் மயிந்தன் துனிந்தன் ஆகிய காவலர்களை அனுப்புகிறான்.

காவலர்களின் மூத்தவனான மயிந்தன் வீடணன் முதலியோரை நோக்கி 'யார்? வந்த காரியம் யாது?' போன்ற வினாக்களை எழுப்பும் போது, வீடணன் இராமபிரானே தமக்குப் புகலிடம் எனக் கருதி அப்பெருமானது திருவடிகளை அடைந்து உய்வு பெற வந்துள்ளான் என்று கூறுவதைக் கம்பர்,

"பகலவன் வழி முதல், பாரின் நாயகன்
புகல் அவன் கழல் அடைந்து, உய்யப் போந்தனன்-
தகவு உறு சிந்தையன், தரும நீதியன்,
மகன் மகன் மைந்தன் நான்முகற்கு, வாய்மையான்"

(வீ.அ.படலம் 42)

என்று பாடுகிறார். அனுமனின் காவலருள் மூத்தவனான மயிந்தன்

எழுப்பிய வினாவுக்கு.வீடணனின் அமைச்சர்களில் மூத்தவனான அனலன் விடையளிக்கிறான். அமைச்சர்கள் நால்வர் இருந்தாலும் மூத்தவனான அனலன் விடையளித்திருப்பதன் மூலம் அமைச்சர்களில் மூத்தவர்களுக்கே முன்னுரிமை அளிக்கப்பட்டிருப்பதை உணரமுடிகிறது.

**இராமபிரானின் ஆலோசனை**

உண்மை நிலையை இராமபிரானிடம் எடுத்துரைக்கச் செல்லும் போது, தம் தம்பியான துனிந்தனையும் வானரப்படையினரையும் எச்சரிக்கையுடனும், விழிப்புடனும் இருக்குமாறு கூறி இராமனை அடைந்து நடந்தவற்றை மயிந்தன் அறிவிக்கிறான். மயிந்தன் கூறியதைக் கேட்ட இராமபிரான் வீடணன் ஏற்கத்தக்கவனா? ஒதுக்கத்தக்கவனா? என அருகில் உள்ள சுக்கிரீவன் முதலான நண்பர்களிடம் ஆலோசனை கேட்பதை,

"அப்பொழுது, இராமனும், அருகில் நண்பரை,
இப்பொருள் கேட்ட நீர் இயம்புவீர்- இவன்
கைப்புகற்பாலனோ? குழியற்பாலனோ?----
ஒப்புற நோக்கி, நும் உணர்வினால்' என்றான். (வீ.அ.படலம் 56)

என்ற பாடல் மூலம் அறியலாம். நாடு துறந்து போரை எதிர்நோக்கியிருக்கும்; இராமபிரானுக்கு சுக்கிரீவன் முதலானரே அமைச்சர் பணியைச் செய்துள்ளனர் என்று அறியமுடிகிறது.

அண்ணனுடன் இறக்காமல் பகைவராகிய நம் பக்கம் சேர வந்தவன் வேறு யார்க்கு உறவாவான், நம்மிடம் தஞ்சம் அடைவது வஞ்சகமே என்று எடுத்துரைக்கிறான். இதனை

வஞ்சனை இயற்றிட வந்தவாறு அலால்
"தஞ்சு" என நம்வயின் சார்ந்துளான் அலன்:
நஞ்சினின் கொடியனை நயந்து கோடியோ?-
அஞ்சன வண்ண! என்று அறியக் கூறினான்" (வீ.அ.படலம் 68)

என்று கம்பர் உரைக்கிறார். சாம்பவந்தனிடம் இராமபிரான் ஆலோசனை கேட்ட போது, சாம்பவந்தன், கற்றவர்களாக இருப்பினும் பகைவரைச் சார்ந்தவரைச் சேர்க்கக்கூடாது, அரக்கர்களோடு சேரல் கூடாது என்று ஆலோசனை கூறி வீடணைத் தவிர்க்க வேண்டும் எனக் கூறுகிறான். வானர சேனையின் தலைவனான நீலன், பகைவர் பக்கமிருந்து வருபவரைச் சேர்க்கக்கூடாது என்று எடுத்துரைத்து 'யார் யாரெல்லாம் ஏற்கத்தக்கவர்கள் என்றும் கூறுகிறான். வீடணன்

சேர வந்திருக்கும் நேரத்தைப்பார்த்தாலும், கற்ற நீதி நூல்களின் மூலம் ஆராய்ந்து பார்த்தாலும் இவன் பற்றி ஆராய்ந்து முடிவெடுக்க முடியாது என்று கூறுகிறான்.

"காலமே நோக்கினும் கற்ற நூல்களின்
மூலமே நோக்கினும், முனிந்து போந்தவன்
சீலமே நோக்கி, யாம் தெரிந்து தேறுதற்கு
ஏலுமே?' என்று எடுத்து இனைய கூறினான். (வீ.அ.படலம் 81)

இதன் மூலம் சேனைத் தலைவராக இருப்பவரும் நீதி நூல்களைக் கற்றவராக இருந்து. அமைச்சர்கள் இடத்தில் இருந்து ஆலோசனை கூறுபவர்களாகத் திகழ்ந்துள்ளமை கம்பர் வெளிப்படுத்துகிறார்.

இவர்களைத் தவிர மந்திரக்கிழவர் முதலான அமைச்சர் பெருமக்களும் வீடணனை நம்முடன் சேர்த்துக் கொள்ளுதல் பெருந்தீங்காக முடியும் என்ற கருத்தைக் கூறினர்.

இராமபிரான் முடிவெடுத்தால் எவரும் மறுக்க இயலாத நிலை இருந்தாலும் பகை மன்னனின் தம்பியைத் தம்முடன் சேர்க்கும் போது தம்மைச்சார்ந்தவர்களிடம் ஆலோசனை கேட்கிறான். இராமபிரானைச் சார்ந்திருப்பவர்களும் ஆலோசனை வழங்கும் திறன் படைத்தவர்களாக இருந்ததை கம்பர் வெளிப்படுத்தியுள்ளார்.

**அனுமனின் ஆலோசனை**

இராமபிரான் அனுமனிடம் கருத்தைக் கேட்கிறான். அனுமன் வீடணனைச் சந்தேகப்படமாட்டேன் என்று கூறி அதற்கான காரணங்களை அடுக்குகிறான். மனத்தில் உள்ளதை முகமே காட்டிக் கொடுத்து விடும்: வீடணன் வீட்டரசைப் பெறும் பொருட்டு இங்கு வந்துள்ளான் என்று கூறுகிறான்.மாயச்செயல்களில் தேர்ந்தவனாகிய வீடணன் நம் பக்கம் சேர்ந்தால் வெற்றி எளிதில் கிடைக்கும் என்று குறிப்பிடுகிறான். இலங்கையில் இராவணனின் சபையில் இருந்தபோது தன்னைக் கொல்ல இராவணன் ஆணையிட்டும் கொல்ல வந்தவர்களை விலக்கியவன் இந்தவீடணன் என்ற கருத்தினை உரைக்கிறான். இதனைக் கம்பர்,

"மாதரைக் கோறலும், மறத்து நீங்கிய
ஆதரைச் கோறலும், அழிவு செய்யினும்
தூதரைக் கோறலும் தூய்து அன்றாம்" என
ஏதுவில் சிறந்தன எடுத்துக் காட்டினான். (வீடண, 95.)

என்று பாடுகிறார். இதன் மூலம் அபலைப்பெண்கள், வீரமற்ற அறிவிலிகள், தூதுவர்கள் ஆகியோரைக் கொல்லுதல் தூய செயல் ஆகாது என்று எடுத்துரைத்தவன் வீடணன் என்று அவனது நற்பண்புகளை கம்பர் எடுத்துரைத்துள்ளார்.

இலங்கையில் உள்ள பிற அரக்கர்கள் போல் வாழ்க்கை மேற்கொள்ளாமல் அந்தணர் போன்ற வாழ்க்கை வாழ்பவன் என்று எடுத்துக் கூறி அடைக்கலமாக வந்தவனைக் கைவிடக்கூடாது என்ற கருத்தினைத்தெரிவிக்கிறான். வீடணனை நாம் ஏற்றுக்கொள்ளவில்லை என்றால் கற்றறிந்த அறிஞர்கள் சிரிப்பதற்கு இடமாகுமல்லவா என்று உரைத்து வீடணனின் வருகை நன்மையான வருகை என்று குறிப்பிடுகிறான்.அனுமன் தன் சொந்த அனுபவங்களையும் அரசியல் பயன்களையும்வீடணனின் நல்லியல்பகளையும் எடுத்துரைத்து அபயம் என்று வந்தவரை ஆதரிப்பது அவதாரக் கடமை என்று வலியுறுத்துகிறான்.

**அனுமன் ஆலோசனை ஏற்கப்படல்**

அனுமனின் உரையைக் கேட்ட இராமபிரான் சிந்தனை செய்து, 'இனி உரைப்பதற்கு என்ன உண்டு? அனுமன் ஆராய்ந்து கூறிய ஆலோசனையே மேலான ஆலோசனை. வென்றாலும் தோற்றாலும் அபயம் என்று வந்தவனை ஏற்றுக்கொள்ளத் தக்கது என்று குறிப்பிடுகிறான். இதைக் கம்பர்,

"மற்று இனி உரைப்பது என்னே? மாருதி வடித்துச் சொன்ன
பெற்றியே பெற்றி: அன்னது அன்றுஎனின், பிறிது ஒன்றானும்
வெற்றியே பெறுக, தோற்க, வீசு, வீயாது வாழ்க,
பற்றுதல் அன்றி உண்டோ, அடைக்கலம் பகர்கின்றானை?
(வீ.அ.படலம் 105)

என்று உணர்த்துகிறார். அபயமாக வந்த வீடணன் மாறுபட்டாலும் நமக்குப் புகழே வரும் என்றும்,இவனால் இறக்க நேரும் நாள் நிலை பெற்றிருந்த நாளாகும், அடக்கலமாக வருபவரை ஆதரிப்பதே அறம், வீடணனைக் காப்பது கடமை என்றெல்லாம் குறிப்பிட்டு அடைக்கலமாக ஏற்றுக்கொள்வதற்கான காரணங்களை அடுக்குகிறான்.

இராமபிரான் தாம் முடிவு செய்த கருத்துக்கு மாறன கருத்தினைத் தெரிவித்தவர்களை தன் பாலுள்ள அன்பால் கூடாதென்று சொன்றிர்கள் என்று கூறுகிறான். குற்றனில்லாத இவ்னிடணனை நீயே சென்று

என்னிடம் அழைத்து வருக என்கிறான். இராமபிரானைச் சரணடைந்த வீடணனை இலங்கை வேந்தனாக முடிசூட்டி ஏற்றுக்கொள்கிறான்.

### அரசியல் ஆலோசனையும் அறிவுத்திறனும்

இராவணனின் தம்பியாகிய வீடணன் தன் அண்ணனுக்குப் பகையாக வந்துள்ள இராமபிரானிடம் தன்னிச்சையாகச் சென்று சேராமல் தன்னைச் சார்ந்தவர்களிடம் ஆலோசனை கேட்கும் அரசியல் பண்பினைக் கம்பர் சுட்டிக்காட்டியுள்ளார். புகைவனின் தம்பியை அடைக்கலமாக ஏற்கலாமா? என்று இராமபிரான் ஆலோசனை நடத்தி அடைக்கலம் அளிக்கின்ற மக்களாட்சி மனப்பான்மையை கம்பர் வலியுறுத்தியுள்ளார்.

'இராமாயணத்தில்வீடணன் அடைக்கலம் மிக இன்றியமையாததாகி இராமனின் முழு வெற்றிக்கு காரணமும் அடிப்படையும் ஆகின்றது' ( ச.வே.சுப்பிரமணியன், கம்பன் இலக்கிய உத்திகள் ப.464)

### முடிவுரை

மன்னராட்சியில், இன்றியமையாத முடிவெடுக்கும் போது அமைச்சர்களின் ஆலோசனை பெறப்பட்டுள்ளது ; என்ற கருத்தைக் கம்பர்வீடணன் பாத்திரப்படைப்பின் மூலம் கம்பர் வலியுறுத்தியுள்ளார்.

இராமகாதையில் அமைச்சர்கள், படைத்தலைவர்கள் நீதி நூல் வல்லவர்களாகப் படைக்கப்பட்டுள்ளதன் மூலம் அமைச்சர்களின் தகுதியை, கம்பர் எடுத்துரைத்துள்ளார்.

பகை மன்னரைச் சார்ந்தவர்களுக்கு அடைக்கலம் அளிக்கும்போது படைத்தலைவர்களிடம் ஆலோசனை பெறப்பட்டது என்ற கருத்தினை நீலன் பாத்திரப்படைப்பு மூலம் கம்பர் உணர்த்துகிறார்.

தம் மனக்கருத்துக்கு மாறான கருத்துகளைக் கொண்டு ஆலோசனை வழங்குபவரைப் புறம் தள்ளாமல் அன்பின் னிகுதியால் இவ்வாறு கூறினீர் என்று கூறி அரவணைக்கும் பண்பினை இராமபிரானின் பாத்திரப்படைப்பு மூலம் கம்பர் அறிவுறுத்துகிறார்.

ஆயிரம் ஆண்டுகளுக்கு முன்னர் தோன்றிய இராமகாதையில், மக்களாட்சி தழைத்தோங்கும் இக்காலக்கட்டத்திற்கும் ஏற்ற அரசியல் அறங்களைக் கம்பர் வழங்கியுள்ளார்.

# அயோத்தியா காண்டத்து அரசியல் அறங்கள்

திருமிகு. க.சந்திரசேகரன்
முனைவர் பட்ட ஆய்வாளர்,
சென்னை.

## முன்னுரை

அரசியல் அறங்கள் அதிகமுள்ள கம்பராமாயணத்தில் பால காண்டம், காப்பியத்திற்கு முன்னுரை போன்றது. அயோத்தியா காண்டத்திலிருந்துதான் கதை ஆரம்பம் ஆகிறது. அங்கிருந்துதான் அரசியல் கருத்துக்களும், காட்சிகளும் இணைந்திருக்கின்றன. எனவே, கம்பராமாயண அரசியல் அறங்களை, அயோத்தியா காண்டத்திலிருந்து தான் ஆராய வேண்டியுள்ளது.

## கம்பனின் அரசியல் தத்துவம்

மன்னனை உடலாகவும், மக்களை உயிராகவும் கூறினார் கூலவாணிகன் சீத்தலைச் சாத்தனார். தசரதனுக்குச் சிறப்பு கூறிய கம்பரும் கூலவாணிகன் சீத்தலைச் சாத்தானாரின் கொள்கையையே உறுதி செய்தார். மக்கள் உயிருக்கு சமம், மந்திரி சபை உணர்வுக்கு நகர், மன்னனே அந்த உயிரும் உணர்வும் குடி புகுந்திருக்கும் உடம்பை ஒத்தவன், இது கம்பனின் அரசியல் தத்துவம் என, கம்பர் முப்பாலில் டாக்டர், ம.ரா.போ. குருசாமி அவர்கள் கூறுகிறார்.

## அரசியல் காட்சி

கம்பர் என்னும் சிற்பி கட்டிய காப்பிய மாளிகைக்குள் நுழைந்து, அங்குள்ள அரசியல் காட்சிகளைக் காண்போம். இராமாயணம் ஓர் அரசியல் காப்பியம் - தொடக்கம் முதல் இறுதி வரை அரசியல் மணக்கிறது. அயோத்தியின் அரசுரிமை இராமனுக்கா? பரதனுக்கா? என்ற வழக்குடன் இராமாயணக் கதை தொடங்குகிறது. கொடுங்கோலனின் ஆட்சியை அழித்துச் செங்கோலை நிலை நாட்டிய பின்னரே கதை முடிகின்றது. இப்படி, தொடக்கமும் இறுதியும் அரசியல் ஆக இருப்பதோடன்றிக் கதையின் இடையேயும், அரசியல் அறங்கள் காட்சியளிக்கின்றன.

காப்பியத்தில் அரச இனத்தவரிடையே நிகழுகின்ற போரினைக் குறிப்பதாதலின் அரசியல் அறமே பெரிதும் பேசப்படுகின்றது. தன்னுயிர் போன்றே மக்கள் உயிரையும் காக்கின்றான், தசரதன். சிறந்த ஆட்சிக்கு எடுத்துக் காட்டாக விளங்கும் அவன்,

"வையகம் முழுவதும் வறிஞன் ஓம்பும் ஓர்
செய் எனக் காத்து இனிது அரசு செய்கின்றான்"

(பாலகாண்டம், அரசியல் படலம், பா. எண்.179)

- என்கிறான் கவிச்சக்கவர்த்தி கம்பன்.

## அரசியல் அறம்

அரசியல் அறம் பற்றி தசரதன் தன் கருத்தை வெளியிடும் போது, 'சூரிய குலத்தில் தோன்றிய என் முன்னோர்களான சிறந்த அரசர்களைப் போலவே, நானும் ஒழுக்கம் தவறாது, உங்களின் சிறந்த துணையோடு அறுபதினாயிரம் ஆண்டுகள் இந்த அரச பாரத்தைச் சுமந்து ஆட்சி செய்து வந்தேன். நான் வெகு நாளாக விருப்பத்தோடு எதிர்நோக்கிய மூப்பு என்னும் விடுதலைக் காலத்தை இப்போது கண்டிருக்கிறேன். நான் தாங்கி வந்து பொறுத்தற்கரிய இந்த அரசாட்சி என்னும் பாரத்தை இனிமேல் சிறிது காலமும் சுமக்கும் வல்லமை அற்றவன் ஆகிவிட்டேன், என்று தசரதன் கூற்றாக அரசியல் அறத்தை உணர்த்துகின்றான் கம்பன் (கம்பராமாயணம், மூலமும் தெளிவுரையும், அயோத்தியா காண்டம் ப.11).

## நீதிநெறி தவறாத அரசியல் அறம்

தான் மன்னன் பதவியில் இருந்து விடுபட்டும், தன் முதுமை காரணமாக என் மனமும் தேகமும் சலிப்படைந்து விட்டதால், அன்பு, அறிவு, ஆற்றல் நிறைந்தவனும், வீரத்தில் நிகரற்றவனும், நாட்டு மக்களின் நலனில் அக்கறை கொண்டவனும், தர்மநெறி அறிந்தவனும், அரசர்க்கு உரிய அனைத்துத் தகுதிகளும் உள்ளவனும் ஆகிய என் மூத்த மகன் இராமனுக்கு இளவரசுப்பட்டம் சூட்டிட நான் எண்ணியுள்ளேன். யான் அறுபதினாயிரம் ஆண்டுகள் உங்கள் மாண்பின் உதவியால் இவ்வரசை முன்னோர்கள் முறை-யினின்று வழுவாமல் காத்தேன். மூப்பின் காரணமாக யான் அரச பாரத்தை தாங்கும் ஆற்றலற்றவன் ஆயினேன். இவ்வரச இன்பம் நிலையானதன்று. எனவே நிலையான இன்பத்தை நாடுவதற்காக, மைந்தன் இராமனிடம் இவ்வாட்சியை ஒப்புவித்துவிட்டுத் தவம்புரிய எண்ணுகிறேன். ஆகையால் இராமனுக்கு இந்த அரசை அளிப்பதுபற்றி உங்கள் கருத்து என்ன? என்று தசரதன் தன் மந்திரிமார்களிடம் வினவுகின்றான் என்று திரு.தி.வேங்கட கிருஷ்ணய்யங்கார், தன் கம்பராமாயணம் உரைநடை நூலில்(ப:56) கூறுகிறார். அதற்கு அவர்கள் அனைவரும் ஒரே கருத்தாக, பிறரது உயர்வு கண்டு

பொறாமை கொள்ளாதவர், நீதிநெறி தவறாதவர், போரில் எவரையும் வெல்லும் வீரமுடையவர், நாட்டு மக்களின் நிலனில் அக்கறை னிக்கவர், மக்கள் அனைவராலும் மதிக்கப்படுபவர், ஓர் அரசர்க்குத் தேவையான எல்லாவித குணங்களும் நிரம்பியவர்; இப்படி எல்லாச் சிறப்புக்களையும் பெற்ற தங்கள் திருக்குமாரரை எங்கள் நிலன் கருதுவதோடு, குடிமக்கள் நிலன் கருதியும், தாங்கள் இளவரசர் ஆக்க வேண்டும். இதில் எங்கள் அனைவருக்கும் மாறுப்பட்ட கருத்தில்லை என்றனர். ஒரு நாட்டில் உள்ள ஓர் அமைச்சரவையில் இருக்கின்ற முப்பது, முப்பத்தைந்து மந்திரிகளிடையே கருத்து வேறுபாடுகள் இருக்கின்றபோது, தசரதனின் அறுபதினாயிரம் மந்திரிமார்களிடையே எந்தவித சிறு கருத்து வேறுபாடும் இல்லை என்று காட்டுவதே கம்பனின் உச்சகட்டமான அரசியல் அறமாகும்.

மக்கள் "இவன் நம் அரசன் அல்லன்! நம்மைப் பெற்றெடுத்த தாயானவன்", என்று கூறுமாறு, பாதுகாக்கத் தக்கவரை இனிதே காப்பாயாக! அங்ஙனம் பாதுகாக்கும் குடிமக்களிடம் கண்ணோட்டம் செய்வதை உன் இயல்பாகக் கொண்டாலும், அவர்களுள், எவராலேனும் நாட்டில் தீமை உண்டான போது அத் தீயவரை அறத்தின் எல்லை மீறாதபடி தண்டிப்பாயாக என்று அரசியல் அறத்தை இராமன் மூலமாக, சுக்கிரீவனுக்குப் போதிக்கின்றான் கவி அரசன் கம்பன்.

**பண்புடன் கூடிய அரசியல் அறநெறி**

இராமாயணத்தில் ஆட்சி நிர்வாகத்தைவிட அரசியல் அறநெறிக்கே முதலிடம் தரப்படுகின்றது. பொருட்படுத்த வேண்டாதது - சிறு விளையாட்டுப் போன்றது என்று மதிக்கத்தக்க செயல் கூட அரசியல் தலைவனை அலைக்கழிக்கக் கூடிய - அரசையே ஆட்டி விடக்கூடிய - குற்றமாக முடிந்துவிடக்கூடும். மந்தரை அந்தப்புரத்துச் சேடி தான், ஆம்! கைகேயியின் சேடி தான். ஆனால் அந்தப் பணிப்பெண் உலகப் பேரிலக்கியமான இராமாயணத்தின் தலைவனைக் கானகம் புகச் செய்துவிட்டாள். இது தான் அரசியல் விளையாட்டு. 'நாளை மாமுடி சூடும்' என்ற நிலை, ஓர் இரவில் மந்தரை செய்த சூழ்ச்சியால் மாறி விட்டது; அரண்மனை அரசியலே தடுமாறி விட்டது; ஆட்சியே கைமாறி விட்டது, என்று ஸ்ரீ காஞ்சி காமகோடி பீடாதிபதி ஸ்ரீ ஜெயேந்திர சரஸ்வதி சுவாமிகள், (தனது ராமாயணம் பக்தி குமுதம்) ஸ்பெஷல் வெளியீட்டில்) கூறுகிறார்.

இராமனே இந்தச் செய்தியை ஒரு பெரும் அரசியல் எச்சரிக்கையாகக் கூறுகிறான்.

"சிறியர் என்றிகழ்ந்து நோவு செய்வன செய்யல் மற்று இந்
நெறி இகழ்ந்து யான் ஓர் தீமை இழைத்தலால் உணர்ச்சி நீண்டு
குறியதாம் மேனி ஆய கூனியால் குவவுத் தோளாய்
வெறியன எய்தி நொய்தின் வெந்துயர்க் கடலின் வீழ்ந்தேன்.

(கிட்கிந்தாகாண்டம், அரசியற்படலம், பா. எண்.4126).

'சமுதாய நிலையால் சிறியவர்' என்று எவரைப் பற்றியும் கவனக்குறைவாக அரசியலாளன் புறக்கணித்துவிட முடியாது. அது அரசியல் அறமன்று, என்று நா. ஷண்முகம் அவர்கள் தன்னுடைய இராமாயணம் கையடக்கப்பிரதியில் (ப.97) கூறுகிறார்.

இராமனின் சிற்றன்னையாகிய கைகேயி, "தம்பி பரதன் நாடாளவேண்டும்; நீ காடாள வேண்டும், இது மன்னன் கட்டளை என்று கூறியபோதும் கூட, இராமன் அந்தத் தாய் மீது ஆத்திரப்படவில்லை. மாறாக....

"மன்னவன் பணியன்றாகின் நும் பணி மறுப்பெனோ"

என்று பண்புரை பகர்கின்றான். அதேநேரம்....

"என் பின்னவன் பெற்ற செல்வம் அடியனேன் பெற்ற தன்றோ?"

(1604)

என மனமாரக் கூறுகின்றான். அப்போது அவன் முகம் அன்று அலர்ந்த செந்தாமரையினை வென்றது போல் இருந்தது என்று கம்பன் ஓவியம் காட்டுகின்றான். அரசபதவி மேவிய போதும், இராமன் களிப்படையவில்லை, சிற்றன்னை அதைப் பறித்த போதும் அவன் கவலைப்படவில்லை. அதுவன்றோ கம்பன் காட்டும் பண்புடன் கூடிய அரசியல் அறநெறியாகும்.

### அரசியல் மரணம்

தசரதன், வாலி, இராவணன், இரணியன் ஆகிய நான்கு அரசர்களும் னிழ்ச்சியடைவதைக் கம்பன் புலப்படுத்துகின்றான். தசரதனின் முடிவுக்கும் ஏனைய வர் முடிவுக்கும் வேற்றுமை உண்டு. எனினும், நான்கு பாத்திரங்களுமே அரசியல் ஆளுமையில் வீழ்ச்சியுற்றன என்பதில் பொதுவான நிலையே நிலவுகிறது. தசரதன் முடிவு மற்ற வரைப் போல் பிறர் தாக்குதலால் நிடைபெறவில்லை. வாலி அரசியல் சார்பான மோதலால் வதைக்கப்பட்டான்; இரணியன் மரணம் அரசியல் சார்புடையதன்று; இராவணன் முடிவும் அத்தகையதே. இம்மூவர் முடிவிலே தெய்வத்தன்மையாகிய ஒற்றுமை இருந்தாலும் ஒவ்வொரு மரணத்திலும் தனிச்சூழல் உண்டு.

அரசியலில் தலைவர்களின் முடிவு இப்படித்தான் வரும் என்று கணிப்பது எளிதன்று. அறிந்தோ, அறியாமலோ செய்து விடுகின்ற எந்தக் குற்றம், எங்கே போய் எப்படி வலைவிரித்து, வயப்படுத்தி அழிக்கும் என்று எளிதிலே கணித்துவிட முடியாது. என்று கம்பர் முப்பாலில் டாக்டர் ம.ரா.போ.குருசாமி அவர்கள் (ப : 66) கூறுகின்றார்கள்.

# கம்பனில் அரசியல்நெறிகள்

முனைவர் பெ. ஆறுமுகம்
தமிழ்த்துறை, உதவிப் பேராசிரியர், சீனிவாசன் கலை மற்றும் அறிவியல் கல்லூரி, பெரம்பலூர்.

கால வெள்ளத்தைத் காப்பியத் தோணியில் கடந்து வெற்றிக்கொடி நாட்டிய கவிச் சக்கரவர்த்தி கம்பன் இலக்கிய உலகுக்கு நம் பாரத நாடு அழித்த உன்னதமான கொடை. ஒரு நாடு எப்படியிருக்க வேண்டும்; ஒரு நகரம் எப்படி இருக்க வேண்டும் என்று கம்பன் தனது அரசியல் கோட்பாடுகளை காப்பியத்தில் வெளிப்படையாகவும் சில இடங்களில் மறைமுகமாகவும் புலப்படுத்துகிறார். அரசியல் என்று வந்து விட்டாலே முற்றிலும் வெளிப்படையாக நிகழ்த்துவது கடினம், கொஞ்சம் மறைமுக வேலைகளும் இருக்கத்தானே வேண்டும். இது அன்றும் இன்றும் என்றும் பொருந்துகின்ற ஒரு கருத்து. கம்பனில் அரசியல் படலம் என்ற பெயரில் இரண்டு படலங்கள் உள்ளன. அரசியல் என்றாலே அங்கே ஒன்றாக இருக்க முடியாதே ஒன்றை இரண்டாக்குவது தானே அரசியல். பாலகாண்டத்தில் இராமன் பட்டாபிஷேகத்தின் போதும் கிட்கிந்தா காண்டத்தில் சுக்ரீவப் பட்டாபிஷேகத்தின் போதும் அரசியல் நெறிகள் புலப்படுவதை விளக்குவதாக இக்கட்டுரை அமைகின்றது.

### கம்பனில் அரசியல் சிந்தனை

கம்பனுடைய வாழ்க்கை வரலாற்றைப் பற்றி நமக்குத் திட்டமாகத் தெரியவில்லை. செவிவழியாகக் கேட்கும் அவனுடைய வரலாறு அவன் வறுமையால் அடைந்த துன்பங்களை நமக்கு எடுத்துக் காட்டுகின்றது. அரசன் சினத்துக்கு ஆளானான்; பிறந்த நாட்டை விட்டுப் பிற நாடு புகுந்தான்; எண்ணற்ற அல்லல்களுக்கு இலக்கானான் என்று கூறுகின்றது. கம்பனிடத்தில் கல்விச் செல்வத்திற்குக் குறைவில்லை, கவிச் செல்வமும் குவிந்திருந்தது. கருத்துச் செல்வத்திற்கும் கணக்கில்லை. இருந்தும் பொருட்செல்வம் மட்டும் போதுமான அளவு இல்லை என்பது உண்மை. அதனால்தான் சடையப்பவள்ளலின் ஆதரவில் வாழ வேண்டிய நிலையிலிருந்தான் கம்பன் வறுமையின் கொடுமையைக் கண்ணாற்கண்டவன். தன் வாழ்க்கையில் அனுபவித்தவன், ஆகையால் தான் அதை மனித சமுதாயத்திலிருந்தே விரட்ட வேண்டும் என்று நினைத்தான். எல்லா மக்களும் இன்னலுக்கு ஆளாகாமல் இன்புற்று வாழ்வதற்கான வழியைப்பற்றிச் சிந்தித்தான்.

கம்பன் காலத்தில் மன்னர்களே அரசாட்சியின் தலைவர்களாயிருந்தனர். மன்னர்களைத் தவறு செய்யாமல் தடுக்க - நல்வழியிலே நடத்திச் செல்ல மந்திரிகள் இருந்தனர். மந்திரிகள் நாட்டுமக்களின் மனப்போக்கறிந்து, அவ்வழியிலே ஆட்சி நடக்க அரசர்களுக்குத் துணை புரிந்து வந்தனர். மன்னர்களும் மக்கள் உள்ளம் அறிந்து நடக்கும் மந்திரிகளும் சேர்ந்து அரசாண்ட காலத்தில் பல அறநூல்கள் தோன்றின. மந்தரிகள் கடமை என்ன என்பதைப் பற்றி அவ்வற நூல்களிலே அறிஞர்கள் கூறிவைத்தனர். அவைகளைப் பின்பற்றியே அரசர்களும் மந்திரிகளும் நடந்து வந்தனர். இவைகளை ஒட்டியே கம்பனும் தன் உள்ளத்தில் கொண்ட உறுதியான அரசியல் கருத்துகளைத் தன் காவியத்தில் அமைத்துப் பாடியிருக்கின்றான்.

**அரசும், குடிகளும்**

"மன்னன் உயிர்த்தே மலர்தலை உலகம்" என்பது முன்னோர் கொள்கை. உலகம் மன்னனை உயிராகக் கொண்டிருக்கின்றது என்பதே இதன் கருத்து. இது புறநானூற்றுப் பாட்டின் ஒருபகுதி. "மன்னன் இல்லாவிட்டால் வாழ முடியாது" என்பது முன்னோர் கருத்து. மன்னன் எல்லா அதிகாரங்களும் பெற்றிருந்த காலத்தில் எழுந்த கருத்து இது. கம்பன் காலத்தில் இக்கருத்து மரிவிட்டது. குடிகள் தான் உயிர்; மன்னன் தான் உடம்பு. உயிரில்லாவிட்டால் உடம்பு இயங்க முடியாது. குடிகள் இல்லாவிட்டால் குடிகளின் ஆதரவு, ஒத்துழைப்பு இல்லாவிட்டால் - அரசாட்சி இயங்க முடியாது என்ற கருத்து கம்பன் காலத்திலேயே தோன்றிவிட்டது.

"வய்யம் மன்னுயிராக அம்மன்னுயிர்
உய்யத் தாங்கும் உடல்அன்ன மன்னனுக்கு
அய்யம் இன்றி அறம் கடவாது அருள்
மெய்யின் நின்றபின் வேள்வியும் வேண்டுமோ?"

(அயோத்தி. மந்தரை சூ.17)

உலகத்தை உயிராகக் கொண்டு, அவ்வுயிர்களைத் தாங்கும் உடலாகத் தன்னை எண்ணிக்கொண்டு அதற்கேற்ற படி அரசு நடத்துகின்றவனே அரசன். ஐயம் இல்லாமல் அறம் என்பது அவனுக்குத் துணையாக நிற்கும், அரசன் இரக்கத்தையும், உண்மையையும் துணையாகக் கொண்டு நிற்பானாயின் அவன் வேள்வி செய்யவும் வேண்டுமோ எனும் இச்செய்யுளிலே அரசன் கடமையையும், மக்கள் கருத்தறிந்து ஆள்வதையும் கம்பன் புலப்படுத்தியுள்ளான்.

**நாடு**

"தள்ளா விளையுளும் தக்காரும் தாழ்வுஇலாச்
செல்வரும் சேர்வது நாடு" (குறள்-731)

நீங்காத விளைவும், அறவோர் - துறவோர் ஆகிய சிறந்தவர்களும், குறைவற்ற செல்வம் உள்ளவர்களும் சேர்ந்திருப்பதே சிறந்த நாடாகும் என்று வள்ளுவர் கூறினார். இல்லாதவர்களும், உள்ளவர்களும் இணைந்த சமுதாய அமைப்பிலே இந்த நிலைமையிருப்பதே ஒரு நாட்டுக்குப்பெருமை என்று எண்ணினார் வள்ளுவர். கம்பன் காலத்திலும் இச்சமுதாய அமைப்புத்தான் நிலைத்திருந்தது. ஆதலால் கோசல நாடு வள்ளுவர் எடுத்துக்காட்டிய நாட்டைப் போலிருந்தது என்று காட்டுகின்றான் கம்பன்.

"கதிர்பாடு வயலின் உள்ள கடிகமழ் பொழிலின் உள்ள
முதிர்பல மரத்தின் உள்ள முதிரைகள் புறவின் உள்ள
பதிபடு கொடியின் உள்ள படிவளர் குழியின் உள்ள
மதுவனம் மலரில் கொள்ளும் வண்டென மள்ளர் கொள்வார்"

கதிர்முற்றி விளைந்திருக்கின்ற வயலில் உள்ள நெல்; மணம் வீசும் பொழில் உள்ள மலர்கள்; பல மரங்களிலும் முதிர்ந்திருக்கும் கனிகள்; பயறு வகைகள்; காட்டிலே உள்ள ஏனைய விளைபொருள்கள்; பதிக்கப்பட்ட கொடியில் தோன்றிய பொருள்கள்; பூமிக்குள் வளர்ந்து ஆழத்தில் உள்ள கிழங்குகள் - இவைகளையெல்லாம், மதுவைக் காட்டுமலர்களிலே திரட்டும் வண்டுகளைப்போல உழவர்கள் திரட்டுவார்கள். கோசலநாடு தள்ளாவிளையுளையுடையது என்பதற்கு இப்பாட்டு உதாரணம்.

"அகில் இடும்புகை அட்டில் இடும்புகை
நகரின் ஆலை நறும்புகை நான்மறை
புகலும் வேள்வியின் பூம்புகையோடு அளாய்
முகிலின் விம்மி முயங்கின எங்கணும்" (நாட்டு. 41)

அகில் கட்டைகளிலிருந்து வரும் புகை, சமையல் வீடுகளிலிருந்து வரும் புகை, விளங்குகிற கரும்பாலைகளிலிருந்து வருகின்ற புகை, இவைகள் நான்கு வேதங்களும் கூறுகின்ற முறைப்படி செய்யும் வேள்விகளிலிருந்து எழும் புகைகளோடு கூடி மேகத்தைப் போல எங்கும் பரந்து நெருங்கியிருந்தன. இதனாலே வேள்வி செய்யும் அந்தணர்கள், துறவிகள் இவர்களுக்கு உதவும் கொடையாளர்

முதலியவர்கள் கோசல நாட்டிலே நிறைந்திருந்தனர் என்று கூறினான் கம்பன். தக்கார் அந்நாட்டிலே நிறைந்திருந்தனர் என்பதை,

"வண்மையில்லை, ஓர் வறுமையின்மையால்
திண்மையில்லை, நேர் செறுநர் இன்மையால்
உண்மையில்லை, பொய்யுரை இலாமையால்
வெண்மையில்லை, பல கேள்வி மேவலால்" (நாட்டு. 53)

அந்நாட்டிலே எல்லோரும் பொருட்செல்வம் உள்ளவர்கள்; வீரச்செல்வம் உள்ளவர்கள்; மெய்யுரைக்கும் பண்புச் செல்வம் உள்ளவர்கள்; கல்விச் செல்வமும் கேள்விச் செல்வமும் உள்ளவர்கள் என்பதை இப்பாடலால் காணலாம். இத்தகைய தாழ்விலாச் செல்வரைக் கொண்டிருந்தது அந்நாடு என கம்பன் புலப்படுத்தியுள்ளான்.

**ஆளுவோர் கடமை**

மக்களுக்கு நன்மை செய்வதே ஆளுவோர் கடமை இதற்கு அடையாளமாகவே மன்னர்கள் வெண்பட்டுக் குடையின்கீழ் அமர்ந்திருப்பர் என்பது கம்பர் கருத்து.

"மண்ணுடை உயிர்தொறும் வளர்ந்து தேய்வின்றித்
தண்ணிழல் பரப்பவும், இருளைத் தள்ளவும்
அண்ணல்தம் குடைமதி அமையும் ஆதலால்
விண்ணிடை மதியினை மிகை இது என்னவே" (பால. அரசியல். 9)

உலகில் உள்ள உயிர்களுக்கெல்லாம் இனிய நிழலைத் தருவது உலகில் உள்ள - உலக மக்களிடம் உள்ள - அறியாமையாகிய இருளை அகற்றிவிடவும் அண்ணயின் மதி போன்ற குடைநிழலே போதும். ஆதலால் வானத்திலே உள்ள மதி மிகையாகும் என்று சொல்லும் படிச் சிறந்திருந்தது தசரதன் குடைநிழல் தசரதனைப்பற்றி - அவன் குடிகளிடம் எவ்வளவு அன்பு வைத்து அவர்களைக் காத்து வந்தான் என்பதைப் பற்றிப் பேசும்போது,

"வய்யகம் முழுவதும் வறிஞன் ஓம்புமோர்

செய்எனக் காத்து இனிது அரசு செய்கின்றான்" (பால. அரசியல்.12)

என்று கூறுகின்றான். 'ஒரு சிறிய நிலத்தைத் தனக்கு உரிமையாகக் கொண்ட அறிஞன் ஒருவன் அதைக் கண்ணும் கருத்துமாகப் போற்றிப் பாதுகாப்பான். அதைப் போலவே தசரதனும் தனது நாட்டைப் பாதுகாத்தான்' என்று எடுத்துக் காட்டினான். ஒரு அரசன்

தனது நாட்டை எப்படிப் பாதுகாக்க வேண்டும் என்பதை இதனால் அறியலாம்.

இராமனுக்கு முடிசூட்டுவதாகத் தீர்மானித்தபின் வசிட்டன் அவனுக்குச் சில அரசியல்நீதிகளை எடுத்துரைக்கின்றான். இவ்விடத்தில் கம்பன் குறித்திருக்கும் அரசியல் நீதிகள் தமிழர் பண்பை ஒட்டியவை.

"யாரொடும் பகை கொள்இலன் என்றபின்
போர் ஒடுங்கும் புகழ் ஒடுங்காது" (அயோத்தி. மந்தரை.13)

ஆள்வோன் யாரோடும் பகைத்துக் கொள்ளாமலிருப்பானாயின் நாட்டில் போர் தோன்றாது மறைந்துவிடும். ஆனால் புகழ் ஒடுங்காது. சமாதானத்தை அடிப்படையாகக் கொண்டு ஆளுகின்ற மன்னவன் புகழ் பரந்து நிற்கும். இதனால் போரினால்தான் புகழ் பெறமுடியும் என்ற பழைய மூட நம்பிக்கையைக் கிள்ளியெறிகின்றான் கம்பன்.

"உமைக்கு நாதற்கும், ஓங்கு புள்ஊர்திக்கும்
இமைப்பில் நாட்டம் ஓர் எட்டுடையானுக்கும்
சமைத்த தோள்வலி தாங்கினர் ஆயினும்
அமைச்சர் சொல்வழி ஆற்றுதல் ஆற்றலே" (அயோத்தி. மந்தரை-15)

பரமசிவன், திருமால், நான்முகன் இவர்களைப்போன்ற புயவலிமையைப் பூண்டவனாயிருந்தாலும் அமைச்சர் சொல்வழி நடப்பதே ஆளுவோர்க்குச் சிறந்த வலிமையாகும். ஆளுவோர்க்கு எவ்வளவு ஆற்றலிருந்தாலும், அவர்கள் அறிவு நிரம்பிய அமைச்சர்களின் ஆலோசனைப்படிதான் நடக்கவேண்டும்தூ இல்லையேல் அவர்களுடைய ஆற்றல் அழிந்து சிதையும் என கம்பன் இப்பாடலில் உணர்த்துகிறான்.

"இனிய சொல்லினன், ஈகையன் எண்ணினன்
வினையன், தூயன், விழுமியன், வென்றியன்
நினையும் நீதி நெறிகடவான் எனின்
அனைய மன்னவற்கு அழிவும் உண்டாம் கொலோ?"

(அயோத்தி. மந்திரை.18)

இனிய மொழி, ஈகைக் குணம், ஆழ்ந்த சிந்தனை, வினைசெய்யும் வல்லமை, குற்றமற்ற பண்பு, சிறந்த குணம், செயலிலே வெற்றிபெறும் தன்மை, நீதிநெறி தவறாமை இக்குணங்களையுடையோனாக ஆளுவோன் இருப்பானாயின் அவனுக்கு எக்காலத்திலும் யாராலும் அழிவில்லை என்பதையே இப்பாடலும் ஆளுவோர்க்கு

அமைந்திருக்க வேண்டிய பண்புகளை எடுத்துக்காட்டுகின்றது. ஆளுவோன், அமைச்சர்களுடன் - நிர்வாகிகளுடன் கலந்து ஆலோசித்தே எக்காரியங்களையும் செய்ய வேண்டும் என்பது கம்பன் கருத்து. இக்கருத்தை இராமன் சுக்கிரிவனுக்கு அரசியல் போதனை செய்யும் போது வெளியிடுகிறான்.

"வாய்மைசால் அறிவின் வாய்த்த மந்திர மாந்தரோடும்
தீமைதீர் ஒழுக்கின் வந்த திறத்தொழில் மறவரோடும்
தூய்மைசால் புணர்ச்சி பேணித் துகள்அறு தொழிலையாகிச்
சேய்மையோடு அணிமையின்றித் தேவரின் தெரிய நிற்றி!"

(கிட்கிந்தா. அரசியல்.28)

உண்மையை ஆராய்ந்து உணரும் அறிவுள்ள அமைச்சர்களோடும் குற்றமற்ற ஒழுக்கத்துடன் திறமையாக நிர்வாகத்தை நடத்தும் வீரர்களுடனும் மனங்கலந்து ஆலோசித்த பின்பே செயல்களைச் செய்ய வேண்டும்; எல்லா மக்களோடும் நெருங்கியும் நெருங்காமலும் பழகவேண்டும்; விரும்புவோரிடம் நெருங்கியும், விரும்பாதோரிடம் நெருங்காமலும் தேவர்களைப் போல வாழ வேண்டும் என்றும்,

"பகையுடைச் சிந்தையார்க்கும் பயன் அறுபண்பில்தீரா
நகையுடை முகத்தையாகி இன்னுரை நல்குநாவால்"

(கிட்கிந்தா. அரசியல்.29)

உன்னிடம் பகைகொண்ட உள்ளமுடையவராயினும் சரி, அவர்களிடம் கடுகடுத்துப் பேசாதே! மகிழ்ந்த முகத்துடன் பேசு! இனிய சொற்களைக் கூறு. இவைகளே பயன்தரும் சிறந்த குணமாகும் என்று மேலும் சுக்கிரிவனுக்கு அறிவுரை கூறினான் இராமன். ஆளுவோர்க்கும் ஆட்சிப் பீடத்தில் அமர்ந்திருப்போர்க்கும் இவை மிகவும் இன்றியமையாத பண்புகள் என்பதை கம்பன் தன் காவியத்தில் எடுத்துரைக்கின்றான்.

**அமைச்சர்கள்**

அரசர்களுக்கு அறிவுரை கூறிய கம்பன் அமைச்சர்களையும் விட்டுவிடவில்லை. ஆளுகை வண்டி குடைசாயாமல் செல்வதற்கு அமைச்சர்கள்தாம் அடிப்படையானவர்கள். அந்த அமைச்சர்கள் எப்படியிருக்க வேண்டும் என்பதைப் பற்றி கம்பன் விளக்கும் போது,

"உற்றது கொண்டு மேல்வந்து உறுபொருள் உணரும் கோளார்
மற்றது வினையின் வந்தது ஆயினும் மாற்றல் ஆற்றும்
பெற்றியர்; பிறப்பின் மேன்மைப் பெரியவர்; அரிய நூலும்
கற்றவர் மானம் நோக்கின் கவரிமா அனைய நீரார்"(அயோத்திமந்திர.7)

நடந்த நிகழ்ச்சியைக் கொண்டு, இனி நடக்கப்போகும் நிகழ்ச்சியைத் தெரிந்துகொள்ளும் அறிவும் ஆற்றலும் உள்ளவர்கள்தூ முன் வினை-யினால் மூண்ட தீமையாயினும் அதை மாற்றும் வல்லமையுள்ளவர்கள்தூ நல்லொழுக்கமுள்ள குடியிலே பிறந்தவர்கள்;சிறந்த நூல்களையெல்லாம் கற்றறிந்தவர்கள்; மானத்திலே தன் மயிர்போனாலும் உயிர் வாழவிரும்பாத கவரிமானைப் போன்றவர்கள்.

"தம் உயிர்க்கு உறுதி எண்ணார்;தலைமகன் வெகுண்டபோதும்
வெம்மையைத் தாங்கி, நீதி விடாதுநின்று உரைக்கும் வீரர்
செம்மையின் திறம்பல் செய்யாத்தோற்றத்தார் தெரியும் காலம்
மும்மையும் உணர வல்லார்; ஒருமையே மொழியும் நீரார்"

(அயோத்தி, மந்திர.9)

தனக்கு மட்டும் நன்மை வேண்டும் என்று கருதமாட்டார்கள்; அரசன் வெகுண்டாலும் அவன் கொடுமையைத் தாங்கிக் கொள்வார்கள்; நீதியை விடாமல் பின்பற்றுவார்கள்; அரசனையும் நீதி நெறியிலே நடக்கும்படி வலியுறுத்தும் வீரர்கள்; நடுநிலையிலிருந்து தவறாத தெளிந்த அறிவுள்ளவர்கள்; ஆராய்ந்து தெரிந்து கொள்ளவேண்டி இறந்தகாலம், நிகழ்காலம், எதிர்காலம் இவைகளைப்பற்றி அறிந்து கொள்ளும் மதிவன்மை படைத்தவர்கள்; தாம் நன்மையென்று கண்ட ஒன்றையே உறுதியுடன் உரைப்பவர்கள்தான் அமைச்சர்கள் என அவர்களின் தகுதியைப்பற்றி, கம்பன் எடுத்துக்காட்டியுள்ளான்.

வள்ளுவர் மொழிந்திருக்கும் அமைச்சர் இலக்கணத்தை இங்கே நினைவுகூரும்போது,

"தெரிதலும் தேர்ந்து செயலும் ஒருதலையாச்
சொல்லலும் வல்லது அமைச்சு" (அதி.64 குறள்.4)

செய்யத்தக்க செயல்களை ஆராய்ந்து அறிவதும், அச்செயல் முடிவதற்குரிய வழிகளை ஆராய்ந்து செய்வதும், உறுதியாகத் தன் கருத்தை வெளியிடுவதும் ஆகியவற்றில் வல்லவனே அமைச்சனாவான். வள்ளுவர் அமைச்சர்களின் தகுதிபற்றிக் கூறிய இக்கருத்தே கம்பன் கருத்துக்கு அடிப்படையாக இருப்பதைக் காணமுடிகின்றது.

**நிறைவுரை**

அரசியல் திறம்பட நடக்க வேண்டுமானால் ஆளுவோரும், அறிவுள்ளவர்களாக இருக்க வேண்டும்; ஆற்றல் உள்ளவர்களாக-யிருக்க வேண்டும். நடுநிலைமையுள்ளவர்களாயிருக்க வேண்டும்;

பொறுமையுள்ளவர்களாயிருக்க வேண்டும்; இன்சொல்லும் நகை முகமுங்கொண்டு எல்லோரையும் தம் வசமாக்கும் தன்மையுள்ளவர்களா-யிருக்க வேண்டும் என்பதே கம்பனிடம் கற்கத்தகு அரசியல் அறங்களாகும்.

# கும்பகர்ணனிடம் காணலாகும் அறமாண்புகள்

திருமிகு. கா. மீரா
தமிழ்த்துறை, பேராசிரியர், பான்செக்கர்ஸ் மகளிர் கல்லூரி,
தஞ்சாவூர்.

## முன்னுரை

கம்பனின் புகழுக்கும் காப்பியக்கதையின் வெற்றிக்கும் காரணம் அறமே எனலாம். பால காண்டம் தொடங்கி யுத்த காண்டம் வரை-யிலுமாக காப்பியத்தில் ஒவ்வொரு படிநிலையிலும் பாவம் அறத்தோடு மோதி இறுதியில் அறம் வெல்வதாகவே முடிகிறது. காப்பியம் முழுவதும் அறப்பண்புகளே மிளிர்ந்து காணப்படுகிறது.

## அறம் – விளக்கம்

அறம் எனும் சொல் இடத்துக்கேற்ப, பல்வேறு பொருள்களில் பயின்று வருகின்றன. அறம் எனும் சொல்லிற்கு அறுத்துச் செல்வது, வழியை உண்டாக்குவது என்பன நேரான பொருளாகும். மனித இன நலத்திற்கும் முன்னேற்றத்திற்கும் மனித சமுதாயம் வரையறுத்துக் கொண்ட ஒழுக்கநெறி அறம் என்பதாகும். இவ்வறம் குறித்து வள்ளுவப்பெருந்தகை தம் நூலில் பல்வேறு கருத்துக்களை வழங்கியுள்ளார். இருப்பினும்,

"மனத்துக்கண் மாசிலன்ஆதல் அனைத்து அறன்
ஆகுல நீர பிற" (குறள் : 34)

என்னும் குறளில் மனதில் குற்றமின்மையே தலைசிறந்த அறமெனப் போற்றியுரைக்கின்றார். கம்பராமாயணத்திலும் கம்பன் படைப்பான இராவணன் மாற்றான் மனைவியின்மீது பற்று வைத்து மனதில் குற்றமுடையவனாக இருந்ததால்தான் அழிவுற்றான்; எனினும் இராவணனின் தம்பியான கும்பகர்ணன் வீரத்தில் வல்லவனாக விளங்கியது போன்றே அறத்திலும் சிறந்தவனாக விளங்கினான். இப்பண்பை கம்பன் படைத்த கும்பகர்ணன் வதைப் படலத்தின் வழி இக்கட்டுரையில் காண்போம்.

## கும்பகர்ணன் அறவுரை நிகழ்த்துதல்

காப்பிய மாந்தர் தம் உள்ளத்து உணர்வுகளை உணர்த்துவதில் கம்பர் தலைசிறந்தவர். 'போர்க்களம் செல்க' என அண்ணனிடமிருந்து கட்டளை பிறந்த போது கும்பகர்ணன் உள்ளம் பதறுகிறான். "ஒப்பில்லாத கற்புடைய சானகியின் துன்பம் இன்னும் நீங்கவில்லையா?" என ஏங்கித் தவிக்கின்றான். இராவணனிடம் தருமம் பேசுகின்றான்.

பிரமனுடைய குலத்திலே தோன்றி, ஆயிரம் மறைப்பொருளையும் உணர்ந்த நீ கெட்ட காரியத்தின் மீது ஆசை வைத்தாய். சித்திரம் போல் அமைந்த நகரம் தீப்பற்றி விட்டது. அரசநீதிக்கு விரோதமாய், அறத்திற்குப் புறமாய்ப் பிறன்மனைவியைக் கவர்ந்து வந்து சிறைவைத்தாய். உன் மனைவி உன் மேல் அன்போடு இருக்க நீ பிறன் மனைவியின் அன்புக்காக அவளிடம் மண்டியிட்டு தொழுது வேண்டுகிறாய். அவள் மறுக்கிறாள். பிறர் மனைவியைச் சிறைவைத்து அவள்மேல் காதல் கொள்ளுவேன்; மானத்தைப் பற்றிப் பெரிதாகவும் பேசுவேன். நடுவிலே காமத்தையும் பாராட்டுவேன். மனிதரைக் கண்டு பயப்படுவேன் என்கிறாயே.

"பேசுவது மானம் இடைபேணுவது காமம்
கூசுவது மானுடரை நன்று நம் கொற்றம்"

(இராவணன் மந்திரப்படலம், பா. 52)

என்று மூவுலகும் கண்டு நடுநடுங்கும் இராவணனிடம் சிறிதுகூட அஞ்சாமல் அறம் பேசுகிறான். மேலும், 'சீதையை மறந்து விடு' என வேண்டினான். உன் செயல் நாட்டை அழிக்கும் என எச்சரித்தான்.

"கெடுத்தனை நின் பெரும் கிளையும் நின்னையும்" என உன்னையும் நீ அழித்துக்கொண்டு உன் சுற்றத்தாரையும் பறிகொடுக்கின்றாய் என்றெல்லாம் அறிவுறுத்துகிறான். அண்ணன் மீள வேண்டும், தன் தாய் நாடு வாழவேண்டும் என்று நெஞ்சார விரும்பும் கும்பகர்ணனின் அறவுள்ளம் புலனாகிறது.

### அன்பே அறம்

இராவணனின் தம்பியர் இருவருள் ஒருவரான வீடணன் அறத்தைப் போற்றுபவன். அறவழியை மேற்கொள்பவன். அதனாலேயே இராவணனின் பாவச்செயலுக்கு மனம் ஒவ்வாமல் அவனிடம் அறம் பேசுகிறான். இறுதியில் பலனின்றி அறத்தை நிலைநாட்டும்பொருட்டு அறமூர்த்தியான இராமனிடம் அடைக்கலம் புகுகின்றான். அறத்திற்காக வாதாடுகின்றான். ஆனால் கும்பகர்ணனோ, அண்ணன் மீது கொண்ட எல்லையற்ற அன்பின் காரணமாக அவனைப் பிரிய மனமின்றி செஞ்சோற்றுக்கடன் கழிக்கவே விரும்புகிறான். வீடணன் எவ்வளவுக்கெவ்வளவு தன்னை இராமனோடு ஐக்கியப்படுத்திக் கொண்டானோ அவ்வளவுக்கவ்வளவு கும்பகர்ணன் தன்னை இராவணனோடு ஐக்கியப்படுத்திக் கொண்டான். தன்னுடைய வாழ்வையும் தாழ்வையும் அண்ணனுடைய வாழ்வு தாழ்வுடன்

இணைத்துக்கொண்ட மாவீரன் கும்பகர்ணன். ஆகவேதான் இராவணன் செய்வது தீது என அறிந்தபிறகுங்கூட, அவனை விட்டுப் பிரிய அவன் விரும்பவில்லை. அதற்காக இராமனைச் சென்றடைந்தவீடணனை வெறுக்கவும் இல்லை. மாறாக அவன் மீது அன்பையே பொழிகிறான். அதுமட்டுமல்லாமல் அண்ணனுக்கு முன்பே தான் சாகவும் விரும்புகிறான்.

"தம்பியரின்றி மாண்டு கிடப்பனோ தமையன் மண்மேல்" என அவன் அன்புருக வினாவும் வினா அவனது பாசத்தை மேலோங்கச்செய்கிறது. கும்பகர்ணனனை இராமன் பக்கம் வந்து சேரும் பொருட்டு வீடணன் வற்புறுத்துகிறான். வீடணன் கூறியது போல் இராவணனைவிட்டுப் பிரிந்து இராமனைச் சார்ந்து வாழும் நிலையினை நினைத்துப் பார்க்க முற்படுகிறான். ஆனால் கணநேரம் கூட அப்பிரிவை அவனால் கற்பனை செய்து பார்க்க முடியவில்லை. மாறாக, "கும்பிட்டு வாழ்கிலேன் இனி யான் கூற்றையும் ஆடல் கொண்டேன்." என்றே முழங்குகிறான்.

காப்பியத்தில் கும்பகர்ணன் நிலை வேறு வீடணன் நிலை வேறு. அறத்திற்காக எதையும் துறக்க முயல்பவன் வீடணன். பாசத்திற்காகத் தன்னையே இழக்கத் துணிந்தவன் கும்பகர்ணன். அவன் சகோதரர்கள் மீது கொண்ட அன்பு இங்கு அறமாக மிளிர்வதைக் காணமுடிகிறது.

**செஞ்சோற்றுக் கடன் தீர்த்தல்**

தன் சகோதரனுக்காக அதுவும் சோறு போட்டு வளர்த்த உடன் பிறந்தவனுக்காக அறமே வெல்லும் என்பதை நன்கு உணர்ந்தும்கூட உயிர் விடப் போர்க்களம் நோக்கிப் புறப்படுகிறான். தன் சாவு அவனுக்குத் தெளிவாகப் புரிகிறது. ஆனால் அண்ணனாகிய இராவணனுக்கு அந்த முடிவு வரக்கூடாது என எண்ணுகிறான் போருக்குப் புறப்படும் முன் இனி நடக்கப் போகின்றவற்றையும் இராவணனுக்கு எடுத்துச்சொல்லி இறுதி முறையாகத் திருத்தப் பார்க்கிறான்.

"பொன்றுவன்; பொன்றினால் பொலன் கொள் தோளியை
நன்று என நாயக விடுத நன்றரோ" (கும்ப. வதைப்படலம், பா. 95)

என இராவணனை நோக்கி, 'இராமனை வெல்வது அரிது, நான் போர்க்களத்தில் போரிட்டு வீழ்வது உறுதி ஆகவே அப்பொழுதாவது சீதையை விட்டு விடு' என உள்ளம் நெகிழுமாறு அறவுரை நிகழ்த்திச் செல்கிறான். ஏனெனில் போரில் தான் வீழ்ந்தபிறகு தன்

அண்ணனோடும் இராமன் போர் புரிய வருவான். தன் அண்ணனும் அப்போரில் இறந்துபட நேரிடலாம். இராமனின் வீரம் அத்தகையது. இராவணன் தன்னுயிரை மீட்டுக் கொள்வதற்கு வேண்டியாவது சீதையை விட்டுவிட வேண்டும் என நினைக்கும் கும்பகர்ணனின் பாச உணர்வும், தன் உயிர் நீப்பினும் அண்ணன் உயிர் நிலைக்க வேண்டும் எனக் கருதும் அறமாண்பும் புலனாகிறது.

ஆகவேதான் அண்ணன் இராவணனுக்காகப் போர்க்களம் சென்று தோள்கொட்டி ஆர்ப்பரிக்கின்றான். வானரக் கூட்டத்தோடு போர் புரிந்து, சுக்ரீவனைத் தாக்கி அவனை இலங்கைக்குத் தூக்கிச் செல்ல முற்படுகிறான் . இறுதியில் இராமன் வந்து எதிர்த்து நிற்க அவனோடு மூர்க்கத் தனமாகப் போரிட்டு கையையும் காலையும் இழக்கிறான். உடலுறுப்பினை இழந்த பிறகும் தன் அழிவுக்காக வருந்தாமல் அண்ணனைக் காக்க முடியவில்லையே. அவனுக்குத் துணை இனி வேறு யாரும் இல்லையே என்று புலம்புகிறான்.

**வீடணனுக்காக வெளிப்படுத்திய அறம்**

போர்க்களத்தில் இராமனின் வில்லுக்கு, தன் கை,கால்களை இரையாக்கி நின்ற கும்பகர்ணன், பிறர் மனைவியின் மீது கொண்ட ஆசைநோயால் ஏற்பட்ட விளைவே இதுவென எண்ணி துன்பமுற்றான். எக்காலத்திற்கும் வாழவேண்டிய தன் அண்ணன் இனி இராமனிடமிருந்து தப்பிச்செல்ல வழியே இல்லை என்று ஒருபுறம் வருந்தினான். மறுபுறம் தன் தம்பி வீடணனாவது உயிரோடு இருக்க வேண்டும் என்றும், அவனால் அரக்கர்குலம் மீண்டும் பொலிவு பெற வேண்டும் என்றும் விரும்பினான். அதனால் இராமனிடம், "இராவணன் வீடணனை தன் உடன்பிறந்த தம்பியாயிற்றே என்று சிவிதும் இரக்கம் காட்ட மாட்டான். கண்டால் கொன்று விடுவான். எனவே அவன் உன்னையும் உன் தம்பியையும் அனுமனையும் பிரியாமல் இருக்குமாறு அருள் புரிய வேண்டும். அவனை அடைக்கலமாகக் கொண்ட தாங்கள் காப்பாற்ற வேண்டும்" என வேண்டிக் கொண்டான்.

வீடணனிடம் 'அமுதம் போன்ற இராமனை அடைந்து இன்பத்தை அனுபவிக்க வேண்டுமே தவிர மரணத்தை எதிர் நோக்கி இருக்கும் எங்களை வந்தடையக் கூடாது' என அறிவுறுத்துகிறான். தம் தம்பியால் தாய்குலமும், தாய் நாடும் தழைக்க வேண்டும் என்றும் விரும்பும் கும்பகர்ணனின் மாண்புள்ளம் போற்றுதற்குரியதாகும்.

# கம்பனிடம் கற்கத்தகும் போர் அறங்கள்

முனைவர் கு.சந்திரசேகரன்
தலைவர், தமிழாய்வுத்துறை, மீனாட்சி இராமசாமி கலை அறிவியல் கல்லூரி,
தத்தனூர்.

தருமத்திற்கும் அதருமத்திற்கும் நடக்கின்ற போரே இராமாயணமும், மகாபாரதமும் ஆகும். இரண்டிலும் அறப்போர்முறை பற்றியும் போர்நெறிகள் பற்றியும் நிரம்ப பேசப் படுகிறது. மகாபாரதத்தில் அறப்போர் முறைபற்றி அனைவருக்கும் பீஷ்மர் விளக்குவதைப்போன்று இராமாயணத்தில் இரகு குலத் திலகனான இராமன் விளக்கியும் வாழ்ந்தும் காட்டுகின்றான். தனிமனித வாழ்க்கையிலும் அரசனாக இருந்து அரசு இயற்றும் நிலையிலும் போர்செய்யும் வீரனாகவும் அறத்தைக்கடைப்பிடிக்க வேண்டும் என்று தானும் அறவழியில் நின்று மற்றவர்களையும் வாழ வழிவகுக்கின்றான். அதனால் அத்தகையவனைக் கம்பர் 'அறத்தின் மூர்த்தி (அயோத். 39)' என்றும், 'அறத்தின் ஆறு (கிட்கிந்தா. 268)' என்றும் 'அறத்தின் நாயகன் (சுந்தர. 637)' என்றும் போற்றுகின்றார்.

## போரில்லா சமுதாயத்தைக் காண விழைதல்

அமைதியும் பண்பும் ஒழுக்கமும் அற்றவர்களே போர் வெறித்தனம் கொண்டு நாட்டின் அமைதியை குலைக்கின்றனர் என்பது கம்பரின் எண்ணம். அயோத்தியை ஆண்ட தசரதன் மூலம் போரில்லாச் சமுதாயத்தையும் பூசலற்ற ஆட்சியையும்; காண கம்பர் விழைகிறார் எனில் அதில் இருவேறு கருத்திற்கு இடமில்லை. "உலகில் நாகரிகம் முற்றும் அழிந்துவிட்டாலும் திருக்குறளும் கம்பன் காவியமும் இருந்தால் போதும் மீண்டும் அதனைப் புதுப்பித்து விடலாம்" (தமிழ்நூல், பத்தாம் வகுப்பு, ப.116) என்கிறார் கால்டுவெல்.

இராமனுக்குத் திருமுடி சூட்ட தசரதனும் அமைச்சர் குழாமும் முடிவெடுத்தபின் அயோத்தியே மகிழ்ச்சிக்கடலில் மூழ்கின. குலகுருவான வசிட்டன் இராமனுக்கு அரசியல் அறிவுரையினைக் கூறுகின்றான்.

"யாரொடும் பகைகொள்ளலன் என்றபின்
போர் ஒடுங்கும் புகழ் ஒடுங்காது: தன்
தார் ஒடுங்கல் செய்யாது: அது தக்கபின்
வேரொடும் கெடல் வேண்டல் உண்டாகுமோ?" (அயோத்தியா. 112)

எவரொடும் நெஞ்சில் பகை இல்லையெனில் போருக்கு வேலையிராது. ஓர் அரசன் ஆளும் நாட்டில் போர் இல்லையென்றாலும் புகழ் குறையாது. மாறாக, புகழ் வளரவே செய்யும். எல்லோரோடும் அன்புள்ளத்துடன் நட்புகொண்டு வாழ்ந்தால் பகைமையில்லை. பகைவரை வேரோடு அழிக்க நினைக்கும் எண்ணமும் இல்லை. இத்தகைய பகைமைக்குணமும் போரும் அயோத்தியில் தசரதன் ஆட்சியில் அறவேயில்லை.

"வண்மை யில்லை யோர் வறுமை யின்மையால்
திண்மை யில்லை நேர் செறுநர் இன்மையால் (பால. 85)

என்று கம்பன் கண்ட அல்லது காண விழையும் நல்லரசு அயோத்தி அரசு. கிட்கிந்தையிலும் இலங்கை அரசிலும் இத்தகைய அமைதியும் போரில்லா மனநிலையும் பகைமையின்மையும் அன்பு மனத்தையும் காணவியலாது.

**பகைவனுக்கு இரக்கம் காட்டுதல்**

வசிட்டன் கூறிய அறிவுரையைச் சிரமேற்கொண்ட இராமன், அதனைக் கடைப்பிடித்து அதன்வழி நின்றான். மானிட அவதாரத் திற்கேற்ப இன்பதுன்பங்களில் பங்கெடுத்துக்கொண்டாலும் பகைவனைப் பகைவனாகவே கருதுவதில்லை. வம்புச்சண்டைக்குச் செல்வதில்லை. வந்த சண்டையையும் விடுவதில்லை என்னும் மனநிலையில்தான் இராமனும் இலக்குவனும் இருந்திருக்கின்றனர். அதேசமயம் நேர்மையான அறப்போர் முறையையே நிகழ்த்தியுள்ளனர்.

முதல்நாள் போரில் தோல்வியுற்ற இராவணன் களத்தில் அனைத்தையும் இழந்து நிராயுதபாணியாக நிற்பதைக்கண்ட இராமன் அவன் தனிமை கண்டு இரங்கி,

"......................................இன்றுபோய்ப் போருக்கு
நாளை வாவென நல்கினன் (யுத்த. 1218)

பகைவனையும் பகைவனாகக் கருதாது அவனிடத்து இரக்கம் காட்டி, இறுதிவரை அவன் திருந்துவதற்கு வாய்ப்பு அளிக்கும் நிலையில் இராமன் விளங்கினான். தன்னைத் திருத்திக்கொள்ளாத பட்சத்தில் தண்டிக்கின்றான். இஃது, வள்ளுவர் கூறும் "அறன் இழுக்காது அல்லவை நீக்கி" வாழவும் வாழவைக்கவும் செய்வது அரசனுடைய கடமை.

முன்பு ஆரணிய காண்டத்தில் இடர்செய்த இந்திரன் மகன் சயந்தனுக்கும் இரக்கம் காட்டி வாழ்ந்தவன். கவந்தன் எனும் அரக்கனுக்கும் உயிர்ப் பிச்சையளித்தவன் இராமன்.

### அறப்போர் செய்தல்

போர்க்களத்தில் பூமியில்நின்று போர் செய்பவனோடு எதிராளியும் பூமியில் நின்றபடியும், தேரில் இருப்பவனோடு தேரிலும், குதிரை வீரன் மற்றொரு குதிரை வீரனோடும், ஆயுதம் ஏந்தியவன் ஆயுதம் ஏந்தியவனோடும், மல்யுத்தம் செய்ய விரும்புபவனோடு தாமும் ஆயுதமின்றி மல்யுத்தத்திலும் போர்செய்ய வேண்டும். மேலும், நிராயுதபாணியைத் தாக்கக்கூடாது. புறமுதுகிடுபவனைத் தாக்காமை, சூரியன் அஸ்தமனத்திற்குப் பிறகு போர் செய்யாமை இவையாவும் சிறந்த போர் வீரன் கடைப்பிடிக்க வேண்டிய நெறிகளாகும். இவையும் இவைபோன்ற பிறவும் யுத்த தருமங்களாகும். இதனை ஒவ்வொரு வீரனும் கடைப்பிடித்தால் போர் சிறக்கும். இத்தகைய அறப்போர் முறையினை நீதிவழுவா செங்கோல் அரசன் பின்பற்றுவான்.

"வில்லின் செல்வனான ஓர் வீரன் தன்னொடு வில்லாண்மையில் நிகராய வீரர் மீது அம்பு தொடுத்தல் முறையே அன்றி மாதர் மீது கணைவிடுத்தல் வில்லறத்திற்கு மாசாகுமென்று கருதிய பெருமை சான்ற வீரனைப் 'பெருந்தகை' என்று கம்பர் போற்றும் திறம் அறிந்து மகிழத்தக்கதாகும்". (ரா.பி. சேதுப்பிள்ளை, கம்பர் கவிஇன்பம் தொ.1, ப. 45.)

சிறந்த வீரனுக்கு அழகு போரில் புறங்கொடாமை. அத்தகைய வீரனின் உண்மையான மறக்குணம் பற்றியும் போர் அறம்பற்றியும் கம்பர் இராமாயணத்தில் பல இடங்களில் குறிப்பிடுகின்றார்.

"இறப்பினும் திருவெலாம் இழப்ப எய்தினும்
"துறப்பிலர் அறமெனல் சூரர் ஆவதே. (அயோத். 567)

யுத்தத்தில் அறநெறி வழுவாமல் கடைப்பிடிப்பதே சூரர்களுக் குரிய மறக்குணம். போரில் சரிசமமாக நின்று போரிடுதல், போரில் சோர்வு அடைந்தவனைத் தாக்காமை, வலி குறைந்தாருடன் போரிடாமை போன்றவையும் அறப்போர் முறையாகும்.

"கை துறந்த படையினன் கண் அகல்
மெய் துறந்த உணர்வின், வீழ்தலும்
எய்திறந் தவிர்ந்தான். (யுத்த. இராவணன் வதை. 173)

போரில் சோர்வு அடைந்த இராவணனை, அவன் சோர்வு நீங்கும்வரை அம்பெய்யாது இருந்தான். இதையே மேற்கண்ட பாடல் காட்டுகிறது.

இராமன் அறப்போர் செய்ததுபோன்று, அதிகாயன் சோர்வு கொண்டபோது, இலக்குவனும் அறப்போர் செய்தான். அரக்கர்களில் கும்பகருணனும் அறப்போர் செய்துள்ளான். அரக்கர்களில் மகோதரனும் மேகநாதனும் மாயப்போர் செய்து அறப்போர் முறையிலிருந்து சற்று எல்லை மீறுகின்றனர். ஆனாலும், நிலையான வெற்றி அறப்போரைக் கடைப்பிடிப்பவர்களுக்கே கிட்டுகிறது.

**முடிவு**

இராம - இராவணப்போர் ஓர் அறப்போர். அறத்திற்காக நிகழும் போர். அரசியலிலும், வாழ்வியலிலும், போர் இயற்றும் நெறிகளிலும் இராமன் திறத்தார் மிகுந்த கவனமாகவே செயல்படுகின்றனர். இராமலக்குவர்களிடமிருந்து பல போர் அறத்தை வானர வீரர்களும், வானர வீரர்களிடமிருந்து பலவற்றை அரக்கர்களும் தெரிந்து கொள்கின்றனர் என்று கூடச் சொல்லலாம். இவர்கள் அனைவரும் கம்பனிடம் கற்றுக்கொண்டனர் என்று சொல்லுமளவிற்கு காப்பியத்துள் பல இடங்களில் போர் அறம் புலனாகிறது.

## கம்பரின் அற, அறிவியல் சிந்தனைகள்

முனைவர் க.சோ.பால்சந்திர மோகன்
பேராசிரியர், தமிழாய்வுத் துறை, பிஷப்ஹீபர் கல்லூரி,
திருச்சி.

### முன்னுரை

'விருத்தம் எனும் ஒண்பாவிற்கு உயர் கம்பன்' என்று போற்றுகின்ற கம்பன் பல்வேறு அறங்களை இப்பாரோருக்கு எடுத்து ஓதுகிறான். அறத்தின் களஞ்சியமாக அவனது இராமாயணம் திகழ்கிறது எனில் அது மிகையன்று. தனிமனித அறம், சமுதாய அறம், போர் அறம், ஆட்சி அறம் என்ற மாட்சிமிகு அறங்களை இம்மண்ணோருக்கு எடுத்தோதுவதில் அவனுக்கு நிகர் அவனே என்றாலும் அது மிகையன்று. அற நூல்கள் பல அறத்தைப்பற்றிக் கூறியிருப்பினும் கம்பன் தான்யாத்த இராமாயணத்தில் அறத்தை உணர்த்தத் தவறவில்லை. அதுபோன்றே அறிவியல் கருத்துக்களையும் தன் எழுத்தில் ஏற்றி ஒரு தமிழன் அறிவியல் அறிஞன் அல்லது அறிவியல்பூர்வமாக சிந்திக்கும் சிந்தனையாளன் என்ற கருத்தையும் நிலைநாட்டியுள்ளான். கம்பன் உணர்த்திய அறம், கம்பன் அறிந்த அறிவியல் ஆகிய இவ்விரண்டு சிந்தனைகளையும் இக்கட்டுரை கூற விழைகிறது.

### தனிமனித அறம்

ஒழுக்க நெறி தவறாத சீர்மிகு சீலனாக இராமாயணம் முழுவதிலும் இராமனைக் காட்டிச் செல்கின்றான் கம்பன். அறவழியில் செல்கின்ற ஒரு தனி மனிதனே, சமுதாயத்தையும் அறவழியில் கொண்டு செல்ல முடியும் என்ற கருத்தில் கம்பனுக்கு பெரிய உடன்பாடு இருந்தது.

### பெற்றோர்க்குக் கீழ்படிதல்

'தாயிற் சிறந்த கோவிலும் இல்லை, தந்தை சொல்மிக்க மந்திரமில்லை' என்ற கூற்றிற்கு இணங்கத் திகழ்ந்தவன் இராமன். அதாவது பெற்றோருக்குக் கீழ்படிதலே சிறந்த அறம் என்பதை இராமன் மூலம் கம்பன் விளக்கத் தலைப்படுகிறான். தசரதன் அரசு பொறுப்பு ஏற்க வேண்டும் எனக்கூறியபோது ஏற்றுக்கொள்ள இசைந்தான். கைகேயி வனவாசம் செல்லப் பணிக்கும்போது அதற்கும் இசைந்தான். கைகேயி இராமனிடம் பணித்தபோது அன்றலர்ந்த செந்தாமரையாகச் சென்றான். இவ்வாறு பெற்றோருக்குக் கீழ்ப்படிதல் சிறந்த அறம் என கம்பன் உணர்த்துகிறான். இதை புனிதத் திருமறையில் "பிள்ளைகளே உங்கள் பெற்றோருக்கும் கர்த்தருக்குள் கீழ்படியுங்கள் இது நியாயம்"

(எபேசியர் 6-1) என்கிறது. 'இப்பிறவிக்கு இருமாந்தரைச் சிந்தையாலும் தொடேன்' என இராமன் கம்பன் காட்டும் தனிமனித அறமே சிறந்தது.

**தீமைக்கு எதிர்த்து நிற்றல்**

தாடகை என்ற அரக்கியை இராமன் கொல்லத் தயங்குகிறான். இராமன் தயக்கத்திற்குக் காரணம் தாடகை பெண் என்பதே. தனக்குத் தீங்கு செய்தவர்களையோ அல்லது தீமை விளைவிப்பவர்களையோ கொல்வது தவறாகாது என்பதை இராமனுக்கு உணர்த்தினார். 'தீமைக்கு எதிர்த்து நில்லுங்கள்' எனத் திருமறை செப்புவது ஈண்டு சிந்தித்தலுக்குரியது. அதன்பின்பே இராமன் தாடகையைக் கொல்கிறான். பெண் பாவம் பொல்லாதது என்பது அனைவரும் அறிந்ததே. ஆயின், தீமைக்கு எதிர்த்து நிற்பது எவ்விதத்திலும் தவறல்ல என்பதை நன்கு உணர்ந்தவனாக கம்பன் இவ்வறத்தை இராமன் மூலம் உணர்த்தியுள்ளான். வாலி இராமனுக்கு எந்தக் கெடுதலும் செய்யவில்லை. சுக்ரீவனுக்காக வாலியை இராமன் கொன்றான். வாலி கொல்லப்படுவதற்கு உரியவன் என்பதை வள்ளுவர் அறத்தைக் கொண்டு கம்பன் உறுதிப்படுத்துகிறான். வாலியின் குற்றம் இராமன் கூற்றால் உணரப்படுகிறது. பாடல் வருமாறு

"ஈரம் ஆவதும் இற்பிறப்பாவதும் வீரம் ஆவதும் கல்வியின் மெய்ந்நெறி
வாரம் ஆவதும் மற்றொருவன் புணர் தாரம் ஆவதை தாங்கும் தருக்கரோ?
(கிட்கிந்தா, வாலி வதை.99)

இரக்கம் என்று சொல்வது, உயர்ந்த குடிபிறப்பு என்று கூறுவது, வீரம் என்று விளம்புவது, கல்வியினால் அறிந்த உண்மை நெறி என்று உரைக்கப்படுவது, அன்பு என்று கூறுவது இவையயல்லாம் மற்றவனுடைய மனைவியை தன்னுடைய மனைவியாகக் கொள்ளும் கர்வமா? எனக் கேட்பது எத்தகைய அறம் என்பதை இக்கதையில் சிந்திக்கவேண்டும்.

"தர்மம் இன்னதெனும் தகைத்தன்மையும்
இருமையும், தெரிந்து எண்ணலை எண்ணினால்
அருமை உம்பிதன் ஆருயிர்த் தேவியைப்
பெருமை வீங்கினை எய்த பெருதீயோ (மேற்படி, 100)

தர்மம் என்றால் இன்னது என்று நீ சிறிதும் சிந்தித்ததில்லை. இத்தர்மத்தால் எய்தும் இருமை பயன்களையும் எண்ணிப் பார்க்கவில்லை. இவை பற்றி நீ எண்ணியிருந்தால் உன் நண்பனின் மனைவியை எவ்வாறு எடுத்துக்கொள்ளவியலும். உன்னுடைய

பெருமையை இழந்து நிற்கின்றாயோ என இராமன் வாலியைப் பார்த்துக் கேட்கிறான். மாற்றான் மனை நயத்தல் கூடாது என்னும் அறத்தைக் கம்பன் இவ்வாறு வலியுறுத்துகிறான். எனவே வாலி செய்த பெருங்குற்றம் பிறன்மனை நயத்தல் அதுவே அறக்குற்றம். மறைந்திருந்து கொல்வது தவறு எனத் தெரிந்தும் இராமன் வாலியைக் கொன்றான். வாலியின் அறமற்ற செயலைத் தடுக்கும்போதும் இராமன் செயல் அறம் வழியாக இருந்தது என்று இங்கு நினைவுகூரத்தக்கதாகும்.

### இராவணனுக்கு அறிவு புகட்டல்

இராவணன் தன் மாமனாகிய மாரீசனிடம் சென்று சீதையின் மீது தான் கொண்ட காதலைக் கூறி அவளைக் கவர்ந்துகொண்டு வருவதற்குத் தனக்குத் துணை செய்யவேண்டும் என்று கேட்டான். அதற்குப் பதிலாக மாரீசன் இராவணனுக்கு எடுத்துக்கூறும் அறிவுரைகள், புத்திமதிகள் அனைத்தும் அறமே என்பதை அறியலாம்.

"நாரம் கொண்டார், நாடு கவர்ந்தார், நடையல்லா
வாரம் கொண்டார், மற்றொரு வர்க்காய் மனைவாழும்
தாரம் கொண்டார், என்றிவர் தம்மைத் தருமந்தான்
ஈரம் கண்டாய் கண்டவர் உயர்ந்தார் எவர் ஐயா?

என்றான். நடுவு நிலைமை தவறிய அன்பு கொண்டவர்கள் பிறர் நாட்டை பலவந்தமாகக் கவர்ந்தவர்கள் ஒழுக்கமற்ற செயல்களிலே ஆசை கொண்டவர்கள் மற்றவருக்கு உரியவராய் அவர் மனையிலே வாழும் தாரத்தைக் கவர்ந்தவர்கள், இவர்களையெல்லாம் தர்மமே அழித்துவிடும். என மாரீசன் அறிவுரை கூறுவதன் மூலம் கம்பன் இவ்வரத்தை உலகிற்கு எழுதியிருக்கிறான். அதர்மத்தின்வழி நடப்பவர்களை தர்மம் தண்டிக்கும் என்பதை அறமாக இவ்விடம் கொள்ளவியலும்.

### கும்பகர்ணன்

கும்பகர்ணன் இராணனுடைய தம்பி. அவன் இறுதி வரையிலும் இராவணன் பக்கத்திலே நின்று போர் செய்தான். அவனும் இராவணனை இடித்துக் கூறுகிறான். சீதையைச் சிறையெடுத்த காரணத்தால் அரக்கர் குலம் அழியக்கூடிய தீமைக்கு ஆளாயிற்று என்கிறான் கும்பகர்ணன்.

"ஆயிரம் மறைபொருள் உணர்ந்து, அறிவமைந்தாய்
தீவினை நயப்புருத்தல் செய்தனை (யுத்தம், 48)

நெறிபிறழ்ச்சி உடையோர் செய்யும் செயல் இதைவிட பெரும்பழி வேறு ஏதேனும் உண்டோ? எனக்கூறும் கும்பகர்ணன்,

"ஆசில் பரதாரம் அவை அம்சிறை அடைப்போம்
மாசில் புகழ்காதல் உறுவோம் வளமைக் கூறப்
பேசுவது மானம் இடை பேணுவது காமம்
கூசுவது மானுடரை நன்று நம் கொற்றம்"

என்றான். இப்பாடல் மூலம் இராவணன் அறத்திற்கு மாறாக நடந்தான் என்பதை கும்பகர்ணன் வாயிலாக, கம்பன் சுட்டுகிறான்.

இவ்வாறு இராமன் மனிதனாகப் பிறந்து அறவழியில் உயர்ந்ததால் தெய்வமாக உயர்த்தப்படுகிறான். இராவணன் மனிதனாகப் பிறந்து அறமற்ற வழியில் சென்றதால் அரக்கனாகத் தாழ்கிறான். தனி மனிதன் பின்பற்றிய அறம் அவன் உயர்வுக்கு வழிவகுக்கும் என்ற உண்மை கம்பன் காப்பியத்துள் விரவிக் கிடக்கின்றது.

**கம்பன் கண்ட அறிவியல் – அணு**

முத்தமிழ் என்ற நிலை மாறி நான்காவதாக அறிவியல் தமிழும் சேர்ந்து கொண்டது. இந்த அறிவியல் தருகின்ற மிகப் பரந்த கருத்தையும், சிறந்த அறிவையும் குறள் தன்னுள் அடக்கியுள்ளதை,

"அணுவைத் துளைத்து ஏழ்கடலை புகட்டிக்
குறுகத் தரித்தக் குறள்"

என்று ஔவையார் பாராட்டியுள்ளார்.

அணுவைத் துளைத்து என்று சொன்னால், அணுவைப் பார்க்கவோ, அல்லது துளைக்கவோ இயலும் என்ற கருத்தை அக்கால மக்கள் கொண்டிருந்தனர் என்பதை உணர முடிகிறது. இக்கருத்தை, கம்பரும் தமது காவியத்தில் தெளிவாகக் குறிப்பிட்டுள்ளார். இரணியன் வதைப் படலத்தில் இரணியனுக்கும் கடவுள் பக்தி கொண்ட தன் மகன் பிரகலாதனுக்கும் கடவுள் பற்றிய விவாதம் ஏற்பட்டபோது பிரகலாதனைப் பார்த்து கடவுள் எங்கே இருக்கிறார் உன்னால் காட்ட முடியுமா என்று இரணியன் கேட்க, பிரகலாதன் கடவுள் எங்கும் நிறைந்திருக்கிறார். அவர் தூணிலும் இருப்பார், துரும்பிலும் இருப்பார். அணுவிலும் அணுவை நூறாகக் கூறாகக் கூறிட்ட கோணிலும் இருப்பார் என்றான். இதனைப் பின்வரும் பாடல் வரிகள் உணர்த்துகின்றன.

"சாணினும் உளனோர் தன்மை யணுவினைச் சத கூறிட்ட
கோணிலும் உளன்" (கம்ப.யுத்த.253)

அணுவைப் பிளக்க முடியும். அவ்வாறே பிளக்கும்போது

நான்கு வகையாக மட்டுமே பிளக்க முடியும். அதற்குமேல் பிளக்க இயலாது என்பது இன்றைய அறிவியலாளர்களின் கருத்தாகும். ஆனால் அணுவை நூறு பகுதியாகவும் பிளக்க இயலும் என்று கம்பர் குறிப்பிடுகின்றார். அவ்வாறு அணுவை, நூறு பகுதியாகப் பிரித்த பகுதிக்கு கோண் என்று பெயர் கொடுத்துள்ளது சிந்திக்கத்தக்கதாகும். இது கம்பனின் விஞ்ஞான அறிவைக் காட்டுவதாகவே உள்ளது.

அணு என்பது அறிவியல் நூல்களின்படி னிகச் சிறியது என்பது யாவரும் அறிந்த உண்மையாகும். அணு னிக சிறியதாக இருக்கும் என்ற கருத்து கம்பருக்கும் உண்டென்பதை அவர் கூறும் ஒரு நிகழ்ச்சியில் உணரமுடிகிறது.

இராமாயணப் போரில் உச்சக்கட்டத்தில் இந்திரசித்தும் இலக்குவனும் ஒருவரையொருவர் எதிர்த்துப்போரிட்டுக் கொண்டிருந்த இந்திரசித் அணுவைப் போன்றதோர் சிறிய உடலை எடுத்து மேக மண்டலத்துக்குச் சென்று மறைந்துகொள்கிறான். இந்திரசித்து தோற்றோடி விட்டான் என்று பிறர் கருதத் தன் தவவலிமையாலும், மந்திரசக்தியாலும் அணு போன்ற சிறிய உடலை எடுத்துக்கொண்டான் என கம்பர் குறிப்பிட்டுள்ளார். இதனை,

> "தனிவர வண்டுசெய்த தவத்தினும் தருமத்தானும்
> பிணியறுப் பவரிற் பெற்ற வரத்தினும் பிறப்பினாலும்
> மணிநிறத் தரக்கன் செய்த மாயமந் திரத்தினாலும்
> அணுவெனச் சிறிய தாங்கோ ராக்கையூர் முடையநான்"

என்ற பாடலடியால் அறியலாம். அணுவைப் பற்றிய சிந்தனைகள் இவ்வாறு இருக்க, நஞ்சு பற்றிய ஒரு செய்தியையும் கம்பன் இங்கு அளிக்கின்றான் .பாம்பின் நஞ்சை முறிப்பதற்காகப் பிறிதொரு நஞ்சையே உட்செலுத்தி நஞ்சை முறித்திருக்கிறார்கள். இச்செயல் உணர்ந்த கம்பன் இதனையே ஓரிடத்தில் உவமையாகப் பயன்படுத்தியுள்ளார்.

**முள்ளை முள்ளால் எடுத்தல்**

இந்திரசித்துக்கும் இலக்குவனுக்கும் போர் மூண்டபொழுது இலக்குவன் மிகச் சினம் கொண்டு ஓர் அம்பை எய்துவிட அது இந்திரசித் விடுத்த அம்பைத் தடுத்து நிறுத்துவதோடு விண்ணில் வெறும் நெருப்பை ஏற்படுத்திக்கொண்டு இடையூறு விளைக்க இலக்குவன் அதன் மற்றொரு நெருப்புடைய அம்பை விடுத்து, அதைத் தணித்தான். இச்செயலுக்கு உவமையாகத் தான் ஒருவிடம்

கொண்டு பிறிதொரு விடம் மீட்கப்படுவது போல ஒரு அம்பைக் கொண்டு மற்றொரு அம்பின் வேகத்தை தணித்தான் என்று கம்பர் குறிப்பிட்டுள்ளார். இவ்வுவமையின் மூலம் நாம் அக்கால மக்களின் அறிவியல் சிறப்பை நன்கு உணரலாம். இதனை

"விடமொன்று கொண்டோன்நீர்ந்தது போறீர்ந்தது வேகம்"

(கம்ப.யுத்த.3006)

என்ற பாடல் வரிகள் உணரத்துகின்றன.

**இறந்த உடலைப் பதப்படுத்துதல்**

இலக்குவன் பிரம்மாஸ்திரம் அம்பினைச் செலுத்தி வீழ்த்தினான். இதையறிந்து துயருற்ற இராவணன் பின் தன் மகனின் உடல் கெடாமல் இருக்கும் மருத்துவ நிபுணர்களை அழைத்து மூலிகைகள் அடங்கிய தைலத்தில் இந்திரசித்தின் சடலத்தை அதிலிட்டு வைக்குமாறு பணிக்கிறான் எனக் கம்பன் குறிப்பிடுகிறார்.

மேலும் தைலமாட்டு படலத்தில், தசரதன் உடலைத் தைலத்தில் இட்டுப் பாதுகாத்து வைத்திருந்தனர் என்ற செய்தியில் இருந்தும் இவ்வுண்மையை உணரலாம். உடல் கெடாமல் இருக்க வேண்டிய வழிமுறைகளை நன்கு அறிந்து வைத்துள்ளதைப் போலவே அக்கால மக்களும் அறிந்து வைத்துள்ளனர் என்பதைக் கம்பன் அறிவுறுத்துகிறான்.

"தொன்னெருத் தயிலத் தோணி
வளர்த்துமின் என்னச் சொன்னான்"

எனவரும் பாடலில் தயிலத் தோணி என்ற சொல்லே ஈண்டு சிந்தித்தற்குரியதாகும்.

**எந்திரம் பற்றிய சிந்தனை**

இராவணனும் சுக்ரீவனும் மல்யுத்தம் செய்யும்பொழுது இயந்திரம் பற்றி ஓர் உவமையைக் கம்பர் கையாண்டுள்ளார். மல்யுத்தத்தின்போது சுக்ரீவன் இராவணனை நிலத்திடைக் கிடத்தித் தேய்த்தான் என்றும் உடனே, இராவணன் இயந்திரம் போலச் சுக்ரீவனை எடுத்தெறிந்தான் என்றும் ஒரு பாடலில் கம்பர் குறிப்பிட்டுள்ளார். இதிலிருந்து இயந்திரம் மிக்க விரைவில் செயல்படும் ஆற்றல் வாய்ந்தது என்பதையும், அக்காலத்தில் இயந்திரங்கள் சில இருந்திருக்கின்றன என்பதையும் அறிய முடிகிறது. இதனை,

"வந்தவனை நின்றவன் வலிந்தெதிர் மலைந்தான்
அந்தகலும் அஞ்சிட நிலத்திடை அரைத்தான்

எந்திர மெனக்கடி தெடுத்தவ னெறிந்தான்
கந்துக மெனக்கடி தெழுந்தெதிர் கலந்தான்" (கம்ப.யுத்த.856)

என்ற பாடலால் அறியலாம்.

**விமானம்**

விமானங்கள் வானவெளியில் காற்றின் துணைக்கொண்டு ஒரு சில இயந்திரங்கள் நுட்பத்தால் இயங்கவல்லன என்பதை அறியலாம். அக்கால மக்கள் இவ்வகை விமானங்களைப் பயன்படுத்தி வந்துள்ளார்கள் என்பதை,

"இயக்கர் வேந்தனுக் கருமறைக் கிழவன் நீந்த
துயக்கி லாதவர் மனமெனத் துயது சமர்கள்
வியக்க வான்றகலும் புட்பக விமான முண்டென்றே
மயக்கி லான்சொலக் கொணருதி வல்லையா னென்றான்"

(யுத்த.4035)

இப்பாடல்கள் அக்காலத்தில் விமானம் பயன்படுத்தியதையும் அச்சொல்லாட்சியை கம்பன் நமக்கு அறிவித்தான் என்பதையும் உணர்த்துகின்றன. இவ்வாறு அறச்சிந்தனை அறிவியல் சிந்தனை ஆகிய இரண்டையும் கம்பன் தனது காவியத்தில் எழுதி வைத்துள்ளான். இதில் கூறியவை சிலவே, கூறாதவை, விரிப்பின் அகலும் தொகுப்பின் எஞ்சும் என்பதால் விரிவஞ்சி இக்கட்டுரை நிறைவுறுகிறது. கூறாதன அனைத்தும் எதிர்காலக் களங்கள் என்பதையும் இக்கட்டுரை சுட்டுகிறது.

## கம்பனில் அரசியல், அறிவியல்

திருமிகு. ராஜசுலோச்சனா
சென்னை.

### முன்னுரை

ஆட்சியாளர்கட்கும் பொது மக்களுக்குமிடையே இடைவெளி இல்லா நிலையில் இணைவும் பிணைவும் தேவை என்பது இன்றைய 'அரசியல் அறிவியலார்' தெளிவுபடுத்தும் அரசியல் கோட்பாடு. இதனை நூற்றுக்கு நூறு ஆமோதிப்பதோடு, இவ்விரு சாராருக்குமிடையே இருக்க வேண்டிய அணுகுமுறைகளின் தன்மை எவ்வாறு இருக்க வேண்டும் என்பதையும் தம் காப்பியத்துள் தெளிவாகக் கூற கம்பன் தயங்கவில்லை.

### ஆட்சியாளர் - மக்களிடையே இணைப்பும், பிணைப்பும்

ஆட்சிப் பொறுப்பேற்றுள்ள ஆட்சித் தலைவரோ அல்லது துறைப் பொறுப்பேற்றுள்ள அமைச்சர்களோ அடிக்கடி மக்களை நேரிடையாகச் சந்தித்து, கருத்துப் பரிமாற்றம் செய்து கொள்வதன்மூலம் இரு சாராரும் மிகுபயன் பெறவியலும். இதற்கான சந்திப்புகள் மக்களாட்சியில் தவிர்க்க முடியாதது மட்டுமல்ல இயல்பான ஒன்றுமாகும். அத்தகைய சந்தர்ப்பங்களில் எவ்வாறு அணுக வேண்டும் என்பதை விளக்கும் வகையில் கம்பர்,

"எதிர்வரும் அவர்களை எமையுடை இறைவன்
முதிர்தரு கருணையின் முகமலர் ஒளிர
எதுவினை? இடர் இலை? இனிதுநும் மனையும்
மதிதரு குமரரும் வலியர்கொல் எனவே"

(பாலகாண்டம் - திருஅவதார - 132)

எனக் கூறித் தெளிவுபடுத்தி மக்களாட்சிக் கோட்பாட்டை நிலை நிறுத்துகிறார் அரசியல் விஞ்ஞானி கம்பர்.

### பெண் கல்விக்குப் பேரிகை முழக்கியவர்

சங்க காலத்தில் பெண்களுக்கிருந்த உரிமைகள் கம்பர் காலத்தில் சமயத்தாக்கத்தால் வெகுவாகச் சுருக்கப்பட்டிருந்தன. சமய ஆச்சார அனுஷ்டான அடிப்படையில் வெறும் இல்லக் கிழத்தியர்களாகவே இருக்க வேண்டிய இக்கட்டான சூழ்நிலை பெண் கல்வி மிகவும் பின் தங்கிய ஒன்று. இந்நிலைமை புதுமை வேட்கை கொண்ட கம்பருக்கு மிகுந்த வேதனையளித்தது. எந்தச் சமயப் போக்கு பெண்ணை

வீட்டிற்குள் இருக்கத் தூண்டியதோ அதே சமயக் காப்பியத்தின் மூலமே பெண்ணுயர்வுக்கு வழிகோலினார். ஒரு குடும்பம் தழைக்க கல்வியே உன்னத உந்துசக்தி என்பதை உணர்த்தும் வகையில் தன் சிந்தனையில் சீர்மிகு சமுதாயமாக உருவகிக்கப்பட்டிருந்த கோசல, நாட்டுப்படலப் பாடலொன்றில் பாடுகிறார்.

'நீண்ட அகன்ற அழகிய கண்களையுடைய பெண்டிர், நிறைவடிவ நெற்றியுள்ள பெண்கள் - அழகிற் சிறந்தவர்களாக விளங்குகின்றனர். வீட்டிற்கு வேண்டிய பயனுள்ள எல்லாப்பொருட்களும் அவர்களிடம் இருக்கின்றன. அவற்றோடு கல்வியும் அவர்களிடம் இருக்கின்றது. போரின்போது, இராவணன் தன் அமைச்சர்களையும் ஆலோசகர்களையும் கலந்து பேசி முடிவெடுத்தே செயல்பட்டதாகக் கம்பர் விவரிப்பது 'அரசியல் அறிவியலின் பாற்பட்டதாகும்.

**ஒட்டுமொத்த தேசிய ஒழுக்கம்**

பல தரப்பட்ட தேசிய இனங்களைக் கொண்ட ஒரு நாட்டில், அந்தந்த தேசிய இனச் சாயலில் கலை, இலக்கிய, பண்பாடுகள் தனித்தன்மை கொண்டவைகளாக அமையலாம். அது தவிர்க்க முடியாததும் கூட. ஆனால், பல தரப்பட்ட மக்கள் வாழும் நாட்டின் ஒழுக்கம் ஒன்றுபட்டால், தேசியத் தன்மையோடு கூடிய 'தேசிய ஒழுக்கமாக அமைதல் வேண்டும். அதுவே ஒரு நாட்டின் உயிர் நாடியாக இருக்கும்' என்பதை வலியுறுத்தும் வகையில் கம்பர்,

"கலம் சுரக்கும் நதியம்; கணக்கிலா
பிலம் சுரக்கும் பிறைவளம், நன்மதி
நிலம் சுரக்கும் பெறுதற்கு அறியதம்
குலம் சுரக்கும் ஒழுக்கம் குடிக்கெலாம்" (பாலகாண்டம் - நாட்டு - 38)

எனக்கூறி தெளிவுபடுத்துகிறார். கவிமாமன்னரின் தேசிய உணர்வூட்டும் இக்கருத்து இன்றையச்சூழலில் இன்றியமையா ஒன்று.

கம்பராமாயணத்தைப் பொறுத்தவரை அன்று மன்னராட்சி முறையே நடைமுறையில் இருந்தபோதிலும் நாட்டின் முக்கிய முடிவுகள் மன்னனால் மட்டும் எடுக்கப்படவில்லை. அமைச்சர் குழுவாலும் அறிஞர் குழாமாலும், மன்னனோடு தொடர்புடைய அனைத்துத் தரப்பினரும் ஒன்றிணைந்த கூட்டுக்குழுமத்தாலும் எடுக்கப்பட்டன என்பதை 'இராமனுக்கு முடி சூட்டுவது' பற்றி தசரதன் தன் அமைச்சர்கள், அறிவுரையாளர்களைக் கலந்தாலோசித்தே முடிவெடுத்துச் செயல்பட்டான் எனக் கம்பர் கூறுகிறார்.

**முடிவுரை**

கம்பரின் உன்னதமான சமுதாய நோக்கும் போக்கும் உரிய முறையில் விளக்கப்பட்டால், அவை இளைஞர்களின் கவனத்தைப் பெரிதும் ஈர்க்கவே செய்யும். இதன் வாயிலாக, இளைய தலைமுறையின் இதயத்தில் கம்பர் குடியேறி நிலைபெறுவதைப் பொறுத்தே, கம்பர் கண்ட சமய சமரசமிக்க, சாதி மத பேதமற்ற, குறள்நெறி வழிப்பட்ட, சமத்துவ சமுதாயம் உருவாக அல்லது உருவாக்கப்பட இயலும்.

# கம்பனில் புலனாகும் போர்க்கலை நல்லறம்

திருமிகு. சே.மாலதி
தலைமை ஆசிரியை, வே.வ.வன்னியப்பெருமாள் துவக்கப்பள்ளி,
முத்துராாமன் பட்டி, விருதுநகர்.

கம்பனின் இராமாவதாரத்தில் போர்க்கலை என்பதனை கம்பர் நமக்கு எவ்வாறெல்லாம்புலப்படுத்துகிறார் என்பதனைக் காணும்போது போர் வீரர்கள் உடல் வலிமை; ஆயுத வலிமை, போரில் பின்பற்றப்பட வேண்டிய நெறிமுறைகள்; வீரப்போர் புரியும்முன்னர் அவர்கள் வஞ்சினம் கூறும் திறன்; பகைவரையும் தன்வயப்படுத்திடச் செய்யும் முயற்சி; பகைவனை அழிக்காமல் மன்னித்தருளும் மாண்பு; மாயப் போர் நிகழ்த்துதல்; போர் தொடங்கும் முன்னர் எதிரியின் பக்கம் நியாயம் தெரிய அனுப்பும் தூது, பெண்ணுடன் போர் புரிதல் பேதமை; அடைக்கலம் என்று வந்தாரை கடைசி வரை காக்கும் பண்பு; படை தொடுக்கும்போது நெறிமுறை தவறினால் பழி, இழுக்கு என்று போர்க்கலையின் பல்வேறு பரிமாணங்களைப் படம் பிடித்துக் காட்டி அறம் உரைக்கிறார் கம்பர். அது இன்றைக்கும் மானுடம் பேணுவோர்க்கு அரண் ஆகிநிற்பதைக் காணலாம்.

## அறப்போர் நெறிமுறை

நிராயுதபாணியாக நிற்பவர் மேல் ஆயுதம் பிரயோகம் செய்தல் கூடாது. இராவணன் சிவபெருமானிடம் தவம் இருந்து பெற்ற வரம். இதில் உடல் வலிமை, ஆயுத வலிமை அனைத்தும் இழந்து, ஆதரவற்று நின்றபோது, 'இன்று போய் நாளை வா' என்று இராமன் கூறிய வார்த்தைகள் அறப்போர் நெறிமுறையை உணர்த்துகிறது.

"ஆள் ஐயா! உனக்கு அமைந்தன மாருதம் அறைந்த
பூளை ஆயின கண்டனை: இன்று போய், போர்க்கு
நாளை வா' என நல்கினன் - நாகு இளங் கமுகின்
வாளை தாவுறு கோசல நாடுடை வள்ளல்"

பகைவனுக்கு அருளும் பண்பினையும் இப்பாடலில் உணரலாம்.

## வஞ்சினம் என்னும் வீரவுரை

போருக்குச் சென்று பகைவரைச் சந்திக்கும் முன் சொல்லும் தன்னம்பிக்கை உரை, தறுகண் உரையே வஞ்சினம் என்னும் வீரவுரை எனலாம். புறநானூறு இதனை 'வஞ்சினக் காஞ்சி' என்றே துறை வகுக்கிறது.

சோழன் நலங்கிள்ளியை சிறுவன் என நினைத்து போர் புரிய வந்த பகைவர்களை நோக்கி வஞ்சினங் கூறியதும், தலையானங்கானத்துச் செருவென்ற பாண்டியன் நெடுஞ்செழியன் வஞ்சினங்கூறியதும் இங்கு நினைவுகூரத்தக்கது.

சோழன் நலங்கிள்ளியை சிறுவன் என நினைத்து போர் புரிய வந்த பகைவர்களை நோக்கி அவன் கூறிய வஞ்சின உரையில்,

"துஞ்சு புலி இடறிய சிதடன் போல
உய்ந்தனன் பெயர்தலோ அரிதே மைந்துடைக்
கழைதின் யானைக் கால் அகப்பட்ட
வன்றிண் நீண்முறை போலச் சென்று அவண்
வருந்தப் பொரேஎன் ஆயின் பொருந்திய
தீது இல் நெஞ்சத்துக் காதல் கொள்ளாப்
பல்லிருங் கூந்தல் மகளிர்
ஒல்லா முயக்கிடைக் குழைக என் தாரே"

என்று கூறுவதிலும்,

தலையானங் கானத்துச் செருவென்ற பாண்டியன் நெடுஞ் செழியன் கூறும் வஞ்சின உரையில் தன்னை சிறுவன் என எண்ணி பெரும் படையுடன் வந்த பகைவரை வெல்லா விட்டால்

"மாங்குடி மருதன் தலைவன் ஆக
உலகமொடு நிலைஇய பலர்புகழ் சிறப்பின்
புலவர் பாடாது வரைக என் நிலவரை"

என்று கூறுவதிலும் வஞ்சினம் புலப்படும்.

இதுபோல், போர் நடவாவிடினும், குகப்படலத்தில் பரதன் படையுடன் வருவதைத் தவறாக உணர்ந்த குகன் கூறிய வீரவுரை வஞ்சினத்திற்குச் சான்றாகத் திகழ்கிறது.

"எலியெலாம் இப்படை அரவம் யான்"

"ஆழ நெடுந்திரை ஆறு கடந்து இவர் போவாரோ?
வேழ நெடும்படை கண்டு விலங்கிடும் வில்லாளோ?
தோழமை என்றவர் சொல்லிய சொல் ஒரு சொல்லன்றோ?
ஏழைமை வேடன் இறந்திலன் என்று எனை ஏசாரோ?"

கும்பகருணன் வதைப்படலத்தில் இலக்குவனைச் சந்திக்கின்ற கும்பகருணன் கூறும் கூற்றும் இதற்குச் சான்றாகும்.

"பெய் தவத்தினோர் பெண் கொடி
கொய்த கொற்றவ! மற்று அவள் கூந்தல் தொட்டு ஈர்த்த
கைத் தலத்திடைக் கிடத்துவென்: காக்குதி"

அனுமன் - கும்பகருணன் வஞ்சினப்பகுதியில் அனுமன் கும்பகருணனிடத்தில்,

"எறிகுவென் இதனை நின்மேல்: இமைப்புறும் அளவில் ஆற்றல்
மறிகுவது அன்றி, வல்லை மாற்றினை என்னின், வன்மை
அறிகுவர் எவரும்: பின்னை யான் உன்னோடு அமரும் செய்யேன்:
பிறிகுவென்: உலகில், வல்லோய்! பெரும் புகழ் பெறுதி' என்றான்"

என்ற பாடல் அனுமன் வஞ்சின உரைக்குச் சான்றாகும்.

**பகைவரைத் தன்வயப்படுத்தச் செய்யும் முயற்சி**

போர்க்களத்திற்கு வந்த கும்பகருணனைக் கண்ட இராமன், அவன் யார்? என வீடணனிடம் கேட்க, அவன் தான் இராவணனுக்குத் தம்பி எனக்கு அண்ணன்; சீதையை விட்டு விடுமாறு அறிவுரை கூறியவன், என்று கும்பகருணனின் தன்மையை எடுத்துரைத்தவுடன், அவனைத் தன்னுடன் சேர்க்க விரும்பினான் இராமன்.

"என்று அவன் உரைத்தலோடும், இரவி சேய், இவனை இன்று
கொன்று ஒரு பயனும் இல்லை, கூடு மேல் கூட்டிக் கொண்டு
நின்றது புரிதும், மற்று இந்நிருதர்கோன் இடரும் நீங்கும்,
நன்று என நினைந்தேன் என்றான், நாதனும் நயன் இது என்றான்".

இந்தப் பாடலில் இராமன் கும்பகருணனைத் தன் வசப்படுத்தும் போர்க் கலை முயற்சியைக் காணலாம்.

**மாயப்போர்**

பகைவரை மறைந்திருந்து தாக்குதலை இன்று 'கொரில்லாப் போர்' முறை என்று கூறுகிறோம். இந்திரசித்தன் மாயப்போரில் வல்லவனாகத் திகழ்கிறான். மாயா ஜனகனை உருவாக்கி, அதனைக் கொலை செய்வதாகச் சீதையிடம் காட்டும் திறமை; மாயா சீதையை உருவாக்கி அதனைக் கொல்கின்ற திறமை; நிகும்பலை யாகம் என்று யாருக்கும் தெரியாமல் மறைந்திருந்து போர் வலிமையை அதிகரித்துக்கொள்கின்ற தன்மை; அதனை வண்டுருக்கொண்டு வீடணன் கண்டறிய, உண்மை

அறிந்த இராமன், இலக்குவனை, இந்திரசித்தைக் கொல்லுமாறு போருக்கு அனுப்ப இந்திரசித்தன் செய்கின்ற மாயப்போர், போர்க்கலையில் மிகச் சிறந்ததாகக் காட்டப்படுகிறது.

சீதையைக் கவர்வதற்கு மாரிசன் மாயமானாக வந்த தன்மை, இராமன் பின் தொடர்ந்து தன்னை அம்பால் வீழ்த்தியபோது இராமனின் குரல் போல் மாயமாக, சீதை இலக்குவனை அழைத்த தன்மை மாயப்போருக்குச் சான்றாகும்.

### போருக்கு முன் தூது

போர் தொடங்கும் முன்பு பகைவன் மனம் திருந்துவதற்கு ஒரு சந்தர்ப்பம் வழங்குவதாக, எதிரியின் பக்க நியாயம் என்னவென்று தெரிந்து கொள்வதற்காக அனுப்பப்படும் தூது போர்க்கலையின் ஒரு பகுதியாகும். இராமாயணத்தில் 'அங்கதன் தூதுப் படலம்' என்று கம்பன் வடிவமைத்திருக்கிறான். இதற்குச் சான்று கீழ்வரும் பாடலாகும்

"தூதுவன் ஒருவன் தன்னை இவ்வழி விரைவில் தூண்டி,
மாதினை விடுதியோ! என்று உணர்த்தலே, மறுக்கும் ஆகின்,
காதுதல் தடன் என்று உள்ளம் கருதியது, அறனும் அஃதே,
நீதியும் அஃதே என்றான் - கருணையின் நிலயம் அன்னான்"

### பெண்ணுடன் போர்புரிதல் பேதைமை

விசுவாமித்திரர் வேள்விக்கு இடையூறு செய்த இராவணன் பாட்டியாகிய தாடகையை வதம் செய்யும் நேரம் வருகிறது. வேலால் உனைக் கொல்வேன் என்று தாடகை அச்சுறுத்தியபோது முனிவர் அவளைக் கொல்ல விரும்பிய போதும், வந்தவர் பெண், இவளை எப்படிக் கொல்வது? என இராமன் மனதால் நினைத்தான்.

"அண்ணல் முனிவற்கு அது கருத்து எனினும்
பெண் என மனத்திடை பெருந்தகை நினைந்தான்"

முனிவர், அறம் நினைத்து உரைக்கிறேன்; இவள் மேல் உள்ள கோபத்தால் அல்ல; நீ அமைதி காத்தல் அறமாகாது. இப்போதே கொல் என்றார்.

### அடைக்கலம் புகுந்தாரைக் காக்கும் பண்பு

இராவணன்வீடணன் மேல் கூறிய வேலை "போக்குவன் அஞ் சல் நீ" என மார்பில் ஏற்று வீடணனை இலக்குவன் காக்கின்ற செயல் இதற்குச் சான்றாகும்.

**வில்லறம் துறந்ததால் வந்த பழி**

'ஒரு இல், ஒரு வில், ஒரு சொல்' என்று புகழ் பெற்ற இராமனுக்கு சுக்ரீவனிடம் கொண்ட நட்பினால் சுக்ரீவனுக்காக வாலிமீது மரத்தின் பின் மறைந்திருந்து அம்பு எய்தது, வில் அறம் தழுவியது, என்றும் இராமனுக்கு ஒரு இழுக்காக, கரும் புள்ளியாகவே அமைந்திருக்கிறது.

"வில் அறம் துறந்த வீரன் தோன்றலால்
நல் அறம் துறந்தது என்னா?

என்ற வரிகள் வில் அறம் துறந்து பழி ஏற்ற பான்மையைக் குறிக்கும் வரிகளாகும்.

**முடிபுகள்**

இவைகள் அல்லாமல் கம்பன் காட்டும் படைக்கலம் விடும் முறை இன்று அறிவியல் யுகத்தில் வல்லரசுகள் நடத்தும் போருக்கு முன்னோடி என்றால் மிகையாகாது.

1. பிரம்மன் ஆயுதம் தொடுத்தால் எதிர் அம்புவிடாதே, விலக்கு. இல்லாவிடில் உலகம் அழியும்.
2. பாசுபதாஸ்திரம், நாராயண அஸ்திரம் விட்டால் ஆற்றலைக் குறைக்கும்.அதை உன் வில் திறமையால் வீழ்த்து.
3. மாயம் செய்பவன் சோரும் நேரம் கொல்.
4. தடைசெய்யும் அம்புகளை விடும்போது குறிப்பறிந்து விடு என்று இராமன் இலக்குவனுக்கு கூறிய அறிவுரைகள் போர்க்கலையில் பின்பற்றப்பட்ட வேண்டியவை
5. இந்திரசித்தன், இலக்குவன் போர்புரியும்போது வாயு அம்புக்கு வாயு அம்பு, அக்னி அம்புக்கு நீர் அம்பு, இசிகப்படைக்கு இசிகப் படை, பிரம்மன் ஆயுதத்திற்கு பிரம்மன் ஆயுதம் பயன்படுத்தப்பட்ட முறையை கம்பன் காட்டுகிறார்.
6. போரை கம்பன் 'ஆண் தொழில் ஆற்றல்' என்று குறிப்பிடுகிறார். (பாடல் எண் 9146)
7. போரில் வெற்றி பெற்றவர்கள் வெற்றி பெற உதவியவரைப் பாராட்டுதல் மரபாகக் கருதப்படுகிறது. இந்திரஜித்தனின் வீழ்ச்சிக்குக் காரணமான வீடணனை இராமன் புகழும் போது

"ஆடவர் திலக.....' என்று தொடங்கி 'வீடணன் தந்த வெற்றி' என்று கூறுவது இதற்குச் சான்றாகும். (பாடல் எண். 9185)

8. சம்பாசுர யுத்தத்தில் கைகேயிக்கு தசரதன் தந்த வரமும் இதற்கு சான்றாகும்.

9. போர்க்கலை ஆய கலைகள் அறுபத்து நான்கில் ஒன்று:

10. போரில் நிராயுதபாணியைக் கொல்வது, பெண் மீது போர் தொடுப்பது, மறைந்திருந்துத் தாக்குவது தவிர்க்கப்பட வேண்டியவை.

11. பகைவரைத் திசை திருப்ப மாயப்போர் செய்யும் முறை பின்பற்றப்பட்டிருக்கிறது.

12. பகைவரின் பலம் அறிந்து தன்னோடு இணைத்தல் நலம் என்று கருதப்பட்டு இருக்கிறது.

13. பகைவனின் கருத்துக்கு மதிப்பு தரும் வகையில் தூது நடந்திருக்கிறது.

இன்று வல்லரசுகள் நடத்தும் வன்முறைப் போருக்கு மாற்றாக ஒரு போர், ஒரு போர் வீரன், படைத் தலைவன் எவ்வாறு நடக்க வேண்டும், என்ற யுத்த நெறி முறையை இத்தரணி வாழ்வோரின் சித்தத்தில் பதியும் வண்ணம் தந்திருக்கும் கம்பனின் போர்க்கலை நல்லறம் பின்பற்றற்குரியது.

## கம்பன் - விழுப்பொருள் விஞ்சிய விபுதன்

திருமிகு. இரா.நரேந்திரகுமார்
தலைவர், தமிழ்ச்சங்கம்,
இராசபாளையம்.

'பாவிகம் என்பது காப்பியப்பண்பே' என்கிறது தண்டியலங்காரம். தென்னிலங்கை நகரைக் காவல்புரிந்த அரக்கியாம் இலங்கை மகாதேவி 'சுந்தர காண்டம் - ஊர்தேடு படலத்தில்' சொல்கிறாள் - 'அறம் வெல்லும்; பாவம் தோற்கும்'. பாவிகமாகத் திகழும் இந்த அறத்தை நிலைநாட்டும் மூலஆற்றலாகவே கதைத்தலைவன் இராமனின் பிறப்பு அமைகிறது. 'அறம் செய் காவற்கு அயோத்தியுள் தோன்றினான்' என்கிறான் கம்பன். அறம் பேசுதலே காப்பியங்களின் இயல்பு. பசிப்பிணி போக்குவதே நல்லறம். - மணிமேகலை. அரசியல் பிழைத்தோர்க்கு அறம் கூற்றாகும் - சிலப்பதிகாரம். ஞாலம் உய்யத்தோன்றிய பாவிகத்துக்கு இணையாக 'மரணமிலாப் பெருவாழ்வு' வாழ்ந்துகொண்டிருக்கும் அறிஞர் இருவர். முதலாவது ஆயிரமாண்டின் துவக்கத்தில் திருவள்ளுவர். முடிவில் (அல்லது இரண்டாவது ஆயிரமாண்டின் துவக்கத்தில்) கம்பன்.

தனி மனித ஒழுக்கம் பேசும் 'அறம் சமூக ஒழுக்கத்தை வலியுறுத்தும் 'பொருள்' ; காதலர் ஒழுக்கத்தைக் கூறும் 'இன்பம்'; இம்மூன்றையும் வள்ளுவன் வரையறுத்தார். 'இன்பநுகர்வில் இந்த வையகம் இழிந்துவிடக்கூடாது' என்கிற பதைப்பில் அன்பு சார்ந்த அகவாழ்வையும், அறஞ்சார்ந்த புறவாழ்வையும் ஒழுக்கத்தின் கட்டமைப்புள் சட்டமாக்கியவன் கம்பன்.

### விஞ்சி நிற்கும் கம்பன்

பண்டித ந.மு. வேங்கடசாமி நாட்டார் சொல்கிறார்: "கவிகள் தம் காப்பியத்தை நடத்திச் செல்லுகையில் கதைக்கு உரியவர்களின் ஒழுகலாறு வாயிலாகவோ, அன்னார் ஒருவருக்கொருவர் அறிவுறுத்துதல் வாயிலாகவோ, உலகமக்கள் அறிந்து பயனுறத்தக்க பல உண்மைகளை வெளிப்படுத்துதல் இயல்பு. அவ்வுண்மைகளே காப்பியத்தின் பண்பாகும். அதனைப் பாவிகம் என்பர் அணிநூலார்."

ஒழுகலாறும், உண்மைகளும், அறிவுறுத்தலும் கம்பனின் சொல்லாட்சியில் பாவிகத்துக்கு இணையான கலை வெளிப்பாடாக, தூயமனப் பிரதிபலிப்பாக, பல்லுயிர்மீது கொண்ட காதலாகப் புதிய பரிமாணம் பெறுவதால் அவன் விழுப்பொருள் விஞ்சிய விபுதன்

ஆகிறான். வாய்மொழித்தொன்மமான இராமாயணக் கதையை மட்டும் பாமரர்களின் புரிதலுக்காக எடுத்துக்கொண்டு, பூகோள, கலாச்சார, மண்வாசனை மகத்துவங்களுடன் காப்பியத்தை நகர்த்தும் காரணி ஆக்குகிறான் கம்பன். கதைத் தலைவன் இராமன் மீதான பக்தி வடநாட்டில் பெருக்கெடுத்து ஓட, தமிழ்மண்ணில் இராமப்பித்தின் சுவடே இல்லாமல், கம்பனின் கொடி உயரே பறப்பதற்குக் காரணம்:

**கதையின் நாயகன் இராமபிரான்!**
**காப்பியத்தின் நாயகன் கம்பபிரான்!**

தமிழின் சிறப்புக்கூறான அகப்பொருண்மை, ஐந்திணை ஒழுக்கம், சமுதாய ஒருமைப்பாடு, உலகப்பொது நோக்கு, ஒழுக்கத்தின் மேன்மை, மீமானிட நிகழ்வுகள், நெருடல் நிலவாக்கோவை, புறக்கண்ணால் காண முடியாதவற்றை அகக்கண்ணால் உணர்ந்து சித்திரிக்கும் கற்பனைச்செறிவு, பக்திப்பிரவாகம், இயற்கையின் இறைமை, தத்துவ வெளிப்பாடு முதலிய தன்மைகளைக் காலம் அழிக்கவொண்ணாக் கதைமாந்தர் - பாத்திரங்கள் வாயிலாக வாழ்வாங்கு வாழும் வலிமையான சொற்களைக் கோத்து, பாடுபொருளைப் பரம்பொருளின் தன்மைக்குக் கம்பன் உயர்த்துகிறான். பாலகாண்டம் - மிதிலைக் காட்சிப்படலத்தில் கம்பன், 'நாட்டியக்கலைப் பண்பு' பற்றிச் சொல்லும்போது 'கை வழி நயனம் செல்லக் கண்வழி மனமும் செல்ல' என்பான். ஆனால் கம்பனின் மனம் எவரும் அனுமாணம் செய்யமுடியா திக்கெல்லாம் பயணிக்கிறது. இராமன் அம்பினை எய்யும் திறனைப் பாடவேண்டும். இதுதான் கரு. சூழலின் கடுமையை உணர்த்த வேண்டி 'அண்ட கோளத்து உயிர்கள் பெருங்குலுக்கலில் அழியும் நிலையை' உருவாக்கிப் பதறவைக்கிறான் கம்பன்.

'கண்டத்தும், கீழும், மேலும், கபாலத்தும் கடக்கல் உற்ற
கண்டப்போர் அரக்கர் தம்மைத் தொடர்ந்து, கோல்புணரும் தன்மை,
பிண்டத்தில் கரு ஆம் தன் பேர் உருக்களைப் பிரமன் தந்த
அண்டத்தை நிறையப் பெய்து குலுக்கியது அனைய ஆன'

(யுத்த காண்டம் - மூல பல வதைப் படலம்)

'கானின் உயர் கற்பகம் உயிர்த்த கதிர்வல்லி - மேனி நனி பெற்று, விளை காமம் நிறைவாசத்-தேனின் மொழி உற்று இனிய செவ்வி நனி பெற்று, ஓர் - மானின் விழி பெற்று, மயில் வந்ததென வந்தாள்'
(ஆரண்ய காண்டம் - சூர்ப்பணகைப் படலம்)

இது ஒரு பாடல் அன்று - பனுவல்!

### கதைக் கோர்வையில் கம்பன் கலை

சம்பாசுரனை வென்றபோது கைகேயி பெற்ற இரண்டு வரங்கள், கூனியின் போதனையால் இலக்கு மாறிச் சென்று வரந்தந்த தசரதனையே வீழ்த்துகிறது. 'இவள் என் தாரம் அல்லள் ; துறந்தேன்; மன்னே ஆவான் வரும் அப்பரதன் தனையும் மகனென்று உன்னேன்' (அயோத்தியா காண்டம் - நகர்நீங்கு படலம்) என மரண வாக்குமூலம் தந்து மாய்கிறான். காப்பிய நிறைவில் மீமானிட நிகழ்வாகத் தோன்றுகிற தசரதனிடம் இராமன், 'தீயள் என்று நீ துறந்த என் தெய்வமும் மகனும் தாயும் தம்பியும் ஆக வரம் தருக' என்று கேட்டுப் பெறுகிறான். 'நீ துறந்த தீயள்' எனச் சொல்லாமை கம்பநேர்த்தி. கூனி கற்றுக்கொடுத்த சொல்லையே திருப்பிச் சொன்ன அப்பாவிக் கிளிப்பிள்ளையே கைகேயி என்கிற சமாதானத்தைப் பீடிகையாக இடையிலேயே கம்பன் சொல்லிவிடுகிறான். சுந்தர காண்டம் - சூடாமணிப் படலத்தில் அனுமனிடம் சீதை கூறுகிறாள்: 'நான் வளர்த்த கிளிக்கு என்ன பெயர் வைப்பதென இராமனிடம் வினவிய போது மாசறு கேகயன் மாது-வின் பெயரைச் சொன்னான்.'

விழுப்பொருளைக் கம்பன் விஞ்சி நிற்கும் இன்னொரு இடம். காப்பியத்தின் முன்பகுதியில் 'மயிலுடைச் சாயலாளை வஞ் சியாமுன்னம் நீண்ட எயிலுடை இலங்கைநாதன் இதயமாம் சிறையில் வைத்தான்' என்னும் கம்பன் தொடர், காப்பிய முடிவில், 'கள்ளிருக்கும் மலர்க்கூந்தல் சானகியை மனச்சிறையில் கரந்த காதல், உள்ளிருக்கும் எனக் கருதி உடல் புகுந்து தடவியதோ ஒருவன் வாளி' என நிறைவுறுவது பேரழகு.

### இதிகாசப் பாத்திரங்களிலும் கம்பன் காட்டும் மனித மன நுட்பம்

இல்லறச்சோகங்களின் சம்மட்டி அடிக்கு இதிகாச வார்ப்புகளும் தப்புவதில்லை என்கிற விழுமியத்தைப் பல்வேறு இடங்களில் கம்பன் காட்டுகிறான். 'இன்னுயிர் இன்றி வைகும் இயந்திரப் படிவம் ஒப்பான்' என இராமனை அனுமன் சித்திரிக்கும்போதும்; 'ஆவியைச் சனகன் பெற்ற அன்னத்தை அமிழ்தின் வந்த தேவியைப் பிரிந்த பின்னை திகைத்தனை போலும் செய்கை' என வாலி எள்ளல் செய்யும்போதும் மனிதத்துயரின் ஆழத்தைக் கம்பன் உணரவைப்பது அருமையான படப்பிடிப்பு. சாகும் வேளையில் நல்லவனாகச் சாகவேண்டும் என்கிற உயிர்த்துடிப்பை 'ஆவி போம் வேளையில் அறிவு தந்து அருளினாய்' என வாலியின் கூற்று வாயிலாய் உணர்த்துகிறான்.

உயிர்களின் உளநிலையை உன்னிக்கும் நுண்மாண் நுழைபுலம் உயர் கம்பனுக்கு வாய்த்திட்ட ஓங்குதிறன். பெருந்துன்பமும் பேரின்பமும் ஒருவனை உறக்கத்தில் ஆழ்த்தும் என்கிற மனவியலின் கோட்பாடு கம்பனுக்கு அத்துபடி. தான் கோரிய இரண்டு வரங்களைத் தந்த தசரதன் 'ஈந்தேன் ஈந்தேன் இவ்வரம்' எனச் சொல்லிக் கண்ணீர் உகுத்தவுடன் கைகேயி அமைதி கண்டு துயிலுற்றதைக் கம்பன் 'அயோத்தியா காண்டம் - கைகேயி சூழ்வினைப் படலத்தில்' 'தேறானாகிச் செய்கை மறந்தான்; செயல் முற்றி, ஊறா நின்ற சிந்தையினாளும் துயில் உற்றாள்' எனக் குறிப்பிடுகிறான். இது காப்பியக் கதை நகர்வின் ஆரம்பம். காப்பியத்தின் நிறைவுப்பகுதியான 'யுத்த காண்டம் - பிரமாத்திரப் படலத்தில்' பிரமாத்திரத் தாக்குதலில் வீழ்ந்த இலக்குவனைக் கண்டு துடித்து, துயர் மேலிடத் துயிலுற்றதாக இராமனின் சோகத்தைக் கம்பன் வார்த்தைகளில் வடிக்கின்றான். 'பொன்றும் என்னாத் தம்பியை ஆர்வத்தோடு புல்லி - ஒன்றும் பேசான்; தன்னை மறந்தான்; துயில்வுற்றான்'.

மனநெருக்கடிகள் எல்லை மீறும்போது உயிரை மாய்த்துக் கொள்ளும் எண்ணம் கணநேரம் வந்து போவது இயற்கை. வில்லை ஒடித்த செய்தியைக் கேட்ட சீதை, அவன் மட்டும் கன்னிமாடத்திலிருந்து முன்பு தான் பார்த்து இன்புற்றவனாக இல்லையெனில் உயிரை மாய்த்துக் கொள்வேன் என்கிறாள்.

'சொல்லிய குறியின் அத்தோன்றலே அவன்
அல்லனேல் இறப்பன்' என்று அகத்துள் உன்னினாள்'

(பாலகாண்டம் - கார்முகப் படலம்)

இந்திரசித்தனை வென்ற இலக்குவனிடம் 'தம்பி உடையான் பகை அஞ்சான்' என இராமன் பெருமைப்படுகிறான். (யுத்தகாண்டம் -இந்திரசித்து வதைப்படலம்) இதே இராமன் முன்பொருமுறை (ஆரண்யகாண்டம் - அயோமுகிப் படலத்தில்) இலக்குவனை நீண்டநேரம் காணவில்லை எனப் பரிதவித்து, வாள் கொண்டு தற்கொலை செய்து கொள்ள முனைகிறான்.

'மறப்பால் வடிவாள் கொடு, மன் உயிரைத்
துறப்பான் உறுகின்ற தொடர்ச்சியின் வாய்'

இறையம்சம் கொண்டோர் மானிடராகப் பிறப்பினும் மனித உணர்ச்சிக்குத் தப்புவதில்லை என்பது கம்பன் காட்டும் நுண்ணுணர்வு.

**கம்பனின் சொல்லாட்சி**

ரிஷ்ய சிருங்கரை 'கலைக்கோட்டு முனிவர்' எனத் தமிழ்ப்படுத்திய கம்பன் ஒரு சொல்வலை வேட்டுவன். இலங்கையில் சீதையைத் தேடி அலைந்த அனுமன் -

'நித்தம் நியமத் தொழிலராய் நிறையும் ஞானத்து
உத்தமர் உறங்கினார்கள் ; யோகியர் துயின்றார்'

என உறக்கத்தையும் துயிலையும் வேறுபடுத்துவது நயமிக்கது.

"அந்தியை நோக்கினான் அறிவை நோக்கினான்"

"நங்கையைக் கண்ட வள்ளல் நயனங்கள் பனிப்ப நின்றான்"

"திரை கடையிட்டு அளப்பரிய வரம் என்னும் பாற்கடலைச் சீதை உன்னும்
பிரை கடை இட்டு அழிப்பதனை அறிந்தேனோ?"

"பேசுவது மானம்; இடைபேணுவது காமம்
கூசுவது மானுடரை; நன்று நம கொற்றம்"

"நின்றதே போல நீங்கும்; நிதி வழி நேயம் நீட்டும்
மன்றல் அம் கோதை மாதர் மனம் எனப் போயிற்றம்மா"

"புல்லர்க்கு நல்லோர் சொன்ன பொருள் எனப் போயிற்று'
'கோதைகள் சொரிவன குளிர் இள நறவம்
காதைகள் சொரிவன செவிநுகர் கனிகள்"

இவை போன்ற சொற்கோவைகள் கம்பனை விழுப்பொருள் விஞ்சிய விபுதனாக்குகின்றன. இராமனைப் பற்றிய ஒரு பாடலும்; இராவணனைப் பற்றிய ஒரு பாடலும் பானைச் சோற்றுக்குப் பதச்சோறு.

"குழைக்கின்ற கவரிஇன்றிக் கொற்றவெண் குடையும் இன்றி
இழைக்கின்ற விதிமுன் செல்லத் தருமம்பின் இரங்கி ஏக
மழைக்குன்றம் அனையான் மௌலி கவித்தனன் வரும் வரும்என்றென்று
தழைக்கின்ற உள்ளத் தன்னாள் முன்னர் ஒரு தனியன் சென்றான்"

காப்பியத் துவக்கத்தில் இராமனும் முடிவில் இராவணனும் மௌலி இழக்கின்றனர்.

"வாரணம் பொருத மார்பும், வரையினை எடுத்த தோளும்
நாரத முனிவர்க்கு ஏற்ப நயம்பட உரைத்த நாவும்
தார்அணி மௌலி பத்தும் சங்கரன் கொடுத்த வாளும்
வீரமும் களத்தே போட்டு வெறுங்கையே மீண்டு போனான்.'

**முடிப்பு**

காப்பியத்திற்காக மட்டுமின்றி மனிதகுலம் உய்வதற்காகக் கம்பன் கூறும் கருத்துக்கள் நிலைத்து நிற்பன. கிட்கிந்தா காண்டம் - நாடவிட்ட படலத்தில் கம்பன் 'தென் தமிழ்நாட்டு அகன் பொதியில் திருமுனிவன் தமிழ்ச்சங்கம்' என்கிறான். முத்தமிழ் மொழி பேசப்படுகிற காரணத்தால், இந்த நாட்டை ஒருவேளை தேவருலகம் ஒத்திருக்கலாம் எனவும் சொல்கிறான். (கிட்கிந்தா காண்டம் - ஆறுசெல் படலம்)

"அத்திருத்தகு நாட்டினை அண்டர் நாடு
ஒத்திருக்கும் என்றால் உரை ஒக்குமோ?
எத்திறத்திலும் ஏழ் உலகும் புகழ்
முத்தும் முத்தமிழும் தந்து முற்றலால்"

முக்கோடி வாழ்நாளும் முயன்றுடைய பெருந்தவமும் எக்கோடி யாராலும் வெலப்படாய் என்கின்ற வரமும் பெற்றவன் கம்பன். அவன் விழுப்பொருள் விஞ்சிய விபுதன்.

# கம்பன் காட்டும் வாழ்வியல்

முனைவர் தா. நீலகண்டபிள்ளை
செயலாளர்,கன்னியாகுமரி வரலாற்றுப் பண்பாட்டு ஆய்வு மையம்,
கன்னியாகுமரி.

**மனிதப்பண்புகள்**

கம்பராமாயணத்தில், இராமன் இறை அவதாரமாகக் காட்டப்பெறினும் அவன் மனிதனாகவே உலவுகின்றான். கம்பர் மனிதப் பண்பில் காணப்படும் லாபநஷ்டக் கணக்குகளுக்கு இராமனும் ஆளாகின்றான். நன்மை தீமைகள் கலந்தே காவியம் இயங்குகின்றது. சிறு குழந்தைகள் செய்யும் தவவினை இராமனும் செய்கின்றான். சிறு பருவத்தில் எல்லோரும் விளையாடுவது போல இராமனும் உண்டிவில்லொடு (கவண்கல் போன்றது) விளையாடுகின்றான். கூனல் முதுகொடு உலாவரும் கூனியின் முதுகில் உண்டை வில்லையை அடிக்கின்றான். இது ஒரு சிறுபிள்ளைத்தனமான விளையாட்டாக இருந்தாலும், விளையாட்டு வினையாகியது போல பின்னாளில் அரசாட்சி பெற அது தடையாக நிற்கிறது. அறியாமல் தவறு செய்வது இளம்பருவ இயல்பு. இராமன் மனிதப்பருவத்தில் இதனைச் செய்து விடுகின்றான்.

இது போன்று தான் தெரு வீதியில் வரும்போது சந்திக்கின்ற, காண்கின்ற மக்களிடம் நலம் விசாரிக்கின்ற பண்பு இராமனிடம் காணப்படுகின்றது. தன்னை இளவரசன் என்று உயர்வாகக் கொள்ளாமல், எல்லோரிடமும் சரிசமமாகப் பழகுகின்ற நிலை விளக்கம் பெறுகின்றது.

**தாய் தந்தையர் போற்றல்**

விசுவாமித்திரர் அரண்மனைக்கு வந்து 'கரிய செம்மலை தருதி' என்னும்போது, பல்வேறு ஆலோசனைகளுக்குப் பின்னர் தசரதன் அனுமதி அளிக்க, இராமன் அதனை ஏற்று முனிவரொடு செல்கின்றான். இதில் 'தந்தை சொல்மிக்க மந்திரமில்லை' எனும் கூற்று பளிச்சிடுகின்றது.

இராமனுக்கு முடிசூட்டுவிழா என்ற செய்தியைத் தயரதன் இராமனிடம் தெரிவிக்கும்போது இராமன்

"காதல் உற்றிலன் இகழ்ந்திலன் கடமை இதுஎன நினைந்தான்"

உனக்கு ஆட்சியில்லை. உன்தம்பி பரதன் நாடாள்வான் நீ கானாளச் செல்லவேண்டும் எனக் கைகேயி கூறும்போது அதனை அப்படியே ஏற்று தாய் சொல்லிற்கு மதிப்பளித்துக் கானகம் செல்ல உடனடியாக விடைபெறுகின்றான்.

"மன்னவன் பணியன்று ஆகில் நும்பணி மறுப்பனொ
என் பின்னவன் பெற்ற செல்வம் அடியனென் பெற்றதன்றோ"

எனும் அடிகளில் இராமன் தாய்சொல்லிற்கு எவ்வித எதிர்ப்பும் தெரிவிக்காது ஏற்றுக்கொள்ளும் பக்குவ நிலையில் இராமன் இருப்பதைக் காட்டுகின்றது.

மகனின் இயல்பறிந்து செயல்படும் தாயாகச் சுமித்திரையின் பண்பு அமைகின்றது.

"இவன்பின் செல் தம்பி எனும்படி அன்று, அடியாரின் ஏவல் செய்தி
மன்னும் நகர்க்கே இவன் வந்திடின்வா அதன்றேல்
முன்னம் முடி என்றாள்"
எல்லாத் தாயாருக்கும் இந்நிலை அமையாது.

**சகோதர பாசம்**

இராமனுக்கு அரசாட்சி இல்லை என்றபோது வெகுண்டு எழுகின்றான் இளவல் இலக்குவன். மூத்தவன் இருக்க இளையவன் அரசாட்சி செய்வதனை

"சிங்கக் குருளைக்கு இடும் தீஞ்சுவை ஊனை நாயின்
வெங்கண் சிறு குட்டனுக்கு ஊட்டலாமோ"

என்பதனோடு நான் இராமனுக்கு முடிசூட்டப் போகின்றேன். யார் இதனை எதிர்ப்பார்கள். என் வில்லின் ஆற்றலுக்கு அவர்கள் எதிர் நிற்கமாட்டார்கள் என்கின்றான். இதனை அறிந்த இராமன் இது விதியின் செயல் என எடுத்துரைக்கின்றான். அதற்கு இலக்குவன், விதிக்கு விதியாகும் என் வில் தொழில் காண்டி என்கின்றான். இறுதியில் இராமன் காடு செல்ல உள்ளான் என்று தானும் புறப்படுகின்றான். அவனை நாட்டில் இருக்க இராமன் சொல்ல, நீர் உள எனின் மீன் உள என மறுத்து இராமனொடு காடு செல்கிறான். இராமனொடு 5110 நாட்கள் காட்டில் இருந்து அவனுக்கு பணிவிடையும் செய்து பாதுகாப்பும் அளிக்கின்றான்.

காளிந்தி நதியைக் கடக்க மூங்கில் தெப்பம் அமைத்தான், சித்திரவுடத்தில் பர்ணசாலை அமைத்து கொடுத்தான். இராமன் உண்ட மிச்சத்தை உண்டான், வாலியிடம் இராமனுக்காகப் பரிந்து பேசினான். இராவண வதத்தில் உடனிருந்து உதவினான். இராமனின் அடைக்கலப் பொருளான வீடணனைக் காக்க இராவணன் கூறிய வாளை ஏற்று இராமனாலே தம்பியுடையான் பகையஞ்சான் என்ற சொல்லுக்கு வலு சேர்த்தான்.

மற்றொரு தம்பியாகிய பரதனோ, செய்தியறிந்து படைதிரட்டிகாடு சென்ற இராமனை அழைத்துவரச் செல்கின்றான். அவனைத் தவறாக முதலில் கணித்த குகனே பின்னர் "ஆயிரம் இராமர் நின்கேழ் ஆவரோ" என்று சொல்லும் அளவு பண்பாளனாக உள்ளான். இராமனைக் கண்டு பேசி அழைத்து, அவன் சொற்படிநந்தி கிராமத்தில் 14 ஆண்டுகள் இராம பாதுகையை வைத்து இராமராஜ்ஜியத்தை நடத்துகின்றான். உரிய காலம் கழிந்து வராத நிலையில் தீப்பாயவும் முற்படுகின்றான். இதல்லவோ சகோதர பாசம்.

இராமனோ எல்லாவற்றையும் கடந்து வேடர்குல குகனையும், குரங்கினத்து சுக்ரீவனையும், அரக்கர் குலத்துவீடணனையும் தம்பியாக ஏற்கின்றான். கம்பன் காட்டும் சகோதரத்துவம் வேறு எவ்விடத்தும் இல்லை.

**கணவன் மனைவி உறவு**

'அண்ணலும் நோக்கினான், அவளும் நோக்கினாள். இருவரும் மாறிப்புக்கு இதயம் எய்தினர்' என்ற நிலையில் உயிர்க்காதலோடு விளங்கும் சீதையிடம் இராமன், 'நான் கானகம் செல்கின்றேன். சில நாட்களில் வந்துவிடுவேன்' எனும் சொல் சீதையின் காதுகளில் இரும்பைக் காய்ச்சி ஊற்றியது போலிருந்தது; என்பதனோடு, 'நீங்கள் இருக்குமிடமே எனக்கு அயோத்தி' என உடன் எழுகின்றாள். கணவனின் உயர்பண்பை, தன் தவறை இலங்கையில் அசோகவனத்தில் இருந்தபோது எண்ணி எண்ணி மனங் கலங்குகின்றாள். கணவனுக்கு மனைவி ஆற்றவேண்டிய கற்பு நிலையில் கவனமாக இருக்கின்றாள். இராமனிடம் காணப்பட்ட சமநிலையை

"மெய்திருப்பதம் மேவு என்ற போதினும்
இத்திரு துறந்து ஏகு என்ற போதினும்
சித்திரத்தின் அலர்ந்த செந்தாமரை
ஒத்திருக்கும் முகத்தினை உன்னுவாள்"

என்கிறார் கம்பர். தன் குறையையும், இராமனது பெருந்தன்மையையும் நினைத்துகாலம் கழிக்கும் இயல்பு சுட்டப்படுகின்றது.

**குடிப்பெருமை காத்தல்**

தம் குலப்பெருமைக்கு இழுக்கு வராமல் காப்பாற்ற, சூரியகுல மரபினனாகிய இராமன் தசரதனால் ஏற்பட்ட ஒரு மாற்றத்தை சரிசெய்கின்றான். இராமனுக்கு அரசாட்சியும் இல்லை, நாட்டிலும் இடமில்லை என்று உறுதியாக இருந்த கைகேகியிடம் தசரதன், 'நீ எனக்கு மனைவியும் இல்லை. உன் மகன் பரதன் எனக்கு மகனுமில்லை' என்று சாபம் தந்துவிடுகின்றான். இராமன் இவ்விடத்தில் தன் தனிமனிதக் கடமையை, குலப்பெருமையைக் காக்கின்றான். இராவணவதம் முடிந்து சீதையொடு மீண்டும் அயோத்தி வரும் போது வானிலிருந்து தசரதன் ஆசி கூறுகின்றார். அப்போது இராமன் தசரதனிடம்,

'தீயள் என்று நீ துறந்த என் தெய்வமும் மகனும்
தாயும் தம்பியுமாம் வரம் தருக என வேண்டுகின்றான்"

தன் குலகுரு வசிட்டரையும், கலைக்கோட்டு முனிவரையும் தெய்வமாகப் போற்றும் பண்பு இராமனிடத்தில் காணப்படுகின்றது.

**எதிர்பண்பில்லாமை**

இராமன் காப்பியம் முழுமைக்கும் அமைதியான பண்புடனேயே காட்சியளிக்கின்றான். யாரிடமும் கோபம் உற்றோ, தவறான சொற்களைச் சொன்னதாகவோ அறிய இயலவில்லை. குகன் தவப்பள்ளியில் தேனும் மீனும் கொண்டு வந்தபோதும் சுக்ரீவன் காலம் கடத்திய போதும் மாயமான் வேடத்திலும் மற்றும் பல துயரங்களை அரக்கர்கள் தந்தபோதும், வீடணனை மற்றவர்கள் சந்தேகித்தபோதும் நடுநிலையில் நின்றவன் இராமன். தன் உயிர் மனைவியைக் கவர்ந்து சென்ற இராவணனோடு அறமுறைப்படிபோருக்குச் செல்கின்றான். தூது அனுப்பி வாய்ப்பு வழங்கிப் போர் நடைபெறுகிறது. கும்பகர்ணன் இறந்ததும் அவனது வேண்டுகோளுக்கிணங்க முகமற்ற அவனது உடலைப் பிறர் பார்க்காவண்ணம் கடலில் மூழ்கடித்தான். இராவணனின் போர் ஆற்றலைக் கண்டு மதித்தான், வியந்தான். போர்க்களத்தில் ஆயுதமின்றித் தனித்து நின்ற இராவணனிடம் "இன்று போய்ப் போருக்கு நாளை வா" என்று கூறும் பண்பு வேறு எந்தக் காப்பியத்திலும், இலக்கியத்திலும் இல்லை.

**நன்றி கூறல்**

இராவணவதம் முடித்து 14 ஆண்டுகள் நிறைவேறும் நிலையில் பரதன் கூறியது நினைவுக்குவர அவனைக் காக்க, அனுமனை அயோத்திக்கு அனுப்பி, பரதன் உயிர் காக்கின்றான். வீடணனுக்கு இலங்கை அரசாட்சியைக் கொடுத்து இலக்குவன் வழி பட்டாபிஷேகம் செய்து வைத்தான். அயோத்தி வந்து தாயார்களை வணங்கி குரு மற்றும் அமைச்சரை வணங்கி பதவி ஏற்கிறான். தனக்கு உதவிய அனைவருக்கும் விடை கொடுத்து அவர்களைப் பணியாற்ற தூண்டுகின்றான். செயற்கரிய செய்த அனுமனுக்கு விடை பகர முடியாமல் 'என்னைப் புல்லுக' என்று பேரானந்த நிலையை வழங்குகின்றான்.

இராமன் படைப்பில் அவர் எங்கும் ஓர்அவதாரம் என்று இல்லாது, சாதாரண மனித நிலையே சுட்டப்படுகின்றான். மனிதனின் அக, புற கடமைகளை இராமன் திறம்படச் செய்கின்றான்.

மகனாக, மாணவனாக, கணவனாக, இளவரசனாக, சகோதரனாக, துறவு கோலம் கொண்ட தவசியாக, நண்பனாக, பொறுப்புள்ள குடிமகனாக, அரசனாக, குடிமக்களின் காவலனாக எவற்றை முறைப்படிக் கடைபிடிக்க வேண்டுமோ அவற்றைச் சரியாக செய்கின்றான். அதனால்தான் இராமன் என்னும் பெயர் நிலைத்து நிற்கின்றது.

# கம்பனில் வாழ்வியல் நெறிகள்

முனைவர் பா.வேலம்மாள்
துறைத் தலைவர், தமிழியற்புலம், ஸ்ரீபராசக்தி மகளிர் கல்லூரி,
குற்றாலம்.

பூ உலகில் வாழும் மனிதர்களுக்கும், தேவர்களுக்குக் கிடைத்ததைப் போன்ற சாவாமை தரும் அமுதம் கிடைக்கவில்லையே என்ற கவலையைத் தீர்த்தவன் கம்பன். பூமியில், நாம் அருந்தி மகிழக்கிடைத்த அமுதமே கம்பன் தந்த இராமாயணம். கற்றவர் நெஞ்சமெல்லாம் நிறைந்தவன் கவிச்சக்கரவர்த்தி கம்பன். எக்காலத்தவரும், எந்நாட்டவரும், எத்தரப்பினரும் விரும்பும் பாரத நாட்டின் விவகாவியத்திற்குத் தமிழ் வடிவம் தந்தவன் கம்பன்.

அடிப்படையில் அறமும், சமயமும் காப்பியத்தின் பொருளாக அமைகின்றன. மனிதர் யாவருக்கும் பயன்தரும் ஒழுக்க முறைகளையும், பண்பாட்டினையும், குறிக்கோழினையும், ஆட்சிச் சிறப்பினையும் விளக்கும் அருமையான இலக்கியமாகத் திகழும் சிறப்புடையது கம்ப இராமாயணமாகும். இந்நூலில் கம்பர் வலியுறுத்தும், நீதியும், அறனும் மக்கட் சமுதாயம் அனைத்திற்கும் பொதுவானவை ஆகும். நயமாகவும், பயனாகவும் மானுட சமுதாயத்திற்கு தேவையான வாழ்வியல் நெறிகளை சொல்ல வேண்டிய இடத்தில், சொல்லும் முறை அறிந்து சொல்லி மானுடம் தழைக்க முயன்றவன்.

கம்பனின் இராமகாதையில் உயர்ந்த நெறிகளெனப் பேசப்படுகின்ற வாழ்வியல் நெறிமுறைகள் ஏராளமாக எடுத்துரைக்கப்படுகின்றன. வீட்டிற்கும், நாட்டிற்கும் தன்னைச் சார்ந்தவர்களுக்கும் பயன்பட வாழாதவன் மனிதனே அல்லன்.அவன் நெறியோடு வாழும்போதுதான் மனிதன் ஆகின்றான்.

கம்ப இராமாயணம் வைணவ இலக்கிய நூல்தான் என்றாலும் எல்லாச் சமயங்களையும் உயர்த்திப் பேசுகின்றார். தான் சார்ந்திருக்கிற சமயத்தை உயர்த்திப்பார்ப்பதில் தவவில்லை. ஆனால் பிறமதங்களைத் தாழ்த்தக்கூடாது. சமயத்தின் பேரால் இரத்த ஆறுகள் ஓடக் கூடாது என்ற உயர்ந்த நெறியினைக் கூறுகின்றார். உதிக்கின்ற கதிரவனின் பேரழகைச் சொல்ல வந்த கம்பன்,

"எண்ண அரிய மறையினொடு கின்னரர்கள் இசைபாட, உலகம் ஏத்த
விண்ணவரும், முனிவர்களும், வேதியரும் கரம் குூிப்ப வேலை என்னும்

மண்ணும் மணி முழவு அதிர, வான்அரங்கில் நடம் புரிவாள் இரவி ஆன
கண்ணுதல் வானவன், கனகச் சடை விரிந்தலென விரிந்த கதிர்கள் எல்லாம்

(பாலகாண்டம், மிதிலைக் காட்சிப்படலம்; )

நெற்றிக் கண்ணை உடைய சிவபெருமானின் நெற்றிலிருந்து வெளிப்பட்ட நெருப்பு விழியைப் போல ஆதவன் உதித்தான் என்கிறான். சரயு நதியின் சிறப்பைச் சொல்ல வந்த கம்பன்,

"கல்லிடைப் பிறந்து, போற்று, கடலிடைக் கலந்த நீத்தம்
எல்லைஇல் மறைகளாலும் இயம்ப அரும் பொருள் ஈது என்னத்
தொல்லையில் ஒன்றே ஆகி, துறை தொறும், பரந்த சூழ்ச்சிப்
பல்பெருஞ் சமயம் சொல்லும் பொருளும்போல், பரந்தது அன்றே"

'இறைவன் ஒருவனே அவனது வடிவங்களைத்தான் நம் விருப்பம்போல் சித்திரித்து, வணங்கிக் கொண்டிருக்கிறோம். நம் வழிபாடுகள் அனைத்தும் அந்த மூலப்பரம்பொருளைத்தான் சென்றடைகிறது' என்ற நெறியினை வெளிப்படுத்துகின்றார்.

அரசனுக்குரிய நெறியாக, கம்பர் பெண்கள் தன் கற்பினைக் கட்டிக்காப்பதுபோல, தன் நாட்டை கட்டிக்காக்க வேண்டும் என்று கூறுகின்றார்.

"கன்னியர்க்கு அமையவரும் கற்பின் மாநிலம்
தன்னை இத்தகைதரத் தருமம் கைதர
மன்னுயிர்க்கு உறுவதே செய்து வைகினேன்
என் உயிர்க்கு உறுவதும் செய்ய எண்ணினேன்"

ஒரு குடும்பத்தில் பிறந்த புதல்வன் அன்னையையும், தந்தையையும் தன் இரு கண்களாக பாவித்து, அவர்தம் சொற் கடவாமல் வாழ்ந்து அவர்தம் பெருமையினை உயர்த்த வேண்டும். அவ்வாறு உயர்த்திய புதல்வர்களை இராமாயணத்தில் படைத்துக்காட்டுகின்றார். கம்பன் இராமன், இலக்குவன், பரதன், சத்ருக்கன் மற்றும் சிரவணன் மூலமாகவும் எடுத்துரைக்கின்றார்.

"அந்த நல்பெருங்குரவர் ஆர் எனச்
சிந்தை தேர்வுறத் தெரிய நோக்கினால்
தந்தை, தாயார் என்று இவர்கள் தாம் அலால்,
எந்தை! கூறவேறு யாரும் இல்லையால்"

வரங்கொடுத்த மன்னனையும், வரம் பெற்ற தாயையும் பரதன் பழித்துச் சொன்ன சொற்களைக் கேட்ட இராமன் நல்ல நூலறிவும்,

பழுதில்லாத ஞானமும் குற்றமற்ற நல்லறிவும், மேம்பாடுடைய நல்லொழுக்கமும், செயற்றிறமும், தொழுதற்கு உரிய கடவுளரும் 'குரவரே' ஆவர். அந்தக் குரவர் என்பவர் யார் என்றால் அவர்களே நம் தந்தையும், தாயும் என்று இராமன் விளக்குவதிலிருந்து, தாய், தந்தை எப்படிபட்டவரேனும் அவரைப் பழித்துப் பேசுதல் கூடாது என்ற நெறியினை இராம காதை விளக்குகிறது.

வாழ்க்கை என்பது மேடு பள்ளங்களை உள்ளடக்கியது. வாழும் சூழ்நிலைக்கு ஏற்ப நம்மை மாற்றிக்கொண்டு வாழ்ந்தால் நம் வாழ்க்கை கவலைகளை வெகுவாகக் குறைக்கலாம். அயோத்தியில் சுகபோக வாழ்க்கை வாழ்ந்தபோதும், ஆரண்யத்தில் துன்பப்பட்ட போதும் இராமனும், சீதையும் ஒரே மனநிலையிலேயே வாழ்ந்தனர்.

"துன்பு உளது எனின் அன்றோ சுகம் உளது? அது அன்றிப்
பின்பு உளது; இடை மன்னும் பிரிவு உளது' என உன்னேல்
முன்பு உளெம், ஒரு நால்வேம்; முடிவு உளது என உன்னா
அன்பு உள, இனி, நாம் ஓர் ஐவர்கள் உளர் ஆனோம்"

துன்பம் உள்ளதால் அல்லவா சுகம் என்று ஒன்று உள்ளது. அதுபோல பிரிவில்தால் உறவின் பெருமை தெரியும் என்று குகனிடம் இராமன் கூறி அவனைத் தேற்றுகின்றான். நம் மனம் எத்தகைய சூழ்நிலையிலும், தளர்ச்சியையும், சோர்வையும் சந்திக்காமல், உறுதிப் பாட்டோடு விளங்க வேண்டும் என்பதை கம்பர் எடுத்துரைக்கின்றார்.

அறத்தோடு வாழும் பல்வித செயல்பாடுகளைக் காப்பியத்தின் பல பகுதிகளில் கம்பன் நமக்குத் தெளிவு படுத்துகிறார். அரசியல் அறம், சமுதாய அறம், தனிமனித அறம் என வகைவகையாகவும், தொகைதொகையாகவும் கம்பன் பேசும் திறத்தில் ஆழமும், அழுத்தமும் நிறைந்திருப்பதைக் காணலாம்.

தசரதனுக்கு மூன்று மனைவியர், இராவணனுக்கு கணக்கில்லாத மனைவியர் என்று கம்பர் கூறினாலும், தசரதன் மகன் இராமன் ஏகபத்தினி விரதனாக இருந்ததைக் கம்பர் காட்டுகிறார். 'காமத்தால் இறந்தாரைக் கணக்கிட்டுச் சொல்ல முடியாது' என்பது அனுமனின் கூற்று; இராமகாதையில் இராவணன் காமத்தினால் வீழ்ந்தான்; அவன் சதுர் வேதத்தை அறிந்தவன்; தன் இசை மழையால் இறைவனையே ஈர்க்கும் ஆற்றல் கொண்டவன்; தோல்வியினைக்கண்டு துவளாத நெஞ்சுரமும், உண்மை வீரமும், ஆளமைத்திறமும் கொண்டவன்.

அறிவுடன் கலைஞானமும், ஈடு இணையற்ற வீரனாக விளங்கியவன்; இத்தனையும் இருந்தும், முறைகேடான பிறன்மனை நோக்கும் குணத்தால் வீழ்ந்தான்.

"திறம் திறம்பிய காமச் செருக்கினால்
மறந்து, தம் தம் மதியின் மயங்கினார்
இறந்து இறந்து, இழிந்து ஏறுவதே அலால்
அறம் திறம்பினர் ஆர் உளர் ஆயினார்?"

என்று அனுமன் மூலமாக காமத்தால்; அறத்திற்கு மாறாக நடப்பவர்கள் அழிந்துபடுவர் என உரைக்கின்றார். மதியை மயக்கும் மதுவை அருந்துதல் கூடாது, மது அருந்துகிறவன் தன் உயிரையும், உடலையும் கெடுத்து சமூக அறத்திற்கும் ஊறு விளைவிக்கிறான்.

"அளித்தவர், அஞ்சும் நெஞ்சின் அடைத்தவரறிவில் மூழ்கிக்
குளித்தவர், இன்பதுன்பம் குறைத்தவர், அன்றி, வேரி
ஒளித்தவர் உண்டு, மீண்டு, இவ்வுலகு எலாம் உணர ஓடிக்
களித்தவர் எய்தி நின்ற கதி ஒன்று கண்ட துண்டோ,

என்று சுக்கீரிவன் மதுஅருந்தியதால் அவனுக்கு உண்டான தீமைகளைக் கூறுகின்றார்.

கம்பனின் இராமகாதையில் தீயவர்களை மன்னிக்கும் மாண்பினில் இராமனும் சீதையும் ஒருவரோடொருவர் போட்டிப் போட்டுக்கொண்டு முந்தி நிற்கின்றனர். இராமன் தனக்கு கேடு செய்த எல்லோரையும் மன்னித்தான், சீதையும் தனக்கு கேடு செய்த அரக்கியர்களை மன்னித்தார்.

உலகனைத்துக்கும் பொதுவானது அன்பு ஒன்றுதான்; அன்பினைத் தவிர ஆக்கம் தருவது வேறொன்றில்லை "முன்பு பின்பு இன்றி மூவுலகத்திலும், அன்பின் நல்லது ஓர் ஆக்கம் உண்டாகுமோ" (1422) என்று கூறுகிறார்.

அன்பாலும், நட்பாலும் ஒன்று சேர்ந்து உற்றுழி உதவிகள் பெறும் உயர்ந்த நிலையை இராமனின் நட்புச் சூழல் நமக்கும் புலப்படுத்துகிறது. அரசகுலத்தைச் சேர்ந்த இராமன் வேடர்குல குகனுடனும், குரங்கினைச் சுக்ரீவனுடனும், அரக்கர்குல விபிடன் நட்பு கொண்டு உலக சகோதரத்துவம் என்ற உயர்ந்த பண்பினை உலகத்திற்கு எடுத்துரைத்துள்ளார்.

அடக்கம் எனும் பண்பு, வாய்மை எனும் பண்பு, நன்றியவிதல் பண்பு, அடைக்கலம் நல்கும் பண்பு, இன் சொல் பேசும் பண்பு என்று பலவகையான வாழ்வியல்நெறிகளை எடுத்துரைத்துள்ளார். கம்பர் சமூகத்திற்கு உணர்த்தும் கருத்து அறியாமைக் குற்றத்திற்கு வாழ்வு உண்டு. அறிந்து செய்யும் குற்றத்திற்கு இனத்தோடு அழிவே தவிர வாழ்வில்லை.

விருத்தம் என்னும் ஒண்பாவிற்கு உயர்கம்பன் என்ற பாராட்டு கம்பனுக்கே தகும். சீனித்துகளும் இனிக்குமாம் போல அவன் பாடலின் ஒவ்வொரு சீரும் கவிச்சுவைதரும்' என்ற வ.சு.ப.மாணிக்கத்தின் கருத்திற்கு ஏற்ப உத்தி என்ற புத்தியால் காவியத்தை உச்சிக்கு ஏற்றும் தன் சக்தியால் மானுட சமுதாயம் வாழ எண்ணற்ற வாழ்வியல் நெறிகளை உணர்த்தியுள்ளான்.

# கம்பனிடம் கற்கத்தகு வாழ்வியல் பாடங்கள்

திருமிகு. கோ.விஜயலட்சுமி
திருச்சி.

கம்பன் படைத்த இராமாயணம் முழுக்க முழுக்க மனித வாழ்க்கைக்குத் தேவையான அறக்கருத்துகளும், மனித சமுதாயம் பின்பற்ற வேண்டிய வாழ்க்கைக் கூறுகளும் இளைஞர்களுக்கு வழிகாட்டியாக விளங்கும் பண்பாட்டு மரபுகளும் பொதிந்து கிடக்கின்றன.

**அன்பு**

அன்பு எல்லாருக்கும் பொதுவானது. தன்மீது கொண்ட அன்பினால் இலக்குவன் பரதனின் படையைத் தவறாகக் கருதித் துடித்தெழுந்தபோது இராமன் அருள் நிறைந்த சொற்களால் அவனை மாற்றி பரதனின் அன்பைச் சுட்டிக் காட்டுகிறான். அதேபோல் வீடணன் அடைக்கலம் தேடி வரும்பொழுது அன்பு காட்டியவன் இராமன். இராமனின்மேல் மற்றவர்கள் காட்டும் அன்பு, அவன் மற்றவர்களிடம் காட்டும் அன்பு எத்தகையது என்பதை, கம்பர் தம் பாடலில் காட்டுகின்றார்.

"உடைந்தவர்க்கு உதவான் ஆயின்
உள்ளது ஒன்று ஈயின் ஆயின்
அடைந்தவர்க்கு அருளான் ஆயின்
அறம் என் ஆம்? ஆண்மை என் ஆம்"

அடைக்கலம் என்று வந்தவருக்கு அன்பு காட்டவில்லையென்றால் அறம் மேற்கொண்டு என்ன பயன்? ஆண்மகனாக இருந்து என்ன பயன்? என்று கேட்டதின் மூலமாக அன்பு வலியுறுத்தப்படுவதை அறியமுடிகிறது.

**வாய்மை**

உண்மை அனைத்திலும் உயர்ந்தது என்னும் கருத்தை இராமாயணம் அறிவுறுத்துகிறது. இதனை,

"தாதை அப்பரிசு உரைசெயத் தாமரைக் கண்ணன்
காதலன் உற்றலின் இகழ்ந்திலன் கடன்இது என்றுணர்த்தும்
யாது கொற்றவன் கூறியது அதுசெயல் அன்றோ
நீதி எற்குஎன நினைந்து அப்பணிதலை நின்றான்"

என்னும் பாடல்மூலம் தந்தைசொல் மிக்க மந்திரமில்லை என்னும் கூற்றுக்கேற்ப வாய்மையை அறிவுறுத்துகிறார் கம்பர்.

**இல்லறநெறி**

இல்லறக் கடமைகளைச் செவ்வனே செய்து வாழ்வதே சிறந்த அறநெறியாகும். இராமன் காட்டிற்குச் செல்லும்போது சீதையும் உடன் செல்கிறாள். இராமனைப் பிரிந்திருந்து கொடியது எனக் கருதுகிறாள். இன்பத்தில் மட்டுமல்ல துன்பத்திலும் அவனோடு பங்கு கொள்ளக் கருதுகிறாள். பிரிவே துன்பமானது என்பதை நின்பிரிவினும் சுடுமோ பெருங்காடு என அன்புள்ளத்தைக் கம்பர் சீதையிடம் காட்டி இல்லறச் சிறப்பை வெளிப்படுத்துகிறார்.

**விருந்தோம்பல்**

தமிழர் வாழ்வியலில் விருந்தோம்பல் பேரிடம் பெறுகிறது. இல்லறத்தின் அடிப்படை நோக்கமே விருந்தோம்பல் செய்வது தான். விருந்து புறத்திருக்கத் தானுண்டல் சாவா மருந்தெனினும் வேண்டற்பாற்று எனும் கொள்கையைச் சிறப்பாகக் கடைபிடித்தவர்கள் தமிழர்கள். பெண் துணையின்றி ஆணும் விருந்தோம்பல் செய்ய இயலாது. முயன்றாலும் அது நிறைவாக அமையாது. தான் உடல் இல்லாதபோது விருந்தினர் வந்தால் இராமன் என்ன செய்வானோ என்று எண்ணிக் கலங்குகிறாள் சீதை.

"அருந்தும் மெல்அடகு ஆர்இட அருந்தும் என்று அழுங்கும்
விருந்து கண்டபோது என்உறு மோஎன்று விம்மும்"

எனத் தமிழர் பண்பாட்டைச் சீதையின் நினைவால் காட்டுகிறார் கம்பர்.

**ஈகை**

தர்மமே தலையாயது. தர்மம் தலைகாக்கும். தர்மமே உலகின் சாரம். தர்மம் அதர்மத்தை அழிக்கக்கூடியது என்னும் உயர்ந்த அறத்தை இராமாயணம் உணர்த்துகிறது. ஒவ்வொரு மனிதனும் தர்மத்தைத் தலையாகக் கருதி வாழவேண்டும் என்னும் அறிவுரையை இராமாயணம் முழுமையும் பரவலாகக் காணலாம்.

இராமன் காட்டுக்குப் புறப்படும் நாளில் வேதியன் ஒருவனுக்குச் சில பசுக்களைத் தானமாகத் தருகிறான். அதிக ஆசை கொண்ட வயதான வேதியன் தான் கையில் வைத்திருந்த தடியைப் பசுக்கூட்டத்தில் எறிந்து அதுவரையுள்ள பசுக்களைத் தானமாகக் கேட்டான். அந்த வேதியனின் ஆசையைக் கண்டு சிரித்தபடியே தானம் தருகிறான் இராமன்.

**நட்பும் உறவும் உலகளாவிய உடன்பிறப்பு நேயமும்**

இராமன் தன் உடன்பிறந்த சகோதரர்களான பரதன், இலக்குவன், சத்ருக்கன் ஆகியோரிடம் காட்டுகின்ற அன்பைப் போலவே தன்மீது அன்பு செலுத்தி நட்புப் பாராட்டிய குகன், சுக்ரீவன், வீடணன் ஆகியோரை உடன்பிறவா சகோதரர்களாகவே ஏற்றுக் கொள்கிறான். குகனின் அன்பின் ஆழத்தை உணர்ந்த இராமனும் யாதினும் இனிய நண்ப என்று ஏற்றுக் கொள்கிறான். இதனை,

> "சீதையை நோக்கி தம்பி திருமுகம் நோக்கித் தீராக்
> காதலன் ஆகுமென்று கருணையுன் மலர்ந்த கண்ணன்
> யாதினும் இனிய நண்ப இருத்தி ஈண்டு எம்மோடு என்றான்".

என இராமன் கூற்றால் அறியலாம். கூடப்பிறந்து அதனால் ஏற்படும் சகோதரத்துவத்தை விட உடன்பிறவாமல் நட்பு மூலம் ஏற்பட்ட சகோதரத்துவம் மிகவும் உயர்ந்தது என்று கம்பர் பாராட்டுகிறார்.

**கற்புநெறி**

மனைக்குக் குலவிளக்காகத் திகழும் இல்லத்தரசிகளுக்கு மிக வேண்டப்படுவது, கணவனைப் பேணி, கற்பு நெறியோடு வாழ்ந்து குடும்பத்தை நடத்திச் செல்வதாகும். ஆதலால் குடும்பத் தலைவிக்குக் கற்புநெறியானது மற்ற எல்லா ஒழுக்கங்களைக் காட்டிலும் மிகச் சிறப்பானதுமாகும். கம்பர் காட்டும் சீதை தெய்வத்தன்மை உடையவளாகவும் கற்பினுக்கு அணிகலனாகவும் திகழ்ந்து விளங்குகிறாள். உடலாலும் உள்ளத்தாலும் தூயவளாகக் கம்பர் காட்டுகிறார்.

சீதை இலங்கையில் இருக்கும்பொழுது கற்புக்குப் பல சோதனைகள் நேரிடுகின்றன. அத்தனை சோதனைகளையும் தன் பொறுமையென்னும் துணை ஒன்றினாலேயே தன் கற்பைப் பாதுகாத்து விடுகிறாள்.

> "விற்பெருந் தடந்தோள் வீரவீங்குநீ ரிலங்கை வெற்பின்
> நற்பெருந் தவத்தாளாய் நங்கையைக் கண்டேனல்லேன்
> இப்பிறப் பென்தொன்று மிரும்பொறை என்பதொன்றும்
> கற்பெனும் பெயரதொன்றும் களிநடம் புரியக் கண்டேன்"

இப்பாடல் மூலம் குலமகளிருக்கு இருக்க வேண்டிய முக்கியப் பண்புகளில் குலப்பிறப்பு, பொறுமை, கற்புநெறி ஆகிய மூன்றையும் கம்பர் குறிப்பிட்டுள்ளார்.

**பிறன்மனை நோக்காப் பேராண்மை**

திருவள்ளுவர், பிறனில் விழையாமை என்னும் அதிகாரத்தில்

அடுத்தவன் மனைவியை விரும்புதல் ஆண்மைக்கழகில்லை என்னும் கருத்தை வலியுறுத்துகின்றார். கம்பர் ஒருவர் துணையை மற்றொருவர் விரும்புவதைக் கூட ஒழுக்கமாகக் காட்டுகிறார். பிறன்மனையை விரும்புவது மன்னிக்க முடியாத பெருங்குற்றமாகவும் அவர் உணர்த்துகிறார். வாலி பிறர் மனைவியைக் கவர்ந்தவன். அதுவும் தம்பியின் மனைவியைத் தன் மனைவியாக்கிக் கொண்டவன். இதனை,

"ஈரம் ஆவதும் இயற்பிறப்பாவதும்
வீரமாவதும் கல்வியின் மெய்ந்நெறி
வாரமாவதும் மற்றொருவன் புணர்
தாரம் ஆவதைத் தாங்கும் தருக்கரோ?"

என இராமன் மூலம் கம்பர் உணர்த்துகிறார். எல்லா நலமும் பெற்றிருந்த இராவணன் சீதையைக் கவர்ந்து சென்றதால் அழிகின்றான்.

"ஆசில்பர தாரமதை அஞ்சிறை அடைப்பேம்
பேசுவது மானம் இடைபேணுவது காமம்
கூசுவது மானுடரை நன்றுநம் கொற்றம்"

என்று கும்பகர்ணன் இராவணனைக் கடிந்துரைக்கின்றான். சீதையைச் சிறைகொண்ட காரணத்தால் இராவணன் சுற்றம், நட்பு, நாடு, நகரம் அனைத்தையும் இழந்து தானும் அழிகிறான்.

## பெரியோர் சொல் கேட்டல்

இராமன் எல்லாக் காலத்தும் பெரியவர்கள் சொல்வதை எல்லாம் ஏற்றுக் கொண்டு அதன்படி நடந்ததாகவே காட்டுவதன் மூலம் அவதாரபுருஷனே எனினும் ஆன்றோர் சொல்கேட்டல் அவசியம் என உணர்த்தியுள்ளார்.

தந்தை, தாய் இட்ட வேலையைத் தலைவணங்கி ஒரு மகன் செய்ய வேண்டும். பெற்றோரின் சொல்லை மதித்து நடக்காதவனாக ஒருவன் வாழ்ந்தால் அவன் நாயெனத் திரிதல் நலம் என்கிறான் இராமன்.

"தாய் பணித்து உவந்தன தந்தை செய்க என
ஏய் எப்பொருள்களும் இறைஞ்சி மேற்கொளாத்
தீய அப்புலையனின் செய்கை தேர்கிலா
நாய் எனத் திரிவது நல்லது அல்லதோ"

எனவே, பெற்றோர் சொல்லை மதித்து நடக்கும் கடமை ஒவ்வொரு புத்திரனுக்கும் வேண்டுமென்பதை இராமன் மூலம் அறியலாம்

**செய்ந்நன்றி அறிதல்**

கம்பன் ஆதரித்து கவி எழுதத் துணைபுரிந்தவர் சடையப்ப வள்ளல். அந்நன்றியை மறவாமல் தன் காவியத்தில் அவரையும் பாடுகின்றான் கம்பன்.

"நடையில் நின்றுயர் நாயகன் தோற்றத்தின்
இடைநிகழ்ந்த இராமாவ தாரப் போர்த்
தொடை நிரம்பிய தோமாறு மாக்கதை
சடையவன் வெண்ணெய் நம்ஊர்மையின் தந்ததே"

எனக் கவிச்சக்கரவர்த்தி கம்பன் தன் இராமகாதையை அரங்கேற்றிய இடம் சடையப்ப வள்ளல் வாழ்ந்த திருவெண்ணெய் நல்லூர் தான் என்பர். தாம் இயற்றிய காவியத்திலும் நன்றிக்கடனை பல இடங்களில் பாத்திரங்களின் மூலமாக வெளிக்காட்டுகிறார்.

**முடிவுரை**

மனித வாழ்விற்குத் தேவையான அன்பு, வாய்மை, விருந்தோம்பல், நட்பு பிறன்மனை நயவாமை, செய்ந்நன்றியறிதல் போன்ற பல நல்ல செய்திகளைக் காப்பியம் முழுவதும் இனம் காண முடிகிறது.

# கம்பரிடம் கற்றறிய வேண்டியவை

முனைவர் ச. கலாதேவி
தமிழ்த்துறை, உதவிப்பேராசிரியர், செங்கமலத்தாயார் கல்வி அறக்கட்டளை
மகளிர் கல்லூரி, மன்னார்குடி.

## முன்னுரை

கம்பர் இராமகாவியத்தை வான்மீகி இராமாயணத்தைத் தழுவி எழுதியிருந்தாலும், தமிழ்ப் பண்பாட்டிற்கேற்ப செம்மையுற வகுத்திருப்பது பாராட்டிற்குரியதாகும். இக்காவியத்தில் பெற்றோரை மதித்தல், சகோதர ஒற்றுமை, இல்லறப் பண்பாடு, விருந்தோம்பல் பண்பு, அறநெறிமாண்பு, அன்புநெறி, ஈகைப்பண்பு போன்ற எண்ணற்ற வாழ்வியல் நெறிகளும், பண்பாட்டு முறைகளும் பரவலாகப் பொதிந்துள்ளன.

## கம்பரிடம் கற்றறிய வேண்டியவை

### பெற்றோரை மதித்தல்

பெற்றோரின் சொல்லைக் கேட்டு மதித்து நடத்தல் நன்மக்களின் தலையாய கடமையாகும். நாட்டைப் பரதன் ஆள, நீ பதினான்கு ஆண்டுகள் காட்டில் வாழ வேண்டும் என்பது மன்னவன் கட்டளையென்று கைகேயி இராமனிடம் கூறுகிறாள். அக்கூற்றினை ஏற்ற இராமன் அன்றலர்ந்த செந்தாமரையை விடவும் மிகுந்த முகமலர்ச்சியுடையவனாய், தம்பி பெற்ற செல்வம் தான் பெற்ற செல்வமாகக் கருதிய உயர்பண்பினன் என்பதைக்கம்பர்தம் வரிகள் புலப்படுத்துகின்றன.

பரதன் கானகம் சென்று இராமனிடம் அயோத்திக்கு வருமாறு வேண்டுகிறான். அதற்கு இராமன்,

"அந்த நற்பொருள் குரவர் ஆரெனச்
சிந்தை தேர்வுறத் தெரிய நோக்கினால்
தந்தைதாயர் என்று இவர்கள் தாம்அலால்"

என்று சிறந்த குரவர்கள் தாயும் தந்தையும் தவிர வேறு எவருமில்லையென அறிவுரை கூறுகிறான்.

"தனயர் ஆயினார் தந்தை தாயரை
வினையின் நல்லது ஓர் இசையை வேய்தலோ?"

என்ற பாடலில், புதல்வர்கள் பெற்றோர்களுக்குச் செய்யும் உதவி

அவர்களுக்குப் புகழ் சேர்த்தலேயாகும்; பழி வரும்படியான செயல்களைச் செய்யக்கூடாது. ஆதலால் தாய் கைகேயி பெற்ற வரமும், தந்தை தசரதன் தந்த வரமும் பழுதுபடாதபடி காத்தலே முறை எனும் இராமனின் கருத்தால் பெற்றோரைப் போற்றும் அவனது பெருமைச் சிறப்பு வெளிப்படுகின்றது.

**சகோதர ஒற்றுமை**

கைகேயின் வரத்தால் இராமன் காடேகியதும், தசரதன் வானேகியதும் அறியாத பரதன் அயோத்தி வந்ததும் நடத்தவற்றையறிந்து ஆழ்ந்த துயரமடைகிறான். இராமனை வணங்கினாலன்றி தனது மனத்துயர் நீங்காது என்ற பரதனின் கருத்தை,

"எந்தையும் யாயுமெம் பிரானு மெம்முனும்
அந்தனில் பெருங்குணத் திராம னாதலால்"

என்ற பாடலால் உணரலாம்.

பரதன் காட்டில் வாழும் இராமனைக் கண்டதும் உச்சிமேல் கைகள் கூப்பி வணங்கி, இடைவிடாது அழுதலால் பொலிவு அழிந்த கண்களைப் பெற்று துன்பத்தின் வடிவமேயாக இருந்ததை,

"தொழுதுஉயர் கையினன்; துவண்டமேனியன் ;
அழுதுஅழி கண்ணினன்; 'அவலம் ஈது' என"

என்று கூறுவதால் அறியலாம்.

பெற்றோர் வாக்கினை ஏற்பதே எனது கடமை என்று கூறி இராமன் நாடாள மறுத்துவிடும் நிலையில் பரதன்,

"கோமுறை புரிகிலை யென்னிற் கூரெரி
சானிது சரதம் : நின்ஆணை சாற்றினேன்"

என்றும்,

"அடித்தலம் இரண்டையும் அழுதகண்ணினான்
'முடித்தலம் இவையென முறையில் சூடினான்"

என்றும் குறிப்பிடுவதால் இராமன் மீது அவன் கொண்ட பக்தி உணர்வை உணர முடிகின்றது.

"பயிலும் காலம் பத்தொடு நாலும் படர்கானத்து
அயில்கின் றேனுக் காவனநல்கி அயிலாதாய்"

என்ற பாடல், இராமனுடன் இலக்குவன் காட்டில் வாழந்த காலத்தில் காட்டிற் கிடைக்கும் உணவுகளையெல்லாம் அவனுக்குத் தந்துவிட்டுத் தான் உண்ணாதிருந்தான் என்று எடுத்துரைக்கின்றது. இராமன் மீது பரதனும், இலக்குவனும் காட்டும் அன்பும் பக்தியும் மக்களிடையே விட்டுக் கொடுத்து வாழும் மனப்பான்மையைத் தழைத்தோங்கச் செய்வன எனலாம்.

**இல்லறப் பண்பாடு**

"கற்பும் காமமும் நற்பால் ஒழுக்கமும்
மெல்லியல் பொறையும் நிறையும் வல்லிதின்
விருந்து புறந்தருதலும் சுற்றம் ஓம்பலும்
பிறவும் அன்ன கிழவோள் மாண்புகள்" (தொல் - பொருள் - 150)

"உயிரினும் சிறந்தன்று நாணே நாணினும்
செயிர்தீர் காட்சிக் கற்புச்சிறந்தன்று" (தொல் - பொருள் - 111)

என்ற நூற்பாக்கள் மகளிரின் மாண்புகளையும், கற்பின் சிறப்பியல்பையும் எடுத்துரைக்கின்றது.

உயர்குடிப்பிறப்பு, பொறுமை, கற்புநிலை மிகுந்த சீதையின் நற்குணவியல்பை, "கண்டனென் கற்பினுக் கனியைக் கண்களால்"10 "இற்பிறப் பென்பதொன்றும் இரும்பொறை யென்பதொன்றும்" என்ற பாடல் வரிகளால் உணரலாம்.

சீதையின் கற்புத்தன்மை தீயில் புகுந்ததும் தீயையே சுட்டெரித்தது எனலாம். சுத்தமான பொன்னை எத்தனைமுறை புடமிட்டாலும் எடையும் மாற்றும் குறையாது அதன் தூய்மையைக் காட்டுவதுபோல, சீதையை அக்கினிப் பிரவேசம் செய்வித்தது அவளின் குற்றமற்ற தன்மையை நிரூபித்தற்காகவேயாகும். கம்பர் கூறும் மாதவர் நோன்பினும் மங்கையர் நோன்பு மகிமையுடையது என்ற கருத்தும் நினைவு கொள்ளத்தக்கது.

"இந்த விப்பிற விக்கிரு மாதரைச்
சிந்தையாலும் தொடேன்"

என்று இராமன் சீதையை மணமுடித்த நாளில் கூறும் கருத்தின் வாயிலாகக் கம்பர், 'ஒருவனுக்கு ஒருத்தியாய்' வாழும் இல்லறப் பண்பாட்டை வலியுறுத்தியுள்ளார்.

**விருந்தோம்பல் பண்பு**

விருந்தோம்பல் பண்பானது இல்லறத்தை நல்லறப்படுத்துவதில் பெரும்பங்கு வகிக்கின்றது. கோசல நாட்டுப் பெண்கள் விருந்தினர்களை உபசரித்ததையும், வலியவர்களுக்குதவியதையும்,

"வருந்தி வந்தவர்க்கு ஈதலும் வைகலும்
விருந்தும் அன்றி விளைவன யாவையே"

என்ற வரிகள் உணர்த்தும்.

"அருந்து மெல்லட காரிட வருந்துமென் றழுங்கும்
விருந்து கண்டபோ தென்னுறு மோவென்று விம்மும்"

என்ற பாடலில், சீதை தன்னைப் பிரிந்திருக்கும் இராமன் விருந்தினர்களை உபசரிக்க இயலாதேயென்று எண்ணி வருந்துவதால் விருந்தோம்பலின் தனிச்சிறப்பை அறிந்து கொள்ளலாம்.

**அறநெறிமாண்பு**

ஒருவன் அறத்தை மேற்கொண்டு நடந்தால் இவ்வுலகத்தில் புகழ்பெற்று வாழ்வதுடன் மறுமையிலும் நற்கதியைப் பெறுவான் என்பதை,

"முன்புநின்று இசைநிறீஇ முடிவு முற்றிய
பின்புநின்று உறுதியைப் பயக்கும் பேரறம்"

என்ற பாடலால் உணரலாம்.

**அன்பு நெறி**

"முன்பு நின்றுயர் மூன்றுல கத்தினும்
அன்பி னல்லதொ ராக்கமுண் டாகுமோ"

என்ற பாடல், அன்பினால் அருளும், அருளால் அறமும் , அறத்தால் நற்கதியும் வாய்க்கும் என்பதால் மண்ணுலகத்தவர்க்கு மட்டுனின்றி மற்றையுலகத்தவர்க்குங்கூட அன்பே இன்றியமையாதது என்பதை எடுத்தியம்புகின்றது.

**ஈகைப்பண்பு**

உயிரேயானாலும் இரந்து பெறுதல் தீது: உயிரேயாயினும் கொடுப்பது நன்று என்பதையுணர்த்தும்,

"எள்ளுவ என்சில இன்னுயிரேனும்
கொள்ளுதல் தீது கொடுப்பது நன்றால்"

என்ற பாடலும், இறந்தவர்கள் எல்லோரும் இறந்தவர்களாக மாட்டார்கள். இரந்து வாழ்பவர்களே உண்மையாக இறந்தவர்களாவர். உலகில் தானங்களைச் செய்தவர்களே நிலையாக இருப்பவர்கள் என்பதையுணர்த்தும்,

"மீந்திவர் என்பவர் மீந்தவ ரேனும்
ஈந்தவர் அல்லது இருந்தவர் யாவரே"

என்ற பாடலும் ஈகைப்பண்பினைச் சிறப்பித்துரைக்கின்றன.

**முடிவுரை**

"கம்ப நாடன் கவிதையிற் போல்
கற்றோர்க்கு இதயம் களியாதே"

என்று சிறப்பிக்கப்பெறும் கம்பராமாயணத்தில் அமைந்துள்ள வாழ்வியலுக்கான அனைத்து நீதிநெறிக் கருத்துக்களும் எக்காலத்திற்கும் பொருந்தும் தனிச் சிறப்புடையனவாகும். தமிழ்கூறும் நல்லுலகம் உள்ளவரை தமிழ்ச்சான்றோன் கம்பன் புகழ் என்றென்றும் நிலைத்து நிற்கும் என்பதில் யாதொரு ஐயமுமில்லை.

# கம்பனில் வழக்கப்பெறும் வாழ்வியல் நெறிகள்

முனைவர் எஸ்.புனிதவதி
தமிழ்த்துறை, உதவிப்பேராசிரியர், ஸ்ரீமத் ஆண்டவன் கலை அறிவியல் கல்லூரி,
திருச்சி.

ஒழுக்கத்தோடு நல்வழியில் வாழும் ஒருவன் தெய்வநிலைக்கு உயரமுடியும். நினைவாலும் சொல்லாலும் செயலாலும் வழுவாத நன்னெறியே ஒழுக்கமாகும். தனிமனித ஒழுக்கமே சமுதாய ஒழுக்கத்திற்கும் வித்தாகிறது. ஒழுக்கத்தை அடிப்படையாகக் கொண்டு அமையும் சிறந்த வாழ்வியல் நெறிகளை எடுத்துரைத்து வழிகாட்டிய சான்றோர் பலர். அவ்வகையில் கம்பரும் எக்காலத்தும் யாவருக்கும் பொதுவாக அமைந்த நல்லறமாகிய வாழ்வியல் நெறிகள் பலவற்றை தமது பாத்திரப்படைப்புகளின் வாயிலாக எடுத்துரைக்கின்றார். கம்பர் சுட்டும் வாழ்வியல் நெறிகளை ஆய்வதே இக்கட்டுரையின் நோக்கமாகும்.

## இறை நெறி

மனிதனது ஆற்றலுக்கு உட்படாத ஐம்பூதத்தின் செயல்பாடு களையும் மனித அறிவுக்கும் ஆய்விற்கும் எட்டாத பல உலகியல் உண்மைகளையும் அளவிடமுடியாத பேராற்றலையும் நாம் இறையெனக் கொள்கிறோம். இறைவனைப்பற்றி பலரும் கூறும் கூற்றினைக் கொண்டு இறைவனின் தன்மைபற்றி இயம்புகின்றார் கம்பர்.

> "ஒன்றே என்னின் ஒன்றேயாம் பல என்று உரைக்கின் பலவேயாம்
> அன்றே என்னின் அன்றே யாம் ஆமே என்னின் ஆமேயாம்
> இன்றே என்னின் இன்றே யாம் உளது என்று உரைக்கின் உளதே யாம்"
>
> (கம்ப.யுத்தகாண்டம்)

எனப் பலராலும் பலவிதத்திலும் உணரப்பெறும் இறையுணர்வை தமது பாடலின்வழி இனம் சுட்டுகிறார் கம்பர்.

## வாழ்வியல் உண்மை

> "பிறவிப்பெருங்கடல் நீந்துவர் நீந்தார்
> இறைவன் அடிசேரா தார்"

என்பது வள்ளுவன் வாக்கு. இராமனுக்கு அரசாட்சியைக் கொடுத்துவிட்டு பிறவிப்பிணி நீங்க பெருந்தவத்தை மேற்கொள்ள விழைகிறார் தசரதன்.

"துறப்பு எனும் தெப்பமே துணை செய்யாவிடின்
பிறப்பு எனும் பெருங்கடல் பிழைக்கல் ஆகுமோ?"

(அயோத்தியா காண்டம்- மந்திரப்படலம் - 20)

என்ற வினாவழி துறவும் மனத்தெளிவும் கொண்டு பிறவிப்பெருங்கடலாகிய சிறையிலிருந்து தப்பிச் செல்லலாம் எனவும் பகர்கின்றார் கம்பர்.

பரதன் பார் ஆள, இராமன் காடு உறைய நேர்ந்ததை எண்ணி சினம் கொள்கிறான் இலக்குவன். கைகேயின் செயலைப் பழித்து இலக்குவன் போர்க்கோலம் கொள்வதைக் காண்கிறான் இராமன்.

"நதியின் பிழை அன்று நறும்புனல் இன்மை அற்றே
பதியின் பிழை அன்று பயந்து நமைப் புரந்தான்
மதியின் பிழை அன்று; மகன் பிழை அன்று மைந்த
விதியின் பிழை நீ இதற்கு என்கொல் வெகுண்டது என்றான்"

(கம்ப; அயோத்தியா - 421)

யாருடைய தவறுமன்று ஊழ்வினை செய்த தவறாகும் என்கிறான் இராமன். "தீதும் நன்றும் பிறர்தர வாரா" என்னும் புறநானூற்று வாழ்வியல் சிநதனையை வெளிப்படுத்துகிறார் கம்பர். தசரதன் இறந்த செய்தியை பரதன் மூலமாகக் கேட்டு னிகுந்த துயரம் கொள்கிறான் இராமன். தந்தையை இழந்து மீளாத துயரத்தில் மூழ்கிய இராமனை நோக்கி வசிட்ட முனிவன்,

"..........................................மன்னுயிர்க்கு
இறத்தலும் பிறத்தலும் இயற்கை என்பதை
மறத்தியோ மறைகளின் வரம்பு கண்ட நீ"

என இறப்பதும் மீண்டும் பிறப்பதும் இயற்கை எனக் கூறி தந்தைக்கு ஆற்ற வேண்டிய இறுதிக்கடன்களை செய்யுமாறு அறிவுறுத்துகிறார்.

**மூத்தோர் சொற்கேட்டல்**

தாடகையைப் பெண் என்று காரணம் கருதி போரிடத் தயங்கும் இராமனிடம் அழியாது சிறந்த அறத்தை நினைத்துப்பார்த்து இவ்வாறு கூறுகிறேன். சாந்தமாக நிற்பது அறன் அன்று அரக்கியைக் கொல்க! என்கிறார் விசுவாமித்திரர். இராமனும்,

"............ அது செய்க என்று கூறினால்
மெய்ய நின் உரை வேதம் எனக் கொடு

செய்கை அன்றோ அறம் ஆறு என்றான்"

(பால காண்டம்: தாடகை வதைப்படலம்: 388)

எனக் கூறி இராமன் முனிவனின் ஏவலுக்கு இசைகின்றான். தசரதன் இராமனுக்கு முடிசூட்ட எண்ணுகிறார். இராமனை அழைத்து "பெருமை பொருந்திய மகுடம் அணிந்து அரசியல் அறத்தைக் காக்க வேண்டும் எனக் கூறினார். தந்தைச் சொல் மிக்க மந்திரமில்லை" எனும் வாக்கினுக்கேற்ப ,

"யாது கொற்றவன் கூறியது அது செயல் அன்றோ
நீதி எற்கு என நினைந்தும் அப்பணி தலை நின்றான்"

(கம்ப. அயோத்தியா: மந்திரப்படலம் - 69)

என அரசன் ஆராய்ந்து கூறிய செயலைச் செய்வதே நீதியாகும் என எண்ணி தந்தையின் ஆணைக்கு உடன்பட்டான். கைகேயி இராமனிடம் "ஆழிசூழ் உலகமெலாம் பரதனே ஆள அருந்தவ வேடம் ஏற்று வெப்பம் னிகுந்த காட்டை அடைந்து பதினான்கு ஆண்டுகள் கழிந்த பின்பு திரும்பி வருக" என அரசன் சொன்னான் எனக் கூறினாள். அதனைக் கேட்டு மனம் மகிழ்ந்த இராமனின் தோற்றப்பொலிவு பற்றி கூறுகிறார் கம்பர்.

"செப்ப அருங்குணத்து இராமன் திருமுகச் செவ்வி நோக்கி
ஒப்பதே முன்பு பின்பு அவ் வாசகம் உரைக் கேட்ட
அப் பொழுது அலர்ந்த செந்தாமரையினை வென்றது அம்மா"

(அயோத்தியா: கைகேயி சூழ்வினை:289)

கைகேயியின் சொற்களைக் கேட்டபின்னர், 'தந்தையாகிய அரசனது கட்டளையாக இல்லாவிடினும் தாயின் கட்டளையாக இருப்பினும் இப்பணியினை தலைமேல் கொண்டேன்' எனக்கூறி விருப்பு வெறுப்பு எதுவுமின்றி விடைபெறுகிறான்.

## நட்பு நெறி

ஒருவரோடு ஒருவர் உள்ளம் கலந்த நிலையை நட்பு எனலாம். நட்பினுக்கு வயதும் காலமும் இல்லை. இனமோ மதமோ தடை-யில்லை. நட்பிற்கு அடிப்படையாக அமைவது அன்பு மட்டுமே. இதனை இராமனிடம் மிகுந்த அன்பு கொண்ட குகன் கதையிலிருந்து தெளியலாம். மேலும், இவ்வாறே சுக்ரீவன், வீடணன் போன்றோரிடம் இராமன் காட்டும் நட்புநெறி போற்றத்தக்கது.இதன்மூலம், இராமனின் செயல்வழி நட்பின் ஆழம் சுட்டியுரைக்கப்படுகிறது.

**விருந்தோம்பல் நெறி**

சங்ககாலந் தொட்டே விருந்தோம்பல் பண்பு சிறந்த வாழ்வியல் நெறியாகக் கருதப்படுகிறது. தமிழரின் பாரம்பரிய பண்புகளுள் ஒன்றாகத் திகழ்வது விருந்தோம்பல் ஆகும். விருந்தினர் மனம் மகிழும் வண்ணம் அமுது படைப்பது நமது பண்பாடாகும்.

குகன் காணிக்கையுடன் இராமனைக் காண தவப்பள்ளிக்குக் வருகை தருகிறான். தேனையும் மீனையும் இராமனுக்கு உணவாக அமையும்படி பக்குவப்படுத்திக் கொண்டு வந்துள்ளதாகக் கூறுகிறான். இராமனோ, "அமிழ்தினும் சீர்த்த அன்றே" எனக்கூறி 'அன்போடு பொருந்திய தூய்மையான அவ்வுணவை ஏற்று இனிதாக உண்டவர் போல் ஆனோம்' எனவும் உரைக்கிறான்.

**மானுடநேயம்**

போர்க்களத்தில் இராவணன் உடலை இராமன் தனது அம்பு மழையால் மூடும்படிச்செய்கிறான். இராவணன் பகையும் சினமும் இன்றி வலிமை அற்று நிலை குலைந்து தேரில் வீழ்ந்து கிடக்கிறான். மாதலி இராமனிடம் 'தளர்ச்சியுற்ற வேளையில் அவனைக் கொல்வாயாக' எனக் கூறுகிறான். வீரம் னிக்க இராமனோ,

"படை துறந்த மயங்கிய பண்பினான்
இடைபெறும் துயர் பார்த்து இகல் நீதியின்
நடைதுறந்து உயிர் கோடலும் நன்மையோ?" என வினவுகிறான்

அறத்தின் ஒழுக்கத்தினைத் துறந்து இராவணன் உயிரைக் கொல்லுதல் நன்மையன்று எனக் கூறுமிடத்து மனித நேயச் சிந்தனையை வெளிப்படுத்துகிறார் கம்பர். போர்க்களத்தில் படைக்கலன்களை இழந்து வெறுங்கைகளுடன் வெட்கி நின்றவனான இராவணனை நோக்கினான்.

"ஆய் ஐயா உனக்கு அமைந்தன மாருதம் அமைந்த
பூளையாயினை கண்டனை 'இன்று போய் போர்க்கு
நாளை வா' என நல்கினான்." (யுத்த: மு.போர்புரிபடலம்- 1212)

என்ற பாடல் அடிகளின்வழி பகைவனுக்கு அருள் செய்யும் மனிதநேய சிந்தனையை வெளிப்படுத்துகிறார்.

**அன்பு நெறி**

"உடைந்தவர்க்கு உதவான் ஆயின் உள்ளது ஒன்று ஈயான் ஆயின்,
அடைந்தவர்க்கு அருளான் ஆயின் அறம் என் ஆம்? ஆண்மை என் ஆம்?
(யுத்த:வீடணன் அ.படலம்-413)

அடைக்கலம் என்று வந்தவருக்கு அன்பு காட்டவில்லையென்றால் அறம் மேற்கொண்டு என்ன பயன்? ஆண் மகனாக இருந்து என்ன பயன்? என்ற வினாவழி அன்பு நெறியை வலுயுறுத்துகிறார் கம்பர்.

இராமனுக்காக அனுமன் தன் உயிரையும் விடத் தயாராக இருக்கிறான். இராமனுடைய ஏவலைச் செய்வதே தனது நற்பேராக எண்ணுகிறான் அனுமன். இறுதியாக இலங்கையிலிருந்து திரும்பும் அனுமனுக்கும் வீடணனுக்கும் சுக்ரீவனுக்கும் விடைக் கொடுத்து அனுப்புகிறான்.

"மாருதி தன்னை ஐயன் மகிழ்ந்து இனிது அருழின் நோக்கி
ஆர் உதவிடுதற்கு ஒத்தார் நீ யலால்? அன்று செய்த
பேர் உதவிடுதற்கு யான்செய் செயல்ரிது இல்லை, பைம்பூண்
போர் உதவிய திண் தோளாய் பொருந்துறப் புல்லுக"

(யுத்த: விடை கொடுத்தபடலம் - 4292)

என்கிறான் இராமன். அனுமன் மீது வைத்திருந்த அளவு கடந்த அன்பின் காரணமாகவே 'உடலும் உள்ளமும் பொருந்தப்புல்லுக' எனக்கூறும் இடத்து வானர் இனத்தையும் அருளோடு அன்பு காட்டும் நிலைதனைச் சுட்டுகிறார் கம்பர். இல்லறம் சார்ந்த அகவாழ்க்கைக்கும் போர் சார்ந்த புற வாழ்க்கைக்கும் தேவையான வாழ்வியல் நெறிகளைக் கம்பர் தமது காவியத்திறன்வழி எடுத்துரைத்துள்ளார்.

# வாலியும் கும்பகருணனும் உணர்த்தும் வாழ்வியல் நெறிகள்

முனைவர் கு.ச.மகாலிங்கம்
திருவிடைமருதூர்.

### இராமவதாரம்

காப்பிய நாயகனாம் இராமனை எதிர்ப்பவர்களாக இராவணாதியர்கள் இருந்தாலும் அவன் கானகம் புகுந்த ஒவ்வொரு நிலையிலும் அவனால் வீழ்த்தப்படுபவர்கள் வீழும்போது அறம் வலிது என்ற உண்மையினை உணர்ந்தவர்களாகவே தம் வாழ்வினை முடிக்கின்றனர். இது கம்பனின் பாத்திரப்படைப்பில் காணலாகும் வாழ்வியல் நெறியாகும். அத்தகைய பாத்திரங்களில் முக்கிய இடத்தினைப் பெற்றிருந்த வாலியும், கும்பகருணனும் வாழ்வியல் நெறி உணர்ந்தமையினைக் காணலாம்.

### வாலி வீழ்ந்தது

சுக்ரீவனுக்காக வாலியை மறைந்து நின்று அம்பெய்து அழிக்கின்றான் இராமன். இராமனின் அம்புபட்டு வீழ்ந்த வாலி யார்விட்ட அம்பு இது என உடலினுள் புதைந்த அம்பினை இழுக்கின்றான். அதில் 'இராம' எனும் எழுத்துக்களைக் கண்டான். போரிட வருமுன் மனைவி தாரை தன்னைத் தடுத்தமையினை எண்ணினான். இராமனை நோக்கி, "பிறரைத் தீமை செய்வதினின்றும் தடுத்து அதே தீமையை நீ செய்யலாமோ" என்றும் "வேத நூற்படி வாழ்ந்த சூரிய மரபில் வந்த நீ நல்லறம் விட்டது ஏன்" என்றும் "உலகமே உனது என்றாலும் அறிந்தநீ தீமை செய்யலாமோ" என்றும் "உன் தேவியைப் பிரிந்ததால் ஏற்பட்ட திகைப்பினால் தீமை செய்தாயோ" என்றும் "தீமை இப்படி செய்து அவப்பெயர் பூணலாமோ" என்றும் "ஙிரமற்ற செயல"; என்றும் "நும் குலத்தார்க்கே நும் செயல் இழுக்காம்" என்றும் பலபட ஏசினான்.

### இராமன் கூற்று

வாலியின் ஏச்சுகளைப் பொறுத்த இராமன் அவன் போற்ற வேண்டிய அறம் மறந்து தம்பியை பகைத்துத் துரத்தியதையும் அவன் ஆட்சியையும், மனைவியையும் கவர்ந்ததையும் சுட்டிக்காட்டினான். வாலி தன்னை வானர இனத்தன் என்றும், மனிதர்க்குரிய நெறிகளைப் பொருத்திக் குற்றம் காணல் முறையன்று என்றும் இயம்பினான். அதற்கும் இராமன் வாலியை வானர இனத்தவனாகக் கருத முடியாது

என்றும் அவன் வீரத்தையும், இராவணனையே வென்ற தீரத்தையும் எடுத்துக்காட்டி வானரம் எனத்தாழ்ந்து அறத்தை விடுக்கலாமோ என மொழிந்தான்.

இராவணனைத் தோழனாகவும் கொண்டவன் வாலி இராவணன் படைவீரர்களான கர,தூஷணர்களைத்தன் எல்லையிலேயே வைத்திருந்தான். இராவணன் சீதையைக் கவர்ந்த செயல் தெரிந்தும், அவனை நெறிப்படுத்தவில்லை. தசரதன் குலமறிந்தும் குணம் அறிந்தும் இராமபிரான் உள்ளம் அறிந்தும் இராவணனைத் தடுக்கவில்லை. என வாலி அறத்தினைத் துறந்த விதத்தினை இராமன் எடுத்துரைத்தான். அம்மொழிகளைக் கேட்ட வாலி,

> "தாய் என உயிர்க்கு நல்கி தருமமும் தகவும் சால்பும்
> நீ என நின்ற நம்பி நெறியினின் நோக்கும் நேர்மை
> நாய்என நின்ற என்பால் நவை அற உணரலாமோ
> தீயன பொறுத்தி என்றான் சிறியன சிந்தியாதன் (கம்ப - 4061)

எனத் தன் நிலையினைத் கவல்கின்றான்.

### வாலி இராமனிடம் கோரும் வரம்

இராமனின் அம்புப்பட்டு, உண்மை உணர்ந்து, இறக்கும் தருவாயிலும் இராமனிடம் ஒரு வரம் கோருகின்றான் வாலி.

> "ஓவிய உருவ நாயேன் உளது ரன்று பெறுவது உன்பால்
> பூகியல் நறவம் மாந்தி புந்திவேறு உற்ற போழ்தில்
> தீவினை இயற்று மேனும் எம்பிமேல் சீவி என்மேல்
> கூறிய பகளி என்னும் கூற்றினை ஏவல் என்றான்" (கம்ப -; 4068)

மேலும், தன் மகன் அங்தனையும் இராமனிடம் அடைக்கலம் எனக் காட்டுகின்றான். இப்படி யாரை அழிக்கவேண்டுமெனத் துரத்தி துரத்தி வெருட்டினானோ அவனையே, தன் தம்பியான சுக்ரீவனையே அவன் நன்றி மறந்தாலும் கூட அவனைக் காக்க வேண்டும் என தன் இறுதி நிலையில் தான் மாண்டாலும் தம்பி வாழ வேண்டும்: தடை நேரக் கூடாது என எண்ணி வரம் கோரும் நிலை அவன் இறுதியில் உணர்ந்த வாழ்வியலைக் காட்டுகிறது.

### கும்பகருணன் போர்க்கள நிலை

இராவணன் சீதையை சிறை எடுத்ததால் ஏற்பட்ட பகை உணர்ந்த கும்பகருணன் அண்ணன் இராவணனிடம் அறம் எடுத்துரைக்கின்றான்.

"தையலை விட்டு அவன் சரணம் தாழ்ந்து நின்
ஐயறு தம்பியோடு அளவளாவுதல்
உய்திறம் அன்று எனின் உளது வேறும் ஓர்
செய்திறம், அன்னது தெரியக் கேட்டியால் (கம்ப 7359)

கும்பகருணன் கூறிய நல்லுரை ஏற்காத இராவணன்,

"உறுவது தெரிய அன்று உன்னைக் கூயது
சிறு தொழில் மனிதரைப் கோறி சென்று எனக்கு
அறிவுடை அமைச்சன் நீ அல்லை, அஞ்சினை
வெறுவிது உன்வீரம் என்று இவை விளம்பினான் (கம்ப 7361)

என்றும் நீ போருக்குரியவன் அல்லன் போய் உண்டு உறங்குவாய் என்றும் சினந்தான். அது கேட்டு கும்பகருணன் இனி பேசுவதில் பயனில்லை என உணர்ந்து போருக்குப் புறப்பட்டான்.

போர்க்களத்தில் வீடணன் அவனைவந்து வணங்கி இராமன் பக்கல் வருக என அழைக்கின்றான். அறம் உணர்ந்தான் ஆயினும் தான் இராவணனுக்காகப் போரிட்டு மாள்வதே உயர்ந்த அறம் என்று, "ஒருத்தரின் முன்னம் சாதல் உண்டவற்கு உரியதம்மா" என்று தன் நன்றி உணர்வைக் கூறுகின்றான் மேலும் அறம் விடுத்தானாயினும் அண்ணன் இராவணனுக்காகத் தான்,

"புலையுறு மரணம் எய்தல் எனக்கு இது புகழதேயால்"

என்றும்,

"உம்பரும் பிறகும் போற்ற ஒருவன் மூவுலகை ஆண்டு
தம்பியை இன்றி மாண்டு கிடப்பனோ தமையன் மண் மேல்"

என்றும், பலபட மறுத்துப் போருக்கு எழுகின்றான் வீரம் விளைந்த போரில் கால்களையும், கைகளையும், மூக்கினையும் இழந்தவனாயும் இருந்த நிலையிலும் இராமனிடம் வரம் வேண்டுகிறான்.

"நீதியால் வந்தது ஒரு நெடுந் தரும நெறி அல்லால்
சாதியால் வந்த சிறு நெறி அறியான் என் தம்பி
ஆதியாய் உனை அடைந்தான் அரசர் உருக்கொண்டு அமைந்த
வேதியா இன்னம் உனக்கு அடைக்கலம் யான் வேண்டினேன்"

"தம்பி எனநினைத்து இரங்கித் தவிரான் அத்தகவு இல்லான்
நம்பி இவன்தனைக் காணின் கொல்லும் இறை நல்கானால்

உம்பியைத்தான், உன்னைத்தான், அனுமனைத்தான் ஒரு பொழுதும்
எம்பி பிரியானாக அருளுதி யான் வேண்டினேன்"

(கம்ப 7625, 7627)

அறம் உணர்ந்த வீடணன் அண்ணன் இராவணனின் மறச்செயலை மாற்ற முனைந்தான் ஏற்காத இராவணனோ அவனை வெளியேற்றினான். அவன் இராமனானகிய உன்னிடம் அடைக்கலம் புகுந்தான். ஆனால் சினமுற்ற இராவணன் போர்க்களம் புகும்போது வீடணனைத் தம்பி என்றும் நினையாமல் கொன்றுவிடுவான் எனவேவீடணனை எப்போதும் இராம, இலக்குவர் அனுமனை விட்டுப் பிரியாது வைத்துக் காக்க வேண்டும் என அருள வேண்டுகின்றான். அண்ணனின் தீக்குணமும் தம்பி வீடணன் நற்குணமும் உணர்ந்து நல்லவன் வாழ வரம் கோரும் வாழ்வியலைக் காண முடிகின்றது.

**முடிவுரை**

கம்பனின் பாத்திரப் படைப்புகளில் வாலியும், கும்பகருணனும் தம்பியுடன் போரிட வேண்டிய நிலையிலும் கூட இறுதியில் வாழ்வியல் நிலை உணர்ந்து அவர்களைக் காக்கவே வரம் வேண்டும் நிலை-யினைக் காண்கின்றோம்.

கம்பர் ஒவ்வோர் பாத்திரப் படைப்பிலும் ஏதோ ஓர் வாழ்வியல் நிலையினைக் காட்டுவார். அவ்வகையில் இவ்விரு பாத்திரப்படைப்புகளிலும் இறுதியில் வாழ்வியல் நிலையினைக் காட்டுவது சிறப்புடையதாகிறது.

# கம்பனில் புலப்படும் தர்மமும், வழிபாட்டுமரபுகளும்

திருமிகு. இரா.காவேரி முரளிதரன்
தமிழ் விரிவுரையாளர், தமிழ்நாடு அரசு இசைக்கல்லூரி,
மதுரை.

வால்மீகி காவிய நாயகனுடைய கடவுள் தன்மையை மறைத்து. மனிதத்தன்மையை வெளிப்படக்காட்டி, ஒரு உத்தமமான மனிதனுக்கு இருக்க வேண்டிய குணங்களை எடுத்துக்காட்டுகிறார். ஆனால் கம்பர், வால்மீகி சொல்லாத அவதார இரகசியங்களையும், தர்ம விசேடங்களையும், மறையுணர்ந்த முனிவர்களுடன் ஆராய்ந்து அறிந்து கொண்டு, தர்மங்களையும், வழிபாட்டு மரபுமுறைகளைப் பற்றியும், ஆங்காங்கே புலப்படுத்துவதை இக்கட்டுரையின் மூலம் காண்போம்.

## கம்பர் கடைப்பிடித்த தர்மம்

தர்மங்கள் பல வகைப்படும். அவையாவும் ப்ரவிர்த்தி தர்மம், நிவிர்த்தி தர்மம் என்னும் இருவகையுள் அடங்கும் என்கிறார் கம்பர். ப்ரவிர்த்தி தர்மம் என்பது சுவர்க்கபோகம் முதலிய நிலையில்லாத பயனைத் தரக்கூடியது. நிவிர்த்தி தர்மம் என்பது மோட்சபலம் தரக்கூடியது. இவற்றில் நிவிர்த்தி தர்மமே சிறந்தது. அதுவும் இருவகைப்படும். அவை, ஸ்வார்த்த தர்மம், பரார்த்த தர்மம் இதில் இறைவனைப் பற்றுக்கோடாகக்கொண்டு தொழும் பரார்த்த தர்மமே சிறந்ததாகும். இத்தகைய தர்மபேதங்களை கம்பர் ஆங்காங்கே புலப்படுத்திச் சொல்கிறார். தர்மங்களுள் தன் பொருட்டாக செய்யப்படும் விசேட தர்மச்செயல்களை காட்டுவதற்குச் சிறந்த பாத்திரமாக பரத, இலட்சுமணனை படைத்துள்ளார். அவற்றுள் பரதன் கடைப்பிடித்த தர்மங்கள் பற்றிக் காண்போம்.

## பரதனின் இராமநெறி

பரதன் மேற்கொண்டு ஒழுகிய இராமநெறியே உண்மையான நெறி என்றும், அது எளிதில் அடையக்கூடியதாகவும், பிறவிப்பிணியை தீர்க்கும் மருந்தாய் இருப்பதாகவும், உலகத்தார் இதை உணரும் வண்ணம், தானே அவ்வாறு வாழ்ந்து காட்டுகிறான் என பரதனின் பெருமையை விசுவாமித்திரர் வாயிலாகவே உணர்த்துகிறார் கம்பர். தர்மங்களை நீதி, பெருநீதி, தள்ளரிய பெருநீதி என மூன்றாகப்பிரித்து அவற்றுள் பரதன் கடைப்பிடித்தது 'தள்ளரிய பெருநீதித் தனியாறு புக மண்டும்' என்று விசுவாமித்திரர் கூறி. பாராட்டுவதற்கு காரணம். பரதன் இயல்பிலேயே இறைவனின் பெருமையை தாமும் உணர்ந்து உலகுக்கு, உணர்த்த முற்படுவதலாகும் என்கிறார் கம்பர்.

### பரதனின் இறைநெறி ஒழுக்கம்

பரதனை கேகயம் செல்லுமாறு கூறிய தசரதன் 'அவன் வைதீக ஆசாரமும், கடவுள் வழிபாடுமே பயின்றவன்' என்பதை தசரதன் கூற்றாகவே கம்பர் வெளிப்படுத்துகிறார். மேலும் இராமனிலும் சிறந்தவன் என்பதை இராமன் மற்றும் கோசலை வாயிலாக புலப்படுத்துகிறார். இராமனிடம் கேகயம் செல்ல அனுமதி பெற செல்லும் போது 'ஒரு நாளும் உடலை விட்டு பிரியாத உயிர் பிரிந்து நிற்க அவ்வுயிரை விட்டுப் பிரியாத உடல் பிரிந்தது' என்று கூறுகிறார். உடல் தன்வயமின்றி, உயிரின் வயமாய் இயங்குவது போல, பரதனும் தன்வயமின்றி இராமபிரான் வயமாய், இறைவனும் அடியனுமாய் ஒழுகி இறைநெறியொழுக்கத்தை கடைப்பிடிக்கிறான் என்கிறார் கம்பர்.

### பரதனின் தரும நிலை

1. 'சேணுயிர் தருமத்தின் தேவை செம்மையின்
   ஆணியை, அன்னது நினைக்கல் ஆகுமோ?'-

(அயோத்திய காண்டம் பா.எண்: 2419)

2. 'நியாயம் அத்தனைக்கும் ஓர் நிலயம் ஆயினான்
   தயாமுதல் அறத்தினைத் தழீஇயது என்னவே'

(அயோத்திய காண்டம் பா.எண்: 2429)

ஆகிய இரு பாடல்களிலும் இராமனின் கூற்றாகவே கம்பர் பரதனது தருமநிலையை சுட்டிக் காட்டுகின்றார்.

### கம்பர் காட்டும் வழிபாட்டுமரபுமுறைகள்

கம்பர் தெய்வ வணக்கத்தை செய்யும் பாயிரம் பாடியுள்ளார். இதில் வேதங்கள் ஓதத்தொடங்கும் போதும், முடிக்கும் போதும், 'ஹரிஓம்' என்று கூறி ஓத வேண்டுமென்கிறார். மேலும்,

'உன்னனத் தாதை என்று
உனக்குவ முத்தி வித்து ஒழிந்த' (யுத்த காண்டம் பா.எண் 3995)

என்கிறார். 'இறைவனை அறிவதற்கு ஐம்பெரிகள் தடையென்றும், அதை வென்று பிறவிபிணி தீர இறைவன் திருவடிகளே அடைக்கலமாகும்' என்று பிரம்மன் கூற்றாகக் கம்பர், சரணாகதியடைதலை பற்றி விளக்குகின்றார். மேலும் பல வழிபாட்டு மரபுமுறைகளையும் கூறியுள்ளார் அவற்றில் சில,

### 1. வேள்வி வழிபாடு

"பூதல முழுவதும் தாங்கும்
புதல்வரை அளிக்கும் வேள்வி' (பாலகாண்டம் பா.எண் 209)

என 'புத்திரகாமேட்டியாகம்' செய்தால் குழந்தைப்பேறு கிட்டும் என்பதை வசிட்ட முனிவர் கூற்றாகவே கம்பர் வழிபாட்டும் மரபுமுறை வெளிப்படுத்துகிறார்.

**2. அக்னி வழிபாடு**

இறைவனை, சோதி வடிவமாகக் கூறும் வேதம். அந்த வேதநெறியில் தீயில் ஐக்கியப்படுவதையே வேள்வி விரும்புவோர் செய்வர் என்றும்,

"நின்று பூசனை செய்கின்ற நேசற்கு
குன்றுபோல் நெடுமாருதி கூடினான்" (யுத்த காண்டம் பா.எண் 4129)

இராமன் வராததால் நெருப்பு தீயில் புக முனைந்தான். பரதன் அப்போது தீயிற்குப் பூசை முடிந்து வலம் வந்து வழிபட்டான் என்று பரதன் மூலம் அக்னி வழிபாட்டை உணர்த்துகின்றார் கம்பர்.

**3. சந்தி வழிபாடு**

வேதம் கற்றவர்களுக்கு சந்தி வழிபாடு உரியது என்றாலும், சூரிய வம்சத்தில் பிறந்தவர்க்கு இது மரபுக்கடமையாம். மேலும் சந்தி வழிபாட்டில் சொல்லப்படும் காயத்திரி மந்திரத்தை கண்டுபிடித்தவர் விசுவாமித்திரர். ஆதலால் இம்மந்திரம் சொல்பவர் முதலில் இவரை நினைத்து குருவாக ஏற்றதாலும், சந்திக்கால வழிபாடு மிகவும் சிறந்த கடமையாம் என்று சந்தி வழிபாட்டை கம்பர் கூறுகிறார்.

**4. புண்ணிய தீர்த்தம் நீராடல் வழிபாடு**

"பெற்ற தாய்தந்தையோடு தேசிகற் பிழைத்துச் சூழ்ந்த
சுற்றமும் கெடுத்து ளோரும் எதிர்ந்திடின் சுரர்கள் ஆவார்"
(யுத்த காண்டம் பா.எண் 4059)

என்றும், இச்சேதுவில் வந்து முழுகினால், மிக்க பாவிகளே ஆனாலும், பாவம் நீங்கி தேவர் உலகம் செல்வர் என்றும், இந்த புண்ணிய சேதுவை கண்ணால் கண்டவர்க்கும் புண்ணியம் கிட்டும் என்று இராமன் கூற்றாக கம்பர் கூறுகிறார். மேலும் (யுத்த காண்டம் பா.எண் 4260) இராமரே புண்ணிய நீராடல் செய்த பின்பே திருமுடிசூடி அரியணை ஏறினார் என்று புண்ணியதீர்த்தம் நீராடல் வழிபாட்டை கம்பர் விளக்குகிறார்.

**5. பஜனை வழிபாடு**

அனுமன் அசோகவனம் சென்று மங்கலம் சொல்ல சென்ற போது,

"பாடினான் திருநாமங்கள் பன் முறை
கூடு சாரியின் குப்புற்றுக் கூத்து நின்று
ஆடி அங்கை இரண்டும் அலங்குறச்
சூடி நின்றனன் குன்று அன்ன தோளினான்"

(யுத்த காண்டம் பா.எண் 3909)

என்று பஜனையில் பாடுவதுபோல இராமன் பெயர்களைப் பாடிக் கொண்டும், வலப்பக்கம், இடப்பக்கமாக் குதித்துக் கொண்டும், ஒரு நிலையிலே நின்று ஆனந்தத் தாண்டவம் செய்து கொண்டும், கைகளைக் குறித்து தலையின் மேல் வைத்துக் கொண்டு சீதையின் எதிரில் அனுமன் நின்றார் என்கிறார் கம்பர். இவற்றிலிருந்து பஜனை வழிபாட்டு மரபுமுறையை நன்கு விளக்குகின்றார்.

**முடிவுரை**

தமிழ்ப் பண்பாட்டிற்கேற்ப உயரிய தர்மநெறி கருத்துக்களைத் தொகுத்து வழங்கும் நூல்களுள் கம்பஇராமாயணமும் ஒன்று. இந்நூலில் கம்பர் வலியுத்தும் நீதியும், தர்மமும், மனிதசமுதாயம் அனைத்திற்கும் பொதுவானவையாகும். இதில் பரதன் இராமநெறியை பின்பற்றி, உலகத்தாரும் உணரும் வண்ணம் தானே வாழ்ந்து காட்டுகிறான் மற்றும் இறைவனைப் பற்றுக் கோடாகக் கொண்டு தொழும் பரார்த்த தர்மமே சிறந்தது என்றும், பரதன் நந்தியம்பதியில் துறவுநிலையில் முழுநேரமும் இராமனின் திருப்பாதங்களை வழிபட்டு, துயில் கொள்ளாது, இந்திரியங்களை வென்று இருந்தான என்று இராமன் மேல்கொண்ட பக்தித்திறன் மூலம் பரதனின் இறைநெறியையும் கம்பர் உணர்த்துகிறார். மேலும் வழிபாட்டுமரபுமுறைகளில் வேள்வி வழிபாடு, அக்னி வழிபாடு, சந்தி வழிபாடு, புண்ணியதீர்த்தம் நீராடல் வழிபாடு, பஜனை வழிபாடு பற்றியும் தர்மங்கள் நிறைந்த கருத்துக்கள் யாவும் கம்பர் கூற்றுப்படி உலகு உள்ளளவும், கடல் நீருள்ளளவும், மலையுள்ளளவும், கம்ப இராமாயணமும், கம்பனின் பெருமையும் இவ்வையகத்தில் நிலைத்திருக்கும்.

# கம்பன் கண்ட தொழில்கள்

திருமிகு. க. ஆனந்தி
தமிழ்த்துறை, பேராசிரியர், பான் செக்கர்ஸ் மகளிர் கல்லூரி,
தஞ்சாவூர்.

## முன்னுரை

கம்பரின் தமிழ்ப் புலமையை வெளிப்படுத்த "கம்பராமாயணம்" அவருக்கு எத்துணை புகழ் தந்ததோ, அதே புகழ் அவருடைய தனிப்பாடல்களுக்கும் இருந்தது. அத்தகு சிறப்பு வாய்ந்த இப்பாடல்களின்மூலம் கம்பன் கண்ட தொழில்களை விளக்க முற்படுவதே இக்கட்டுரையின் நோக்கம்.

## வேளாளர்கள்

ஒருவன் உழைத்து அதனால் வருகின்ற பயனை தான் மட்டும் அனுபவிக்காமல் உலக மக்கள் அனைவரும் பயனுறும் வகையில் வாழ்பவர்கள் வேளாளர்கள். உலகில் பல தொழில்கள் இருந்தாலும் ஏரின் பின்னால் தான் இந்த உலகம் நிற்கிறது என்பதையும், உழவர்கள் இவ்வுலகத்திற்கு அச்சாணியாக விளங்குகிறார்கள் என்பதையும் காட்டுகிறது. இத்தகைய வேளாளர்களை, கம்பன் தனது பாடலில் மேகத்தை நம்பி வாழ்பவர்கள் வேளாளர்கள் என்றும், அவர்களைக் கார் ஆள்பவர்கள் என்றும் கூறுகிறார். கலப்பையைப் பிடித்து ஓட்டுபவர்களாக இருந்தாலும் போரின்போது வேந்தர்கள் எதிர்பார்ப்பதும், இவர்களையே. ஒரு நாட்டின் ஆட்சிச்சக்கரத்தை சுழலச் செய்வதும் இவர்களின் கைகளே. வினையால் வரும் துன்பத்தைப் போக்குவதும் நிலைத்து நிற்கக் கூடியதும், நீண்ட காலம் இவ்வுலகை காத்து நிற்பதும் இந்தக் காராளர்களின் கைகளே என்று உழவர்களின் உயர்ந்த வாழ்க்கை நெறியினையும், உழவின் சிறப்புப் பற்றியும் கீழ்க்கண்ட தனிப்பாடல் தெளிவுறுத்துகிறது.

> "மேழி பிடிக்குங்கை வேல்வேந்தர் நோக்குங் கை
> ஆழி தரித்தே அருளுங்கை - சூழ்வினையை
> நீக்குங்கை என்றும் நினைக்குங்கை நீடுழி
> காக்குங்கை காராளர் கை. (பக். எண். - 138, பா. எண். - 59)

இதுபோல், துணிகளைத் தூய்மை செய்யும் தொழில் குறித்தும் பாடுகிறார். கொல்லர், மயிர்வினைஞர், பற்றியும் பாடுகிறார்.

## மதில் சுவர் கட்டுதல்

ஒரு சமயம் கம்பர் இடம்விட்டு இடம் பெயர்ந்து நீண்ட தூரப்

பயணத்தில் இருந்தார். பசி வாட்டியதால் உணவின் பொருட்டு, அவர் இருந்த ஊரில் ஒரு பெண்ணின் னிட்டு மதில் சுவர் கட்டி தருபவர்களுக்கு உணவும், கூலியும் தருவதாக அறிந்து அவ்வேலையை செய்ய ஒப்புக்கொண்டார். மண்வெட்டி கொண்டு மண்ணை நன்கு கிளவி நீரை ஊற்றி மிதிக்கலானார். மண் நன்கு பக்குவப்பட்டவுடன் சுவரை எழுப்பினார். ஒரு நாழிகைக்குள் வேலையை முடித்தார். சற்று நேரத்திற்கெல்லாம் மண் சுவர் சரிந்து போனது. மீண்டும் முயற்சி செய்து கடவுளை மனதில் வணங்கி சுவரை எழுப்பினார் என்று தம் பாடலில் வெளிப்படுத்தியுள்ளார்.

"மற்கொண்ட திண்புயந்தான் மாநகர்விட்டு இங்கு வந்தேன்
சொற்கொண்ட பாவின் சுவையவிவார் ஈங்கிலையே
விற்கொண்ட வாணுதலாள் வேலி தருங் கூலி
நெற்கொண்டு போமளவும் நில்லாய் நெடுஞ்சுவரே!"

(ப. எண். 133, பா. எண். 57)

மேற்கண்ட பாடலில் கம்பரே தம்முடைய உழைப்பினைப் பாடலாக்கியுள்ளார். இங்ஙனம் எத்தொழிலாயினும் அதனை முழு ஈடுபாட்டுடன் உணர்த்தியுள்ளார்.

# கம்பனில் துலங்கிடும் இயற்கை எழில்

திருமிகு. ம.சுஜாதா
சென்னை.

**முன்னுரை**

கைபுனைந்து இயற்றாக் கவின்பெறு வனப்பே இயற்கையாகும். இயற்கை இயல்பானது. அழகாய் இருப்பது. நெஞ்சை அள்ளும் தகையது. கம்பன் காவியத்தில் காப்பியப்பொருளை விளக்கும் முறையில் இயற்கை இடம் பெற்றுள்ளது. இயற்கையின் சாதாரண இயக்கங்களைக்கூட மனித வாழ்க்கையோடு பிரிக்க இயலாதவாறு ஒன்றுபடுத்திக் கம்பன் காட்டியுள்ளார். காவியப் போக்கிற்கு உயிரூட்டும் பாங்கிலும் கதையின் வளர்ச்சிக்கு உறுதுணையாகவும், காவிய மாந்தரின் பண்புகளைப் புலனாக்கவும், கம்பர் காவியத்தில் இயற்கைக் காட்சிகளைக் கையாண்டுள்ளார் கம்பர். தம் காப்பியக் களத்துக்கு நிகழ்விற்கு கற்பனை, வருணனை, அணிகளெனும் உத்திகள் வாயிலாக இயற்கையினைச் சித்தரித்துள்ள திறம் சிறப்புத் தன்மை வாய்ந்தது.

**கம்பன்**

மனிதனில் உணர்ச்சிகளை இயற்கை பிரதிபலப்பதாகவே கம்பன் சித்திரித்துள்ளார். இயற்கையை அளவற்ற திறனுடைய ஓர் உத்தியாகப் பயன்படுத்தியுள்ளார். முக்கிய பாத்திரங்களில் உணர்ச்சி இயற்கையைப் பயன்படுத்துமிடங்களில் மென்மையும் அதன் வலியும் இரண்டுமே துணைபுரிகின்றன.

கார்காலத்து சிவந்த நிறமுள்ள இந்திரகோப்பூச்சிகள் எண்ணிலாது கிடந்தன என்று கூறுமிடத்து இயற்கையின் மென்மையினைக் காட்டியுள்ளார். உலகை எல்லாம் ஒடுங்கச் செய்யும் இடியும் மின்னலும் இயற்கையின் வலிவுக்கு ஓர் உதாரணமாக எடுத்துரைப்பார் கம்பன். வசுப மாணிக்கம் அவர்கள் கம்பன் காப்பியப்பொருளை விளக்கும் முறையில் இயற்கையைப் பின்புல வருணனையாக கையாளுகிறார் என்கிறார்.

**காப்பியத்தில் இயற்கை**

இயற்கைப் பொருட்களைக் காப்பியக் கதை கொண்டே கம்பரால் பாடப்பெறுகின்றன. காப்பிய நிகழ்ச்சியில் இயற்கைப் பொருட்கள் ஈடுபடுவதாகப் பாடுவது கம்பருடைய கொள்கையாகத்தான் தோன்றுகிறது.

மனிதனால் தோற்றுவிக்கப்படாதது இயற்கையாகும். மரம், செடி, கொடிகளும், ஊர்வனவும், பறப்பனவும் மற்றும் விலங்குகளும் இயற்கையின் படைப்பே. கம்பர் தனது காவியத்தில் ஏறக்குறைய 46 பறவைகள், 32 விலங்குகள், 14 ஊர்வன, 24 மீன் பூச்சிகள் முதலிய பிறவகை உயிர்களையும் பாடியுள்ளார். கம்பனில் விலங்குகளைப் பற்றிய செய்திகளை விட பறவைகளைப் பற்றிய செய்திகளே நிறைய உள்ளன. பறவைகளிலும் நீர்ப்பறவைகளைப் பற்றிய பாடல்களே மிகுதியாக உள்ளன. சங்க நூல்களில் உள்ளதை உள்ளவாறே கூறும் பாங்கைக் கம்பனில் பார்க்கலாம்.

### இயற்கையில் இறைவன்

எங்கும் எதிலும் இறைவனைக்காணும் பக்திக்கவிஞனின் மனப் போக்கில் இது அமைகிறது. இயற்கையிலும் அவ்விறைவனையே காணும் இன்பநிலையில் கவிஞன் காணப்படுகின்றான். இறை வண்ணமும் இயற்கை நிறமும் ஒப்புமைகாட்டல் மட்டுமின்றிப் பயிலும் தொழில்கூட இயற்கையில் இறையை வெளிப்படுத்தல் கண்கூடு.

கரியபொருட்களில் எல்லாம் அவனது மேனியைக் காண்கின்றது. திருமங்கை தன்வீறு அணிந்த மேனிநீர் நிறைந்த மழைமேகம் கம்பனுக்குத் திருமாலாகக் காட்சியளிக்கிறது. கருமேகமும் அதில் பறக்கும் வெண்பறவைத்தொகுதியும் மாலின் கரிய திருமேனியாகவும், அதில் பொருந்திய வெண்முத்தாரமாகவும் மார்பினைத் தழுவிய வெண்பட்டாடையாகவும் திகழுகின்றது.

இலங்கையின் அழகைப் பரதன் இளவலுக்குக் காட்டும்போது மரகதமணி பதித்த முத்துப்பந்தலை மாயோன் துயிலும் பாற்கடலாக இணைத்துத் தீட்டுகின்றார். கம்பன்,

> "கோல் நிறக்குனிவில் செங்கைக்குமரனே குளிர்வெண்திங்கள்
> கால்நிறக் கதிரின் கற்றைதெற்றிய ஆயகாட்சி
> வால்நிறத்தனுளப் பந்தர் மரகதம் நடுவண் வைத்த
> பால்நிறப் பரவை வைகும் பரமனை நிகர்ப்பப் பாராய்" (6852)

கொக்குகள் கார்மேகத்தடியில் பறந்து செல்வது திருமால் மார்பில் முத்துமாலை அணிந்தது போன்று இருப்பதாகக் கம்பர் கூறியுள்ளார்.

### இயற்கையில் வருணனை

இயற்கை வருணனை கற்பனைக்கு இடம் அளிக்கின்றது. வேறுபட்டுக் கிடக்கும் இயற்கைப் பொருட்களைச் சேர்த்து சில

கூறுகளைத் தேர்ந்து இணைத்து இயைபுக் கற்பனைக்காட்சியை அமைகின்றார்.

"தண்டலை மயில்களாட தாமரை விளக்கம் தாங்க"

என்ற பாடலில், ஒரு நாடகக் காட்சியை இயற்கையில் கற்பிப்பதை, இங்குக் காண்கின்றோம். அவையில் அரசன் ஆடல்கண்டு வீற்றிருப்பதனைப் பன்முறைக் கண்ட கவிஞர் அதனை மருதக் காட்சியில் இயைபுபடுத்தி இக்கற்பனைக் காட்சியை அமைத்துள்ளார்.

**அரசியலிலும் இயற்கை**

அரசக்காப்பியமாக இது அமைந்ததால் அப்பொருளுக்கேற்ற உவமைகளும் பெருகி அமைகின்றன. சரயுநதியின் வெள்ளப் பெருக்குக்கு அரசனின் சேனையும், யானைப்புடையும் உவமையாகின்றன. போருக்குப் போகும் சேனை போன்று நீர் பெருகுகின்றது.

"..................................... அலைக்கும் நீரால்
செயிர்தரும் கொற்றமன்னர் சேனையை மானும் அன்றே"

சரயுநதியின் நீர்ப்பெருக்கு கடலலைகளுடன் கலக்கும்காட்சி கவிஞனுக்கு இருபடைகளின் கைகலப்பாகத் தோன்றுகிறது. மேகமுழக்கம் அதனிடை தோன்றும் மின்னல் இடியின் தாக்குதலும் கவிஞனுக்குப் போர்க்காட்சியை நினைவூட்டுகிறது.

**சமுதாயக் காட்சியில் இயற்கை**

சமுதாயத்தின் பிரதிநிதியாக நின்று தான்வாழும் சமுதாயச் சூழலைப் பிரதிபலிக்கும் வண்ணம் கவிஞன் காப்பியம் இயற்றலால் தம் படைப்புகளில் சமுதாயச் செய்திகள் அமைய வாய்ப்பு மிகுதி ஆற்றுநீர்ப் படலத்தில் மழைநீர் வெள்ளமாகப் பரந்ததைக் காட்டும்போது பிறபொருட்களை வாரி வரும் நன்மை பற்றி வணிகரை உவமையாக்குகின்றார்.

"மணியும் பொன்னும் மயிர்தழைப் பீலியும்
அணியும் ஆனை வெண்கோடு அகிலும்தாள்
இணைகால் ஆரமும் காளை கொண்டு ஏகலாள்
வணிகமாக்களை ஒத்தது அவ்வரியே" (18)

**இயற்கையைப் பெண்ணாக உருவகித்தல்**

இயற்கையைப் பெண்ணாக உருவகித்துப் பாடுதல் தமிழ் மரபு. கங்கையைப் பெண்ணாக உருவகித்து வருணிக்கும் பாங்கே

மிகுதி. இராம இலக்குவர், விசுவாமித்திரருடன் சோனையாற்றினை அடைந்ததை வருணிக்கும் கம்பர் மணல் மேடாகிய தனங்களையும் வஞ்சிக்கொடியாகிய இடையையும், கருமலையாகிய கூந்தலையும் மலையைச் சுற்றிச் செல்லும் நீர்க்கால்கள், சிலம்பணிந்த பாதங்களையும் உடைய சோணைப்பெண்ணாக உருவகித்துப் பாடியுள்ளார். ஆற்றைப் பெண்ணாகக் கண்டதோ டமையாது உயிர்கொடுத்துப் பேச வைத்து கம்பரது ஆற்றுவருணனை தனிச்சிறப்பாகும்.

"அலம்பும் மாமணி ஆரத்தோடு அகில்களை புனலி
சிலம்பு சூழும்கால் சோணை ஆம் தெளிவடையச் சேர்ந்தார்"

இயற்கைப் பொருட்களை மனிதத் தன்மையுடன் உருவாக்கலும், இவ்வுருவாக்கப்படுதலின் மற்றொரு நிலையாகக் கருதத்தக்கது வளமுடைய நிலத்தைப் பெண்ணாகக் காட்டுவது மிகுதி.

"நீருடை ஆடையாளும் நெளிந்தனள் முதுகை என்றால்
பார்பொறை நீக்கினாள் என்று உரைத்தது எப்பரிசுமன்னோ"

பூமியைப் பெண்ணாகப் புனைந்த கவியியல்பு நதியையும் பெண்ணாக அமைப்பதிலும் நலப்படுகின்றது.

**இயற்கையின் வாயிலாக மாந்தரின் பண்பு**

கம்பன் பாத்திரங்களின் பண்பினைக் கூட இயற்கை வாயிலாக வெளிப்படுத்துவதனையேக் காண முடிகிறது. மூங்கில்கள் உரசுவதால் எழும் மூங்கிற்காடு முழுவதனையே அழிக்கும் சூர்ப்பனகையினைக் காட்டுகின்றார்.

"வாள்தொடர் மூங்கில் தந்த வயங்குவெந்தீ இது என்ன
தாள்தொடர் குலத்தை எல்லாம் தொலைக்குமா சமைத்து நின்றாள்"

எந்தவித எதிர்ப்பார்ப்புமின்றி குறையாது வழங்கும் மழை மேகத்தின் நீர்வளத்தில் கவிஞன் கொடைப்பண்பைக் காட்டுகின்றான்.

"புள்ளிமால்வரை பொன் எனல்நோக்கி வான்"

தசரதன் ஆட்சியின் சிறப்பை, சூரியன் ஒவ்வோர் உயிரையும் காப்பாற்றுவதனைக் காப்பதோடு, வறியவன், ஒருவன்தான், சிறுவயலைக் காப்பது போலப் பாதுகாத்து வருவதாக இயற்கை வாயிலாக உணர்த்துகிறார்.

"வென்றி அம்திகிரி வெம்பருதியாம் என
நின்று நின்று உயிர்தொறும் நெடிது காக்குமே" (178)

**பின் நிகழ்வில் இயற்கை**

கம்பன் காண்கின்ற காட்சியே வேறு. மழையிலும் ஆற்று வெள்ளத்திலும் காப்பிய கதையைக் காண்கிறார் கம்பர். சரயுநதி கற்களையும், மரங்களையும், உருட்டிக்கொண்டு ஓடுகின்றது. இந்த காட்சி பின்னாளில் உருவாகப்போகும் சேதுவைக் கம்பருக்கு நினைவுறுத்துகின்றது.

"மலைஎடுத்து மரங்கள் பறித்து மாடு
இவை முதல்பொருள் யாவையும் ஏந்தவான்
அலைகடல் தலைஅன்று அணை வேண்டிய
நிலையுடைக்க ஒத்தது" (20)

**முடிவுரை**

கம்பன் தம்காப்பியத்தில் இயற்கையைப் பின்புலமாக, உத்தியாக, வரப்போவதனை அறிவுறுத்தும் கருவியாக மாந்தரின் உணர்ச்சியின் வெளிப்பாடாகப் பயன்படுத்தியுள்ளார். அதுமட்டுமல்லாது இறை தத்துவத்தையும் இயற்கையின் வாயிலாக கம்பன் வெளிப்படுத்திய விதம் சிறப்பிற்குரியது. சமுதாய நிகழ்விற்கு இயற்கையை எவ்விதம் பயன்படுத்தலாம் என்பது குறித்து கம்பன் தன் காலத்தவர்க்கு மட்டுமின்றி பிற்காலத்தவர்க்கும் தம் காப்பியத்தின் வாயிலாக உணர்த்தியுள்ளார்.

# கம்பனில் பரிமளிக்கும் ஐந்திணை வளங்கள்

திருமிகு. ப. பாரதி
தமிழ்த்துறை விரிவுரையாளர், ஸ்ரீகந்தன் கலை அறிவியல் கல்லூரி,
ஈரோடு.

பெருங்காப்பிய இலக்கணத்தைப் பற்றி தண்டியாசிரியர் 'மலை, கடல், நாடு, வளநகர், பருவம், இருசுடர் தோற்றம்' என்றிவைகளை புனைந்துரைத்தல் வேண்டும் என்பார். கம்ப காவியத்தில் இவை பற்றிய வருணனைகள் நிறைந்து காணப்படுகின்றன. அவற்றுள் ஐந்திணை வருணனைகளை அழகுறக் காட்டுவதே இக்கட்டுரையின் நோக்கமாகும்.

ஐந்திணைகளையும் கம்பர் தம் காப்பியத்தில் அழகுறக் காட்டினாலும் அவர் சோழநாட்டிலேயே பெரும்பாலும் வாழ்ந்ததால் மருதத்தின் அழகை அவர் காட்டும் விதத்தில் காப்பியம் படிக்கும் அனைவருமே மயங்குவர்.

**மருதத்தின் சிறப்பு**

"தண்டலை மயில்கள் ஆடத் தாமரை விளக்கம் தாங்க"

(பால காண்டம், பாடல் எண். 35)

என்ற பாடலில் 'கோசல நாட்டில் மயில்கள் ஆட, தாமரை விளக்குகளாய் விளங்க, மேகங்கள் மத்தளமாய் ஒலிக்க, நீரலைகளே தீரைச் சீலைகளாய் விளங்க, வண்டுகள் மகரயாழைப் போல் ஒலிக்க குவளை மலர்கள் இக்காட்சிகளைக் காண மருதம் என்னும் அரசன் கொலுவீற்றிருக்கிறான்" எனும்போது கோசலத்தின் வளமே அங்கு வறுமை இல்லாமல் செய்ததோடு வள்ளல்தன்மையும் இல்லாமல் செய்துவிட்டது என்பதை ஒப்புக் கொள்ள வைக்கிறது.

"படை உழ எழுந்த பொன்னும் பணிலங்கள் உயிர்த்தமுத்தும்" (பால காண்டம், பாடல் எண். 39) என்ற பாடல், கோசல நாட்டு வயல்களிலே 'கலப்பைகள் உழுவதால் மேலெழுந்த தங்கம், சங்குகள் ஈன்ற முத்துகள், நிலங்களில் ஒழிவிடும் மணிகள், நெல்லின் பசுங்கதிர்கள், மீன்கள், கரும்புகள் ஆகியவை கண்மலர்ந்து ஒளிவீசின' என்னும்போது நிலவளத்தின் மேன்மை விளங்குகிறது.

"மால் உண்ட நளினப் பள்ளி வளர்த்திய மழலைப் பிள்ளை" (பால காண்டம், பாடல் எண். 45) என, வயல்களில் அன்னங்கள் தம்

குஞ்சுகளைத் தாமரை மலர்ப்படுகையில் கிடத்த, எருமைகள் கன்றுக்கு இரங்கிச் சொரிந்த பாலை அவ்வண்ணக் குஞ்சுகள் பருக, அவை உறங்குவதற்குத் தவளைகள் தாலாட்ட, கோசலத்தின் விலங்குகளும், பறவைகளும் கூட அன்பினால் இணைந்து வாழும் அருமையை இப்பாடலில் காணமுடிகிறது.

"முட்டுஇல் அட்டில் முழங்குற வாக்கிய
நெட்டுலைக் கழுநீர் நெடு நீத்தம்தான்" (பால காண்டம், பாடல் எண். 58)

எனும்படி கோசலத்தின் வயல்களுக்கு 'சரயுவின் நீர் மட்டுமின்றி, சமையற் கூடங்களிலிருந்து அரிசி கழுவிய நீரும், வயல்களில் திரியும் எருமைகள், கன்றுகளை நினைத்து கசியவிட்ட பாலும் கூடப் பாய்ந்தன' என கம்பன் வருணிக்கும்போது கோசலத்தில் பாலூற்றி உழவு செய்தனர் என்பது நமக்குத் தெரிகின்றது.

கோசல நாட்டு உழவர்கள் விருந்தினர்களுக்காகக் கொண்டு செல்லும் நெல்லின் பாரம் ஏற்றிய வண்டிகள் சுமையால் நிலத்தையே நெளியவைத்தது என்பதை

"நெறிகளும் புதைய பண்டி நிறைந்து மண் நெளிய ஊர்வார்"
(பால காண்டம், பாடல் எண். 52)

என்ற வரிகள் விளக்குகின்றன. விருந்தோம்புதலே வேளாண்மையின் குறிக்கோள் என்பதனை விளக்கும் இப்பாடல் கோசலத்தின் வயல்வளத்தை மட்டுமன்றி வேளாளரின் வேளாண்மையையும் காட்டுகிறது.

சீதையைத் தேடிச்செல்லும் வானரவீரர்கள் கடந்த வழியினைச் சொல்வதன் மூலமாக தொண்டைநாடு, சோழநாடு ஆகியவற்றின் வயல்வளத்தையும் கம்பர் விவரிக்கிறார்.

"சூலடிப் பலவின் சுளை தூங்கு தேன்
கோலடிப்ப வெரீஇ குல மள்ளர்" (கிட்கிந்தா காண்டம், பாடல் எண். 924)

என்ற பாடல் தொண்டைநாட்டு வயலைச் சுட்டுகிறது. வேர்ப்பலாவின் சுளையிலிருந்து பெருகும் தேன் வயலில் பாய, எருதுகளைக் கோலடித்து ஓட்டும் உழவரின் அடிக்கு அஞ்சிய அன்னங்கள் நெற்பயிரின் முளைகளைக் காலால் மிதித்துத் துவைத்து ஓடுகின்றன என்று கூறும் இப்பாடல் பாலூற்றி உழவு செய்யும் கோசல நாட்டிற்கு ஈடாகத் தேன்பாய நெல் விளையும் தொண்டை நாட்டைக் காட்டுகிறது.

இவ்வாறு நிலத்திற்கு அணிசெய்யும் நெல்லும், கரும்பும், வாழையும், கமுகும் நிறைந்த மருத நிலச் சித்தரங்கள் கம்பர் காவியத்தில் மிகுந்துள்ளன.

**பாலையின் கொடுமை**

மருதத்தின் இனிய காட்சிகளைக் காட்டும் கம்பர் பாலையின் கொடிய காட்சிகளையும் அழகுறக் காட்டுகிறார். அச்சத்தை விளைவிக்கும் அப்பாலை நிலக்காட்சிகள் வளம் திரிந்த குறிஞ்சியும் முல்லையுமே எனத் தெரிந்து மழை பெய்தால் நிலைமாறும் என நாம் எண்ணினாலும், பாலையின் வரண்ட நிலை 'மாரியல்லது காரியமில்லை' என்னும் பழமொழியின் பெருமையை உணர்த்துகிறது. கம்பரின் காப்பியத்தில் தாடகை வதை படலத்தில் அவளது கொடுஞ்செயலால் வளம் குன்றிய நிலமாகப் பாலை காட்டப்பெறுகிறது.

"களிபடு கங்கையந் தொங்கல் மோலியான்
விழிபட வெந்ததோ" (பால காண்டம், பாடல் எண். 359)

என்று இராமன் கேட்பதாக ஒரு பாடல். சிவனின் நெற்றிக்கண்ணால் வெந்து சாம்பலான இடம் போன்று இருப்பதாகக் குறிப்பிடப்படும் அப்பாலை நிலத்தை, அக்கினி தேவனும் அவ்விடத்தை நினைத்தால் நெஞ்சும், பார்த்தால் கண்ணும் வெந்து துன்புறுவான் என்றும், அதன் வெப்பத்தைச் சொன்னால் நாக்கு வெந்து போகும். அங்கு பொழுது புலர்ந்தால் சூரியனும் வெந்து போவான் என்றும் கூறும்போது அதன் வெப்பம் நன்கு புலனாகிறது.

கொடிய அந்தப் பாலை நிலத்திலுள்ள பாம்பு பசியினால் கிடைத்ததை விழுங்க வாயைப் பெரிதாகத் திறந்ததாம். சூரியனின் சுட்டெரிக்கும் கதிர்களால் வருந்தும் யானை நிழல்தேடி அப்பாம்பின் வாய்க்குள் புகுந்ததாம். கலிங்கத்துப் பரணியில்,

"செந்நாயின் வாயினீர் தன்னை நீரெனா
நவ்வி நாவினால் நக்கி விக்கும்" (கலி.பரணி,83)

என்ற காட்சிக்கு நிகரானதாக இருக்கின்றது.

**குறிஞ்சியின் அழகு**

குறிஞ்சிநில அழகைப் பாடும்போது கம்பர் கபிலராகவே தோன்றுகிறார். மலையில் உள்ள மூங்கில்கள் காற்றினால் அசைந்து தேன் கூடுகள் மீது மோதி அவற்றை உடைத்ததாம். அதனால் பாம்பு தொங்குவது போன்று தேன் பாய்ந்து ஒழுகி வழிந்ததாம். இதனை,

"காம்பு கால் பொர கண் அகல் மால் வரை
பாம்பு நான்றெனப் பாய் பசுந் தேறலே"

(பால காண்டம், பாடல் எண். 67)

என்று பாடுகிறார் கம்பர். முழுநிலவு மலையைக் கடக்க இயலாமல் அங்கேயே தங்கிவிட்டதாம். எனவே அது மலையின் இடையே பதிக்கப்பெற்ற கண்ணாடியைப் போல இருக்க, அதன் ஒருபுறம் குறமகளிரும் மறுபுறம் தேவமகளிரும் தங்களை அழகு செய்து அந்த அலங்காரத்தைப் பார்த்துக் கொண்டனாராம். கற்பனையின் உச்சமாக விளங்குகின்ற வரிகளாக,

"ஒப்புறத் துளங்குகின்ற உடுமதி ஆடியின் கண்
இப்புறத்தேயும் காண்பர் குறத்தியர் இயைந்தகோலம்
அப்புறத்தேயும் காண்பர் அரம்பையர்" (பால காண்டம், 796)

என்ற வரிகள் விளக்குகின்றன.

**முல்லையின் வளம்**

முல்லை நில ஆய்ச்சியர் தயிர் கடையும் காட்சியைக் கம்பர்,

"தோயும் வெண்தயிர் மத்து ஒலி துள்ளல் போய்
மாய வெள; வளை வாய்விட்டு அரற்றவும்" (பால காண்டம், 60)

என்பார். அதாவது, இடைப்பெண்கள் கெட்டித்தயிரைக் கடையும் மத்தின் ஓசை னிகுந்து ஒலிக்க, இடைச்சியர் அணிந்த சங்கு வளையல்கள் வாய்விட்டு கதற, மிகவும் நுட்பமான இடைகள் முன்னே சென்று வளைய தம் அழகிய கைகளால் மிக வருந்தித் தயிர் கடைவதாக விளக்கியுள்ளார்.

"பொழிந்த மாநிலம் புல்தர குமட்டிய புனிற்றா
எழுந்த ஆம்பிகள் இடறின செறிதயிர் ஏய்ந்த"

(கிட்கிந்தா காண்டம், பாடல் எண். 486)

என்ற பாடலில் 'புற்களை நிறைய மேய்ந்த பசுக்கள், மழை பெய்ததால் தோன்றிய காளான்களைக் காலால் இடறித்தள்ளின. அவை கட்டித்தயிர் போலத் தோன்றின. பிடவச்செடியின் பூக்கள், இடைக்குலப் பெண்கள் குடங்களில் கறந்த பாலிலிருந்து மேலே வழியும் நுரையைப் போல இருந்தன. அகில், சந்தன மரங்களில் உராய்ந்த மான்கள் தாங்களும் அதே மணத்தைப் பெற்று விளங்கின' என முல்லை நிலத்தின் அழகை பலவாறு வருணிக்கும் கம்பர், கார்காலத்தில்தான் முல்லையின் முழு அழகும் விளங்கித் தோன்றும் என்பதை உணர்த்துகிறார்.

## நெய்தலின் பெருமை

பாற்கடலில் துயிலும் பரந்தாமனின் இராமகாதையைப் பாடவந்த கம்பர் கோசல நாட்டைச் சூழ்ந்த கடலைத் தேன் கடலாகக் காட்டுகிறார்.

"மாலைவாய் உகுத்த தேனும் வரம்பு இகந்து ஓடி வங்க
வேலைவாய் மடும்ப உண்டு" (பால காண்டம், 41)

என்கிறார். 'கரும்பாலைகளில் இருந்து வந்த கருப்பஞ்சாறு என்னும் தேனும், தென்னை, பனையின் அரியப்பட்ட நுனிகளில் இருந்து வழிந்த கள் எனும் தேனும், சோலைகளில் உள்ள பழங்களின் சாறு எனும் தேனும், தேன் கூட்டிலிருந்து ஒழுகும் தேனும், மக்கள் அணிந்த மாலைகளில் இருந்து சிந்திய தேனும், சேர்ந்து கடலில் சேர, மீன்கள் உண்டு களிப்படைந்தன' என தேன் கடல் உருவாகும் விதத்தைக் காட்டுகிறார்.

நெய்தல் நிலத்துச் சிறுமியர் சிறு முறங்களில் அள்ளிவந்து சிறுவீடு கட்டி விளையாடிச் சிந்திய முத்துகளைக் குப்பையோடு குப்பையாக எடுத்துப் போடுவார்கள் என்னும்போது நெய்தலின் செல்வச் சிறப்புப் புலனாகிறது. கோசலநாட்டு மக்களுக்கு வாணிபம் செய்யும் கப்பல்கள் அளவற்ற செல்வங்களைக் கொடுப்பதால் வறுமை என்பதே இல்லை. உப்பளங்களிலிருந்து உப்பை ஏற்றுச் செல்லும் வண்டிகளை,

"அள்ளல் ஓங்கு அளத்து அமுதின் பண்டி"

என்று கூறுகிறார் கம்பர். கடலிலிருந்து கிடைக்கும் முத்துக் குவியல்களும், உப்புக் குவியல்களுமே கோசலத்தில் குவியல்களாகக் காணப்படுபவை என்பதை 'நிரைவரு தரளம்' 'தொடு கடல் அமிர்தம்' என்று குறிப்பிடுகிறார். இவற்றால் நெய்தல் நில வளம் காட்டப் பெறுகிறது.

ஐந்திணை வளங்களும் அழகுற மிளிரும் கம்பரின் காப்பியத்தில் அவற்றை வருணிக்கும் பாடல்களைப் படிக்கும் போது அவற்றின் சந்தத்திலே தோய்ந்து, வருணனையில் மயங்கிக் கற்பனையில் மூழ்கிக் கம்பன் கவியே கவி என்னும் கூற்றை அனைவரும் ஒப்புக் கொள்வர் என்பது காலத்தை வென்று நிற்கும் உண்மையாகும்.

# கம்பராமாயணத்தில் இயற்கைப்புனைவு

திருமிகு. தி.ஜெயசித்ரா
முனைவர் பட்ட ஆய்வாளர், தமிழாய்வுத்துறை, தூய வளனார் கல்லூரி,
திருச்சி.

தன்னிகரில்லாத் தலைவனின் வாழ்க்கை காப்பியப் பொருளாகிறது. தலைவனின் தனியாண்மையை விளக்கும் முறையில் வருணனைகள் இடம் பெறுகின்றன. கவிஞன் காட்டும் வருணனைக்கு இயற்கைப்பொருட்கள் முக்கியக் காரணிகளாகின்றன. கம்பரின் இயற்கைப்புனைவு, கூட்டுக்குடும்ப வாழ்க்கையின் மகத்துவத்தை உணர்த்துகிறது. மேலும் மனிதனிடத்து இருக்க வேண்டிய நேய உணர்வுகளான ஈகை, அன்பு, பொறுமை, கருணை, கற்பொழுக்கம், கூடா ஒழுக்கம் போன்ற நற்பண்புகளை தன் செயல்களால் உணர்த்திக் காட்டுகின்றது.

## இயற்கை

"இயற்கை என்னும் களத்தில் மனிதன் வந்து தோன்றி நடித்துச் செல்லுகின்றான். வாழ்க்கை நாடகத்திற்கு இயற்கை, பின்னணியாக அமைகின்றது. அது வெறும் பின்னணி அன்று; மனிதனிடம் பரிவு காட்டும் பின்னணி. பாட்டின் முக்கியக் கூறு, மனிதனுடைய உணர்வுகளை நடத்தையைப் புனைவது ஆகும். இயற்கையோடு மனித உணர்வுகள் ஒப்பு நிலையிலோ, முரண் நிலையிலோ அமையுமாறு, அவற்றுக்குத் தெளிவான உறவு தருவதே இயற்கைக்குரியது. (*Landscape and Peotry*-43)" இதனை பாண்டுரங்கன் தன்நூலில் மேற்கோளாகக் காட்டியுள்ளார் (காப்பியம் நோக்கில் கம்பராமாயணம்:ப-191).

## கூட்டு வாழ்க்கை

நாட்டுப்படலத்தில், கம்பர் புனைந்துள்ள இயற்கைக் காட்சிகளில் கூட்டு வாழ்கையின் அழகினைக் காணலாம். அன்னத்தின் குஞ்சுகளைத் தாமரைத் தவிசுகள் தாங்குகின்றன் சேறு படிந்த கால்களை உடைய எருமைகள் அவற்றிக்குப் பாலூட்டும் செவிலியராகின்றன் தேரைகள் குஞ்சுகளைத் தாலாட்டி உறங்க வைக்கின்றன. அஃறிணைப் பொருட்களாக எருமையும், தேரையும் அன்னத்தோடு உறவாடிப் பேணுகின்றன (கம்ப-1-45:ப-39).

கம்பர் படைக்கும் அரிய கூட்டு வாழ்க்கைக் காட்சி, நம் நாட்டின் பரம்பரியமான கூட்டு குடும்ப வாழ்வை நினைவுறுத்துகின்றன.

**சித்திரக்கூடக் காட்சிகள்**

சித்திரக்கூடத்தின் இயற்கை அழகை இராமன் சீதைக்குக் காட்டுகின்றான். அவ்விடத்தும் கூட்டு வாழ்க்கையின் அழகு வெளிப்படுகிறது.

**யானை**

பெரிய தவத்தை செய்யும் முனிவர்க்காக, பெரிய யானைகள் தம் தும்பிக்கையால் அருவியின் நீரை முகந்து கொண்டு வந்து முனிவரின் கமண்டலத்தில் ஊற்றுகின்றன. இதனை,

"அளவு இல் மூப்பினர் அருந்தவர்க்கு அருவிநீர் கொணர்ந்து
களம மால் கரி குண்டிகைச் சொரிவன காணாய்" (கம்ப-2-756:ப-358)

என்ற பாடல் வரிகளால் குறிப்பிடுகிறார் கம்பர்.

**குரங்குகள்**

இரங்கும் இதயம் கொண்ட ஆண்குரங்கள் தம்முடைய நீண்ட வளைந்த வாலினை அவர்களிடம் நீட்டி, அவர்கள் அதனை கோலைப் போலப் பற்றிக் கொண்டு முனிவர்கள் செல்வதற்கு அரிய வழியைக் காட்டுகின்றன. இதனை,

"....இடர் உறு மூப்பினர் ஏக
நெடுகு கூனல் வால் நீட்டின உருகுறு நெஞ்சக்
கடுவன்........." (கம்ப-2-757:ப-385).

என்ற பாடல் வரிகள் உணர்த்துகின்றன. மேலும் முனிவர்களுக்கு வேண்டிய இனிய மாழ்பழங்களையும், பலாப்பழங்களையும், கிடைத்தற்கரிய பழங்களையும் கொண்டு வந்து தருகின்றன. (கம்ப2-759,760ப-360)

**மயில்கள்**

தோகையை உடைய மயில்கள், பூணூலைத் தரித்த முனிவர்கள் ஓமம் செய்வதற்கு, அக்கினிக் குண்டங்களில் உள்ள தீயை தம்முடைய சிறகைப் பிரித்து, விரித்து, வீசி கனன்று எழச் செய்கின்றன. (கம்ப 2-758ப-360)

**பன்றிகள்**

பன்றிகள் கிழங்குகளைத் தோண்டிவந்து தருகின்றன. இதனை,

"கரியமா கிழங்கு அகழ்ந்தன கொணர்வன காணாய்" (கம்ப 2-760ப-360).

என்ற வரிகளால் அறியமுடிகிறது.

**கிளிகள்**

மலை நெல்லின் கதிர்களையும், தினையின் இனிய கதிர்களையும்,

சோளக் கதிர்களையும் கொண்டு வந்து தந்து முனிவர்களோடு ஒன்றி வாழ்கின்றன. இத்தகைய இன்ப அன்பு வாழ்வைக் காப்பியம் காட்டுகிறது. (கம்ப-2.761:ப-360) தவயோகிகளுக்கு பணிவிடை செய்து வாழும் வாழ்வே, இறைவனின் அன்பைப் பெறும் வழி. இவற்றைப் பறவை விலங்கினங்களின் செயல்பாடுகளால் அறிய முடிகிறது.

**ஞாயிறு**

தன் குலத்துக்குமாரரான இராமனது திருமணக் கோலத்தினைக் காண, தன்னுடைய சிவந்த கிரணங்களால் இருளைக் கிழித்துக்கொண்டு ஒரு தேர்மீது வந்து தோன்றியதாக கம்பர் புனைந்துள்ளார்; இதனை,

"செஞ்சுடர் இருள் கீறித் தினகரன் ஒரு தேர்மேல்
மஞ்சனை அணி கோலம் காணிய என வந்தான்"

(கம்ப-1-1127:ப-524).

என்ற பாடல் வரிகளால் அறியலாம். அயோத்தியா காண்டம் சூழ்வினைப்படலத்தில் கைகேயி செய்த பகைச் செயலினால் இருள் என்னும் பகையானது குதித்து ஓடிவிட, மாளிகையில் உள்ள விளக்குகள் ஒளியை இழந்து விட, சூரியன் தன் கோபம் மிகுந்த சிவந்த கதிர்களோடு உதயமானது என்று ஞாயிற்றின் அழகைக் காட்டுகின்றார் கம்பர்;

சமுதாயச் சீரழிவைக் கண்டு பொங்கி எழவேண்டும் என்ற கருத்தை ஞாயிற்றின் தோற்றம் விளக்குகிறது. இராமன் காட்டுக்குள் புகும் அவலக்காட்சியைக் காணப் பொறுக்காமல் மறைகின்றது ஞாயிறு. (கம்ப-2.527:ப-246)

"தயரதன் இறந்தான், மக்கள் எவரும் நாட்டில் இல்லை. அவர்கள் வந்து ஆட்சிப் பொறுப்பை ஏற்கும்வரை யானே இவ்வுலகைக் காப்பேன்" என ஞாயிறு எழும்புகின்றது. (கம்ப-2.601:ப-280)

தயரதனுக்கு இராமன் நீர்க்கடன் செய்ததைக் கண்டு தானும் நீர்க்கடன் செய்ய கடலில் மூழ்குகின்றான் சூரியன். (கம்ப-2-1150:ப-548) இதன் மூலம் பிறர் இன்ப, துன்பங்களில் கலந்து கொள்வதிலே வாழ்வின் மகத்துவம் உள்ளது என்பதை உணரலாம்.

**நிலவு**

அரக்கரை அழித்து அறத்தை நிலைநிறுத்த செல்லும் இராம - இலக்குமணருக்கு இடையே இருள் பரவியது. அதனை ஒழித்து அவர்களுக்கு வழிகாட்டிட ஆகாயம் கைவிளக்கு ஒன்றை எடுத்து வந்தது போன்று நிலவு எழும்புகின்றது.

இதனை,

"மை விளக்கியதே அன்ன வயங்கு இருள் துரக்க வானம்
கை விளக்கு எடுத்தது என்ன வந்தது கடவுள் திங்கள்"

என்ற வரிகள் புலம்படுத்துகின்றன. (கம்-2-572:ப.264).

நிலவின் செயல்பாடு, உதவி மனப்பான்மையை வெளிப்படுத்துகிறது.

**மழை**

"மாதரார்.. கற்பின் நின்றன காலமாரியே" (கம்ப-1-91:ப-58).

என்று கற்பின் ஏற்றத்தை விளக்குகிறது மழை.

"கற்பே மழை தரும் இயற்கையின் இயல்பு.
இத்தகையது இராம இராச்சியம்" (நீங்களும் சுவையுங்கள்:ப-55)

என்று, தொ.பொ.மீ. விளக்குகிறார்; இதன் வழி பெண்களுக்கு அழகு கற்பு நெறியேஞ். கற்பு நெறியோடு வாழ்ந்தால் மட்டுமே நாட்டில் இயற்கை வளம் நன்றாக இருக்கும் என்ற கருத்து வெளிப்படுகிறது.

**ஆறு**

மழையிலும், ஆற்று வெள்ளத்திலும் காப்பியக் கதையைக் காண்கின்றார் கம்பர், கோசலம் புனை ஆற்றின் வெள்ளத்திற்கு மாதரார் கற்பே காரணமாகின்றது (கம்ப-1-13:ப-24). "சரயு என்பது தாய்முலை அன்னது" (கம்ப-1-24:ப-28).என்று தாய்மைக் காட்சியை ஆற்றின் போக்கில் காண்கின்றார். கற்களையும், மரங்களையும், உருட்டிக் கொண்டு ஒடுகின்றது ஆறு. கடலை நோக்கி ஒடிச் சென்று கடலில் கலக்கின்றது. எனவே நாம் பிறந்து வளரும் இடம் வெவ்வேறு இடங்களாயினும் சென்று சேறும் இடம் இறைவனடியே என்பதை சரயு ஆற்றின்போக்கில் உணர்த்துகிறார் கம்பர்.

**கடல்**

இராமன் கடற்கரையை அடைகின்றான். "பிறை போன்ற நெற்றியையுடைய சீதை இலங்கையில் நீங்காத துன்பத்திடை உள்ளாள். அரக்கரின் நடுவில் அவள் தனியேயிருந்து துன்பப்படுதல் தக்கதோ" - என்று கேட்பது போல கடல், இராமனின் தாமரைமலர் போன்ற திருவடிகளில் கண்ணீர் முத்துக்களைச் சிந்துகின்றது. அலைக்கைகளால் விழுந்து வணங்கி கடல் அழுவதாகக் கம்பர் காட்டுகின்றார்.(கம்ப-6-8:ப-10).பெண்ணின் துயர் போக்குதலே ஆணின் கடமை என்பதைக் கூறாமல் உணர்த்துகிறது கடல்.

**பூமி**

"தன்னுடைய வயிற்றிலே பிறந்த சானகியின் துயரைக் கண்டு நிலமடந்தை அழுவதாகக் கம்பர் காட்டுவதை பாண்டுரங்கன் ஆசிரியர் விளக்குகிறார்".(காப்பிய நோக்கில் கம்பராமாயணம் ப-268) இதன் மூலம் பூமித்தாய் சீதையின் மேல் கொண்டுள்ள தாயன்பு வெளிப்படுகிறது.

**கங்குல்:[இரவு]**

கைகேயி சூழ்வினைப் படலத்தில் கைகேயின் பாதகச் செயலைக் கண்ணால் காணக் கூசி நடக்கின்றாள் கங்குல் நங்கை. இதனை,

"வாள் நிலா நகை மாதராள் செயல்கண்டு மைந்தர் முன் நிற்கவும்
நாணினாள் என ஏகினாள் நளிர் கங்குல் ஆகிய நங்கையே"

என்று குறிப்பிடுகிறார் கம்பர். சடாயுவை இழந்தும் வருந்துகின்ற இராம இலக்குமணன் துயர் கண்டு கண்ணீர் சிந்திக் கங்குல் கலங்குகின்றது (கம்ப-3-1026:ப-506)

இதன்மூலம் பிறர் இன்ப, துன்பங்களில் கலந்து கொள்வதிலே வாழ்வின் மகத்துவம் உள்ளது என்பதை உணரலாம்.

**தாமரை மலர்கள்**

இராமன் நாட்டை ஆட்சி செய்வதற்கு உரிய மணி முடியைச் சூட்டிக் கொள்கின்ற நிகழ்வைக் காண, தாமரை மலர்கள் முன்னதாகவே மலர்ந்து விட்டதாகக் கம்பர் காட்டுகின்றார். இதனை கம்பர்,

"காவல் மாமுடி சுடுபேர் எழில் காணலாம் எனும் ஆசை கூர்
பாவை மார் முகம் என்ன முன்னம் மலர்ந்த பங்கயராசியே"

(கம்ப -2-243:ப-116).

என்ற பாடல்வரிகளால் குறிப்பிடுகிறார். இலங்கை அகழியில் பூத்துள்ள தாமரை மலர்கள் "சிறையின் எய்திய செல்வியின்" துயர்கண்டு கூம்புகின்றன. (கம்ப-5-247:ப-106)

**அல்லி**

கைகேயி தயரதனுக்குச் செய்;த கொடுமையைக் கண்டு ஒன்றும் பேசமுடியாமல் வாயடங்குகின்றன வண்குமுதங்கள். இதனைக் கம்பர்,

"தீ அடங்கிய சிந்தையாள் செயல்கண்டு சீரிய நங்கைமார்
வாய் அடங்கின என்ன வந்து குவிந்த வண்குமுதங்கள்"
என்று குறிப்பிடுகிறார். (கம்ப-2-234:ப-112).

**நீலமலர்கள்**

முதல்நாள் போரில் இராவணன் தோல்வியுற்றுத் திரும்புகின்றான். அவனுடைய வீரமும், புகழும் இன்றோடு போய்விட்டதே என்று இரங்கியது அகழி. அகழியிலுள்ள தேனுடைய கரியகுவளை மலர்கள் கண்ணீர் சொரிகின்றன. இதனை,

"நிகழும் கள்நெடு நீலம் உகுத்தலால்;
அகழி தானும் அழுவது போன்றதே" (கம்ப-6-964:ப-478)

என்று குறிப்பிடுகின்றார் கம்பர். மலர்களின் நிகழ்வுகள் வழி கருணைப் பண்பு வெளிப்படுகிறது.

**அன்னம்**

கிட்கிந்தா காண்டம்- பம்பைப்படலத்தில் அன்னத்தின் செயலைக் காட்டியுள்ளார் கம்பர். தாமரைப்பூக்களில் அன்னங்கள் புகுகின்றன. "சீதையை எங்களால் தேடிக் கண்டபிடித்துத் தர இயலவில்லை. இனி நாங்கள் இருந்து பயன் என்ன? இராமனின் அழகிய முகத்தைப் பார்க்காமல் எரியும் தீயில் வீழ்ந்து மாய்வோம்" என்பனபோலத் தாமரைப் பூக்களில் நுழைகின்றன. (கம்ப. 4-7:ப-14)

இலக்குமியான சீதையை இராமனிடத்து கொண்டு வந்து சேர்க்கும் திறமை எங்கட்கு இல்லை. அதனால் நம்மால் முடிந்ததைச் செய்வோம் என்று எண்ணி, மனம் இரங்குகின்றது. அன்னம் துவளும்படியான சீதையின் நடை அழகைக் காட்டியது. குவளை மலர்கள் கண்களின் அழகைப் புலப்படுத்தின. செவ்வாம்பல் மலர்கள் உதட்டின் அழகினைத் தெளிவுபடுத்தின. (கம்ப-4-17:ப-14)

**பறவைகள்**

குளங்களிலும் மரங்களிலும் துள்ளி எழும் புட்கள் கேகயன் மகளை வைகின்றன. (கம்ப-2-229:ப-111)

**யானை**

இராமன் காடுபுகுமுன் நாம் நாட்டினை கடப்போம்" என எழுகின்றன யானைகள். (கம்ப-2-230:ப-111) இவ்வாறு "கேட்போருடைய உள்ளம் இயற்கையின் வழியே சென்று, தயரதனைக் கண்டு பரிவுடன் அவனுக்காக இரங்கத் தொடங்குகின்றது. இத்தகு அரிய சித்திரங்களைத் தீட்டுவது கம்பருக்கு கைவந்த கலையாகத் திகழ்கின்றது". (காப்பிய நோக்கில் கம்பராமாயணம்:ப.216). இறைவனின் வசிப்பிடமே எங்களுக்குப் புகழிடம் என்று உணர்த்துவாறு போல யானையின் செயல்பாடு அமைகிறது.

**தொகுப்புரை**

கம்பராமாயண இயற்கைப் புனைவு காப்பிய மாந்தரின் கண்ணோட்டத்தோடு ஒத்து படைக்கப்பட்டுள்ளது.

துன்ப உணர்வுக்கு ஆறுதல் தருகின்ற வகையில் இயற்கையின் செயல்பாடுகள் புனையப்பட்டுள்ளன.

மனிதனின் தவறான செயலுக்கு வருந்துவதாகவும், அவனின் தீயஒழுக்கத்தை இடித்துரைக்கும் வகையிலும், பறவை, விலங்கு, பூக்கள் இவற்றின் நிகழ்வுகள் அமைகின்றன.

இயற்கையின் ஒவ்வொரு புனைவும் அன்பு, ஈகை, கருணை, கற்பொழுக்கம் ஆகியவற்றை மனிதனுக்குக் கற்றுத் தருகின்றது.

இவற்றை கருத்தில் கொண்டு தீநெறி களைந்து, மகத்தான மாண்புகள் கொண்ட சமுதாயம் படைத்திட வழிகாட்டுகிறார்.

# சித்திரகூட இன்பச் சிறப்பு

முனைவர் க.அமுதா
உதவிப் பேராசிரியர், தமிழ்த்துறை, அழகப்பா அரசு கலைக்கல்லூரி,
காரைக்குடி.

## முன்னுரை

தமிழ்மொழி பண்டு தொட்டே திருந்திய பண்பும் சீர்த்திருத்த நாகரீகமும் அமைந்து சிறந்த கவிகளால் செழித்து வளர்ந்து உயர்ந்துள்ளது. இதில் கம்பரின் கம்பராமாயணம் குறிப்பிடத்தக்கது. 'கம்பன் பிறந்த தமிழ்நாடு' என்று பாரதியார் போற்றுகிறார். வால்மீகியின் ஆதிகாவியத்தை ஒட்டிக் கம்பர் தம் காப்பியத்தை எழுதிய போதும் 'ஒரு புதுக்காப்பியம் போல் விளங்குமாறு கற்பனைத் திறத்தால் படைத்துக் காட்டியுள்ளார். வால்மீகியால் உயரத்த காப்பியத் தலைவர்களாகப் படைத்துக் காட்டப்பட்ட இராமனும், சீதையும் கம்பராமாயணத்தைக் கற்பவர் கேட்பவர் நெஞ்சில் தெய்வங்களாகக் காட்சியளிக்கச் செய்தவர் கம்பர். இக்கட்டுரை அயோத்தியா காண்டத்தில் இடம் பெறும் சித்திரகூட இன்பச் சிறப்பை ஆராய்வதாக அமைகிறது.

## சித்திரகூடப் படலம்

கம்பராமாயணம் ஆறு காண்டங்களையும், 113 படலங்களையும் பத்தா-யிரத்திற்கு மேற்பட்ட பாடல்களையும் கொண்டது. இதில் அயோத்தியா காண்டத்தில் ஒன்பதாம் படலமாக சித்திரகூடப் படலம் விளங்குகிறது. இராமனும், சீதையும் அரண்மனையை விட்டு நீங்கி காட்டிற்கு வரும்போது சித்திரகூட மலையின் அழகினை எல்லாம் இராமன் சீதைக்குக் காட்டுகின்றார். இல்வாழ்க்கையில் கற்பு வாழ்க்கையின் சிறப்பு, அன்பினை அடித்தளமாகக் கொண்டது. அவ்வன்பில் சிறிதும் குறையின்றி இராமனும், சீதையும் இருந்ததை இப்படலம் மூலம் காணமுடியும்.

## சித்திரகூட இன்பச்சிறப்பு

திருமாலின் திருஅவதாரமான இராமன் சனகனுடைய மகளான மயில் போன்ற சாயலையுடைய சீதைக்கு, சித்திரகூட மலையின் அழகினை ஒவ்வொன்றாகக் காட்டும் போது சீதையை அவன் அழைக்கின்ற விதம் சிறப்பனதாகும். இதனை,

"வாளும், வேலும்விட்டு அளாயின அனைய கண்மயிலே"(சித்: 729:1)

என்று சீதையின் கண்ணையும், "குருதி வாள் எனச் செவ்அரி பரந்த கண்மயிலே" (730:1) என்று கண்ணையும், குரலையும்,

"வடம் கொள் பூண்முலை மடமயிலே மழைமதமா" (731:1) என்றும்,"உவரிவாய் அன்றிப் பாற்கடலில் உதவிய அமுதே" (732:1)

என்று அமுதத்தை ஒத்தவள் சீதை எனக் கூறியும், "ஆடுகின்ற மா மயிலினும் அழகிய குயிலே" (739:1) என்றும்,"வில்லி வாங்கிய சிலை எனப் பொலி நுதல் விளக்கே" (740:1) என்றும்,"ஒருவு இல் பெண்மை என்று உரைக்கின்ற உடலினுக்குயிரே" (741:1)

என்று, நீங்குதல் இல்லாத பெண்மை என்று சிறப்பித்துச் சொல்லப்படும் ஓர் உடலுக்கு உயிர் போன்றவளே எனக் கூறி அழைப்பதும், "வீறு பஞ்சில் நல் அமிழ்த நெய் மாட்டிய விளக்கே" (சித்-742:1) என்று விளக்கினை ஒத்தவள் என்றும், "சீலம் இன்னது என்று அருந்ததிக்கு அருளிய திருவே"(743:1) என்றும், "வில் கொள் வாள் நுதல் விளக்கு" இழை தளிர்க் கொழுந்தே (சித்-744:1) என்றும்,"நானம் நாள் மலர் நறை அகில் நாவிதேன் நாறும் சோனை வார் குழற் சுமை பொறாலீது இறும் இடைத் தோகாய் (சித்-746:1-2) என்று இடையையும்,"நினைந்த போதினும் அமிழ்துஒக்கும் நேரிழை" (சித்-751:1) என்று நினைந்தபோதே அமுதமாக இனிப்பவளே என அழைத்தும்,"இலவும் இந்திரகோபமும் புரை இதழ் இனியோய்"என்றும்,"குழவு தண்தொளை வேயினும் குறி நரம்பு எறிவுற்று,எழுவு தண் தமிழ் யாழினும் இனிய சொல் கிளியே" (755:1-2)என்றும், "வளைகள் காந்தளில் பெய்தன அனைய கைம்மை-யிலே" (756:1) என்றும், "வடுவின் மா வகிர் இவை என பொலிந்த கண்மயிலே" (757:1) என்றும், "தெரிவை மார்க்கு ஒரு கட்டளை எனச் செய்தத் திருவே (760:1) என்றும், இராமன் சீதையை அழைக்கின்ற போது அவளின் அழகினை எல்லாம் பாராட்டிக் கூறி அழைக்கிறான். "கற்புத் தெய்வமாகிய சீதையின் அற்புத உருவிற்குக் கவியின்பத்தைக் கம்பர் ஒப்புரைத்துள்ளார். பொன்னின் சோதி பூவின் மணம் தேனின் சுவை என மேனியின் ஒளி முதலியவற்றிற்கு உவமை கூறி வந்த அவர் முடிவில் 'செஞ்சொற்கவியின்பம்' என்று அப்பேரழகின் குண சவுந்தரியங்களை உணர்வொளி ததும்ப உரைத்திருக்கின்றார். கவியின் சுவையில் அவர் கருத்தூறியுள்ள உண்மையும் இதனால் உணரலாகும் என்ற கருத்து சித்திரகூடப் படலத்தில் இராமன் சீதையின் அழகினைக் கூறிய விதத்தினாலும் அறிய முடியும்.

**சித்திர கூடத்தின் இயற்கை அழகு**

இராமன் இருக்கும் இடமே சீதைக்கு அயோத்தி என இராமனுடன் காட்டிற்கு வந்தவள் சீதை. இராமன் தசரதனால்

காட்டிற்கு போ என்று கூற அன்று மலர்ந்த செந்தாமரை போன்ற முகமென ஒருபோதும் வருத்தமின்றி வருகிறான். இருவரின் மனதும் இவ்வாறு அமைய இருவரின் தனிமையும் மிகுந்த மகிழ்ச்சியுடன் திகழ காரணமாக இருந்தது சித்திரகூடத்தின் அழகே என்றால் அது மிகையாகாது. சித்திரகூட மலையின் அழகினை நடந்து செல்லும் இருவருமே பார்க்கின்றனர். ஆனால் உடன் நடந்து வருகின்ற சீதையை அழைத்து, அழைத்து இயற்கை அழகினை இராமன் காட்டுகிற விதம் அழகானது.

சித்திரகூட மலையில் சந்தன மரங்கள் நிறைந்துள்ளன. கருமேகங்களும், ஏலக்கொடியும், பச்சிலை மரங்களும் நிறைந்துள்ளன. கருமேகங்களும், யானைகளும் வேற்றுமை தெரியாதபடி உள்ளன. அம்மலையின் உச்சியில் மலை ஆடுகள் பிரிகின்றன.

"சுருதிபோல் தெளி மரகதக் கொழுஞ் சுடர் சுற்ற
பருதி வானவன் பசும்பரி புரைவன பாராய்" (சித்.730:3-4)

என்று மரகத மணிகள் ஒளி வீசுவதைப் பார் என அழைக்கின்றான் இராமன்.

சிவபெருமானது சடையில் உள்ள கங்கை ஆற்றைப் போன்று அச்சிகரத்திலிருந்து மிகச் சிறந்த வெண்ணிறத்தைக் கொண்ட அருவி வருவதாகவும், தழைத்து வளர்ந்துள்ள சந்தனச் சோலை வான்வழியே தான் செல்வதைத் தடுக்க அச்சோலைக்குள் நுழைந்து; செல்லும் சந்திரன், சந்தன மரத்தில் கட்டப்பட்ட தேன்கூடு போன்று தோன்றுகிறது அதைப் பார் என்றதை,

"தழைந்த சந்தனச் சோலைகள் செலவினைத் தடுப்ப
நுழைந்து; போகின்ற மதி இறால் ஒப்பது நோக்கம்" (736:2-4)

என்றடிகள் உணர்த்தும்.

தினைக் கொல்லையைக் காக்கப் பரண் மீது பெண்கள் அமர்ந்து வீசி எறிகின்ற மாணிக்கக் கற்கள் ஆகாயத்திலிருந்து விழும் நட்சத்திரங்களைப் போல விழுவதைக் காணாய் என்றதை,

"எல் கொள் மால்வரை உம்பரின் இரும்புனம் காக்கும்
கொல் கொள் வேல் கணார் குரீஇனத்து எறி குருவிந்தக்
கற்கள் வானிடை மீன் என வீழ்வன காணாய்" (744:2-4)

என்றடிகள் உணர்த்தும். ஆகாயமாகிய ஆற்றிலே நட்சத்திரங்களாகிய மீன்கள் தோன்றுவன போல, நீர் வற்றிய காட்டாறுகளில் கூட்டமான

பல வகையான மணிகள் தோன்றுகின்றன பாராய் என்று கூறியும் அங்கு வாழும் கின்னரர்கள், குறிஞ்சி நில மக்கள், மலைவாழ் மக்கள், குறவர், குறத்தியர் என அனைத்தையும் சுட்டிக் காட்டி, இராமன் அங்கு வாழும் முனிவர்களையும் சுட்டிக்காட்டி அவர்களுக்கு குரங்குகளும், பன்றியும் மலைப்பாம்புகளும் செய்கின்ற செயல்களைக் காட்டுகின்றார். இதனை,

"தெரிவை மார்க்கு ;ஒரு கட்டளை எனச் செய்திருவே
பெரிய மாக்கனி பலாக் கனி பிறங்கிய வாழை
அரிய மாக்கனி கடுவன் அன்பு கொண்டு அளிப்ப
கரிய மாகிழங்கு அகழ்ந்தன கொணர்வன காணாய்" (760)

என்று குரங்குகள் மாம்பழம், பலாப்பழங்களை அன்புடன் கொண்டு வருவதையும் பன்றிகள் கிழங்கினைக் கொண்டு வருவதையும் கூறி,

"ஐவனக் குரல் ஏனலின் கதிர் இறங்கு அவரை
மெய்வணக்குறு வேய் இனம் ஈன்ற மெல் அரிசி
பொய்வணங்கிய மாதவர் புரைதொறும் புகுந்து உன்
கைவணத்த வாய்க்கிள்ளை தந்து அளிப்பன காணாய்" (761)

என்று கிளிகள் மலை நெல் அரிசி, திணை அரிசி மூங்கிலின் மெல்லிய அரிசியினை ஆசிரமங்களுக்குக் கொண்டு செல்வதைப் பாராய் என்று கூறியும்,

"இடி கொள் வேழத்தை எயிற்றோடும் எடுத்து உடன் விழுங்கும்
கடிய மாசுணம் கற்று அறிந்தவர் என அடங்கி
சடை கொள் சென்னியர் தாழ்வு இலர் தாம் மிதித்து ஏற
படிகளாம் எனத் தாழ்வாரை கிடப்பன் பாராய்"

என்று மலைப்பாம்புகள் முனிவர்கள் ஏறிச் செல்லும் அளவிற்குப் படிகளாகக் கிடக்கின்றன பாராய் என்று கூறியதை இப்பாடலடிகள் உணர்த்துகின்றன. இவ்வாறு ஒவ்வொன்றாகக் கூறி வரும்போதும் இராமனுக்கு இயற்கை அழகினைக் காணும் போதும் அயோத்தியின் நினைவு வருகிறது. இதனை,

"தடங்கள் தோறும் நின்று ஆடுவ தண்டனை அயோத்தி
நுடங்கு மாளிகைத் துகிற்கொடி நிகர்ப்பன நோக்காய்" (731:3-4)

என்றடிகள் உணர்த்துகின்றன.

**முடிவுரை**

இராமனும் சீதையும் சித்திர கூட மலையின் அழகினைக்

கண்டு மகிழ்கின்றனர். இராமன் தான் கண்ட இயற்கைக்காட்சிகளை சீதை பார்க்கும்படி கூறும்போது சீதையின் அழகினை வர்ணித்து கூறும் அழகு, அழகிற்கே அழகினை காட்டுவதாய் அமைகிறது. இப்படலத்தில் இராமனும் சீதையும் மிக்க மகிழ்ச்சியுடன் இல்லற வாழ்வில் தலைவனும், தலைவியும் உடூமிருந்தால், அதுவே பேரானந்தம் என்ற நிலையில் வாழ்ந்ததையே காட்டுகிறது. இருவரிடமும் அரண்மனை வாழ்க்கையை இழந்த சோகம் சிறிதும் தென்படவில்லை. அந்தவகையில் சித்திரகூடம் இருவருக்கும் இன்பத்தையே அளித்தது. இதனை,

> "மேவு கானம் மிதிலையர்கோன் மகள்
> பூவின் மெல்லிய காதமும் போந்தன
> தாதில் எம்பிகை சாலை சமைத்தன
> யாவை யாதும் இலார்க்கு இயை யாதவே" (சித்: 777)

என்ற இராமனின் கூற்றும் உணர்த்துகிறது.

# பாலகாண்டத்தில் இடம்பெறும் நகர் வருணனை

திருமிகு. தி. கோமதி
முனைவர் பட்ட ஆய்வாளர், தமிழ்த்துறை – உயராய்வுமையம்,
ஸ்ரீ பராசக்தி மகளிர் கல்லூரி,குற்றாலம்.

கம்பராமாயணத்தின் முதல் காண்டமாக பாலகாண்டம் திகழ்கின்றது. இதில் மூன்றாவது படலமாக நகரப்படலம் உள்ளது. அவற்றில் மொத்தம் 75 பாடல்கள் உள்ளன. அதனுள், கோசல நாட்டின் தலைநகரமாக விளங்கக்கூடிய அயோத்தி நகரைப் பற்றிய வருணனைச் செய்திகளும் இடம்பெற்றுள்ளன.

**அயோத்தி நகரின் வருணனை**

அயோத்தி நகரமானது பூமாதேவியின் திருமுகத்தையும், ஒளிதிகழும் கண்ணையும் நெற்றித்திலகம், மங்கல நாண், முத்துமாலை போன்றவற்றை ஒத்துக் காணப்படுகிறது. திருமாலின் திருமார்பில் அணியக்கூடிய அழகு பொருந்திய பொன்பெட்டியாகவும், தேவர்கள் வாழும் உலகத்திற்கும் மேலானதாகிய ஸ்ரீ வைகுண்டமாகவும், பிரளய காலத்தில் எல்லா உலகங்களும் தங்கும் இடமாகிய திருமாலின் திரு உதரமாகவும் விளங்கக்கூடிய பெருமை வாய்ந்த அயோத்தி நகரம் என்று கம்பர் அயோத்தியை அழகுபட வருணிப்பதை,

"நிலமகள் முகமோ திலதமோ கண்ணோ நிறைநெடு மங்கல நாணோ
உலகோ ஊழியின் இறுதி உறையுளே யாதென உரைப்பாம்"
(கம்ப.ந.ப.பா.எ.95.,வ-ள்.1-8)

எனும் அடிகள் உணர்த்துகின்றன. மேலும், மயன் முதலாக உள்ள தேவசிற்பிகளும் இந்நகரின் சிறப்பைக் கண்டு இவ்வாறு தங்களால் படைக்க இயலாது என நாணம் கொண்டு தம் தொழிலையும் மறந்ததாகக் கம்பர் குறிப்பிடுகின்றார். இதனை,

"மயன் முதற் றெய்வத் தச்சரும் தத்தம்
மனத் தொழில் நாணினர் மறந்தார்" (கம்ப.ந.ப.பா.எ.97.,வ-ள்.5-6)

எனும் பாடலடிகள் சுட்டுகின்றன.

**மதிலின் வருணனை**

சிற்ப சாத்திரங்களில் கூறியபடி நான்கு பக்கங்கள் கொண்ட சதுர அமைப்பில் உயரமாக அமைக்கப்பட்ட அயோத்தி நகரின் மதிலுக்கு உவமை வேறொன்றுமில்லை. இவ்அயோத்தி நகரின் மதிலானது, வேதத்தையும், தேவர்களையும், ஐம்புலன்களை அடக்கி ஆளும்

முனிவர்களையும், காவல் தெய்வமாகிய துர்க்கையையும், எளிதில் அடைவதற்கு அரியதாகிய ஈசனையும் ஒத்துக் காணப்படுகிறது. அயோத்தியிலுள்ள பெண்களைத் தேவர் உலகத்திலுள்ள பெண்களோடு ஒப்பிட்டு பார்க்கும் வகையில், இந்நகரின் மதில் ஆகாயத்தில் உயர்ந்துள்ளது. இம்மதிலானது ஆக்ஞா சக்கரம் கொண்டு ஆட்சி புரியும் நகரத்தலைவரை ஒத்தும், அயோத்தி நகருக்கு இம்மதில் அணியாகவும் திகழ்வதை,

"சால்புடை உயர்விற் சக்கர நடாத்தும்
தன்மையின் தலைவர்ஒத் துளதே" (கம்ப.ந.ப.பா.எ.104.,வ-ள்.7-8)

என்றும்,

"ஆணையும் காக்கும் ஆயின்அந் நகருக்கு
அணியென இயற்றிய தன்றே" (கம்ப.ந.ப.பா.எ.106.,வ-ள்.7-8)

என்ற அடிகள் வாயிலாகக் கம்பர் எடுத்துரைக்கின்றார்.

**அகழியின் வருணனை**

மதிலின் புறத்தில் கடல் போல அகழி அமைந்துள்ளது. அதிலுள்ள தாமரைமலர்கள் அயோத்திநகரிலுள்ள பெண்களுடன் போர் செய்யக்கூடிய நிலையில் காணப்படுகிறது. அகழியில் உள்ள முதலைகள் போரில், ஒருவரையொருவர் மோதி எதிர்க்கும் அரக்கர்களை ஒத்திருந்தன. அவ்வகளியில் தங்கி வாழக்கூடிய அன்னப்பறவைகள், முதலைகள், அலைகள், மீன்கள் போன்றவை மன்னரின் சேனையை ஒத்துக் காணப்படுவதாக,

"ஆளும் அன்னம் வெகுண்டு டைக்குலங்க ளாவ....
வாளும் வேலும் மீன மாக மன்னர் சேனை மானுமே"
(கம்ப.ந.ப.பா.எ.112.,வ-ள்.1-8)

எனும் அடிகளில் கம்பர் வருணித்துள்ளார்.

**சோலையின் வருணனை**

ஆழமான கடலினைப் போன்று விளங்கும் அகழியைச் சுற்றியுள்ள காடுபோன்று கிடந்த சோலையைக் காணும்போது,

"பொன்னின் மாம திட்கு டுத்த
நீல ஆடை போலுமே" (கம்ப.ந.ப.பா.எ.114.,வ-ள்.7-8)

என்றவாறு காட்சியளிப்பதாகக் கம்பர் சுட்டுகின்றார்.

5. **கோபுரத்தின் வருணனை**

அயோத்தி நகரின் கோபுரவாயில்கள் நான்கும் திக்கஜங்கள் போன்றும், நல்ல ஒழுக்கங்களை உபதேசிக்கும் வேதங்களைப் போன்றும், திருமாலின் திருவடியைக் காட்டிலும் உயர்ந்ததாகவும் விளங்குகின்றன. கோபுரவாயிலில் உள்ள பெண்புறாவின் ஓவியத்தைக் கண்டு உயிருக்கு உயிரான ஆண்புறா வேறொரு பெண்புறாவை நாடிச் சென்றது என்று எண்ணி புறாக்கள் ஊடல் கொள்வதையும் எழில்படக் கூறியுள்ளார். மேலும், மாணிக்கக் கட்டிகள், பளிங்குக் கற்கள், பசும்பொன் தகடு, இரத்தினக்கற்கள், வெள்ளி போன்றவற்றைக் கொண்டு கோபுரத்திற்குத் தளம் அமைந்துள்ளனர். அதன்மேல் மரகதக்கற்கள், வைரக்கற்கள், பொன்தகடு, இரத்தின மணிகளாலான சிங்கவடிவம், கோமேதகம் போன்றவற்றை வைத்து அழகுபடுத்தினர். விண்ணுலகத்தைத் தொடும் உச்சியில் இரத்தினங்களாலான கலசங்கள் அமைக்கப்பட்டன. இக்காட்சியை,

"வாழ்நி லக்கு லக்கொ ழுந்தை மௌலி சூட்டி யன்னவே"

(கம்ப.ந.ப.பா.எ.119.,வ-எ்.7-8)

என்றவாறு கம்பர் காட்சிப்படுத்துகின்றார்.

**மாளிகையின் வருணனை**

அயோத்தி நகரிலுள்ள மாளிகையானது பாற்கடலில் பொங்கி எழும் வெண்ணுரையுடன் கூடிய அலைகளை ஒத்து விளங்கியது. பொன்தகட்டினால் வேயப்பட்ட மாளிகையில் வெண்புறாக்கள் அமர்ந்திருப்பது இளஞ்சூரியனின் கதிர்கள் வெள்ளிமைல மீது படிவதைப் போன்று காட்சியளித்தன. தூண்கள் வைரத்தாலும், உத்தரம் மரகதத்தாலும் ஆனது. அதன்மேல் போதிகைக் கட்டைகளை வைத்ததும் உயிர்பெற்று விளங்குகிறது. இதனைத் தேவர்கள் தமது விமானமோ என எண்ணும்படியான மாளிகைகள் கோடிக்கணக்கில் அயோத்தி நகரில் இருந்தன. அதனுடைய கலைநுட்பத்தைப்,

"புக்கவர் கண்ணிமை பொருந்து றாதொழி
தொக்குடன் தயங்கிவிண் தெய்வவீடு
ஒக்கநின்று இமைப்பன உம்பர் நாட்டினும்"

(கம்ப.ந.ப.பா.எ.125.,வ-எ்.1-4)

என்ற பாடலடிகளில் கம்பர் வருணித்துள்ளார்.

# கம்பன் காட்டும் நீர்வளப் பாதுகாப்பு

முனைவர் மு.பாண்டி
தமிழ்த்துறைத் தலைவர், அழகப்பா பல்கலைக்கழகம்,
காரைக்குடி.

## முன்னுரை

இவ்வுலகிலுள்ள அனைத்தையும் மனிதர்கள், இயற்கை என்னும் இரண்டினுக்குள் அடக்குவர். தொல்காப்பியர் இயற்கைப் பொருள்களைக் கருப்பொருள் என்கிறார். இயற்கையின் மகத்துவத்தையுணர்ந்த தமிழர் காலம் காலமாய் மரபுத் தொடர்ச்சியாக இயற்கையைப் பாதுகாத்து இயைந்து வாழ்ந்து வந்துள்ளனர் என்பதை அவ்வவ்கால தமிழிலக்கியங்கள் பதிவு செய்துள்ளமையைக் காணலாம். இயற்கையைப்பாடாத கவிஞர்களே இல்லை என்பர். ஒன்பதாம் நூற்றாண்டில் வாழ்ந்த கவிச்சக்கரவர்த்தி கம்பர். தம்காலத்து இயற்கை வளத்தைப் பாடியிருப்பதை அறியமுடிகிறது. இவ்வளங்களுள் நீர்வளம் பற்றியும், அவற்றின் பாதுகாப்புப் பற்றியும் கம்பனின் சிந்தனைகளைக் கண்டறிவது இக்கட்டுரையின் நோக்கமாகும்.

உலகில் இதுகாறும் நிகழ்ந்தேறிய போர்களுக்கு அடிப்படைக் காரணங்களாக நிலமும், பெண்ணும் இருந்துள்ளன. அடுத்து நிகழும் மூன்றாம் உலகப்போர் நீரை மையமிட்டதாய் இருக்கும் என்கின்றனர். திருவள்ளுவர் இறைவணக்கத்திற்கு அடுத்த நிலையில் வான்சிறப்பை இரண்டாவது அதிகாரமாக வைத்துப் பத்து குறள்களின் நீரின் இன்றியமையாமையை உணர்த்தியிருக்கிறார்.

'வானம் பொய்த்தால் வாழ்வு பொய்க்கும் என்பது அறிந்த இளங்கோவடிகள் காவிரி, வையை ஆறுகளைச் சிறப்பித்துள்ளார். பஞ் சபூதங்களில் ஒன்றான நீரின் முக்கியத்துவத்தை இறையடியவர்களான நாயன்மார்களும் ஆழ்வார்களும் வெகுவாகப் பாடியுள்ளனர். திருக்கோயில் அமையும் ஊருக்குத் தலம், தீர்த்தம், விருட்சம், மூர்த்தி நான்கும் அடிப்படையானவை. இந்நான்கில் மண், நீர், மரம் மூன்றும் இயற்கைப் பொருட்கள். இவற்றுள் மனிதவாழ்வில் நீரே முதன்மை பெற்றுள்ளது.

## கம்பராமாயணத்தில் நீர்வளம்

'கம்பரும் 'நீரின்றி அமையாது உலகு' என்பதை நன்குணர்ந் தவராகையால் தனது இராமாயணத்தின் முதல் படலமாக ஆற்றுப்

படலத்தை வைத்துள்ளார். தொடக்கப்பாடல் நீரின் ஆதாரமான நதியைப் பற்றியதாகும். ஒழுக்கத்தின் குறியீடான சரயுநதியைத் தாயின் மார்பகமாக உவமித்துள்ளார்.

"இரவிதன் குலத்து எண்ணில்பல் வேந்தர்தம்
புரவு நல்ஒழுக் கின்படி பூண்டது
சரயு என்பது; தாய்முலை அன்னது, இவ்
உரவு நீர்நிலத்து ஓங்கும் உயிர்க்கெலாம்" (பால. ஆற்று., பா:7)

இப்பாடலில், 'நதி பூமிக்கு உயிர்' என்கிறார். 'இந்நதி உலகத்துள் உயிர்களுக்கெல்லாம் உயிரும் சக்தியும் கொடுப்பது' என்கிறார்.

"வணந்தொறும் வயல்கள் தோறும்
ஓதிய உடம்பு தோறும்
உயிர்என உலாய(து) அன்றே" (பால, ஆற்றுப், பா:9)

என்னும் பாடல் இதற்குச் சான்றாகும்.

**ஆரண்யகாண்டம்**

இராவணனால் சிறையெடுக்கப்பெற்ற சீதை, கோதாவரியைப் பார்த்துக் கூறுவதாகக் கம்பர் காட்டியுள்ளார்.

"கோதாவரியே குளிர்வாய் குழைவாய்
மாதா அனையாய் மன்னே தெளிவாய்
ஓதா(து) உணர்வாய் உழை, ஓ டினைபோய்
நீதான் வானை நிலைகொல் கொலையோ?"

என் நிலையைச் சொல்லமாட்டாயோ? என்று சீதையின் வாயால் கோதாவரியின் நீர்வளத்தைச் சுட்டிக்காட்டுகிறார். இதன் நோக்கம் நீர்வளத்தைச் சிறப்பித்து, அதைப் பாதுகாக்க வலியுறுத்துவதற்காகும்.

நாட்டுப்புறத்தில் தண்ணீரின் அருமை, பெருமையை உணர்ந்த வேளாளன் பெருமக்கள் "தாயைப் பழித்தாலும் தண்ணீரைப் பழிக்கக்கூடாது" என்பர். மகப்பேறு, மற்றும் வளமையுடை மகளிரின் பெயர்களையே நதிகளுக்குக் காவிரி, கங்கை, யமுனை, கோதாவரி என வைத்திருப்பதைச் சான்றாகக் கூறலாம். கம்பர் மண்ணை நம்பி மரமும், மரத்தை நம்பி காற்றும் காற்றை நம்பி மழையும், மழையை நம்பி உலக உயிர்களும் வாழ்வதை உணர்ந்து அனைத்துத் தேவைகளையும் சிறப்புக்களையும் ஒரே பாடலில் காட்டுகிறார். ஆரண்ய காண்டம் அகத்தியப் படலத்தில்,

"மலைகளும் மரங்களும் மாணிக்கப் பாறையும்
அலைபுனல் நதிகளும் அருவிச் சாரலும்
இலைநெறி பருவமும் இனிய சூழலும்
நிலைமிகு தடங்களும் இனிது நீங்கினள்" (பா.279)

என்கிறார். ஒரு நாட்டின் நிலப்பரப்பில், மூன்றில் ஒரு பங்கு காடுகள் இருக்க வேண்டும் என்பர் அறிவியலார். தமிழ்நாட்டின் இயற்கை வளம், இயல்பாகக் குறிஞ்சி. முல்லை, மருதம், நெய்தல் என்னும் ஒழுங்கமைவைப் பெற்றுள்ளதை அறிந்து; இப்பாடலில் மலையில், மரங்கள் அடர்ந்த பகுதியில் பெய்யும் மழை பாறை வழியாக அலைபுனலாக உற்பத்தியாகி நதியாய், அருவியாய் மருதநிலத்துத் தடாகங்கள் என்னும் குளங்களில் தங்கி; குளிர்ச்சி தந்து வேளாண் பொருள்களை விளைவித்து, எஞ்சிய நீர் கடலில் கலக்கும் தன்மையை மனக்கண் முன்கொணர்ந்துள்ளார். வான் பருவத்தே வழங்கும் மழையைக் கம்பன்,

"ஊருணி நிறையவு உதவு மாருஉயர்
பார்கெழு பயன்மரம் பழுத்தற்று ஆகவும்
கார்மழை பொழியவும் கழனி வாய்நதி
வார்புனல் பெருகவும் மறுக்கின்றார்கள் பார்"

எனச் சுட்டுகின்றார். மலையில் பொழியும் மழை, சுனையாக, அருவியாக, ஆறாகப் பெருக்கெடுத்து நிலத்துக்கு வந்து ஓடை, பொய்கை, சுனை, சேங்கை, குளம், குட்டை, கயம், கண்மாய், ஏரி, ஓடை, கலிங்கு, நல்லி ஊருணி, கிணறு போன்ற நீர் நிலைகளில் பாதுகாத்து; குடிநீருக்கும், வேளாண்மைக்கும், ஏனைய தேவைகளுக்கும் முறையாக முன்னெடுத்த தமிழர் மரபில் இன்றைய தலைமுறை காடுகளை அழித்தும், பாறைகளை உடைத்தும், ஆறுகளில் மணலை அள்ளியும் இயற்கையை அழித்து வருவதால் மழை, காற்றுவளம் குன்றி வறட்சியை விலைகொடுத்து வாங்கி; குடிநீருக்கு வருவாயில் சில பகுதியைச் செலவு செய்யும் நிலைக்கு ஆட்பட்டுள்ளனர். வேளாண் தொழிலையும் நலிவடையச் செய்துவிட்டுப் பட்டினியை நோக்கிப் பயணிக்கின்றனர். மக்களின் வாழ்வில் ஆறு அனைத்துமாய் விளங்குவதைக் கம்பன் குறிப்பிட்டுள்ளமை எண்ணத்தக்கது.

மனித நாகரிகம் தோன்றியது நதிக்கரையில் என்பது வரலாறு. நாடோடிகளாக வேட்டையாடி உணவுத்தேவையைப் பூர்த்தி செய்த மனித சமூகம் நீர்வளமிக்க ஆற்றுப்படுகைகளில் நிலையாகத் தங்கும் பொருட்டு வேளாண் தொழிலுக்குக் களம் அமைத்து தந்தவை

ஆறுகள் தாம். ஆற்றுநீர் வளத்தால் மருதநிலம் செழிப்புற்றிருந்ததை இலக்கியங்கள் சுட்டுகின்றன.

ஐந்திணைகளில் வாழ்ந்த மக்களுக்கு உண்ண உணவும் பருக நீரும் மட்டுமின்று வழங்கிய அனைத்துப் பொருள்களையும் ஆறுகள் அக, புற ஒழுக்கத்திற்கு அடிப்படையாய் அமைந்து நிலமகளுக்கு அணியாய் இருப்பதை,

> "புவியினுக்கு அணியாய் ஆன்ற பொருள்தந்து புலத்திற்று ஆகி
> அறி அகத்துறைகள் தாங்கி ஐந்திணை நெறி அளாவிச்
> சவியுறத் தெளிந்து தன் என்று ஒழுக்கமும் தழுவிச் சான்றோர்
> கவியெனக் கிடந்த கோதா வரியினை வீரர் கண்டார்"

என்ற பாடலில் கோதாவரியை உதாரணமாகத் தந்து தெளிவாகவும் அழகியலுடனும் புலப்படுத்துகிறார். மேலும் கங்கை, யமுனை, காவிரி போன்ற பல நதிகளினால் அவ்வப்பகுதி நிலங்கள் ஆங்காங்கே நாடு நகரங்களை வளப்படுத்தி வாழ்வாதாரமாக விளங்குவதைக் குறிப்பிட்டுள்ளார்.

## முடிவுரை

உலகிலுள்ள இயற்கை வளங்கள் அனைத்திலும் முதன்மையானது நீர். இந்நீர் மனிதனுக்கு உணவாகவும், உணவுப் பொருட்களை விளைவிப்பதற்கும் இன்றியமையாதாகிறது. தொல்காப்பியர் முதல் இக்கால கவிஞர்கள் வரை இயற்கையைப் பாடும் முகமாக நீரினைச் சிறப்பித்துப் பாடியுள்ளனர். கம்பன் இந்நீரினைக் கம்பராமாயணத்தில் பல இடங்களில் சிறப்பிக்கும் நோக்கில் அதன் தேவை பாதுகாப்பு முறைகள், நீரினால் அமையும் பயன்கள் போன்றவற்றைப் பதிவு செய்திருப்பதைக் காணமுடிகிறது.

# கம்பர் காட்டும் மரங்கள்

திருமிகு. பா.பிருந்தாரமணி
முனைவர்பட்ட ஆய்வாளர், தமிழ்த்துறை, அழகப்பா பல்கலைக்கழகம்,
காரைக்குடி.

**முன்னுரை**

மக்கள் வாழும் நிலத்தை இலக்கியங்கள் பல நிலைகளில் இயற்கை வாயிலாக படம் பிடித்துக் காட்டியுள்ளன. இயற்கையின், பூ, மரம், செடி, கொடிகள் உவமையாக்கப் பட்டுள்ளன. இன்பம், துன்பம், காதல், பிரிவு, காமம், அன்பு, வெறுப்பு அனைத்தும் தாவரங்களைச் சார்ந்தே அமைந்துள்ளன. இயற்கையைப் பாடாத புலவர்களே இல்லை.

கவி இன்பத்தைத் தித்திக்க அள்ளித்தரும் கம்பராமாயணத்தில் பல்வேறு ஆய்வுகளும், நூல்களும் வந்துள்ள போதிலும் இயற்கை அழிக்கப்பட்டுள்ளதால் வெந்து கொண்டிருக்கும் இந்தப் பூமியைக் காக்க மரங்களை அழிக்க வேண்டாம், வளர்க்க வேண்டும் என்றும் சுற்றுச் சூழல் காக்கும் நோக்கைக் கொண்டும் கம்பராமாயணத்தில் ஒரு சிறு துளியான ஆரண்ய காண்டத்தில் மரங்கள் பற்றி கம்பர் கூறும் கருத்துக்களையும், வனங்கள் பாதுகாக்கப்பட்ட முறைகளையும் ஆய்வு செய்து அம்மரங்கள் எவை, எவை என்றும், அதனால் நாம் மட்டுமின்றி இப்பூமி பெறும் நலன்களையும் கூறுவதே இக்கட்டுரையின் நோக்கம்.

**மரம் சொற்பொருள் விளக்கம்**

மரபியலில் தொல்காப்பியர், உயிர்களின் பாகுபாடு பற்றிக் குறிப்பிடும்போது,

“புல்லும், மரனும் ஓர் அறிவினவே
பிறவும் உளவே அக்கிளை பிறப்பே”

புல் என்பது மூங்கில் போல் உள்ளே துளையுடையவை. உள்வ-யிரமில்லாதவை அனைத்தும் புல்வகையின், புறமும் வயிரமுடையன மரம் என்கிறார்.

மரங்கள் என்றாலே அது அழகு தான். இயற்கையின் எழிலான மரங்களை, இலைக்கானவை, பூவுக்கானவை, கனிக்கானவை, மருந்துக்கானவை, வாசனைக்கானவை, கட்டுமானத்திற்கானவை, மதுவிற்கானவை, உணவிற்கானவை என்று பகுத்து நோக்கினால் வனங்களே வாழ்வின் வசந்தம் தான்.மரங்கள் ஒவ்வொரு நாட்டிலும்

ஒவ்வொரு பெயரிலும் அழைக்கப்பட்டது. அதன் தோற்றம், பண்புகளை அடிப்படையாகக் கொண்டு, அவை பல குடும்பங்களாக, சிற்றினங்களாகப் பிரிக்கப்பட்டு, உலகம் முழுவதற்கும் ஒன்றாகக் குறிப்பிட தாவரவியல் பெயர்களில் வழங்கப்படுகிறது.

**கம்பராமாயணத்தில் மரங்கள்**

சரவங்களின் ஆசிரமத்தைக் குறிப்பிடும் கம்பர்,

"குரவர் குவி கோங்கு அலர் கொம்பினொடும்
இரவு அங்கன் உறும்பொழுது எய்தினரால்
சரவங்கள் இருந்து தவம் கருதும்
மரவம் கிளர் கொங்கு ஒளிர்வாச வனம்" (பாடல்.72)

குரா மரத்தின் அரும்பும், கோங்கு மரத்தின் குவிந்த அரும்பும் கூந்தலில் சூடிக் கொண்டுள்ள சீதையுடன், இராமலக்குமணர் சரவங்களின் ஆசிரமத்திற்கு வந்தனர்.

குங்கும மரங்களும், கோங்கு மரங்களும் ஓங்கி வளர்ந்து நறுமணம் வீசும் மிகக்குளிர்ந்த இனிமையான இடத்தில் சரவங்கன் என்னும் முனிவன் இருந்து தவம் செய்கின்றான் என்று இயற்கை எழிலை வர்ணித்துள்ளார். மரத்தின் மலர்களையும், பெண்கள் சூடியுள்ளனர் என்பதைச் சீதை மூலமாக விளக்கியுள்ளார். இரவில் குரா அரும்பும், கோங்கு அரும்பும் சீதை அணிந்திருந்தாள் என்பதன் மூலம் இவ்விரு மரங்களின் மலர்களும் இரவில் மலரக்கூடியது என்ற அறிவியல் உண்மை உணர்த்தப்பட்டுள்ளது. குரா, கோங்கு, குங்கும மரங்கள் சூழ்ந்துள்ள அந்த ஆசிரமப் பகுதியில் சுற்றுச்சூழல் பாதுகாக்கப்பட்டு, நீர் நிறைந்த மேகங்கள் ஈர்க்கப்பட்டு மிகுந்த மழை பொழிவும் இருந்தால் பல மூலிகைச் செடிகளும், மலர் செடிகளும், நிறைந்திருக்கக் கூடும். இதனால் அப்பகுதியெங்கும் தூய்மையான நறுமணம் நிறைந்திருக்கும் என்று குறிப்பிட்டுள்ளார்.

கோங்கு எனும் மரத்தின் மலரை சீதை சூடியிருந்ததாகவும், சரவங்கனின் ஆசிரமம் கோங்கு மரம் நிறைந்ததாகவும் கம்பர் குறிப்பிடுகின்றார். ஓரேபாடலில் இருமுறை சிறப்பிக்கப்பட்ட இம்மரம் *Bombax malabarium* எனும் தாவரவியல் பெயர் கொண்டது. பல மருத்துவ குணம் கொண்ட அழகு மரம்.

இறையனார் அகப்பொருள் உரையில் கூறப்பட்டுள்ள மரவரிசைகளைப் படிக்கும் போதே, 'சந்தனமும் சம்பகமும் தேமாவும்

தீம்பலாவும் ஆசினியும் அசோகமும் கோங்கும் வேங்கையும் விரிந்து' என்கிறார்.

சுந்தரர் பாடிய தேவாரத்தில், "தளிர்தரு கோங்கு, வேங்கை தட மாதவி சண்பகமும் நளிர்தரு நன்னிலத்துப் பெருங்கோலில் நயந்தவனே" என கோங்கு மரத்தின் சிறப்பு வெளிப்பட்டது. கோங்கு பிருமாண்டமான மரம் 130 அடி உயரம் வரை வளரும், அடிமரத்தின் சுற்றளவு 20 அடிவரை இருக்கும். மண்ணரிப்பை இவை தடுக்கும் ஆற்றுப் படுகைகளில் இம்மரங்கள் நன்றாக வளரும். தமிழ் நாட்டில் நிறைய இருந்து அழிந்துவிட்டதாகக் கூறப்படும். இம்மரம், அற்புதமான மருத்துவ குணம் கொண்டது. இதன் பூ, இலை, விதை, பட்டை, பிசின் எல்லாமே மருத்துவக் குணம் கொண்டது. நுரையீரல் நோய், கழிச்சல், சீதபேதி, சிறுநீருடன் ரத்தம் போதல் ஆகியவற்றிற்கு இவை அரு மருந்தாகப் பயன்படுத்தப்படுகின்றன.

இலையுதிர் காலத்தில் தான் பூ மலரும், பெரிய பெரிய சிவப்பு நிறப்பூக்கள் கிளை நுனியில் அரும்பும், சீதை கோங்குப் பூவை அணிந்து சென்றதால் இளவேனிற்காலத்தில் அவர்கள் காட்டிற்குச் சென்றிருக்க வேண்டும் என்பது புலனாகிறது.

குங்கும மரம் என்றொரு மரத்தையும் கம்பர் குறிப்பிட்டுள்ளார். இம்மரத்திற்கு கமலா என்ற பெயரும் உண்டு. இதன் தாவரவியல் பெயர் *Mallotus Philippensis*. சமஸ்கிருதத்தில், கபிலா, ரெச்சனகா, ஹிந்தியில் கமலா, கம்பிலா என்று அழைக்கப்படும். இம்மரம் தென்னிந்திய மொழிகளில் குங்கும மரம் என்று அழைக்கப்படுகிறது. இந்த மரத்தின் பழங்கள் உலர்ந்து குங்குமமாகக் கொட்டுமாம். சிவந்த நிறம் கொண்ட இம்மரப்பழத்தின் விதைகளிலிருந்து மேலே நீண்டுள்ள இழைகளின் தூளே அசலான குங்குமம் (தமிழ்நாட்டில் மஞ்சளிலிருந்து குங்குமம் தயாரிக்கின்றனர். இது பிற்காலத்தில் தோன்றியது)

வட இந்தியாவில் குறிப்பாக ஒரிசா, வங்காளம், ராஸ்தான், சத்தீ-ஸ்கர், பீகார் மாநிலங்களில் இம்மரத்தைத் தேவியின் வடிவமாகப் போற்றுகின்றனர். இம்மரம் 30 முதல் 40 அடி உயரம் வளரக்கூடியது. இதன் இலை குறைவாக உதிரும். இது ஒரு பசுமை மாறா மரம்.

வடநாட்டில் இதன் நெற்றுக்களைச் சேகரித்துப் பொடியாக்கி நீரில் கரைத்து நீரின் அடியில் பொடி வண்டல் சேர்வதை வடிகட்டி உலர்த்தி எடுப்பர். இந்தப் பொடி அருமையான இயற்கைச் சாயம்.

இதில் ஆரஞ்சு நிறம் பெறலாம். இந்தச் சாயத்தூள் ஏற்றுமதித்தரம் வாய்ந்தது. இது திண்பண்டங்களைக் கெட்டுப் போகாமல் பாதுகாக்கும். இப்பொடியைப் பாலிலோ, மோரிலோ கலந்து குடித்தால் வயிற்றிலிருந்து நாடாப்புழு வெளியே வந்துவிடும்.

இத்தகைய சிறந்த மரங்கள் சூழ்ந்தது சரவங்கனின் ஆசிரமம் என்று கவிபாடிய கம்பன், மரத்தையும், வனத்தையும் மாண்புபடுத்தியுள்ளார்.

**பஞ்சவடியின் பெருமை**

ராமபிரான் சீதாபிராட்டியுடன் ஆரண்யத்தில் வாழ்ந்த வாழ்க்கை ஒரு வகையில் தண்டனை. மறுவகையில் இயற்கையோடு இயைந்த வாழ்வு என்று கூறலாம். அகத்தியர் ஒரு சிறந்த மருத்துவர் அதனால் தான் ராமனைப் பஞ்சவடிக்குப் போகும்படி கூறினார். பஞ்சவடி என்ற சொல்லிற்கு வனப்பகுதி என்று பொருள் உண்டு. ஐந்து மரங்கள் சூழப்பட்ட வனப்பகுதியே இது குறிக்கும். இந்த ஐந்தில் முதல் மரம் அரசு, வேம்பு, அசோகமரம், கடுக்காய், வில்வம். இந்த மரங்கள் மிகுந்து காணப்பட்டவை தான் பஞ்சவடி. இம்மரங்கள் அனைத்தும் மனிதனை நோயின்றி வாழ வைக்கும் அருமருந்துகளாகின்றன.

**அரச மரம்**

*Ficus religiosa* என்ற தாவரவியல் பெயர் கொண்ட இம்மரம் மண்ணை வளப்படுத்தும், மழையைக் கவர்ந்திழுக்கும் அதிக அளவு ஆக்சிஜனைத் தரும் மரம். இதனை 108 தடவை சுற்றி வரும் போது, உடலுக்குத் தேவையான பிராண வாயு இதயத்திற்குக் கிடைத்துவிடும். காற்றில் உள்ள கார்பன்டை ஆக்ஸைடு ($CO_2$) என்ற நச்சு வாயுவை அதிகமாக உள்ளிழுத்து, மிக அதிகமான பிராணவாயு ($O_2$) வெளிவிடுவதில் முதன்மையான மரம் இது.

"குடல் புண், வாதரத்த ரோகத்தால் ஏற்படும் மே நோய்கள், தோல் வியாதிகள் இம்மரத்தின் மூலம் பெறப்படும். மருந்துகள் தீர்க்கும் என்று கூறுகின்றனர்" ஆயுர்வேத மேதைகள் சரகரும், சுஷ்ருதரும்.

**சந்தன வேம்பு**

*Toona cilitata* என்ற தாவரவியல் பெயர் கொண்ட சந்தன வேம்பு, வேம்பிற்குரிய குணமும், சந்தனத்திற்கு உரிய குணமும் கொண்ட ஒரு மரம் இது. இதன் பட்டை குழந்தைகளுக்கு வரும் வயிற்றுப் போக்கு, பெரியவர்களுக்கு ஏற்படும் வயிற்றுப் புண், வயிற்றுப்

புண்ணால் ஏற்படும் கழிச்சலுக்கும், ஜீரத்திற்கும் மருந்து. இதன் மலர்களிலிருந்து தயாரிக்கப்படும் மருந்து பெண்களின் மாதவிடாய் காலத்தை சரியானபடி சீர் செய்கிறது.

**அசோக மரம்**

"*Saraca asoca*" என்ற தாவரவியல் பெயர் கொண்ட அசோகமரம் மன்மதனுடைய மலர்க்கணையில் உள்ள அசோக மலரினால் காதல் வசமான அழகு மங்கையர் "கலீர், கலீர்" என்று ஒலி எழுப்பும் அழகிய சிலம்புகள் அணிந்த செந்நிறப் பாதங்களினால் மிருதுவாகவும், நளினமாகவும், உதைக்க அசோகம் மலர்ந்து பூச்சொரிந்தது என்று சுரபாலரும். "என்னுடைய பாதம் படுவதற்குத் துடிக்கும் அசோக மரமா இது" என்று மன்னன் அக்னிமித்ரனைக் காதலிக்கும் மாளவிகா கேட்பதாகக் காளிதாசர், "மாளவிகா அக்னிமித்ரா" என்ற காவியத்தில் கூறியுள்ளார். மன்மதனுடைய மலர்கணையில் உள்ள ஆறு மலர்களில் இதுவும் ஒன்று.

**கடுக்காய்**

*Terminalia chebula* என்ற தாவரவியல் பெயர் கொண்ட இம்மரம் ஆயுர்வேத வைத்தியத்தில் ராஜமூலிகையாகப் போற்றப்படுகிறது. திரிபலா என்ற மூன்று பழங்களில் முதன்மையானது கடுக்காய் (நெல்லி, தான்றி) இதில் வைட்டமின்கள் மிக அதிகம், அதிக நோய் எதிர்ப்பு சக்தியைத் தரக்கூடியது. முற்கால ரணச் சிகிச்சை மருத்துவத்தில் திரிபலாக் களிம்பும் பயனாகிறது. மலையாளத்தில் "ஆயிரம் கடுக்காய் உண்டால் ஆனைபலம்" என்பார்கள்.

100 அடி உயரம் கொண்ட இம்மரம் கட்டிப் பிடிக்க முடியாத அளவு அடி மரம் கனமானது. குலைநோய், மூலம், அஜீரணம், அழலை, உஷ்ணவாயு, கபம், இணைப்பு வாய்ப்புண், வயிற்றுக்கட்டி, பெருவயிறு, நீரழிவு, குமட்டல், உடல்வலி, வயிற்றுப் பொருமல், ஆண்மையின்மை, பாண்டு நோய், மார்பு நோய், மூத்திரவாதம் என்ற எண்ணிக்கையில் அடங்கா நோயைத் தீர்க்கக்கூடியது.

**வில்வம்**

*Aegle marmelos* என்ற தாவரவியல் பெயர் கொண்ட வில்வமரம் இதனை ரிஷிகள் சஞ்சீவி என்றும் சித்தர்கள் கற்பகம் என்பர். மூலிகைகளும், காதலைத் தூண்டும் அழகு மரங்களும் சூழ்ந்த வனப்பகுதியே பஞ்சவடி. இதனைக் கம்பர்,

"கன்னி இளவாழை கனி ஈவ கதிர் வாலின்
செந்நெல் உளதேன் ஒழுகு போதும் உளதெய்வப்
பொன்னி எனல் ஆய புனல் ஆறும் உள போதா
அன்னம் உளபொன் இவளொடு அன்பின் விளையாட"

என்கிறார். சூர்ப்பணகைச் சூழ்ச்சிப் படலத்தில்,

"பொற்றலை மரகதப் பூகம் நோவுறச்
சுற்றிய மானிவடம் தூங்கும் ஊசலின்
முற்றிய ஆடலில் முனிவுற்று ஏங்கினார்
சிற்றிடை அலமரத் தெருவு சேர்கின்றார்"

பொன்னிறமான முதிர்ந்த, காய்களைச் சிகரத்தில் பெற்று, மரகதம் போன்ற பச்சை நிறத்தைப் பெற்றுள்ள பாக்கு மரங்கள் வருந்துமாறு, அதிலே கட்டப்பட்ட நவமணிகள் பதித்த பொன்வடங்களில் தொங்கும் ஊஞ்சலில் அமர்ந்து அரக்க மகளிர் ஆடினர் என்கிறார். கிளைகளற்ற, மென்மையான மிக அதிகமான உயரமாக அமைந்தவை பாக்கு மரங்கள். கிளைகளற்றதால் இதில் ஊஞ்சல் கட்டுவது கடினம் பாக்கு மரங்கள் மிக நெருக்கமாக சோலைபோல் அமைந்திருக்க வேண்டும். அதில் இரு மரங்களுக்கிடையே பொன் வடங்கள் அமைத்து ஊஞ்சல் கட்டப்பட்டிருக்க வேண்டும் என காணலாகிறது.

"கொன்றை துன்று கோதையோடு ஓர் கொம்பு வந்து என் நெஞ்சிடை
நின்றது உண்டு கண்டது என்று அழிந்துஅழுங்கும் நீர்மையான்"

சரக்கொன்றையின் மலர்கள் நிறைந்த கூந்தலோடு உள்ள ஒரு பூங்கொம்பூ போன்ற மங்கை என் நெஞ்சிலே வந்து நிலைத்து நின்றுவிட்டாள் என்று சீதையைப் பற்றி இராவணன் நினைந்து மனவுறுதி இழந்து நின்றான்.

சரக்கொன்றை மரத்தின் மலரைப் பெண்கள் கூந்தலில் அணிந்துள்ளனர். *cassia fistula* என்ற தாவரவியல் பெயர் கொண்ட இம்மரத்தை, "பொன்னார் கொன்றையிரு வடங்கிடந்து" என்று திருஞான சம்பந்தரும், "மின்னார் செஞ்சடைமேல் மிளர் கொன்றை அணிந்தவனே" என்று திருநாவுக்கரசரும் பாடியது ஸ்வர்கணகம் என்று வடமொழியில் வழங்கப்படும். இந்தச் சரக்கொன்றையைப் பற்றித்தான். தெய்வத்தன்மை வாய்ந்த இம்மலரைச் சூடியவள் ஒரு தெய்வப் பெண்தான் அவளை இராவணன் தவறாக நினைந்து வருந்தினான் என்கிறார்.

"மாணிக்கம் பனசம் வாழை மரகதம் வயிரம் தேமா
ஆணிப் பொன் வேங்கை கோங்கும் அரவிந்திராகம் பூகம்
சேண் உய்க்கும் நீலம் காலம் குருவிந்தம் தென்னம் வெள்ளி
பாணித்தன் பளிங்கு நாகம் படலம் பவளம் மன்னோ"

ஒரு சோலையில் உள்ள பலா மரங்கள் - மாணிக்கமானது, வாழை மரங்கள், மரகதமயமானவை, இனிய மாமரங்கள் வயிரமானவை, வேங்கை மரங்கள் சிறந்த பொன் மயமானவை, கோங்கு மரங்கள் சிவந்த பதுமராக மயமானவை, பாக்கு மரங்கள் நெடுந்தூரம் ஒளி வீசும் நீலமணி போன்றவை. ஆச்சா மரங்கள் குருவிந்தம் என்னும் இரத்தினமயமானவை, தென்னை மரங்கள் வெள்ளி மயமானவை, சுரப்புன்னை மரங்கள் தெளிந்த நீரைப்போன்ற பளிங்கு மயமானவை, பாதிரி மரங்கள் மரங்கள் பவளமயமானவை என்கிறார்.

பிற இலக்கியங்களில் எழுதப்படாத அற்புதமான உவமை இந்தப் பாடலில் காணப்படுகிறது. மரங்களை ரத்தினங்களுடனும், பொன், வெள்ளி போன்ற விலை உயர்ந்த உலோகங்களுடனும் ஒப்பிட்டுக் கூறியுள்ளார். இவை இதன் மூலம் மரங்களுக்கு வேதியியல் குணம் உண்டு என்பதையும் சுட்டிக் காட்டகிறார்.

முக்கனிகளில் ஒரு கனியான பலாமரம் *Artocarpus heterpphylhes* என்ற தாவரவியல் பெயர்கொண்ட இம்மரத்தினை, தமிழின் அனைத்து இலக்கியங்களும் குறிக்கின்றன. பசுமை மாறாத இம்மரத்தின் பிஞ்சு, வேர், பழம் அனைத்தும் ஆண்மைப் பெருக்கம், வயிற்றுப்புண், மலச்சிக்கலுக்கு மருந்து. இப்பழத்தில் வைட்டமின் ஏ மற்றும் பாஸ்பரஸ் சத்து உள்ளது. இதனை உண்டால் கண் மாணிக்கம் போல் ஒளிவீசும் என்பதனைக் கம்பர் குறிப்பால் உணர்த்தியுள்ளார்.

*Musaparadisiaca* என்ற தாவரவியல் பெயர் கொண்ட வாழையைப்போல் ஒவ்வொரு பகுதியும் பயன்படுத்தப்படும் மரம் வேறெதுவும் இல்லை. நவரத்தினக் கற்களில் மரகதக்கல் மிக அழகான பச்சை நிறம் கொண்டது. அதனை அணிந்தால் உடலுக்கு மிகவும் குளிர்ச்சி ஏற்படும். அதுபோல, வாழைத் தண்டு, பூ, இலை, காய், கனி அனைத்தும் உடலுக்கு குளிர்ச்சியைத் தரக்கூடியதே.

*Mangifera Indica* என்ற தாவரவியல் பெயர் கொண்ட இம்மரம் இதன் கனி முக்கனிகளில் முதல் கனி.

*Cocosnucifera* என்ற தாவரவியல் பெயர் கொண்ட தென்னை ஒரு கற்பக விருட்சம். வரலாற்று ஆசிரியர் டிடிகோசாமி, தென்னையின் பரவலையும் இந்துமதம் துளிர்விடத் தொடங்கியதையும், இணைத்துத் திறனுடன் தொடர்பு செய்கிறார்.

வைதீக மரங்களின் முக்கியக்கோட்பாடு வளமைப்பெருக்கமே *Ptenty for all* என்ற தபோல்கரின் இயற்கை வழி வேளாண்மைக் கோட்பாடு கூட "விஸ்வம் புஷ்டம் கிராமே அஸ்மின் அனாதூரம்" என்ற ரிக்வேத பாசுரத்தை அடிப்படையாகக் கொண்டது. தேங்காயே இதற்கு அடிப்படை இவ்வளவு சிறப்பான தேங்காயைத் தரும் தென்னைமரத்தை கற்பக விருட்சமாக நாம் போற்றக் காரணம் மேற்படி வைதீகச் சடங்குடன் இணைத்து மருத்துவத்திற்கும் இதனைப் பயன்படுத்தினர். எனவே இதனைக் கம்பர் வெள்ளிமயமானது என்கிறார்.

*Rhizophoraapiculata* என்ற தாவரவியல் பெயர் கொண்ட அலையாத்தி என்று அழைக்கப்படும் சுரப்புன்னை மரம் கண்டல், வெள்ளைக் கண்டல் என்னும் பெயர் கொண்டது. இது ஒரு மாங்குரோவ் மரம், கடலில் அலைகள் ஏற்படுத்தும் சக்தியையும் நீரோட்ட விசையையும் இம்மரம் கட்டப்படுத்தும். இதன் மிக முக்கியமான தன்மை இதன் வேர்கள் உவர் தண்ணீரை, நன்னீராக மாற்றும் சக்தி கொண்டது. நாடு காக்கும் இந்த நல்ல மரத்தை பளிங்கு என்கிறார் கம்பர்.

**முடிவுரை**

"அறம், பொருள், இன்பம், வீடு என்ற மனித நெறிகளை மரங்கள் வழங்குகின்றன. இந்த உண்மையை உணர்ந்து மனிதர்கள் மரங்களை நடவேண்டும். (விருட்ச ஆயுர்வேதம் பாடல் 8.) பூமியின் தப்ப வெப்ப நிலையைக் காப்பதற்காகவும், மருத்துவ பயன்களுக்காகவும், மக்களை கொடிய நோயிலிருந்து காப்பதற்காகவும், வனங்கள் பாதுகாக்கப்பட வேண்டும். மரங்கள் போற்றப்பட வேண்டும் என்ற உயர்ந்த கருத்தை வலியுறுத்தவே வனத்திற்கென்றே (ஆரண்ய) ஒரு காண்டம் அமைத்து கடவுளின் அவதாரங்களான இராமனும், சீதையும், இலக்குவனையும் காட்டில் வாழ்ந்து வனங்களைப் புனிதமாக்கியுள்ள கம்பர் ஒரு இயற்கை விஞ்ஞானியே.

# கம்பனில் உயிர்க்கோட்பாடு

முனைவர் இரா.குறிஞ்சிவேந்தன்
தமிழ்த்துறை, துணைப்பேராசிரியர், பாரதிதாசன் அரசினர் மகளிர் கல்லூரி,
புதுச்சேரி.

கற்பவர்களுக்குப் புதுஉணர்வையும், மங்காத இன்பத்தையும் ஊற்றெடுக்க வைப்பதே இலக்கியத்தின் தனித்தன்மை. இப்பேரனுபவத்தை முழுமையாக அளிக்கும் தகைமையைத் தமிழிலக்கியப்பனுவல்கள் பல தன்னகத்தே கொண்டுள்ளன. அவற்றுள் கம்பரின் 'இராமாவதாரம்' தனி வகையைச் சார்ந்தது. பழங்காலந்தொட்டு, பாரதத்தின் வழிபடு தெய்வமாக விளங்கும் அவதாரத்தின் கதை என்ற அடித்தளத்தில் கம்பர் கட்டமைத்துள்ள இக்காப்பியம் பல நூற்றாண்டுகள் கழிந்த பின்னரும் மானுட வாழ்வுக்குப் புதுப்புதுச் செய்திகளை வழங்கிக் கொண்டே இருக்கின்றது.

இக்காவியத்தை வாசிக்கும்போது உருவாகும் இலக்கியச்சுவையும், மொழியின் ஈர்ப்பும் கற்பவரைப் பெருமகிழ்ச்சியில் ஆழ்த்துவது, ஒரு தொடக்ககால நிலை மட்டுமே! காலப்போக்கில் இவ்வாசிப்பு, நம்முள் புதுப்புதுச் சாளரங்களைத் திறந்து விடும் மற்றொரு அனுபவமாக மாறுவதை உணரமுடியும். குறிப்பாக, இப்பெருங்காவியத்தில் கம்பர் உள்ளடக்கியுள்ள இழைகளும், இச்சமூகத்துக்குத் தரவிழைந்த செய்திகளின் பரிமாணமங்களும் விளங்கத் தொடங்கும்.

தனிமனித ஒழுக்கம், வீரவாழ்வு, நல்லரசு, சகோதரத்துவம் போன்றவற்றுக்கு அப்பால் பல்வேறு கொள்கைகளை *(Theories)* கம்பக்காவியம் உட்கட்டமைத்துள்ளது. அவற்றுள் ஒரு சிறு பகுதியை அடையாளம் காட்டுவதே இக்கட்டுரையின் நோக்கம்.

**ஒரே நேர்க்கோட்டில்...**

இராமாவதாரம் மிக நுட்பமானதொரு பின்னலைக் காப்பியம் முழுக்கக் கட்டமைத்துள்ளது. குறிப்பாக, கம்பர் புதியதொரு உயிர்க் கொள்கையை *(Life Theory)* வடிவமைத்து, அதில் உலக வாழ்வியலை இணைத்துக் காப்பியத்தில் பொதிந்துள்ள மாண்பு மிக நுட்பமானது. பொதுவாக உயிர்களை ஓரறிவு, ஈரறிவு என்று பகுத்துக் காண்கிறது, தமிழ்மரபு. தமிழிலக்கியங்களின் பனுவல்கள் அனைத்தும் ஆறறிவு படைத்த மனிதவுயிர்கள் ஒன்றையொன்று சார்ந்து வாழ்தலையே பெரிதும் இதுவரை சித்திரித்துள்ளன. ஆனால் மண்ணில் வாழும்

எல்லா உயிர்களையும் இணைத்து ஒரே நேர்க்கோட்டில் பயணிக்கச் செய்யும் பேதமற்ற 'ஓருயிர்க்கோட்பாட்டை' இராமாவதாரம் அறிமுகம் செய்கிறது.

மனிதன் - பறவை - விலங்கு என அனைத்துயிர்களும் ஒன்றையொன்று சார்ந்து வாழ்வதும், உயர்வு பெறுதலும் கம்பரின் கைவண்ணத்தில் நிகழ்ந்துள்ளன. எல்லா உயிர்களுக்குமானதாக இவ்வுலகத்தையும், உலகவாழ்வியலையும் உருவாக்குவதே இதற்கு அடிப்படைக்காரணமாக இருந்திருக்க வேண்டும். அதனாலேயே உயிர்கள் அனைத்தையும் ஒரேநிலையில் வைத்து மதிப்பிடும் பாங்கு கம்பனில் ஆழமாக வெளிப்பட்டுள்ளது.

**ஓருடல் பல்லுயிர்**

உலகம் என்ற வளையத்திற்குள் உயிர்கள் அனைத்தும் ஓர் அடக்கம் என்னும் கருத்தை வாய்ப்பு கிடைக்கும் இடங்களில் எல்லாம் கம்பர் நிறுவிச் செல்கிறார். காப்பியத்தின் தொடக்கத்தில் பாலகாண்டத்திலேயே இதற்கான கால்கோள் இடப்பட்டுள்ளது. தசரதன் ஆட்சியின் சிறப்பைக் கூறுமிடத்தில்,

"உயிர் எலாம் தன் உயிர் ஒப்ப ஓம்பலால்,
செயிர் இலா உலகினில் சென்று நின்று வாழ்
உயிர் எலாம் உறைவது ஓர் உடம்பும் ஆயினான்" (பால:177)

எனப் பாடுகிறார்.

அயோத்தியில் தசரதன் தன் ஆட்சியில் வாழும் உயிர்கள் அனைத்தையும் தன்னுடைய உயிர் போன்று எண்ணிப் பாதுகாக்கின்றான். இதை உணர்த்த வந்த கம்பர், இவ்வுலகில் உள்ள அசைகின்ற மற்றும் அசைவற்ற ஆகிய அனைத்து உயிர்களும் அவன் உடம்பில் வாழ்ந்தன என்று வருணிக்கிறார். இங்கு தசரதன் என்பது ஒரு குறியீடு. அதில் அசையா உயிர்களும், நடமாடும் உயிர்களும் சேர்ந்தே உறைந்தன என்பது கம்பன் காண விரும்பிய உலகம் என்பதன்றி வேறில்லை. 'மன்னன் உயிர்த்தே மலர்தலை உலகம்' (புறம்: 186) என்னும் புறநானூற்றுப் பார்வையிலிருந்து விலகிச் சிந்திக்கின்றார் கம்பர். எல்லா உயிர்களும் ஒருங்கே துடிக்கும் ஒற்றை உடம்பாகத் தசரதனை உருவகப்படுத்துகிறார்.

ஜனநாயகம் என்பதன் அடிப்படையை ஆயிரம் ஆண்டுகளுக்கு முன்பே கம்பர் உலகிற்குப் பிரகடனம் செய்யும் ஆற்றலை இப்பாடல் எடுத்துரைக்கிறது. கம்பரின் வாழ்வியற்கொள்கையில் எல்லா

உயிர்களும் ஒரே துலாக்கோலில் எழுந்து நிற்கின்றன. ஒப்பற்ற தன் கொள்கையை அயோத்தி வேந்தனிடம் தொடங்கும் கம்பர், காப்பிய நாயகனான இராமன் பாத்திரம் வாயிலாகவும் பல இடங்களில் அழுத்தமாகப் பதிவு செய்கிறார். அவற்றில் சிலவற்றைக் காண்போம்.

**பறவை சொல்லும் பாடம்**

உயிர்கள் அனைத்தையும் ஒரே நிலையில் வைத்துக் காணும் கொள்கையை உருவாக்கும் கம்பர் அவ்வளவில் நிற்கவில்லை. இன்னும் ஒருபடி கடந்து சென்று அதற்கான சட்டத் திட்டங்களை வகுத்துத் தருகின்றார். இம்மண்ணில் உயிர்கள் வாழும் முறைமையை வாய்ப்பு கிட்டும் இடங்களில் எல்லாம் வலுவாக எடுத்துரைக்கின்றார். அவ்வாறான ஒரு முயற்சியில், கம்பரின் மனச்சான்றாக நின்று பேசும் பாத்திரப்படைப்பு, சடாயு!

'பறவைகளின் அரசனாக விளங்கும் சடாயு' என்னும் ஒற்றைக் குறிப்புடன் சீதையைக் கடத்தப்படும் நெருக்கடியானதொரு காட்சியில் இப்பாத்திரம் அறிமுகமாகிறது. சில பாடல்களே என்ற போதிலும் சடாயுவுக்குக் கம்பர் தருகின்ற இடம் மிக உயர்வானது.

மனிதர்கள் பேசாத செய்திகளை எல்லாம் சடாயு தெளிவாக எடுத்துப் பேசுகின்றது. சீதையைப் பத்தினி என்றும், பூமியின் தாய் என்றும் உலகிற்கு அறிவிப்பது சடாயு தான்! (ஆரணிய காண்டம்:3510-11) இராவணனின் செயலைத் தடுத்து நிறுத்தப் போரிடும் சடாயு, இராவணனைப் "பேதாய்! பிழை செய்தனை" என்று எச்சரிக்கின்றது. சிந்திக்கும் ஆற்றலிலும், அறிவிலும் பறவையிலும் பன்மடங்கு மேலான அரக்கர் இனத்தைச் சேர்ந்த இராவணனை, அரக்கரை விடக் குறைந்த அறிவு உயிரான சடாயு 'அறிவு அற்றவன்' (பேதாய்!) என்றழைக்கின்றதென்றால், அதுதான் கம்பரின் உயிர்கள் பற்றிய பார்வை! செயல் முக்கியமே அன்றி, செய்பவன் அல்ல என்னும் கர்மயோகத்தைக் கம்பர் மிக அற்புதமாக வெளிப்படுத்தும் இடம் இதுவென்பதில் ஐயமில்லை. அதனாலேயே, சடாயுப்பறவையைக் கூட 'அது' என்ற அஃறிணையில் உள்ளடக்காமல், 'அவன்' என்று உயர்திணையில் வைத்துக் கம்பர் பாடுகின்றார்.

உயிர்கள் குறித்த கொள்கையை நிலைநாட்டும் இடங்களில் எல்லாம் கம்பரின் மெய்யான அன்புள்ளம் அழகுற வெளிப் பட்டுள்ளது. இராமனும், சடாயும் சந்திக்கும் காட்சி இதற்கு எடுத்துக் காட்டு. சீதையைக் காப்பாற்றும் முயற்சியில் ஈடுபட்டு இராவணனால்

வீழ்த்தப்பட்டுக் கிடக்கும் சடாயுவை இராமன் காண்கின்றான். கயிலைமலை போன்ற சிறகுகள் வெட்டப்பட்டு, குருதி வழிந்து நிலத்தில் வீழ்ந்து கிடக்கிறான் சடாயு! "திருப்பாற்கடலைக் கடைய மத்தாகக் கொண்டுவரப்பட்ட மந்தரமலை சாய்ந்து கிடந்தாற் போல வீழ்ந்திருந்த தன்னுடைய தந்தையாகிய சடாயுவை இராமன் கண்டான். (கடலுள் நாட்டிய மலையன்ன தாதையைக் கண்டான் - ஆரணியகாண்டம்:3595) 'தனியுயர்த்தந்தை' என்றே இராமன் சடாயுவை அழைத்துக் கதறுகின்றான். தசரதனோடு, சடாயுவை ஒப்பிட்டுக் காண்கிறான். (3598&3633)

மானுட அவதாரம் எடுத்த இராமன், சடாயுவைத் தந்தையே என அழைத்தது கூடப் பெரிதில்லை. பறவையான சடாயு, இராமனைக் காணும் முன்பே 'என்மகன்' (ஆ.கா:3559) என்று அவனைப் பற்றிச் சொல்லும் காட்சியையும் கம்பர் சித்திரித்துள்ளார். பெற்றத் தந்தையான தசரதனுக்கு ஈமச்சடங்கினை உடனே செய்ய இயலாத இராமன், சடாயுத்தந்தைக்கு ஈமச்சடங்குகள் செய்து முடிக்கின்றான் என்றும் கம்பர் பாடுகின்றார்.

கவிதையழகு, காட்சி உருக்கம் என்பவற்றுக்கு அப்பால் கவிச்சக் கரவர்த்தி கூறவிழையும் செய்தியைச் சடாயு-இராமன் பாத்திரங்களின் வாயிலாகப் புலப்படுத்தப்பட்டுள்ளது. உயிர்கள் மீதான கம்பரின் பார்வை ஒன்றே என்பதையும் இராமவதாரம் வழி அறியலாகிறது.

**விலங்கும் மனிதரும்**

அறிவியல் பரிணாமக் கோட்பாட்டின்படி விலங்கிலிருந்து தோன்றியவன் மனிதன். ஆனால் கம்பனின் அறிவியல் வித்தியாசமானது. மனிதசக்தியும், விலங்குசக்தியும் இணைந்து தீய ஆற்றலை எதிர்கொள்ளும் புதியக்கோணத்தைக் கம்பர் காட்டுகிறார். இராவணன் என்பது தீமை என்பதன் குறியீடே! தீமையை வெல்வதற்கு ஒரு உயிர் பிற உயிர்களின் துணையைச் சார்ந்துறையும் சூழலைக் கம்பர் மிக நுட்பமாகப் பதிவு செய்துள்ளார்.

இராவணனை வெல்வதற்கு இராமன் மேற்கொள்ளும் முயற்சிகள் சாகசங்கள் நிறைந்தவை. சீதையைப் பிரிந்த துயரில் மூழ்கி இராமன் வீழ்ந்துவிடவில்லை. துயரை வெல்லும் கலையை மிக நேர்த்தியாக இராமன் பாத்திரப்படைப்பு மனிதர்களுக்குக் கற்பிக்கின்றது. பெரும் வீரம் உடைய வில்லாளியாக இருந்த போதும், இராவணன் என்னும் பெரும்பகையை முடிப்பதற்கு அணி ஒன்றைக் கட்டுகின்றான். அந்த அணியில் கோசலநாட்டுக்குத் திறை

செலுத்தும் அரசர்கள் எவருமில்லை; தேவர்களின் துணையை நாடவில்லை. மாறாக, அரக்கனை வெல்வதற்கு அவன் கட்டும் படையணியில் காட்டுமனிதன் (குகன்), அரக்கன்(வீடணன்), குரங்கு (விலங்கு), சாம்பவான்(கரடி-விலங்கு) என அப்படை நீள்கிறது. அதில் விலங்குசக்தியாகிய குரங்குகளின் துணை பெரிதும் பேசப்பட்டுள்ளது. இது வெறும் படையாக மட்டும் இல்லாமல், இராமனின் தோன்றாத் துணையாகவும் காட்சிப்படுத்தப்பட்டுள்ளது தனிச்சிறப்பாகும்.

இராமன்-அனுமன் நட்பு இதற்கு முக்கிய எடுத்துக்காட்டாகும். அனுமனுக்குத் தரும் இடம் மிக உயர்வானது. அனுமன் மட்டுமின்றி சுக்ரீவனுக்கும், அங்கதனுக்கும் அவன் அளிக்கும் முக்கியத்துவமும் தனித்தன்மை வாய்ந்தது. குரங்காகிய அனுமன், இராமனுக்கு அறிமுகமாகும் காட்சி இதற்குச் சிறந்த எடுத்துக்காட்டு. குரங்கு வடிவில் எதிர்வந்து நிற்கும் அனுமனை,

“யார்கொல் இச்சொல்லின் செல்வன்?
விரிஞ்சனோ? விடைவலானோ?” (கிட்கிந்தா:3370)

தன் எதிர்வந்து நிற்பது மானிடன் அல்ல என்பது தெளிவாகத் தெரிந்த இராமன், அனுமனைக் காட்டி, சொல்லின் செல்வன் என்றும் பிரம்மனோ, சிவனோ என்று வியக்கின்றான். விலங்கு-மனிதர் என்ற பேதவுள்ளம் அற்ற கம்பர், இவ்விடத்தில் மேலும் ஒருபடி மேற்சென்று முத்தொழில் புரியும் கடவுளருடன் அனுமனை ஒப்பிடுகின்றார். மற்றொரு காட்சியில் அனுமன் தன் விசுவரூபத்தைக் காட்டி நின்ற போது, இராமன் அதை வியந்து, வேதங்களாலும் அறியமுடியாத ஞானப்பரம்பொருள் என அனுமனைப் பாராட்டுகின்றான்.(கிட்கிந்தா:3885)

உயிர்கள் என்று வரும்போது, அதில் பாம்பொருள்-தேவர்-மனிதர்-விலங்கு-பறவை என வேறுபாடு எதையும் கருதாத கவிச்சக்கரவர்த்தியின் உள்ளம் வியப்பினை ஊட்டுகின்றது.

தன் காதலியின் அழகைத் தோழர்கள், பாங்கரிடம் எடுத்துக் கூறிய தலைவர்கள்(தலைமகன்) பலர் இலக்கியத்தில் உண்டு. மனைவியின் அழகு என்பது இன்னொருவரிடம் எடுத்துரைக்க இய்லாதது. ஆனால் சீதையின் அழகினை அனுமனிடம் இராமன் வருணிக்கும் காட்சி கம்பனில் 32 பாடல்களில் காட்டப்பட்டுள்ளது. சீதையின் அடையாளத்தைக் காட்டும் முயற்சி என்பதைத் தாண்டி, இதயத்திற்கு நெருக்கமான தோழன் ஒருவனிடம் பகிர்ந்து கொள்ளும்

ஆத்மார்த்தமான நட்பு இழையைத் தூக்கி நிறுத்தும் காட்சிகளாக இவற்றைக் கம்பர் பதிவு செய்துள்ளார். விலங்குநிலையை அனுமனுக்கு எந்தச் சூழலிலும் பொருத்திப் பார்க்காத இராமனின் உள்ளமும், கம்பரின் பேருள்ளமும் ஒன்றாய் வெளிப்படும் அற்புதக்காட்சிகளாக இப்பாடல்கள் விரிந்துள்ளன.

சீதையை அனுமன் சந்திக்கும் காட்சிகளும் அத்தகையதே! இராமன் உடனான அந்தரங்க நட்பின் ஆழம் குறித்து, பிரம்மச்சாரியான அனுமனிடம் சீதை பரிமாறிக் கொள்கிறாள். மனிதர்-விலங்கு என்ற நிலையைத் தாண்டி சுழலும் அன்புலகத்தைக் கம்பர் இக்காட்சிகள் சித்திரப்படுத்தியுள்ளார். இலக்குவனை உயிர்ப்பிக்க, சஞ்சீவிமலையை அனுமன் கொண்டு வந்த போது இராமன் கண்ணீர் மல்கப் பேசும் காட்சிகள், யுத்தம் முடிந்து அயோத்திக்குச் சீதையுடன் மீளும் இராமன், பட்டாபிஷேகம் முடித்து அனுமனின் இதயத்தில் குடியமரும் காட்சிகள் எல்லாம் உயிர்களின் உறவு பற்றிய அருமையைப் பேச வல்லன.

**நிறைவாக.....**

கம்பரின் உயிர்கள் பற்றியபார்வை குறித்த செய்தியைத் தொடங்கி வைக்கும் முயற்சியே இக்கட்டுரை. இராமாவதார வாசிப்பின் ஆழத்தில் பல செய்திகள் மேலெழுந்து வருகின்றன. மன்னு-யிர்களோடு இராமனும், இராமகாதையின் கதாப்பாத்திரங்களும் கொண்டுள்ள பிணைப்பு, கம்பரின் உள்ளக்கிடக்கையின் வெளிப் பாடே! அதைச் சந்தர்ப்பம் நேரும் தருணங்களில் எல்லாம் மெய்ப் பிக்க, கவிச்சக்கரவர்த்தி தவறவேயில்லை.

ஒவ்வொரு உயிருடனும், மற்றோர் உயிர் பின்னப்பட்டுள்ளது என்பதே கம்பர் தரும் செய்தி. மனிதர்கள் மனிதரைச் சார்ந்து வாழ்தல் என்னும் படிநிலையைத் தாண்டி, ஓரறிவு முதல் ஆறறிவு வரை எல்லா உயிர்களும் ஒன்றையொன்று சார்ந்து அன்புமீதுர வாழும் போதே குடும்பம்-சமூகம்-நாடு-உலகம் என்னும் நால்வகை நிலைகளும் அமைதியுடன் வாழவியலும் என்பதே கம்பரின் உயிர்க்கொள்கை தரும் பாடம்.

இக்கொள்கையை எடுத்துக்காட்டுவதற்குக் கம்பர் கையாண் டுள்ள பாத்திரப்படைப்புகளே, தசரதன், இராமன், சீதை எந்னும் கதைமாந்தர்கள். குறிப்பாக இராமன் கதைப்பாத்திரம். அவன் மீது கொல்லும் குணம் வாய்ந்த சிங்கம், புலி எல்லா உயிர்களும் அன்பு பொழியும் காட்சியை (கிட்கிந்தா:3862) விலங்காகிய அனுமனே

கண்டு வியப்பதாகப் படைத்துள்ள இடங்கள் இதற்குச் சிறந்த எடுத்துக்காட்டாகும். கம்பரின் உயிர்கள் பற்றிய கொள்கைக்குப் பின்னணி என்ன என்பது ஆராயப்படவேண்டிய தலைப்பாகும். பேரரசாக விளங்கிய சோழத்தேசத்தில் வாழ்ந்தவர் கம்பர். போர்களின் வெற்றிக்குக் கிடைத்த மதிப்பு, மனித உயிர்களுக்குக் கிடைக்காததை எண்ணிக் குமைந்து போயும் கூட இக்கொள்கை கம்பருக்குள் பிறந் திருக்கக்கூடும்.

எவ்வாறாயினும் போர்களும், வன்முறைகளும் சூழ்ந்துள்ள இன்றைய உலகிற்குக் கம்பர் அளிக்கும் செய்தி வலிமையானது. சகமனித உயிர்களையே தம்முயிர்போல் எண்ணாத இக்காலக் கட்டத்தில், எல்லா உயிர்களையும் தம்முயிர் போல் எண்ண வலியுறுத்தும் ஆயிரம் ஆண்டுகளுக்கு முந்தையக் கவிசாட்சியாகக் கம்பரின் குரல் வரலாற்றின் ஆன்மாவில் ஓங்கி அறைகிறது. அக்குரலில் வெளிப்படுவதெல்லாம், அன்பினையன்றி வேறேது?



கம்பன் தமிழமுதம் கொண்டு
கல்வித் தமிழ் இன்பம் வளர்க்கும்
கருணைத் தாய்க் கழகம்
காரைக்குடிக் கம்பன் கழகம் நடத்தும்
பன்னாட்டுக் கம்பன் கருத்தரங்கம்
பவளவிழாக் கொண்டாட்டங்கள்
வாழ்க! நாளும் வளர்க என வாழ்த்தும்,

*Ln.* **வி.பி.சிவக்கொழுந்து**

துணைத்தலைவர், புதுவைக் கம்பன் கழகம்.
தலைவர் ஸ்ரீசப்தகிரி குழுமம்.






ISBN No: 978-81-922092-5-8

9 788192 209258